# வெள்ளை மொழி

## அரவானியின் தன்வரலாறு




ரேவதி



முதல் பதிப்பு: 2011



வெளியீடு: அடையாளம், 1205/1 கருப்பூர் சாலை, புத்தாநத்தம் 621310, திருச்சி மாவட்டம், இந்தியா. தொலைபேசி: 04332 273444

நூல் வடிவம்: த பாபிரஸ், அச்சாக்கம்: அடையாளம் பிரஸ், இந்தியா

ISBN 978 81 7720 166 6

விலை: ₹ 200

*vellaimozhi*, An autobiography of a transgender in Tamil by Revathi, Published by Adaiyaalam, 1205/1 Karupur Road, Puthanatham 621310, Thiruchirappalli District, Tamilnadu, India. email: info@adaiyaalam.net

## நன்றி

பெங்களூர் சங்கமா நிறுவன நண்பர்கள், வ. கீதா,
பெருமாள்முருகன், கவிஞர் அனார், சிராஜுல் ஹஸன்,
எம். சிவசுப்ரமணியன், அடையாளம் பதிப்புக் குழுவினர்,
நவீன். பி மற்றும் இந்நூலில் இடம்பெறும்
பாத்திரங்களாகிய அனைவருக்கும்.

முன்னுரை

# புதிது வழங்கும் ஆற்றல்

தமிழில் தன்வரலாற்று நூல்களுக்கு நூறாண்டு கால வரலாறு உண்டு. உ.வே. சாமிநாதையரின் 'என் சரித்திரம்' இன்றளவும் மிக முக்கியமான நூலாகத் திகழ்கிறது. ஏராளமான தகவல்களோடு தம் காலத்துச் சமூக வாழ்க்கையை அளாவிச் செல்லும் வகையில் அறிவு சார்ந்து எழுதப் பட்ட நூல் அது. நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை எழுதிய 'என் கதை' படைப்பாளிக்கே உரிய உணர்ச்சிப் பொங்கல் களோடு உருவான படைப்பு. நாமக்கல் கவிஞரின் ஒரே படைப்பு இதுதான் என்றுகூடச் சொல்லிவிடலாம். இவையல்லாமல் வேறு பலரும் எழுதியுள்ளனர். கணக்கெடுத்தால் நூற்றுக்கும் மேல் தேறும். ஒவ்வொன்றும் ஏதோ ஒருவகையில் முக்கியத்துவம் பெறுகின்றன. வெகுஜனக் கவிஞர்களின் சுயதம்பட்ட வரலாறுகள் மட்டுமே புறக்கணிக்கத்தக்கவை. ஆனால் இதுவரை வெளிவந்துள்ள தன் வரலாறுகளின் அடிப்படையில் பொதுப்புத்தி சில எதிர்பார்ப்புகளைக் கொண்டிருக்கிறது.

புகழ் பெற்றவர்களும் சாதனையாளர்களுமே தன்வரலாறு எழுது வதற்குத் தகுதியானவர்கள் என்னும் கருத்து பொதுமனத்தில் ஆழமாகப் பதிந்திருக்கிறது. அவ்வாறுதான் தன்வரலாறுகள் எழுதப்பட்டும் வந்துள்ளன. அத்தகைய தன்வரலாறுகள் சில தெளிவான வரையறை களுக்கு உட்பட்டு இயங்குகின்றன. தம் வாழ்க்கை அனுபவங்களை விடத் துறை சார்ந்த தகவல்கள் விரிவாக இடம்பெறுதல் என்பது ஒன்று. முடிந்தவரை எல்லாரையும் புகழ்ந்துரைத்தல் என்பது மற்றொன்று. பிரச்சினைக்குரிய விஷயங்களைப் பேசாமல் மௌனம் சாதித்து விடுதல், சொந்த அபிப்ராயங்களைத் தவிர்த்தல் அல்லது மறைத்துக் கூறுதல், தம்மையும் தம் செயல்களையும் நியாயப்படுத்துதல், எல்லாத் தவறுகளையும் பிறர்மேல் சுமத்துதல் எனப் பலவற்றை அவதானிக்கலாம். இந்தச் சமூகத்தில் வாழ்ந்து தீர வேண்டியிருக்கும் அவஸ்தையைப் பதிவு செய்தல் இவற்றில் அறவே இல்லை எனவோ மிகவும் குறைவு எனவோ சொல்லிவிடலாம்.

மக்கள் வாழ்க்கையே வரலாறு என்னும் கருத்து இன்னும் முழுமையாக அங்கீகரிக்கப்படாத நமது சமூகத்தில் இத்துறையில் பெரும் மாற்றம் இனிமேல்தான் சாத்தியப்பட வேண்டும். தொண்ணூறுகளுக்குப் பின் தமிழுக்கு மொழிபெயர்க்கப்பட்ட தலித் தன்வரலாறுகள் (மராத்தி, கன்னடம்), தமிழிலேயே எழுதப்பட்டவை (முத்தம்மாள், பழனிச்சாமியின் 'நாடு விட்டு நாடு', கே.ஏ. குணசேகரனின் 'வடு' முதலியவை), சமீபகால மொழிபெயர்ப்புகளாக வெளியாகியிருக்கும் விளிம்புநிலை மாந்தர்களின் தன்வரலாறுகள் (நளினி ஜமீலா போன்றவை) ஆகியவை மாற்றத்திற்கான ஆரோக்கியமான போக்குகளாகத் தோன்றுகின்றன. நம் புனைவிலக்கியம் தவறவிட்ட பல்வேறு அம்சங்களை இந்தத் தன்வரலாறுகள் கொண்டிருக்கின்றன. தன்வரலாற்று நாவல்கள் எனத் தனியாகக் குறிப்பிடத்தக்க அளவில் பல நூல்களும் வந்துள்ளன.

இவ்வகையில் ரேவதியின் 'வெள்ளை மொழி' மிக முக்கியமானதொரு தன்வரலாறாகும். தமிழ்நாட்டைச் சேர்ந்த ஒருவர் தம் வாழ்வனுபவத்தைத் தமிழிலேயே எழுதியிருக்கிறார் என்பதும் முக்கியம். இந்நூல் ஆங்கிலம், கன்னடம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியாகிப் பரவலான கவனத்தைப் பெற்ற பின் இப்போதுதான் தமிழில் வெளியாகிறது. அரவானிகளின் வாழ்க்கைக் கதைகள் என 'உணர்வும் உருவமும்' என்னும் நூலை ஏற்கனவே ரேவதி வெளியிட்டுள்ளார். அரவானியர் பலரின் அனுபவங்களைப் பதிவு செய்த முக்கியமான நூல் அது. ஆனால் அந்நூல் தவறவிட்ட அரவானியரின் தொழில் சூழல், உறவு முறைகள் முதலிய பலவற்றை இந்நூல் கொண்டிருக்கிறது. தன் அனுபவமாக முன்னிலையை நோக்கி உரைக்கும் முறையில் எழுதப்பட்டுள்ள இந்நூலைத் திறந்த புத்தகம் என்று சொல்லலாம்.

இந்நூலில் அவர் தம் வாழ்க்கையைப் பெருமளவு ஒளிவுமறைவின்றி வெளிப்படுத்தியிருக்கிறார். இது இந்நூலுக்கான முதல் தகுதி என்று நினைக்கிறேன். அதன் காரணமாகப் பொதுமனத்தில் பெரும் அதிர்வுகளை இந்நூல் உருவாக்குகிறது. இந்த வாழ்வில் நாம் காணும் வக்கிரங்களை, குரூரங்களை, ஆபாசங்களை, இழிவுகளை மறைத்து எதுவும் நடக்காதது போலப் பாவனை செய்கிறோம். மறைவாக நடக்கும் எதுவும் ஏற்கத்தக்கதே என்னும் மனோபாவம் ஆழமாக வேரோடியிருக்கிறது. அப்படிப்பட்ட விஷயங்களைப் எழுதினால் மட்டும் சகிப்பின்மை வெளிப்படுகிறது. 'எல்லாம் இருக்கிறதுதான். ஆனால் அதை எழுத்தில் கொண்டுவரலாமா?' என்னும் கேள்வி எழுப்பப்படுகிறது. எழுத்திற்கெனப் பலவிதப் புனிதங்கள் கற்பித்து

வைத்திருக்கிறோம். இன்னின்ன சொற்களைப் பயன்படுத்தக்கூடாது, இந்தயிந்த விஷயங்களை எழுதக்கூடாது என்று அரூபக் கட்டளை எந்நேரமும் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டிருக்கிறது. இவை இவற்றை மட்டுமே பேசலாம் எனவும் எழுதப்படாத விதி நிலவுகிறது. இத்தகைய மனநிலைகளில் கலக்கத்தை உண்டாக்கும் எழுத்து இந்நூல்.

பாலின அடிப்படையில் நடைபெறும் சுரண்டல், அநீதி முதலியவை இதில் காட்சியாகி உள்ளன. அரவானியைப் பிறப்பியல்பாகக் கருதாத காரணத்தால் இழைக்கப்படும் கொடுமைகள், அவமானங்கள் ஏராளம். அவை அனுபவமாக வெளிப்பாடு கொள்ளும்போது நமக்குப் பெரும் குற்றவுணர்ச்சியை ஏற்படுத்துகின்றன. குடும்பம், உறவினர், நண்பர்கள், சகதோழிகள் என ஒட்டுமொத்தச் சமூகமும் இதில் பங்கு வகிக்கிறது. எவையெல்லாம் அங்கீகரிக்கப்படாதவையோ அவற்றில் ஈடுபட்டுத்தான் அரவானியர் வாழ வேண்டியிருக்கிறது. அதையே இந்தச் சமூகம் அவர்களுக்கு விதிக்கிறது. நெறியற்றது எனத் தான் கருதுபவற்றை ஒரு பாலினத்தின் மேல் திணித்து அவற்றையே செய்தாக வேண்டும் என நிர்ப்பந்திக்கும் ஒரு சமூகம் எத்தகைய முரண்களையும் போலித்தனத்தையும் கொண்டது என்பது விளங்குகிறது. ரேவதி எழுதியிருக்கும் மும்பை வாழ்க்கைப் பகுதிகள் திரை கிழித்து நம் முகத்தில் உமிழ்கின்றன.

பெங்களூர் வாழ்வில் அவர் எதிர்கொண்டிருக்கும் பல்வேறு நிகழ்வுகள் இதயத்தில் குருதி கசியச் செய்பவை. அவை பொருட்படுத்தப்பட்டு விரிவான தளத்தில் விவாதிக்கத்தக்கவை. வாசிப்புச் சுவை ஈர்ப்பால் படித்து ஒதுக்கிவிட்டு நம் வேலையைப் பார்க்கலாம் என்பதற்கான எழுத்தல்ல இது. நம் சமூகத்தின் ஒழுங்குகள், விழுமியங்கள், வரையறைகள், பொய்மைகள், குரூரங்கள், போலித் தனங்கள் என எல்லாவற்றையும் பரிசிலனைக்கு உட்படுத்த இவ்வெழுத்து நிர்ப்பந்திக்கிறது. வன்முறையின் ஒட்டுமொத்த வடிவமான நம் காவல் துறையின் குரூரம் சகிக்க முடியாதது. மனித உரிமை அமைப்புகள் எல்லாம் எவ்வளவோ எடுத்துச் செய்தும் காவல்துறையின் போக்கைப் பெரிதாக மாற்றிவிட முடியவில்லை. காவல்துறையின் உருவாக்க முறைமையிலேயே பெரும் குறைபாடு இருக்கிறது. சட்டங்களை விடச் சட்ட ஓட்டைகளையே பின்பற்றி வெற்றிகரமாக நடந்துவரும் துறை இது.

இத்துறை தன்னை நிலைநிறுத்திக் கொள்ளக் கையாளும் அருவெறுக்கத்தக்க உத்திகள், மனச்சாட்சியற்ற நடைமுறைகள், மன வக்கிரங்களை அரங்கேற்றும் கொடுமைகள் எனப் பலவற்றை ரேவதியின் வரலாறு அம்பலமாக்குகிறது. எத்தனைதான் கேவலப்பட்டாலும்

துடைத்தெறிந்துவிட்டு ஒன்றும் நடக்காததுபோல் பழையபடியே இயங்கும் இத்துறையைப் பற்றி இன்னும் ஆழமாகப் புரிந்து கொள்ளவும் விவாதிக்கவும் இந்நூல் வலியுறுத்துகிறது. ரவுடிகளும் அரவானியர் மீது பல்வேறு வகையில் தாக்குதல் நடத்துகிறார்கள். ஆனால் அதில் குற்றம் இழைத்தலும் தப்பித்தலும் சார்ந்த அச்சம் இருக்கிறது. அதிகாரம் என்னும் நச்சுத் தொப்பி தலையில் ஏற எந்த அச்சமும் இல்லாமல் எல்லாக் குற்றங்களையும் செய்கிறது காவல்துறை. ரேவதி பதிவு செய்திருக்கும் காவல்துறையின் முகம் இதுவரை வெளியில் தெரியாதது என்றே தோன்றுகின்றது. இத்தனை துயரம் மிக்க வாழ்வைப் பதிவு செய்வதற்கும் பெரும் மன வலு வேண்டும்.

தான் பெண்ணாக வாழ வேண்டும் என்னும் விருப்பம் ஒன்றே எல்லாவற்றையும் சகித்துக்கொள்ள ரேவதிக்குக் காரணமாக இருந் திருக்கிறது. பாலினத்தைத் தேர்வு செய்துகொண்டு சமூக அங்கீகாரத் தைப் பெற வாழ்நாள் முழுக்கப் போராட வேண்டியிருக்கிறது. அதுவே அவர் வாழ்வாகவும் அமைந்துவிட்டது. பெயரை விருப்பப்படி வைத்துக் கொள்ளவும் பெரும் போராட்டம் செய்ய வேண்டியிருக்கிறது. வீட்டார், சுற்றத்தார், ஊரார் எனப் பலரும் அவரது பழைய பெயரில் தான் அழைப்போம் எனப் பிடிவாதமாக இருக்கின்றனர். இந்தச் சமூகத்தின் உறுப்பினராக நம்மை ஆக்கிக்கொள்ள வேண்டும் என்றால் குடும்ப அட்டை, ஓட்டுநர் உரிமம், கடவுச்சீட்டு எனப் பலவற்றையும் பிரயத்தனம் செய்து பெற்று வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. சாதாரணமான ஒருவர் இவற்றைப் பெறுவதற்கே பல நாட்கள் அலைய நேரும்போது பாலினத்தையும் பெயரையும் மாற்றிக்கொண்ட ஒருவர், அதை எதற்காகவும் விட்டுக்கொடுக்க மாட்டேன் எனப் பிடிவாதம் கொண்டிருக்கும் ஒருவர் உடனடியாகப் பெற்றுவிட முடியுமா? எத்தனை சிரமங்கள் வரினும் தன் சுயம் பற்றித் தெளிவாக இருக்கிறார் ரேவதி. அதனால்தான் எல்லா இடத்திலும் பெயரை நிலைநிறுத்திக் கொள்ள முடிந்திருக்கிறது. தம் பெயருக்காக அவர் எடுத்திருக்கும் முயற்சிகள் பற்றி மட்டுமே விரிவாகப் பேசலாம்.

அரவானியர் தனிச் சமூகமாக இணைந்து வாழும் விதம் வியப் பளிக்கிறது. அவர்களுக்குள் இயங்கும் உறவுமுறைகள், சடங்குகள், அவற்றில் உள்ள நெகிழ்வுகள் என எல்லாமே வித்தியாசமானவை. முக்கியமாக அவர்களுக்குள் சாதியும் மதமும் பார்க்கப்படுவதில்லை என்பது பெரிய விஷயம். பெரியவரை மதித்தல் என்னும் பெயரில் புதியவர்களுக்கு வழிகாட்டிவிட்டு அவர்களைத் தங்களுக்கு ஏவல் செய்பவர்களாகப் பயன்படுத்திக்கொள்ளும் சூழல் நிலவுவதையும் காண முடிகிறது. ரேவதி இதிலும் மாறுபட்டு நடக்க முயல்கிறார்.

தம்முடைய சேலாக்கள் சுதந்திரமாக நடந்துகொள்ள அனுமதிக்கிறார். அவர்கள் மீது மிகுந்த அன்பு காட்டுகிறார். அவர்களிடமிருந்து புதியதோர் உலகைக் கற்றுக்கொள்கிறார். அரவானியரின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு அவற்றைப் புரிந்துகொண்டு நடக்கும் அதேசமயத்தில் அவற்றில் தமக்குப் பிடிக்காதவற்றை, சரியல்ல என்று கருதுபவற்றை மீறவும் செய்திருக்கிறார். அரவானியரின் உலகத்துள் ஆழ நுழைந்து சுற்றித் திரியும் அனுபவத்தை ரேவதியின் எழுத்து வழங்குகிறது.

அரவானியர் குறித்த கேலிகள், ஏளனங்கள், புறக்கணிப்புகள் என எல்லாவற்றையும் பதிவு செய்திருக்கும் இந்நூல் அரவானியர் குறித்து நிலவும் நல்ல எண்ணங்களையும் பதிவாக்கத் தவறவில்லை. தம் குல தெய்வக் கோயிலுக்குச் செல்லும்போது நடைபெற்ற சம்பவம் ஒன்றை ரேவதி விவரிக்கிறார். கோயிலில் பூப்போட்டுப் பார்த்தல் நடக்கிறது. பூவை எடுத்துக்கொடுக்க ரேவதியை அழைக்கிறார்கள். அப்போது பூசாரி 'நீயும் தெய்வமும் ஒன்னுப்பா' என்கிறார். உடல் உறவில் ஈடுபடுதலைக் காரணமாகக் கொண்டு இந்த எண்ணம் வெளிப் பட்டாலும் ஒன்றும் இல்லாத சூழலில் கானல் நீராகவேனும் இது தோன்றுகின்றது. தில்லியில் அரவானியருக்குக் கிடைக்கும் மதிப்பும் மரியாதையும் மிகவும் மகிழ்ச்சி தருபவை. இத்தகையவை கொஞ்சம் நம்பிக்கை ஊட்டுகின்றன.

பெண்ணாக வாழப் போராடும் அரவானி ஒருவரின் தன்வரலாறு இது. பெண்ணாகத் தம்மை உணர்ந்த கணம் முதல் இவரது போராட்டம் தொடங்குகிறது. தம்மை ஒத்தவர்களைக் கண்டறிந்து அவர்களோடு ஒத்து அவர்களின் மரபுகளைக் கடைபிடித்தல், அரவானியருக்கு என விதிக்கப்பட்ட பாலியல் தொழில் சார்ந்து வாழ்தல், புரிதல் குறைபாடு காரணமாக ஒதுக்கியும் வெறுத்தும் இம்சிக்கும் குடும்பம் முதல் மனிதத் தன்மையே அற்ற காவல்துறை வரை எல்லாத் தரப்பினரோடும் ஏற்படும் சம்பவங்கள், பாலினச் சிறுபான்மையினர் பற்றிய புரிதல் கொண்டவர்களோடு இணைந்து செயல்படும் விதங்கள் என வெவ்வேறு வகை அனுபவங்களை வெளிப்படையாகப் பேசும் நூல் இது. கெட்டி தட்டிப் போன பொதுமனத்தில் அதிர்வுகளை ஏற்படுத்துவதோடு எழுத்துப் புனிதங்களைச் சிதைத்துத் தமிழ் எழுத்துலகிற்குப் புதிது வழங்கும் ஆற்றல் இதனுள் உள்ளடங்கியிருக்கிறது.

பெருமாள்முருகன்

# 1

எங்க ஊரு சிறிய கிராமம். நாமக்கல் மாவட்டத்துல இருக்குது. ஊர் நடுவுல மாரியம்மன் கோயிலும் விநாயகர் கோயிலும் இருக்குது. ஊருக்கு ஒதுக்குப்புறமா இருக்கிற சுடுகாட்டுப் பக்கம் காளி அம்மன் கோயில் இருக்குது. அரைக் கிளாசுல இருந்து ஐந்தாம் வகுப்பு வரை யிலும் பள்ளிக்கூடமும் உண்டு. ஆறாவதுக்குப் போகணுமுன்னா நாமக்கல் டவுனுக்குத்தான் போகணும். டவுனு எங்க கிராமத்துல இருந்து மூன்று மைல் தொலைவுல இருக்கு. டவுனுல நாமகிரி அம்மன் நரசிங்கப் பெருமாள் கோயிலும் ஆஞ்சநேயர் கோயிலும் பெரிய ஒரே கல்லால் ஆன மலைக்கோட்டையும் மிகச் சிறப்பு வாய்ந்தவையா இருக்கு. பங்குனி மாசம் இந்தக் கோயில்ல திருவிழா நடத்துவாங்க. பத்து நாட்களுக்கு நடக்கும். மலைக்கோட்டையைச் சுத்தியும் திப்பு சுல்தான் காலத்துல கட்டின மதில் செவுரு இருக்குது.

கிராமத்துல சாதின்னு எடுத்துக்கிட்டா மேல்சாதி கீழ்ச்சாதின்னு இருக்கு. மேல்சாதின்னா கவுண்டமாருங்க. கீழ்ச்சாதிக்காரங்க ஊருக் குள்ள இருக்கமாட்டாங்க. தனியா ஊருக்கு ஓரமாத்தான் அவுங்க வீடுங்க இருக்கும். மேல்சாதிக்காரங்க பண்ணையில வேலவெட்டி செய்ய மட்டும்தான் கீழ்ச்சாதிக்காரங்க வருவாங்க. கோயில் திருவிழா கிராமத்துல நடந்தாக்கூடக் கோயிலுக்கு வெளியிலதான் நின்னு சாமி கும்புடுவாங்க. கல்யாணம் காட்சி நடந்தாலும் அவுங்கவுங்க சாதியில தான் கல்யாணம் பண்ணிக்கோணும். கிராமத்துப் பஞ்சாயத்துக் கூட்டி நல்லது கெட்டது தீர்மானம் எடுப்பாங்க. கிராமத்தச் சுத்திக் கரடுங்க கூட இருக்கு. ஒரு கரடு பேரு சூரியன் கரடு. காலையில பாத்தாக் கரட்டுக்குப் பின்னாடி இருந்து சூரியன் உதிச்சு வர்ற மாதிரி இருக்கும். அதனால அந்தக் கரட்டச் சூரியன் கரடுன்னு சொல்லுவாங்க. இன்னொரு கரடு சன்னியாசி கரடு. இந்தக் கரட்டுல சிவலிங்கத்த வச்சு ஒரு சன்னியாசி தவம் இருந்ததா ஐதீகம் சொல்றாங்க. அதனால இந்தக் கரட்டச் சன்னியாசி கரடுன்னு சொல்லுவாங்க.

நாமக்கல்லப் பொருத்தவரையில லாரிங்களுக்கும் லாரி பாடி கட்டுற பட்டறைங்களுக்கும் கோழிப் பண்ணைகளுக்கும் முட்டைகளுக்கும் பேருபோனது. அதவிட்டா நெல்லு, கரும்பு, சோளம், கிழங்கு எல்லாம் விளையுது. இப்படி எங்க ஊரப் பத்தி இன்னும் அடுக்கிக்கிட்டே போகலாம்.

எங்க அம்மா அப்பாவுக்கு நான்தான் கடைசி மகன். என் பேரு துரைசாமி. எனக்கு மூனு அண்ணாங்களும் ஒரு அக்காவும் இருக்காங்க. அந்தக் காலத்து வீடு. சுண்ணாம்புக்காரையில கட்டுன மச்சு வீடு. வீட்டுக்கு முன்னாடி பெரிசா வாசல். அதற்கு எதிர்க்க மாட்டுத் தொழுவம் இருக்கு. எங்களுக்குச் சொந்தமா இரண்டு லாரியும் ஐந்து ஏக்கரா நிலமும் இருந்துச்சு. எங்க அப்பா எங்க லாரியில டிரைவராகவும் எங்க அண்ணா (மூத்தவர்) கிளீனராவும் இருந்தாங்க. அப்போ எனக்கு நினைவு தெரிஞ்சு பத்து வயசுல ஐந்தாவது படிச்சுட்டு இருந்தேன். அண்ணாங்களும் அக்காவும் டவுனுக்குப் போயிப் படிச்சுட்டு வருவாங்க. அம்மா அப்பாவுக்கு நாந்தான் கடைசி மகனா இருந்ததால ரொம்பச் செல்லம் கொடுத்து வளத்துனாங்க. நா பள்ளிக்கூடம் போகறப்போ பொம்பளப் புள்ளைங்களோடதான் போவேன். பொம்பளப் புள்ளைங்க விளையாட்டத்தான் விளையாடுவேன். அந்த வயசுல வாசக்கூட்டிச் சாணி தெளிச்சுக் கோலம் போடுவேன். அம்மாவுக்குத் தொணையா வீடு பெருக்கிப் பாத்திரம்கூடக் கழுவிக் கொடுப்பேன். அப்போ நான் செய்யுற வீட்டு வேலைங்க பெரியவங்க செய்யுற மாதிரி சுத்தமா அழகா இருக்காது. ஆனாலும் எனக்குத் தெரிஞ்ச மாதிரி செய்வேன். சில சமயத்துல எதிர் வீட்டுல கோலம் நல்லாப் போட்டு இருந்தா காலால அழிச்சுப்புட்டு ஓடி வந்துடுவேன்.

பள்ளிக்கூடம் முடிஞ்சு வீட்டுக்கு வந்தா அக்காவோட பாவாட சட்டைய எடுத்துப் போட்டுக்கிட்டுத் துண்டைத் தலையில முறுக்கி நீட்டச் சடையாத் தொங்க விட்டுக்கிட்டு கல்யாணப் பொண்ணு மாதிரி தலையக் குனிஞ்சுக்கிட்டு மெதுவாப் பொம்பள கணக்கா நடந்து காட்டுவேன். அதப் பாக்குறவங்க சிரிப்பாங்க. பெரிசா எடுத்துக்கல. சின்னப்பையன் விளையாடுறான், வயசு ஆக ஆக அவனுக்குத் தெரியு முன்னு விட்டுட்டாங்க. பள்ளிக்கூடத்துல படிக்கிற பசங்க, அக்கம் பக்கம் இருக்கிற ஆம்பள, பொம்பளங்க என்னை ஒம்போது, பொடுக சட்டி, பொட்டையான்னு கூப்புடுவாங்க. நீ ஆம்பள தானே ஏன்டா பொம்பள மாதிரி நடக்கிறே, பொம்பள துணியப் போடுறேன்னு கேலி பண்ணுவாங்க. எனக்குத் தோனிச்சு, புரிஞ்சுச்சு, நான் அப்படிதான் நடந்துக்கிறேன்னு. எனக்கு அப்படி இருக்க ஆசையா இருக்கும்.

எங்க வீட்டுக்கு எதிர்ல காலேஜ்ல படிக்கிற ஒருத்தரு வாடகைக்கு இருந்தாரு. அப்பப்போ பாடத்துல ஏதாவது சந்தேகமுன்னா அவர் கிட்டே போயிக் கேட்பேன். சில சமயத்துல அதிக நேரம் ஆனாலும் அங்கேயே அவரோட விளையாடுவேன். அப்படி விளையாடும்போது என்னோட கன்னத்தப் புடிச்சுக் கிள்ளுவாரு. முத்தம்கூடக் கொடுப்பாரு. கட்டிப் பிடிப்பாரு. எனக்குப் புடிச்சு இருந்துச்சு. ஆனா அவரும் என்னைப் பொம்பளச் சட்டியின்னு கூப்பிடும்போது வெட்கமாவும் கூச்சமாவும் இருக்கும். நீ ஏன் பொம்பள மாதிரி வாசக் கூட்டிக் கோலம் போடுற, இதெல்லாம் பொம்பளைங்க வேலையாச்சேன்னு கேட்பாரு.

மூனாவது படிக்கிறப்போ இருந்தே நாந்தான் கோலம் போடுவேன். எங்க அம்மா காலையிலேயே என்னை எழுப்பி விடுவாங்க. அம்மா மாட்டுல பால் கறக்கப் போயிடுவாங்க. நான் சாணி தெளிச்சுக் கோலம் போடுவேன். அக்கா சீக்கிரமா எழுந்திருக்கமாட்டா. அவ லேட்டா எழுந்தாலும் நான் போட்ட கோலத்தப் பாத்துப் பொறாமப்பட்டு அம்மாகிட்டக் கொற சொல்லுவா. ‘பாரும்மா இந்தப் பொட்டான, அசிங்கமாக் கோலம் போட்டு இருக்கான். நல்லாக் கூட்டக்கூட இல்லே’ன்னு சொல்லுவா. இப்படி என்னோட இஷ்டமாவே இருந்துக் கிட்டு இருந்தேன். வருஷம் ஆச்சு. ஐந்தாவது பாஸ் ஆகி ஆறாவது படிக்க டவுனுக்குப் போனேன். காக்கி அரக்காலு டவுசரும் வெள்ளச் சட்டையும்தான் அங்க யூனிபாம். டவுனுக்குப் போறதால ரொம்பச் சந்தோஷம். நான் பெரிய பையனா ஆயிட்டேன். பெரிய பள்ளிக் கூடத்துக்குப் போறேன்னு.

அந்தச் சமயத்துல மழ இல்லாம தோட்டத்துல வெள்ளாம சரியா இல்லை. லாரி பிஸ்னஸ்லகூட அப்பா ரொம்ப ஒடஞ்சு போயி இருந்தாரு. கிராமங்களுக்குப் போயி பால் கேன்கள ஏத்திக்கிட்டுப் பெரிய பால் பண்ணையில கொண்டுபோயிக் கொடுக்கணும். லாரி ஏதாவது ரிப்பேர் ஆயி லேட்டாப் பண்ணைக்குப் பால் கொண்டு போயிக் கொடுத்தாப் பால் கெட்டுப் போயிட்டா டெண்டர் பணத்துல புடிச்சுக்குவாங்க. இப்படி அடிக்கடி பழைய லாரினால அப்பாவுக்குத் தொல்லைங்க இருந்துச்சு. காலையில ஐந்து மணிக்கு லாரி எடுத்துக் கிட்டு ஊர் ஊராச் சுத்திப் பால்கேனக் குறிப்பிட்ட நேரத்துக்குள்ள அதாவது காலையில 9.30 மணிக்குள்ள கொண்டுபோயிக் கொடுக் கோணும். அப்படிக் குறிப்பிட்ட நேரத்துல பால் பண்ணைக்குச் சேத்தின பிறகு பால் கெட்டுப்போயிட்டா லாரிக்காரங்க பொறுப்பு இல்ல. அந்த ஊருல பால் வாங்குறவங்க பொறுப்பு. இதே மாதிரி மாலையில நாலு மணிக்குப் புறப்பட்டு இரவு ஒன்பதரை மணி ஆகி வீட்டுக்கு

வர பத்து மணி ஆயிடும். அம்மா, அப்பாவுக்கும் அண்ணாவுக்கும் சாப்பாடு போடுவாங்க. அந்தச் சமயத்துல நானும் அக்காவும் நல்லாத் தூங்கிக்கிட்டு இருப்போம். அப்பா சாம்பாருல கொஞ்சம், ரசத்துல கொஞ்சம் சாப்பாடு சாப்பிட்டுவிட்டுத் தயிர்ல சாப்பிடும்போது என்னை எழுப்புவாரு. 'கண்ணு சாமி அப்பாடா கண்ணு, கண்ண முழிச்சுப் பாரு கண்ணு. இதோ அப்பா தயிர்சாதம் ஊட்டுறேன் சாப்புடு கண்ணு.' இப்படிப் பாசத்துடன் அப்பா ஊட்டத் தூக்க மயக்கத்தில் நானும் ஒரு வாய் சாப்பாடு வாங்கி மென்னுக்கிட்டே தூங்குவேன்.

ஆறாவது படிக்கப் பள்ளிக்கூடம் போன புதுசுல டவுனுங்கறதால ரொம்பப் பயமா இருக்கும். ரோட்டுல நடக்குறப்போ லாரி, பைக், காரு, சைக்கிள் வேகமா வந்தா ரொம்பப் பயமா இருக்கும். பள்ளிக்கூடத்துல எட்டாவது, ஒம்பதாவது, பத்தாவது, பதினொன்னாவது, பன்னிரண்டாவது பசங்களப் பாத்தாப் பயமா இருக்கும். 'கண்ணு ரோட்டுல நடந்து போறப்போ சைக்கிளு, பஸ், காருன்னு வேகமா வரும்பா. பாத்து ஓரமாப் பசங்களோட கையப் புடிச்சுட்டு போகணுமுன்னு' அம்மா சொன்னது எனக்கு அடிக்கடி ஞாபகத்துக்கு வரும். மூனு மைலு பசங்களோட நடந்தே போயிட்டு நடந்தே வீட்டுக்கு வருவேன். அப்படிப் பசங்களோட புள்ளைங்களோட நடந்து வர்ற தடத்துல அழகழகா மச்சு வீடுங்களோட காம்புவுண்ட் மேல நிக்கும் வித்தியாசமான பூக்களப் பாத்தா ஆசையா இருக்கும். எப்படியாவது இந்தப் பூவ ஒரு நாளைக்குப் பறிச்சு டிபன் பாக்ஸ்ல வச்சுக்கிட்டுப் போகணும்னு தோணும். யாருக்கும் தெரியாம காம்பவுண்ட் மேல ஏறிப் பூவப் பறிச்சு டிபன் பாக்சுல வச்சுகிட்டுப் போவேன். வீட்டுக்கு வந்தவுடன் அந்தப் பூவக் கிராமத்துல இருக்கிற விநாயகருக்கு வைத்துச் சாமி கும்பிடுவேன்.

எங்களோட தோட்டம் கிராமத்துல இருந்து ஒரு மைல் தொலைவுல இருக்கு. கருங்காடுன்னு சொல்லுவாங்க. லீவு நாளையில எரும மாடுகள, ஆடுகள ஓட்டிக்கிட்டுப் போயிப் புல்லுப் பூண்டு இருக்குற இடமாப் பாத்து மேய விடுவேன். என்னை மாதிரி அக்கம் பக்கம் காடு வச்சு இருக்கறவங்க பசங்க புள்ளைங்களும் அவங்கவங்க ஆடு மாடுகள ஓட்டிக்கிட்டு வருவாங்க. அவுங்களோட சேந்துக்கிட்டுக் கோயிலுக் கட்டிக்கிட்டு விளையாடுவோம். பனமரத்துல ஏறி நொங்கு பறிச்சுப் போட்டுத் திம்போம். மத்தியானம் ஆயிடுச்சுனா எங்க தோட்டத்துல பம்பு செட்டு எடுத்துவிட்டு அந்தப் பெரிய தொட்டில நீச்சல் அடிப்போம். எங்களோட வயக்காடு நெல்லு விளைஞ்சு குளுந்து நிக்கும். நானும் என்னை மனசாரப் பொம்பளப் புள்ளையா நெனச்சுக் கிட்டு வயக்காட்டுக் கரையில சந்தோஷமா ஆடிப்பாடி ஓடுவேன்.

ஒருசமயம் எங்க தோட்டத்துல சக்கரவள்ளிக் கிழங்கு நட்டுக்கிட்டு இருந்தாங்க. எங்க பண்ணையில வேலை செய்யறவங்க குடும்பத்தோட எங்க பண்ண வீட்லதான் இருப்பாங்க. அது தவிரக் கிழங்குக் கொடி நடறதுக்கு இன்னும் அதிக வேலையாட்கள் ஆம்பள பொம்பள எல்லாம் வந்து இருந்தாங்க. தோட்டத்துல ஆம்பளைங்க மமுட்டியப் புடிச்சிக்கிட்டுக் கரை இழுப்பாங்க. தண்ணி பாய்ச்சுவாங்க. பொம்பளங்க கொடி நடுவாங்க. நானும் வயல்ல இறங்கிப் பொம்பளைங்களோட சேந்து கொடி நடுவேன். எங்க அம்மா திட்டுவாங்க. 'உனக்குத் தெரியாது, சரியா நடவே உனக்கு வராது. கசாமுசானு பண்ணாதே'ன்னு என்னை விரட்டிப்புடுவாங்க.

நானும் எங்க பண்ணையில வேல செய்யுறவங்க பையனோட சேந்துக்கிட்டுத் தென்னை மரத்து அடியில கோயிலுக் கட்டி விளையாடிட்டு இருந்தோம். அப்போ அந்தப் பையன் முறுக்குத் தின்னுக்கிட்டு இருந்தான். எனக்கும் பாதி கடிச்சுட்டுக் கொடுத்தான். நான் அத வாங்கிச் சாப்பிட்டேன். அதப் பாத்த எங்க அம்மா வயக்காட்டுல இருந்து வேகமா ஓடிவந்து என்னோட முறுக்கப் புடுங்கி எறிஞ்சுபுட்டுத் திட்டுனாங்க. கூடவே அந்தப் பையனயும் திட்டுனாங்க. ஏன் எங்க அம்மா திட்டுறாங்கன்னு ஒன்னுமே புரியாம முழிச்சுக்கிட்டு இருந்தேன். அந்தப் பயபுள்ளகிட்ட வாங்கிச் சாப்பிடக் கூடாது; தீட்டுனு சொன்னாங்க. தீட்டுனா என்னம்மானு நான் பதிலுக்குக் கேட்டேன். அதெல்லாம் உனக்குப் புரியாது. நீ சின்னப் பையன்னு சொல்ல, நான் பள்ளிக்கூடத்துல எல்லாப் புள்ளைங் களோட சேந்து விளையாடுறேன், காக்காக் கடி கடிச்சு முட்டாயி சாப்புடுவேன், அதெல்லாம் தீட்டான்னு திருப்பிக் கேட்டேன். அதுக்கு எங்க அம்மா 'சக்கிலிப் பறப் புள்ளைங்க கொடுக்கிற தீனிய வாங்கித் தின்னாச் சாமி கண்ணக் கொத்திப்புடுண்டா'ன்னு சொன்னாங்க. எனக்குப் பயமா இருந்துச்சு சாமி கண்ணக் கொத்திப்புடுமுன்னு. ஆனா சக்கிலி, பறப்புள்ளைங்கனா யாரு, அவுங்க எப்படி இருப்பாங் கன்னு எனக்குள்ளேயே தோணும். யாருகிட்டயும் எதையும் வாங்கிச் சாப்பிடாமலேயே இருப்பேன். சாமி கண்ணக் கொத்திப்புடுமுன்னு.

கிராமத்துலயும் பள்ளிக்கூடத்துலயும் ஆம்பளப் பசங்க கில்லி ஆட்டம், திருடன் போலீஸ் ஆட்டம், கிரிக்கெட், பால் இப்படி விளையாடுவாங்க. நானு பொம்பளப் புள்ளைங்களோட அஞ்சாங் கல்லு, நொண்டி, கண்ணாமூச்சி, கரம் தாண்டுதல்னு விளையாடுவேன். சில சமயத்துல பொம்பளப் புள்ளைங்க 'ஏண்டா எங்களோடயே விளையாட வர்ற? உன்ன மாதிரி பசங்க அங்க விளையாடுறாங்க. அங்க போயி அவுங்களோட விளையாடு'ன்னு சொல்லுவாங்க. எனக்கு அவங்களோட விளையாடப் புடிக்கலன்னு சொல்லுவேன்.

நான் பொம்பள மாதிரி நடந்துக்கிறேன்னு பொம்பள வேலைங்களச் செய்யறேன்னு கிராமத்துல பள்ளிக்கூடத்துல எல்லாரும் என்னைக் கண்டாலே கேலி செய்யுறது இல்லாம, என்னைப் பாத்தாலே போதும் ஏதாவது வம்பு இழுப்பாங்க. திக்கித் திக்கித் திக்குவாயா நான் பேசற தாலயும் என்னைப் பேச வச்சு வேடிக்கை பாக்குறது வாடிக்கையாப் போயிடுச்சு.

கிளாசுல உக்காந்துக்கிட்டுப் பொம்பளப் புள்ளைங்களையே பாத்துட்டு இருப்பேன். அவுங்க போட்டுக்கிட்டு இருக்கற ரெண்டு சடை, பூ மாதிரி கட்டி இருக்கிற கலர் ரிப்பன், மல்லிகை, கனகாம்பரம் பூவு, பாவாட சட்டை இதெல்லாம் பாத்துப் பாத்து ஏங்குவேன். நான் இதையெல்லாம் போட்டுக்க முடியாதேன்னு வருத்தப்படுவேன். பாடத்தச் சரியாக் கவனிக்காததால வாத்தியாரு என்னைத் தொடயப் புடிச்சுக் கிள்ளிப் பெஞ்சுமேல ஏறி நிக்க வைப்பாரு. முட்டிகூடப் போடச் சொல்லுவாரு. நான் சரியாப் பாடத்தக் கவனிக்கவில்லை என்று கொடுக்கப்படும் தண்டனைகள் அதற்காக மட்டும் அல்ல. நான் பொம்பள மாதிரி நெளியுறேன், பொம்பள மாதிரி பேசுறேன்னுகூட அதிகமா அடி விழும். 'ஏண்டா மத்த பசங்க மாதிரி வீரமா இருக்கமாட்டேங்கற'ன்னு வாத்தியாரு குச்சியால அடிச்சும் இருக்கார். அதே போல பி டி பீரியட்லகூட நான் ஆம்பள விளையாட்டு விளையாடப் புடிக்காததால பி டி வாத்தியாரு கூட என்னோட காதப் புடிச்சு முறுக்கி விடுவாரு. 'என்னடா நீ பொம்பளையா? ஆம்பளையா? எங்க டவுசரக் கழட்டு பாக்குறே'ன்னு டவுசர அவுக்க வருவாரு. அப்போ நான் அழுவேன். மத்த பசங்க சிரிப்பாங்க. எனக்குத் தோணுது, புரியுது, நான் பொம்பளப் புள்ளை யாட்டம் நடந்துக்கிறேன். எனக்கு அப்படி நடந்துக்க இயல்பா இருக்கு. என்னால ஆம்பளைன்னா எப்படி நடந்துக்கோணுமுன்னு தெரியல. என்னைச் சாப்பாடு சாப்பிடவேண்டாமுன்னு சொன்னா நான் சாப்பிடாம இருக்க முடியுமா? அதுபோலத்தான் நான் பொம்பள மாதிரி நடந்துக்கிறதும்.

ஒருமுறை நான் ஏழாவது படிக்கறப்போ பள்ளிக்கூடத்துல ஆண்டு விழா வந்தது. ஆண்டு விழாவுல நாடகம், டான்ஸ் எல்லாம் இருக்கும். அதுல ஒரு நாடகத்துல அரிச்சந்திரன் மனைவி சந்திரமதியா வேடம் போட்டு நடித்தேன். சந்திரமதி தன்னோட குழந்தை பாம்பு கடித்து இறந்தபின் இறுதிச்சடங்குக்குச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்வாள். சுடுகாட்டில் இருக்கும் வெட்டியான் சந்திரமதியின் கணவன். அவனோட முதலாளிக்குக் கொடுக்கவேண்டிய காணிக்கையைச் செலுத்தப் பணம் இல்லாமல் ஊரில் சென்று பிச்சை எடுப்பதுதான்

அந்த சீன். சேலை கட்டி டோப்பா முடியை விரித்துக்கொண்டு முந்தானையைக் கையில் ஏந்தியபடி ஒரு பாட்டுக்கு நடித்தேன். நாடகம் முடிஞ்சு எல்லாரும் 'நன்றாக நடித்தாய்; அசல் பொம்பள மாதிரி இருந்தாய்' என்று என்னைப் பாராட்டினாங்க. அவுங்க பாராட்டைக் கேட்டு எனக்குச் சந்தோஷமா இருந்தது.

12ஆவது படிக்கிற பசங்களும் என்னைத் தனியா அடையாளம் கண்டுக்குவாங்க. கிரவுண்டுல நடந்துபோனா 'ஏ பொட்டையா'ன்னு கூப்பிடுவாங்க. தலையில கொட்டுப் போடுவாங்க. என்னோட மார்பப் புடிச்சுக் கிள்ளுவாங்க. 'ஏண்டா, நாடகத்துல சந்திரமதி வேடம் போட்டியே, மார்ல என்னடா வச்சு இருந்தே?'ன்னு கேலி செய்வாங்க. எனக்கு அந்தச் சமயத்துல கிளாசுல ஆம்பளப் பசங்களோட பக்கத்துல உட்காரவே பிடிக்காது. வெட்கமா, கூச்சமா இருக்கும். அதே சமயத்துல எனக்குப் புடிச்ச, என்னைக் கேலி செய்யாத பசங்களப் பாத்தா அவங்கள லவ் பண்ணத் தோணும். எனக்கு ஆங்கிலப் பாடம் மட்டும் சரியாவே வராது. என்னோட மனசுக்குள்ள ஒரே குழப்ப மாவே இருக்கும். நான் ஆம்பளப் புள்ளையா இருக்கேன். எனக்கு ஏன் ஆம்பளப் பசங்களப் பாத்தா லவ் பண்ணத் தோணுது? நான் ஆசப்படுறது சரியா தப்பான்னு மனசுக்குள்ளேயே குழம்பிக்கிட்டு இருப்பேன்.

இந்தக் கொழப்பத்தப் பத்தி என்னால யாருகிட்டேயும் சொல்ல முடியல. வீட்டுலயும் அம்மா அப்பா அண்ணாகிட்டேயும் சொல்ல முடியல. அதே சமயத்துல என்னோட மன ஆசையைக் கட்டுப்படுத்த முடியல. புத்தி கெட்டவனாட்டம் பள்ளிக்குப் போகாம கட் அடிக்க ஆரம்பிச்சேன். அந்தச் சமயத்துல அண்ணாங்க சரியாப் படிப்பு வராம எங்க லாரியில கிளீனராப் போயிட்டாங்க. அக்கா வயசுக்கு வந்துட்ட தால அவளையும் பள்ளிக்கூடத்த விட்டு நிறுத்திட்டாங்க. நான் பள்ளிக் கூடத்துக்கு அடிக்கடி கட் அடிச்சுட்டு எங்க அப்பா பாக்கட்ல காசு திருடிக்கிட்டுச் சினிமாவுக்குப் போயிடுவேன். அப்பெல்லாம் பழைய படம்தான் போடுவாங்க. எனக்கு எம் ஜி ஆர், சரோஜாதேவி படம்னா ரொம்பப் பிடிக்கும். தரை டிக்கட் 75 காசு அப்போ. பள்ளிக்கூடத்துல பசங்களோட கிண்டல், சரியா ஆங்கிலம் தெரியாததால படிப்பு மேல இஷ்டம் இல்லாதது, என்னோட மனக்குழப்பம் இவை எல்லாம் அந்த இரண்டரை மணி நேரம் படம் பார்க்கும் வரைக்கும் இருக்காது. படம் விட்டு வெளியில வந்தாத் திரும்பி அதே மனக் கொழப்பமா இருக்கும்.

காலைக் காட்சி முடிஞ்சதும் எங்கியாவது காடுங்கள்ல போயித் தனியா உட்காந்துக்கிட்டும் புலம்பிக்கிட்டும் அந்தப் படத்துல சரோஜாதேவி பாடுன பாட்டப் பாடிட்டு என்னை நானே சரோஜா

தேவியா நெனச்சுட்டும் இருப்பேன். சாயந்திரமா நாலு மணி ஆயிட்டா பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்குப் போறமாதிரி வந்துடுவேன். எங்க வீட்ல என்னையாவது நல்லாப் படிக்க வைக்கோணுமுன்னு ரொம்ப ஆசையா இருந்தாங்க. வீட்டுல நான் சரியாப் படிக்காட்டிக்கூட அம்மா ‘அண்ணாங்க சரியாப் படிக்காம இன்னைக்கு லாரில கிரீஸ் சட்டையோடு பனியிலும் மழையிலும் கஷ்டப்படுறாங்க. அவுங்கள மாதிரி நீயும் கஷ்டப்பட வேண்டாமுடா. படிடா படிடா’ன்னு சொல்லுவாங்க. அப்பாவும் அண்ணாங்களும் லாரியில போறதால என்னைப் பத்தி கண்டுக்க அவுங்களுக்கு நேரம் இல்லை. அம்மாவுக்கு வீட்டு வேலைங்க, ஆடு மாடுகளப் பாக்கணும். தோட்டத்தையும் பாக்கணும். அதனால அவுங்களும் என்னைக் கவனிக்கல. அக்கா மட்டும் என்னோட வீட்ல சண்டை வளத்துக்கிட்டே இருப்பா.

சரியா நான் பள்ளிக்கூடம் போகாம இருக்கிறது எப்படியோ என்னோட வீட்டுக்குத் தெரிஞ்சு போச்சு. எங்க அம்மா என்னோட அண்ணாங்க கிட்டச் சொல்லி அடிவாங்க வைச்சாங்க. அடிச்சதோட இல்லாம ‘ஏண்டா பொட்டத் தாயோலி, இந்த வயசுலயே கட் அடிச்சுட்டுச் சினிமாவுக்குப் போறியா’ன்னு திட்டுவாங்க. ‘உன்னப் படிக்க வைக்கத்தானடா நாங்க லாரியில வேல செய்யுறோம். ஏண்டா இப்படி இருக்கே’ன்னு கேட்பாங்க. ‘இனிமே தினமும் சரியாப் பள்ளிக்கூடம் போகணும். பள்ளிக்கூடம் போறதுக்கு முன்னாடி எரும மாடு சாணி எல்லாம் அள்ளிப்புட்டுத் தீனிபோட்டுத் தண்ணி வச்சுட்டுத் தான் போகணும். அதேபோல் சாயந்திரம் வந்தா அதே மாதிரி செய்யணும். உனக்கு இப்பவே கஷ்டம்னா என்னான்னு தெரியணும்’னு கண்டிப்பாச் சொல்லிட்டாங்க. என்னோட உணர்ச்சிங்க அவுங்களுக்கு எங்க தெரியப் போவுது. ஆசைகளை உணர்ச்சிகளை மறைமுகமா மூட்டை கட்டி வச்சுட்டுக் கேலி கிண்டலுக்கு நடுவில் அண்ணாங்க சொன்ன மாதிரி கொஞ்ச காலம் செஞ்சுக்கிட்டு இருந்தேன்.

எங்க ஊர்ல மாரியாயி நோம்பு வந்துச்சு. அந்தச் சமயம் ஊரே வண்ண வண்ண விளக்கா இருக்கும். சாமி அலங்காரம், தேரு, வாண வேடிக்கையின்னு ரொம்பப் பிரமாதமா இருக்கும். வீடுங்கள்ல அரிசி மாவு இடிச்சுச் சக்கரபாகு காச்சிப் பிசஞ்சு வெளக்குப் போட்டு மாரியம்மனுக்குக் கொண்டு போவாங்க. என்னோட வயசுப் பொம்பளப் புள்ளைங்க பட்டுப் பாவாட, தாவணி போட்டுக்கிட்டு நீட்டமா ஒத்தச் சடை போட்டுத் தலை நிறையப் பூ வச்சுக்கிட்டு அந்த மாவிளக்குத் தட்டை ஏந்திக்கிட்டுப் போற அழகைப் பாத்தாப் பொறாமையா இருக்கும். நானும் பொம்பளையாப் பொறந்து இருந்தா அவுங்களோட இப்படிப் போயி இருக்கலாமுன்னு தோணும். சாமி

பூஜை எல்லாம் முடிந்து இரவு ஊருல இருக்கற பெரிய பசங்கல்லாம் நாடகம் போடுவாங்க. நாடகத்துல நடிக்கப் பொம்பளைங்களக் கூட்டிவந்து இருப்பாங்க. அந்த நாடகத்தைப் பார்க்க மொத வரிசையாச் சாக்கு விரிச்சுப் போட்டு உக்காந்துக்குவேன். அந்த நாடகத்துல நடிக்கிற பொம்பளைங்களையே பாத்துக்கிட்டு இருப்பேன். அதேபோல வீட்டுக்கு வந்து நானும் கண்ணாடி முன்னே நின்னுக்கிட்டு நடிச்சுப் பாத்துக்குவேன்.

மறுநாளு கோயில்ல ஆடு வெட்டிப் பொங்க வைப்பாங்க. அன்னைக்கு மத்தியானம் பத்துப் பசங்க சேந்துட்டுக் கரடிவேஷம், விநாயகர் வேஷம், போலீஸ் வேஷம், குறவன் வேஷம்னு போட்டுக்கிட்டுக் கிராமத்துல எல்லா வீட்டுக்கும் போயி ஆடிப்பாடி பணம் வசூல் பண்ணலாம்னு பேசிக்கிட்டாங்க. என்னக் கூப்பிட்டு 'நீ கொறத்தி வேஷம் போடுடா. நல்லாப் பொம்பள கணக்கா இருப்பே'ன்னு சொன்னாங்க. 'எனக்குக் குறத்தி வேஷம் போட ஆசையாத்தான் இருக்கு, ஆனா எங்க வீட்ட நெனச்சாப் பயமா இருக்கே'ன்னு சொன்னேன். 'அட, பைத்தியக்காரா, நீ பொம்பள வேஷம் போட்டா யாரும் உன்னை அடையாளம் கண்டுக்கமாட்டங்கடா'ன்னு சொன்னாங்க. 'சரி, இந்த வேஷம் போட துணி, தோடு, டோப்பா எல்லாம் வேணுமே'ன்னு நான் கேட்டேன். 'அத நாங்க எல்லாம் பேசிக்கிறோம். டவுன்ல இந்த மாதிரி வேஷத்துக்கு எல்லா உடைகளும் ஆபரணங்களும் வாடகைக்குக் கொடுப்பாங்க. நாம் வேஷம் போட்டு ஆடினா ஊருக்குள்ள காசு கொடுப்பாங்க. அத வச்சு வாடகப் பொருளுக்குப் பணம் கட்டலாம், மோளக்காரனுக்குப் பணம் கொடுக்கலாம்'னு சொன்னாங்க. ஆனாலும் 'எனக்கு ஆசையாத்தான் இருக்குது. எங்க அண்ணனுங்கள நெனச்சாத்தான் பயமா இருக்கு'ன்னு சொன்னேன். 'நாம வேஷம்போட்டு ஆடறது சாமிக்காகத்தான். இந்த ஊரு ஜனங்கள சந்தோஷப்படுத்தத்தான். உங்க அண்ணங்க கேட்டா நாங்க சொல்லிக்கிறோம்'னு சொன்னாங்க. நானும் சரின்னு ஒத்துக் கிட்டேன்.

பொம்பள மாதிரி, நரிக்குறத்தி மாதிரி வேஷம் போட்டுக்கிட்டாலும் அடுத்தவங்களுக்குத்தான் நான் வேஷம் போட்டு இருக்கேன். என்னோட மனசுல என்னைப் பொம்பளையாத்தான் நினைச்சுக்கிட்டேன். ஜாக்கட் போட்டு மார்பகம் பெரிசா இருக்க இரண்டு பக்கமும் துணிப் பந்துகளத் திணிச்சு வச்சுக்கிட்டு அரக்காலுப் பாவாட, கால்ல சலங்கை கட்டி, டோப்பா வச்சு, ரெண்டு சட போட்டுக் காகிதப் பூவ வச்சுக் கிட்டு உதட்டுல சிவப்புச் சாயமும் கண்ணுல கண்மையும் போட்டுக் கண்ணாடியப் பாத்து என்னோட அழகை நானே ரசிச்சு ரசிச்சுப்

பாக்குறேன். என்னோட ஆடப்போற குறவன் வேஷம் போட்டுக்கிட்டவன் என்னப் பாத்து 'துரைசாமி நீ அசல் பொம்பள மாதிரி இருக்கடா. நீ நிசமாவே பொம்பளையா இருந்தா உன்னையே கல்யாணம் செஞ்சுக்குவேண்டா'ன்னு சொன்னான். அவன் அப்படிச் சொன்ன உடனே எனக்கு ஒரே பூரிப்பு, வெட்கம். மத்த பசங்க எல்லாம் சிரிப்புன்னு ஒரே சந்தோஷம்.

மோளக்காரங்க மோளம் அடிக்க எங்க வேஷம் போட்ட குரூப் ஊருக்குள்ள மொத மொதக் கோயில் வாசல்ல போயி ஆடலாமுன்னு கோயில நோக்கி வந்தா ஊரே வேடிக்கைப் பாக்குது. யாரு எந்த வேஷம் போட்டு இருக்காங்கன்னு மொனமொனத்துக்கிட்டுப் பேசிக்கிறாங்க. கரடிவேஷம் போட்டவன் கரடி தலையைக் கழட்டிக் காட்ட 'டே இவன் கருப்பண்ணன் வீட்டுப் பையன் முனுசாமிடா'ன்னு சொல்றாங்க. 'அடே இந்த விநாயகர் வேஷம் பாருடா. இவனோட தொப்பையைப் பாத்தாக் கந்தாயி மகன் போலத் தெரியுது'ன்னு சொல்றாங்க. எங்களோட பாதுகாப்புக்கும், வசூல் செய்த பணத்தைச் சேத்து வைக்கிறதுக்கும் கூடவே நாலு ஆம்பளைங்க வர்றாங்க. சில ஆம்பள பொம்பளைங்க அவங்ககிட்ட 'இந்தக் கொறத்தி வேஷம் போட்டு இருக்கானே அவன் நம்ப ஊரா? வெளி ஊரா? இல்லை, நிஜமாவே பொம்பளயா? யாரு?'ன்னு கேட்கிறாங்க. பதிலுக்கு 'எல்லாம் உங்களுக்குத் தெரிஞ்ச பையன்தான். நான் சொல்லமாட்டேன். நீங்களே கண்டுபிடிங்க'ன்னு சொல்லிட்டாங்க.

கோயில் முன்னாடி ஊரே வேடிக்க பார்க்க, எங்களால முடிஞ்ச டான்ஸ ஆட, அதுல குடிகார ஆம்பளைங்க வேடிக்க பாத்துக்கிட்டு விசில் அடிக்கக் குறத்தி பக்கம் வந்து அவங்களும் ஆட ஒரே கூத்தும் கும்மாளமுமாச் சந்தோஷமா இருந்துச்சு. சில ஆளுங்க என்னோட மார்பத் தொட்டு 'என்னடா வச்சு இருக்கே, கொட்டாங்குச்சியா?'ன்னு கேட்க எனக்குக் கோபம் வந்து கையைத் தட்டிவிட வேடிக்க பாக்கறவங்க சிரிக்க ஒரே சந்தோஷம். ஆனா எங்க வீட்ல இருந்து வந்து என்ன அடிப்பாங்களோன்னு பயம். அன்னைக்குச் சாயங்காலமா ஊரெல்லாம் சுத்திவிட்டு வேஷம் கலைச்சுட்டு வீட்டுக்குப் போனேன். வீட்ல எல்லாத்துக்கும் தெரிஞ்சுபோச்சு. 'அம்மா அம்மா இங்க பாரும்மா வந்துட்டான்'னு அக்கா சொல்ல, பதிலுக்கு 'ஏண்டா வேஷம் போட்டதுதான் போட்ட, ஆம்பள வேஷம் போடக்கூடாதா? போயும் போயும் பொட்டையனாட்டம் பொம்பள வேஷம் போட்டு ஆடுறயே, உனக்கு வெட்கமா இல்லையா?'ன்னு திட்டுனாங்க. சாமிக்குத்தானே வேஷம் போட்டு ஆடுனான்னு பெருசா எடுத்துக்காம விட்டுட்டாங்க.

நான்தான் குறத்தி வேஷம் போட்டேன்னு மறுநாள் ஊர்ல எல்லாத்துக்கும் தெரிஞ்சுபோச்சு. என்னப் பாக்குறவங்க எல்லாரும் 'என்னடி குறத்தி, எங்க உன்னோட குறவன்?'ன்னு சிரிச்சுக்கிட்டே கேப்பாங்க. சில பேரு 'அசல் பொம்பள மாதிரியே இருந்துச்சு. எங்களால அடையாளமே கண்டுபிடிக்க முடியல'ன்னு சொன்னாங்க. அவுங்க பாராட்டுறது, தமாஷ் பண்றது எல்லாமே எனக்குச் சந்தோஷமா இருக்கும். அப்ப இருந்து ஆம்பளப் பசங்களப் பாத்தாத் தலைகுனிஞ்சு வெட்கப்படுவேன். 'நீ பொம்பளையாப் பொறந்து இருக்கணும், தவறி ஆம்பளையாப் பொறந்துட்ட'ன்னு சொல்லுவாங்க. ஆம்பளப் புள்ளையா இருக்கிற நான் பொம்பள உணர்வுகள வெளியில காட்டிக்க முடியாம கஷ்டப்பட்டதை இந்தக் குறத்தி வேஷத்தால வெளிப் படுத்திக் கொண்டேன்.

அது கொஞ்ச நாளைக்கு எனக்குள்ளே சந்தோஷத்தக் கொடுத்தாலும் ஆம்பளைங்க மேல இருக்கிற மோகம், காதலை என்னாலக் கட்டுப் படுத்த முடியல. நான் ஆம்பளையாப் பொறந்தேன், ஒரு பொம்பளை யைத்தானே ஆசப்படணும். நான் மட்டும் ஏன் ஆம்பளைங்கள நேசிக் கிறேன்? எனக்கு என்ன பைத்தியமா? வியாதியா? நான் மட்டும்தானா இப்படி இருக்கேன்? இல்லை என்னை மாதிரி இன்னும் இருப்பாங் களா? இப்படிப்பட்டக் கேள்விகள், குழப்பங்கள், சந்தேகங்கள் என்னோட மனசுல இருந்துக்கிட்டே இருக்கு. நான் யாருகிட்டயும் சொல்லல. சொன்னா என்ன நினைப்பாங்களோ? வீட்ல அடிப்பாங் களோ? என்னை மாதிரி வேறு யாராவது கிடைப்பாங்களா? எங்க இருப்பாங்க? இப்படியே மனசுக்குள்ளே புதைந்து கிடந்தன கேள்விகள். என்னோட இந்தக் குழப்பத்திற்கு எங்கு தெளிவு காணுவது? என்னோட கேள்விகளுக்கு எங்கு விடை கிடைக்கும்? யார் என்னைப் புரிந்து கொள்வார்கள் என்ற நினைப்பிலேயே நாட்கள் கடந்தன.

ஒரு வழியாக நான் பத்தாம் வகுப்பு வந்தேன். அந்த வயதில் என்னுள் மாற்றங்கள் தோன்றின. அடக்க முடியாத பெண் உணர்வு என்னை நித்தம் நித்தம் வாட்டி எடுத்தது. ஒரு ஆம்பளை உடம்புக்குள்ள பொம்பளையா? இத எப்படி வெளில கொண்டு வர்றது? அப்படியும் இந்த உலகம் ஒத்துக்குமா? பொம்பளை உருவத்த அடையோனுமுன்னு துடிக்கின்ற என்னோட ஆம்பளை உருவத்த நினைச்சு வேதனைப் பட்டேன். ஆம்பளை உருவத்துல இருக்கிற நான் ஆம்பளைங்களோட உறவு வைக்கத் துடிக்கிறத நினச்சு வெட்கப்படுறேன். வேதனைப் படறேன். கடவுள் என்னை மட்டும் ஏன் இந்தச் சித்திரவதை செய்ய வேண்டும்? என்னை ஒரு முழு ஆணாகவோ இல்ல முழுப் பெண்ணா கவோ படைத்து இருக்கக்கூடாதா? என் படைப்பில் மட்டும் ஏன் இந்த

ஓரவஞ்சனை? நான் இருந்தால் என்ன, இறந்தால் என்ன என்ற எண்ணம் என்னுள் தோன்றியது. வீட்டில் படிப்பதைப் போலப் பாவனை செய்துகொண்டு என்னைப் பற்றிய யோசனையில் இருப்பேன். அம்மா நான் படிப்பதாக நினைத்துக்கொண்டு இருப்பார்கள்.

அடுத்த வருடமும் எங்கள் ஊர் மாரியம்மன் திருவிழா வந்தது. போன வருடம் போலவே சிறப்பாக எல்லோரும் திருவிழா கொண்டாடினார்கள். என் மனதில் மட்டும் ஏதோ ஒரு சோகம். நாடக மேடையில் ஆட முடியுமா என்று எனக்கு அழைப்பு வந்தது. நாடகம் நடிக்க இல்லை. நாடகம் ஆரம்பிக்கும் முன்பு ஏதாவது ஒரு சாமி பாட்டுக்கு ஆடச் சொன்னார்கள். நான் பெண் வேஷம் போட்டால் அழகாக இருக்கிறேன், ஊர் மக்களும் சந்தோஷப்படுகிறார்கள், நன்றாகவும் ஆடுகிறேன் என்பதால் அழைப்பு வந்தது. எங்கள் வீட்டுக்கு எதிரில் உள்ள ஒரு அக்கா வீட்டில்தான் நான் பெண்ணாக வேஷம் போட்டுக்கொண்டு நாடக மேடையில் முதல் தடவையாக 'மாணிக்க வீணையேந்தி மாதேவி கலைவாணி' என்ற சாமிப் பாட்டுக்கு ஆடினேன். என்னோட ஆட்டத்தப் பாத்த ஊர் மக்கள் கைகொட்டி ஆரவாரம் செய்ய மேடையை விட்டு இறங்கி வேஷம் போட்ட வீட்டுக்கு வரும் வழியில் என்னுடன் கை குலுக்கியவர்களையும் நன்றாக இருந்தது என்பவர்களையும் தூள் மாப்புள என்று சொன்ன மாமன் மச்சான்களையும் என் பின்னாடியே சின்னச் சின்ன பசங்க 'வேஷம் வேஷம் பொம்பளை வேஷம்' எனச் சொல்லிக்கொண்டு வந்தவர்களையும் கடந்து வேஷம் போட்ட அக்கா வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

நான் வேஷம் போடவில்லை. நிஜமான உணர்வு, நிஜமான உருவம் என்று என் மனதில் தோன்றியது. என்னுடைய பெண் உடையைக் கழற்றி எறிய மனம் இல்லாமல் என் அழகை நானே கண்ணாடியில் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தேன். இந்த வீட்டு அக்காவோ, 'துரை சீக்கிரமா வேஷத்தக் கலைடா. உங்க வீட்ல என்னைத் திட்டப் போறாங்க'ன்னு சொல்ல மனம் இல்லாமல் பெண் உடையைக் கழற்றி ஆண் உடையைப் போட்டேன். என்னைப் பொருத்தவரை கலைத்தது வேஷம் இல்லை, இப்போது போட்டு இருப்பதுதான் வேஷம் எனத் தோன்றியது.

நான் படிப்பில் சரியாகக் கவனம் செலுத்தாததாலும், எனக்கு ஆங்கிலம் சுத்தமாக வராததாலும் பத்தாம் வகுப்பில் ஆங்கிலப் பாடத்தில் 26 மார்க் வாங்கி இருந்தேன். இந்த ஒரு பாடத்தை இனி ஒரு வருஷம் வீட்டில் இருந்துதான் படிக்க முடியும். பள்ளிக்குச் செல்ல முடியாது அப்போது. என்னோட அப்பா என்னைத் திட்டவில்லை.

'ஒழுங்கா படிச்சா படிக்கவைக்கிறேன். இல்லாட்டி லாரில வந்து வேல செய்' என்று கூறிவிட்டார். என் அண்ணன்கள் என்னைப் பார்த்து 'இந்தப் பொட்டப் பையன் பெயில் ஆயிடுவான் என்று எங்களுக்கு முன்கூட்டியே தெரியும். இவன் எப்பப் பொம்பளை வேஷம் போட்டு ஆடுனானோ அப்பவே தெரியும் இவன் பெயில் ஆயிடுவான்னு. இப்பப் பாரு, ஒரு வருஷம் வீட்ல இருந்துதான் படிக்கோணும். வீணா ஒரு வருஷம் போச்சு'ன்னு திட்டினார்கள். கூடவே அவர்களின் துணிகளைத் துவைக்க, எருமைச் சாணி அள்ள, புல் வெட்டியாந்து மாடுகளுக்குப் போட இப்படி வேலைகளைச் செய்யச் சொன்னார்கள். எனக்குப் படிச்சு பாஸ் பண்ண வேண்டும் என்ற ஆசை இருந்ததால் 'ஆங்கிலப் பாடம் யாரிடத்திலாவது டூஷன் படிக்கிறேன்' என்று கூறினேன். டவுனில் உள்ள ஒரு வாத்தியாரிடத்தில் மாலை 6 மணிக்குப் போக வேண்டும். திரும்பி இரவு 8 மணிக்குத்தான் வீடு வரமுடியும். எனக்குச் சைக்கிள் வாங்கிக் குடுத்து டூஷனுக்கு அனுப்பினார்கள்.

## 2

நாமக்கல் டவுனுக்குத் தினமும் மாலை டூஷனுக்குச் சென்று வரும் போது என் மனசுக்குள் தோணும் அங்கு இருக்கிற மலைக்கோட்டை மேல் ஏறிப் பார்க்கவேண்டும் என்று. ஒருநாள் டூஷனுக்குப் போகாமல் மலைக்கோட்டையைப் பார்க்கலாம் என்று அந்த மலை மீது ஏறிப் பாதி மலையில் உட்காந்து இருந்தேன். டவுன் உள்பட என் கிராமம், அதில் உள்ள கரடுகள் எல்லாம் தெரிந்தன. நேரம் போவதுகூட எனக்குத் தெரியவில்லை. ஒரு புதுமையான சந்தோஷம். அப்போது மாலை ஏழு மணி இருக்கும். இருட்டுக் கட்டிக் கொண்டிருக்கிறது. மலைக் கோட்டையின் கீழே இருந்து நான்குபேர் லுங்கி கட்டிக் கொண்டு அதைத் தூக்கிப் பிடித்தபடி கையை வீசி வீசி நடந்து மேல் நோக்கி வந்து கொண்டிருந்தனர். அதில் ஒருவர் முடியை நீளமாக வளர்த்து விட்டிருந்தார். கொஞ்சம் மேலே வந்த அந்த நான்கு பேரும் நான் அமர்ந்துள்ள இடத்திற்குச் சற்றுக் கீழே உட்கார்ந்து பெண்களைப்போல 'வாடி போடி' எனப் பேசியபடி பெண்கள் போல நடனமும் ஆடிக் கொண்டிருந்தனர். அதில் அந்த முடி நீளமாக விட்டு இருந்தவர் என்னை நோக்கி வந்தார்.எனக்குத் தோன்றியது இவர்கள் என்னைப் போன்ற உணர்வு உள்ளவர்களாக இருக்கலாமா என்று. என் அருகில் வந்து உட்கார்ந்த அவர் எந்த ஊருப்பானு கேட்டார். பதிலுக்கு நான் என் கிராமத்தின் பெயரைச் சொன்னேன். நானும் நீங்க எந்த ஊருன்னு கேட்டேன். அவரும் அவருடைய கிராமத்தின் பெயரைக் கூறினார். இப்படியே எங்களுக்குள் பேசிக் கொண்டிருக்கையில் இரண்டு பேரின் பேச்சுக் குரல், உணர்வுகள் எல்லாம் ஒரே மாதிரியாக இருந்தன. அவரிடம் பேசப் பேச ஏதோ ஒரு பாசம், ஆதரவு கிடைத்தது போல் மனம் அமைதி கண்டது.

வாரம் முழுவதும் டூஷன் போய்க்கிட்டு இருந்த நான் வாரத்தில் மூன்று நாள் மட்டும் போனேன். மற்ற நாட்கள் அந்த மலைக் கோட்டையில் என் நண்பர்களுடன் ஆடிப்பாடிப் பேசிக் கொண்டிருப்பேன்.

அவர்களில் மூத்த வயது கொண்ட நண்பருக்கு 30 வயதிருக்கும். அவர் நன்றாகப் பரத நாட்டியம் ஆடுவார். அவரிடம் நான் கொஞ்சம் பரத நாட்டியமும் கற்றுக்கொண்டேன். புடவை கட்டிக்கொண்டு ஆப்ரேஷன் செய்துகொண்டவர்கள் ஈரோடு, திண்டுக்கல் மாவட்டங் களில் இருக்கிறார்கள் என்பதையும் அவர்கள் பாம்பே, டெல்லி எனச் சென்று வருவதாகவும் நண்பர்கள் மூலம் தெரிந்து கொண்டேன். அந்த மலைக்கோட்டையில் மட்டும்தான் நாங்கள் எங்கள் பெண்மையை வெளிப்படுத்திக் கொண்டு லுங்கியைத் தூக்கிச் சொருகிக் கொண்டு வாடி போடி எனப் பெண்களைப் போல் பேசிக் கொள்வோம். என்னுடைய நண்பர்கள் என்று சொல்வதைவிடத் தோழிகள் என்றே சொல்லலாம். அதுபோல எங்களின் உணர்வுகளைப் பகிர்ந்துகொள் வதில் இன்பம் கொள்வோம். சில சமயத்தில் நேரம் போவதே தெரியாமல் இரவு எட்டு மணி வரையில்கூட பேசிக் கொண்டிருப்போம்.

மலைக்கோட்டையைச் சுற்றிப் பார்ப்பவர்கள் காலை முதல் மாலை ஆறு மணி வரைதான் இருப்பார்கள். நாங்கள் ஆறு மணிக்குமேல் சென்றுதான் அங்கு ஆடிப்பாடி மகிழ்வோம். அப்போது யாரும் இல்லாததால் எங்களுக்குப் பெண்களைப்போல் ஆடுவதற்குப் பயம், வெட்கம் இல்லாமல் இருக்கும். சில சமயத்தில் அங்குப் பொறுக்கிப் பசங்ககூட வருவார்கள். அவர்கள் வந்தால் நாங்கள் ஓடிச் சென்று விடுவோம். ஒருநாள் திடீரென்று பொறுக்கிப் பசங்க வந்துட்டாங்க. அவுங்க எங்க தோழி ஒருத்திய வலுக்கட்டாயமா மலை மேல கூட்டிக் கிட்டுப் போனாங்க. எங்களால அவள விட்டுட்டு ஓட முடியல. அவங் களோட சண்டையும் போட முடியல. ஒரு அரைமணி நேரம் விட்டு எங்களோட தோழிய அனுப்பிட்டாங்க. அவளப் பார்த்த உடனே எங்களுக்கு நிம்மதி ஆச்சு. ஆனா அவள் ரொம்ப வீக்காகவும் முகம் எல்லாம் வேத்துப் போயிக் கஷ்டப்பட்டு நடந்து வந்தாள்.

என்ன ஆச்சுனு கேட்டேன். பதிலுக்கு 'அந்தப் பொறுக்கிப் பசங்க என்னத் தந்தா பண்ணிட்டாங்க'ன்னு சொன்னா. 'தந்தாவா? அப்படினா என்னா?'ன்னு நான் திருப்பிக் கேட்டேன். 'என்னோட வாய் வழியா, பின்னாடி பாத்ரூம் போற வழியா செக்ஸ் பண்ணிட்டாங்க'ன்னு அவள் சொல்ல எனக்குப் பயமா போச்சு, இது என்னடா இதுமாதிரி கூடச் செய்வாங்களான்னு. பாவம் அவளுக்குப் பின்பக்கமா செக்ஸ் வச்சுக்கிட்டதால ரொம்ப வலின்னு சொல்லி அழுதுட்டா. இதப் பத்தி நான் மத்த தோழிங்ககிட்டக் கேட்டேன், நாம இப்படித்தான் செக்ஸ் வச்சுக்கோணுமான்னு. அதற்கு ஒரு தோழி 'பொட்டையாப் பொறந்தா இப்படித்தான் செக்ஸ் வச்சுக்குவாங்க. உனக்குத் தெரியாதா? உனக்கு இப்படி செக்ஸ் வைத்துக்கொள்ள ஆசையாக இல்லையா?' என்று

என்னைத் திருப்பிக் கேட்டாள். 'இதுவரைக்கும் எனக்கு இப்படி செக்ஸ் வைத்துக்கொள்ள இஷ்டம் வரவில்லை. நான் பொம்பளையா முதலில் ஆகவேண்டும். அதன் பிறகு எனக்குப் பிடித்த ஒருவரைத் திருமணம் செய்துகொண்டு அப்போது எப்படி செக்ஸ் வைத்துக் கொள்வது எனத் தெரிந்துகொள்வேன்' என்றேன். 'இதோ கேளுங்கடி, இவ பொம்பளையா ஆவப்போறாளாம். அதெல்லாம் அவ்வளவு சுலபமா? அதுக்கெல்லாம் பாம்பே டெல்லி போய், பொடவ கட்டிக் கிட்டு ஆப்ரேஷன் பண்ணிக்கிட்டு அங்க இருக்கறவங்களோட போயி வருஷக் கணக்கா இருந்தாத்தான் பொம்பளையா ஆக முடியும், தெரியுமா?'ன்னு என்னைக் கிண்டல் செய்யறமாதிரி பேசிக்கிட்டாங்க. எனக்கு இதெல்லாம் என்னோட வாழ்க்கைல நடக்குமா என்கிற சந்தேகம் இருந்துச்சு.

தினமும் நான் இரவு லேட்டா வர்றதப் பாத்துட்டு எங்க அம்மா கேள்வி கேட்க ஆரம்பிச்சாங்க. பசங்களோட படிச்சுட்டு வர்றதாப் பொய் சொல்லி நான் நாட்களைக் கடத்திட்டே வந்தேன். என்னோட தோழிகள் சில பேரு நகம் வளத்திக்கிட்டுக் கையில கால்ல எல்லாம் நெய்ல் பாலிஷ் போட்டுக்கிட்டு லுங்கிய மடிச்சுக் கட்டாம பொம்பள கணக்கா பஸ் ஸ்டாண்டுல நிப்பாங்க. அவுங்க நிக்கிற ஸ்டைல், அவங் களோட பேச்சு, நடவடிக்கை எல்லாம் பொம்பள மாதிரி இருக்கும். அப்போ அவங்களோட நிக்க எனக்குப் பயமா இருக்கும். ஏன்னா எங்க ஊருக்காரங்க யாராவது பாத்துட்டா என்னையும் பொட்டைன்னு வீட்டுல சொல்லிப்புடுவாங்கன்னு பயமா இருக்கும். அவங்க அப்படி நிக்கறதப் பாத்துட்டுச் சிலபேரு 'பாருடா ஒம்போது நிக்குது'ன்னு கேலி பண்ணுவாங்க. சில ஆம்பளைங்க அவங்களப் பாத்துக் கண்ணடிச்சு வர்றயானு சாடை காட்டுவாங்க. எனக்கு அவுங்களப் பாத்தா நானும் அவுங்கள மாதிரி இருக்கக்கூடாதான்னு பொறாமையா இருக்கும். ஆனா அதே சமயத்துல ஒம்போதுன்னு கிண்டல் செய்யறது, கேவலமாப் பாக்கறது எனக்குப் பிடிக்கல. அதனாலகூட என்னோட நடவடிக்கைகள வெளியில் காட்டாம இருப்பேன்.

திண்டுக்கல் மாவட்டத்தில பொடவ கட்டிக்கிட்டு ஆப்ரேஷன் செய்துகிட்ட ஒரு அம்மா இருக்காங்க; பாம்பே டெல்லியில் இருந்து நெறயப் பேர் தேர்த்திருவிழாவுக்கு அவுங்க வீட்டுக்கு வருவாங்கன்னு கேள்விப்பட்டேன். ஆடிமாசம்தான் அந்த ஊரு அம்மனுக்குத் திருவிழா. எப்படியாவது அங்கபோயி அவுங்களப் பாத்தே ஆகணும்ன்னு ஆர்வம் எனக்குள்ள அதிகமா ஆயிடுச்சு. கல்யாணத்துக்கு வீட்டுல எல்லாரும் என்ன வாங்கணும், என்ன செய்யணுங்கற யோசனையில் வேலைகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். ஆடிமாசம்போயி

ஆவணியில்தான் அக்காவுக்குத் திருமணம். அதற்குள் திண்டுக்கல் சென்று புடவை கட்டிக்கொள்ளலாம் என்று ஆசைப்பட்டு டியூஷனுக்குக் கட்டவேண்டிய பணத்தில் விக்கு, பட்டன் தோடு, வளையல், ஹேர்பின் என வாங்கி யாருக்கும் தெரியாமல் வைத்திருந்தேன். அக்காவோட பாவாடை தாவணி ஜாக்கட் கூட எடுத்து ஒளித்து வைத்துக் கொண்டேன்.

திண்டுக்கல் திருவிழா நாளை என்றால் இன்று என் தோழிகளுடன் நாமக்கல்லில் இருந்து திண்டுக்கல் பஸ் பிடித்து ஏறிக் கொண்டோம். மொத்தம் ஐந்துபேர் சென்றோம். என் தோழிகள் நான் எல்லாரும் பஸ்ஸில் போகும்போது ஆண்பிள்ளைகளைப் போலத்தான் மற்றவர் களுக்குத் தெரியும். அந்த மலைக்கோட்டையில்தான் நாங்கள் பெண் களைப் போலப் பேசிக் கொள்வோம். இப்போது பஸ்ஸில்கூட என்னோட தோழிகள் வாடி போடி எனப் பேசிக்கொண்டு ஆண் களைப் பார்த்து வெட்கப்பட்டுக் கொண்டு ரோஸ் பவுடர், லிப்ஸ்டிக் போன்றவற்றை முகத்தில் போட ஆரம்பித்தனர்.

இதைப் பார்த்த பயணிகள் சிலர் எங்களை வித்தியாசமாகப் பார்த்தனர். ஒம்பது என்று சாடையாகப் பேசினர். 'கூத்தாடப் போறீங்களா? எங்க நடக்குது' என்று கேட்டனர். என்னுடைய தோழிகளை நான் கண்டித்தேன். 'பஸ்ஸில் இதுபோன்ற வேஷங்களை ஏன் போடுகிறீர்கள்? இப்போது பாருங்கள் நம்மை இவர்கள் கேலி செய்கிறார்கள்' என்றேன். பதிலுக்குச் 'சும்மா இருடி. கேலி செய்யற வங்க கேலி செய்யட்டும். நம்முடைய ஆசைகளை வீட்டில் செய்ய முடியாது. இப்படி யாருக்கும் தெரியாமல்தான் ஆசைகளை வெளிப் படுத்த முடியும். இந்தப் பஸ்ஸில் யாரும் நமக்குத் தெரிந்தவர்கள் கண்டிப்பாக இருக்க முடியாது. இந்தக் கேலி கிண்டலுக்குப் பயந்தால் நாம் வாழவே முடியாது. நம்முடைய ஆசைகளை உணர்வுகளை வெளிப்படுத்த முடியாமல் ரெண்டுங் கெட்டான் வாழ்க்கை வாழ வேண்டியதாகிவிடும். போற கொஞ்ச நேரமாவது சந்தோஷமா இருக்கலாம்' என்று கூறினார்கள்.

என் தோழிகள் என்னதான் சமாதானம் கூறினாலும் பொது இடத்தில் இதுபோல் நடந்து கொள்வது தப்பு என்று தோன்றியது. இப்படி நடந்து கொண்டால் மற்றவர்கள் கேலி செய்யாமல் வேறு என்ன செய்வார்கள்? வேண்டுமானால் முழுப் பெண்ணாக உடை யணிந்து பெண்களைப் போல அமைதியாகச் சென்றால்தான் கேலி செய்யமாட்டார்கள். அப்படியும் கேலி செய்தால் ஒரு பெண்ணைப் பார்த்து ஏன் கேலி செய்கிறீர்கள் என்று தட்டிக் கேட்கலாம் என்று நினைத்துக் கொள்வேன். நாம் பெண்ணாகவும் வாழ வேண்டும். அதே

சமயத்தில் மக்களிடம் பயந்தே வாழவேண்டும் என்றுகூட என் மனதில் தோன்றியது.

ஒருவழியாகத் திண்டுக்கல் வந்து அந்த அம்மா வீட்டை அடைந்தோம். ஒரு பத்துப் பேருக்கு மேல பொம்பளையா இருந்தாங்க. அவுங்களப் பாத்தா எங்கள மாதிரின்னு சொல்லமாட்டாங்க. அசல் பொம்பள மாதிரியே இருந்தாங்க. குரலை வச்சுத்தான் இவங்க நம்மள மாதிரின்னு தெரிஞ்சுக்கிட்டோம். எங்களப் பாத்த உடனே அவுங்க அடையாளம் கண்டுக்கிட்டாங்க. 'வாங்க பேட்டா வாங்க, எந்த ஊரு பேட்டா'ன்னு கேட்டாங்க. பேட்டானா இந்தி மொழியில் மகளையோ மகனையோ கூப்புடறது. பெரியவங்களப் பாத்தா 'பாவ்படுத்தி' சொல்லணும்னு சொன்னாங்க. எங்க தோழிங்க பொடவ கட்டிக்கிட்டு இருக்கிற ஒவ்வொருத்தரின் காலையும் புடிச்சுப் பாவ்படுத்தின்னு சொன்னாங்க. நானும் அதேபோல் செய்து அதேபோல் சொன்னேன். பாவ்படுத்தி என்றால் அவங்க கால்ல விழுந்து மரியாதை செய்தல் என்று அர்த்தம். அதுக்குப் பொடவ கட்டினவங்க 'ஜிய்யோ ஜிய்யோ' என்று கூறினார்கள். ஜிய்யோ என்றால் நன்றாக இருங்கள் என்று வாழ்த்துவது. இது ரொம்ப முக்கியமானது. பொட்டையா ஆனவங்க மூத்தவங்களப் பாத்தாப் பாவ்படுத்தி சொல்ல வேண்டும். பதிலுக்கு அவுங்களும் ஜிய்யோன்னு சொல்லவேண்டும். அதுதான் சம்பிரதாயம்.

எங்களப் பத்தியும் எங்க ஊரப் பத்தியும் எங்களோட உணர்வுகள் பத்தியும் அவுங்க கேட்டாங்க. நாங்களும் சொன்னோம். ஒரு மூத்தவங்க என்னைப் பாத்து 'உன்பேரு என்ன?'ன்னு கேட்டாங்க. துரைசாமின்னு சொன்னேன். 'ஆம்பள பேரு சொல்லக் கூடாது. பொம்பள பேரு என்னா?'ன்னு கேட்டாங்க. 'நான் இன்னும் பொம்பள பேரு வைக்கல அம்மா'ன்னு சொன்னேன். 'நாங்க பொடவ, டோப்பா எல்லாம் கொண்டு வந்திருக்கோம். நாங்களும் கட்டிக்கிலாமா?'ன்னு கேட்டோம். போயிக் கட்டிக்கிங்க பேட்டான்னு சொன்ன உடனே வீட்டுக்குள்ளே போயி நாங்க கொண்டுவந்த பொம்பள உடைகளை, ஆபரணங்களைப் போட்டுக்கிட்டுப் பொம்பள கணக்கா வெளில வாசல்ல உட்காந்து இருக்கின்ற மூத்தவங்கள நோக்கி வந்தோம். ஒரு பெரியவங்க என்னைப் பாத்து 'சினிமா நடிகை ரேவதி மாதிரியே இருக்கா'ன்னு சொல்ல என்னோட மனசுலயும் என்னோட பேரு ரேவதின்னு வச்சுக்கிட்டேன்.

கண்ணாடியில் என்னோட முகத்தப் பாத்தா எனக்கே ஒரு பூரிப்பு. நான் பொம்பள மாதிரி இருக்கேன் என்று. அப்போதுதான் நான் ஒரு பெண் என்ற உணர்வை அடைந்தேன். 14, 15 வயசு அப்போது எனக்கு. ஒல்லியாக வளர்த்தியாக இருப்பேன். என்னுடைய முகத்திலோ கை

கால்களிலோ முடிகூட இல்லை. அதனால் சில பெரியவர்கள் என்னைப் பார்த்து 'இந்தப் பொட்ட நிர்வாணம் செய்துகொண்டால் அசல் பொம்பள மாதிரியே ஆகிவிடுவாள்' என்று பேசிக் கொண்டார்கள். (நிர்வாணம் என்றால் ஆண் உறுப்பை அகற்றிக் கொண்டு முழுப் பெண்ணாக மாறுவது.) அவர்கள் சொன்னதைக் கேட்டவுடன் எனக்கு இன்னும் சந்தோஷம். என் தோழிகள்கூட 'ஆமாம் அம்மா, இவளுக்கு முகத்தில் முடியே இல்லை. ரொம்ப அழகா வருவாள்' எனக் கூறினார்கள்.

அங்கு இருந்த மூத்தவர் ஒருவரிடம், 'எப்படி அம்மா இப்படிப் பொம்பள மாதிரி ஆனீங்க? நானும் உங்கள மாதிரி ஆகணுமுன்னா என்ன செய்யணும்'னு கேட்டேன். 'பொட்டையா வந்துட்டா பொட்டைங்களோட இருந்து, மூக்குக் குத்தி, காது குத்தி, முடி வளர்த்து, நல்லது கெட்டது கத்துக்கிட்டு, ஒரு குருவுக்குச் சேலாவா இருந்து அவுங்க சொல்ற மாதிரி கேட்டுக்கிட்டு, அவுங்க செய்யற மாதிரி செஞ்சுக்கிட்டு ஒரு வருஷமோ ரெண்டு வருஷமோ சம்பாதிச்சுக் கொடுத்துக்கிட்டு இருந்தா குருவா இருக்குறவங்க உன்னையும் உன்னோட விருப்பப்படி எங்கள மாதிரி ஆக்கிடுவாங்க'னு சொன்னாங்க.

குருன்னு சொன்னாத் தாய். தாய்போல இருந்து, பாதுகாவலாளி போல இருந்து நல்லது கெட்டது கற்றுக்கொடுத்துப் பிழைக்க வழி தேடிக் கொடுத்து இருக்க இடமும் உடுக்க உடையும் உணவும் கொடுப்பவள் குரு. சேலா என்றால் மகள். அவர்கள் சம்பிரதாயப்படி என்னை மகளாகத் தத்து எடுத்து வழிநடத்திச் செல்வார்கள். இதுதான் குரு-சேலா என்பதை அன்று தெரிந்துகொண்டேன்.

அந்த மூத்த அம்மா எங்க ஊருக்குக் கொஞ்சதூரம் உள்ள கிராமம் தான். அவுங்கள அங்குப் பாத்ததில் அவர்களுடன் பேசியதில் எனக்கு ரொம்பச் சந்தோஷம். அவர்களை என் தாயாக நினைத்தேன். 'என்னை நீங்க சேலாவாக ஏற்றுக்கொள்வீர்களா?' என்று கேட்டேன். 'நாளை மாலை இங்கு ஜமாத் இருக்கிறது. அந்த ஜமாத்தில் உன்னைச் சேலாவாத் தத்து எடுக்கிறேன்' என்றார். பெரிய அம்மாங்க சுத்தி உட்காந்து நல்லது கெட்டது பேசிக்கொள்வது, சேலா முறைகளைச் செய்வது ஆகியவை தான் ஜமாத் என்று கூறுகின்றனர். ஈரோடு, திண்டுக்கல், மதுரை இப்படிப் பல ஊர்களில் இருந்து பொடவ கட்டிக் கொண்டு இருப்ப வர்கள், என்னைப்போல் இங்கு வந்து பொடவ கட்டிக்கொண்டவர்கள் என்று நிறைய பேர் இருந்தனர். இவர்களுக்குப் பெரிய அண்டாவில் சாப்பாடு தயார் ஆனது. அதற்கு எடுபிடி வேலைகளை எங்களைச் செய்யச் சொன்னார்கள்.

என்னைப் போன்ற புதிதாகப் பொடவ கட்டிக்கொண்ட சின்னப் பொட்டைகளுடன் தண்ணீர் எடுக்கக் கிணற்றுக்குச் சென்றேன். கிணற்றில் தண்ணீர் சேந்திக் குடத்தில் நிறைத்து இடுப்பில் வைத்துக் கொண்டு பாவாடையைக் கால் தடுக்காத அளவுக்குச் சற்று மேல் தூக்கிப் பிடித்துக் கொண்டு ஊர்களில் பெண்கள் எப்படித் தண்ணீர் கொண்டு வருவார்களோ அப்படி நானும் என்னோடு வந்த தோழி களும் கொண்டு வந்து அங்குள்ள பாத்திரங்களை நிரப்பினோம். மூத்தவர்களின் அழுக்குத் துணிகளையும் கிணற்றுக்கு எடுத்துச் சென்று துவைத்தோம். பாத்திரங்களைச் சுத்தபத்தமாய்த் தேய்த்துக் கழுவினோம். இப்படிப்பட்ட வேலைகளைப் பெண் உடையில் செய்வதற்கு எவ்வளவு ஆனந்தம்! எவ்வளவு சந்தோஷம்! ஒரு பெண் என்ன என்ன வேலைகள் எப்படிச் செய்வாளோ அதே போல் செய்த அந்த நாள் இனி வராது. அப்படி ஒரு சந்தோஷம். வேலைகள் களைப்பு இல்லாமல் இருந்தன.

என்னை மகளாக நாளை ஜமாத்தில் தத்து எடுக்கும் குரு. என்னை மகளாக எடுக்கத் துடிக்கும் அவளுடைய ஆசைகள். நான் அழகாகப் பெண்ணைப்போல் வேலைகள் செய்ததை நோட்டமிடும் கண்கள். ஒரே ஊர் என்ற பாசம். என்னமோ சொல்ல முடியாத ஒரு பாச உணர்வு அவளுக்கும் எனக்கும் அதிகமாக இருந்தது. எப்படியோ பிறந்து எப்படியோ வளர்ந்து குடும்பத்தை விட்டு வந்த என்னைப் போன்றவர் களுக்கு ஆதரவும் அடைக்கலமும் கொடுக்கத்தான் கடவுள் இதுபோன்ற அன்பு மனம் கொண்டவர்களைப் படைத்து இருப்பான்போல் இருக் கிறது. அன்று இரவு எல்லாரும் அவரவர் இடத்தில் உறங்கினார்கள். நானும் அந்தப் பெரியவங்களோடு படுத்துக்கொண்டேன். அவளுடைய அரவணைப்பும் பேச்சும் என் கண்களில் கண்ணீர் வர வைத்தன.

அரக்காலு டவுசர் மட்டும் போட்டுக்கிட்டு வீட்ல தூங்கின நான் இன்னைக்கு முழுப் பெண் உடையில் தூங்குகிறேன். எங்கு புடவை விலகிக் கால் தெரியுமோ என்று புடவையை இழுத்து இழுத்து விட்டுக் கொள்வதில் பெண் உணர்வை முழுதும் அடைந்தேன். டோப்பா வச்சுக்கிட்டு ஜாக்கட், பாவாடை, பிரா, புடவை, வளையல், தோடுன்னு போட்டுக்கிட்டுப் படுத்ததால கொஞ்சம் கஷ்டமா இருந்தது. ஏன்னா மொதத் தடவையாப் புடவையில படுத்ததால டோப்பா இருந்ததால பாவாடை இறுக்கமாகக் கட்டியிருந்ததால குத்தற மாதிரி, பிடிக்கிற மாதிரி, இடுப்பு அரிக்கிற மாதிரி இருந்துச்சு. பொம்பளையாப் பொறந்தா இப்படித்தான் இருக்கும் என்று நினைப்பேன். பொம்பளைங்க எப்படித் தான் இதை எல்லாம் போட்டுக்கிட்டுத் தூங்குறாங்களோ தெரியலையேன்னுகூட நினைப்பேன்.

மறுநாள் காலையில் சொம்புல தண்ணி எடுத்துக்கிட்டுக் காட்டுப் பக்கமாப் பாத்ரூம் போனோம். அந்தப் பெரியவங்க 'உன்னோட ஆண் உறுப்பு தெரியாம, காட்டிக்காம பாத்ரூம் போயிட்டு வரணும்'ன்னு சொன்னாங்க. 'ஏன்னா நாம் பொம்பளயாட்டம் பொடவ கட்டிக்கிட்டு இருக்கோம். நமக்கு ஆண் உறுப்பு இல்லேன்னுதான் கிராமத்துல இருக்கிறவங்க நினைக்கிறாங்க. அதனால அதக் காட்டிக்கிட்டு உக்காந்தா என்ன நினைப்பாங்க? ஆம்பள பொடவ கட்டிக்கிட்டு இருக்குன்னு நெனப்பாங்க. அதனால் ஆப்ரேஷன் ஆகிறவரைக்கும் பயந்து நடந்துக்கோணும்'னு சொன்னாங்க.

சாயந்திரம் ஒரு ஆறு மணி இருக்கும். நாங்க எல்லாரும் தலைசீவிப் பூ வச்சுக்கிட்டுப் பெரியவங்க பட்டுப்புடவை கட்டிக்கிட்டு மாவிளக்கு, மொளப்பாரி எல்லாம் எடுத்துக்கிட்டுப் கோயிலுக்குப் போனோம். ரோடே எங்கள வேடிக்கை பாக்குது. அந்த ஊர்ல வருஷா வருஷம் இப்படிப் பொட்டைங்க கோயிலுக்குப் போயிட்டுக் கும்மி அடிச்சுப் பாட்டுப் பாடிச் சாமி கும்பிட்டுட்டு வருவாங்க. அதனாலயோ என்னவோ எங்களப் பாத்து யாரும் கேலி பண்ணல. பெரியவங்க வந்ததாலையோ என்னவோ. பின்னாடி கேலி செய்யறது இருந்துச்சு. பொம்பள மாதிரி இருக்கிறவங்கள சைட் அடிக்கிறவங்க, ஜாட காட்டிச் சிரிக்கிறவங்கன்னுகூட இருந்தாங்க. சில ஆம்பளைங்கள சைட் அடிக்கிற பொட்டைகளும் உதட்ட பிளிக்கிக் காட்டுறது, கண்ண உருட்டிப் பாக்குறதுன்னு சைகை காட்டுனாங்க. என்னோட மனசுல கூட இப்படி நடந்துக்கணும்னு தோணும். ஆனா நான் இன்னும் ஆப்ரேஷன் செய்து கொள்ளவில்லை. நான் முழுப் பெண்ணா ஆப்ரேஷன் செய்து கொண்டபின்தான் மற்ற ஆசைகள் எல்லாம் என்று இருப்பேன். ஒவ்வொரு செய்கையும் அவுங்க எப்படிச் செய்யறாங்க, எப்படி நடக்குறாங்க, எப்படிப் போறாங்கன்னு பாத்துக்கிட்டே இருப்பேன்.

இரவு வீட்டுக்கு வந்தவுடன் சாப்பாடு முடித்த பிறகு ஜமாத் கூட்டினார்கள். ஜமாத்தில் இன்னார் மகளுக்கு இன்னார் மகள் எனக் கூறினார்கள். சுற்றிலும் அமர்ந்து நடுவில் தட்டு வைத்துத் தட்டுமேல் வெள்ளைத் துணியை விரித்து வெற்றிலை வைத்து ஒன்னேகால் பணம் வைத்து இருந்தனர். அந்தப் பெரியவங்க என்னை மகளாக எடுத்துக் கொள்கிறேன் என்று ஜமாத்தில் ஐந்து ரூபாய் பணமும் ஜமாத் திற்கு ஒன்னேகால் பணமும் தண்டுபணம் எனக் கூறிக் கொடுத்தார். ஒன்னேகால் பணத்தை அந்தப் பெரியவங்க பேரைச் சொல்லி அவளோட தண்டு எனக் கூறித் தட்டில் போட்டுவிட்டு ஐந்து ரூபாய் திருப்பி வாங்கி அந்தப் பெரியவங்க பேரில் 'ரேவதிக்கு ஐந்து ரூபாய்

நீன் நீன்' எனக் கூறினார்கள். அதற்கு எல்லாரும் கை தட்டி. ஆரவாரம் செய்தனர். இனி இவர்தான் உன்னோட குரு என்று கூறினார்கள். என்னுடைய குருவை நான் குரு என்று கூப்பிடவில்லை. அம்மா என்றுதான் கூப்பிடுவேன். என்னை மகளாக ஜமாத்தில் மூத்தவர்கள் முன்னிலையில் ரேவதி எனப் பெயரும் இட்டுப் பெரியவர்களுக்குப் பாவ்படுத்தி சொல்லச் சொன்னார். நானும் எல்லாருக்கும் பாவ்படுத்தி என்று கூறினேன். அதே சமயம் என் குரு என்னைக் கட்டித் தழுவி முத்தம் கொடுத்து என் தலையை நீவிவிட்டாள்.

நான் என் பெற்றோர்களையும் கிராமத்தையும் விட்டு வந்து இன்றைக்கு இரண்டு நாள் ஆகிவிட்டது. இரவு என்னுடைய குருவும் இன்னும் சில பெரியவர்களும் டெல்லி புறப்படுகின்றனர். என்னுடைய வீட்டுக்குப்போக எனக்கு மனம் இல்லை. சென்றாலும்கூட இந்த இரண்டு நாட்கள் எங்கு சென்று தொலைந்துவிட்டாய் என்று அடிப் பார்கள். 'எனக்குப் பயமாக இருக்கிறது. என்னையும் உங்களுடன் டெல்லி கூட்டிச் செல்லுங்கள்' என்று குருவிடம் சொன்னேன். 'நானே இப்பத்தான் முதல் தடவையா டெல்லிக்கு இவர்களுடன் போகிறேன். நான் அங்கு எங்க தங்கப்போகிறேன், என்ன செய்யப் போகிறேன் என்ற விவரம் எதுவும் தெரியவில்லை. பொட்டைங்க பொழப்பு உனக்கு வேண்டாம் மகளே. நீ உன்னோட அம்மா அப்பா உடன் இருந்துகொண்டு நன்றாகப் படித்து நல்ல வேலைக்குச் சென்று நல்லா இருந்தாலே போதும். எப்பொழுதாவது அம்மா தமிழ்நாட்டுக்கு வந்தால் எங்கியாவது என்னைச் சந்திக்கலாம். நீ ஆண்பிள்ளையாகவே இருந்தாலும் எப்படி இருந்தாலும் எனக்கு நீ மகள்தான். அம்மாவோட கஷ்டம் உனக்கும் வேண்டாம் பேட்டா'ன்னு சொல்லிட்டாங்க.

என்னோட ஏக்கத்தையும் பயத்தையும் புரிந்துகொண்ட குரு, 'மகளே நான் டெல்லி சென்று இன்னும் ஆறு மாதத்தில் திரும்பி இங்கு வருவேன். அதுவரை நீ உன் அப்பா அம்மாவோடு போய் இரு. உனக்கு எப்போதாவது மனசு கஷ்டமா இருந்தாலோ வீட்ல ஏதாவது பிரச்சனை ஆனாலோ ஈரோடு சென்று அங்கு நம் நானி வீடு (ஆயா- மூத்தவர். என்னோட குருவுக்குக் குரு) இருக்கிறது. என்னுடைய குருபாய்கள், அதாவது உன்னுடைய காலா குரு (குருவின் சகோதரிகள்) மற்றும் உன் குருபாய்கள் (என்னுடைய சகோதரிகள்) இருக்கின்றனர். அவர்கள் இங்கு நடனம் ஆடிப் பிழைக்கிறார்கள். அங்குபோய் இரு' என்று கூறி அங்கு வந்திருந்த ஈரோடு அம்மாக்களிடம் அறிமுகம் செய்து வைத்துவிட்டுப் போய் வருகிறேன் என்று கூறிப் புறப்பட்டார்.

ஒருநாள் பழகிய குருவைப் பிரிஞ்சு இருக்க முடியாம நான் அழ ஆரம்பிச்சேன். என்னைப் பெற்றெடுத்த தாய் எவ்வளவு பெரிதோ

அதைக் காட்டிலும் அவர்மீது பாசம் இயற்கையாகவே எனக்கு வந்து விட்டது. அவரின் பிரிவை அப்போது என்னால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. என்னைப் புரிந்தவர், என் உணர்வுக்கு மதிப்புக் கொடுப்பவர், என்னை வழிநடத்துபவர் என்னை விட்டுச் சென்று விட்டார். நான் திரும்பி வீட்டிற்குப் போக வேண்டும். என்ன நடக்குமோ என்ற பயம். என்ன செய்வது? என் மனதில் கேள்விகள். மனக் குழப்பமும் சோகமும் அழுகையும் வந்தன. 'அழாதே மகளே, நான் கூடிய சீக்கிரம் உன்னை வந்து அழைத்துச் செல்கிறேன். அதுவரை முடி வெட்டாமல் வளர்த்து வா' என்று ஆறுதல் சொல்லிவிட்டுக் குரு டெல்லி புறப்பட்டுச் சென்றுவிட்டார்.

மறுநாள் காலையில் ஈரோடு செல்பவர்கள் புறப்பட்டுச் செல்ல நானும் என்னுடைய வீட்டுக்குப் போகாமல் ஈரோட்டுக்கே அவர்களுடன் சென்றுவிட்டேன். வீட்டுக்குச் சென்றால் எப்படியும் அடி விழும். அதுவும் திரும்பி வரமுடியாமல் ஏதாவது செய்துவிடுவார்கள். முடிகூட வளர்க்க முடியாது. வெட்டிவிடுவார்கள் என்று பயந்து ஈரோட்டிலேயே தங்கிவிட்டேன். ஈரோட்ல என்னோட நானி கலைக் குழு நடத்துறாங்க. திருவிழா நாட்கள்ல கரகாட்டம், மயில் ஆட்டம், சுப்பன் சுப்பி நாடகம், அரோகரா டாக்டர் நாடகம், சைக்கிள் ஓட்டமுன்னு நடத்துறாங்க. அவுங்க சேலா, சேலாவோட சேலா இப்படி அவங்க குடும்பம் பெரிசு. ஒரு ஹவுஸிங்போர்டுலதான் அவுங்க குடும்பம் இருந்துச்சு.

அங்க இருக்கறவங்க எல்லாரும் புடவை கட்டிக் கொண்டு தான் இருந்தாங்க. என்னைப் புடவை கட்டிக்க வேண்டாம், உன்னோட முடி நீட்டமா வளந்தவுடன் பொடவை கட்டிக்கோ. இப்போ லுங்கி சட்டையோடவே இரு என்று கூறிவிட்டார்கள். காரணம் எனக்கு அப்போது புரியாவிட்டாலும் போகப் போகப் புரிந்தது. ஏனென்றால் தலையில் முடி இல்லாமல் பொடவை கட்டினால் அக்கம் பக்கம் பார்ப்பவர்கள் ஆம்பளை புடவை கட்டிக் கொண்டுள்ளான் என்று நினைப்பார்கள். அப்படி நினைத்தால் என் சமுதாயத்திற்குக் கெட்ட பெயர் வந்துவிடும். எங்களுடைய உணர்வுகள் பெண்களைப் போல் இருந்தாலும் தோற்றமும் பெண்கள் போல இருக்கவேண்டும். அதற்கு முக்கியத் தேவை முடி இருக்கவேண்டும் என்பதைப் புரிந்துகொண்டேன். இங்க இருக்கிற மூத்தவங்க, சின்னவங்க, ஆப்ரேஷன் ஆனவங்க, அக்கம் பக்கம் உள்ள டவுன்களுக்கும் கிராமங்களுக்கும் திருவிழா நேரத்தில் ஆட்டத்திற்குச் செல்வார்கள். ஆட்டம் இல்லாத நாட்களில் டெல்லியோ பம்பாயோ பிழைப்புக்குப் போய்விடுவார்கள்.

என்னோட வேலையின்னு பார்த்தா மூத்தவங்க துணிகளை ஆத்துக்கு எடுத்துக்கொண்டு போய்த் துவைக்கணும். தண்ணீர் எடுத்துவர வேண்டும். சமையல் செய்பவர்களுக்கு உதவியாக வேலை செய்ய வேண்டும். கடைகளுக்குச் சென்றுவர வேண்டும். அங்கு எனக்கு வேலைகள் கடினமாக இருந்தாலும் எல்லோரும் மூத்தவர்கள். நான் சிறியவள் என்பதால் இதுபோன்ற வேலைகளை நான்தான் செய்ய வேண்டும். பொட்டையாப் பொறந்தவங்க எல்லோரும் ஆரம்பத்துல இப்படிக் கஷ்டப்பட்டாத்தான் நாமளும் ஆப்ரேஷன் செஞ்சுக்கிட்டு மத்தவங்கள மாதிரி இருக்க முடியும். இப்போ மூத்தவங்க என்னை மாதிரி வந்தப்போ இப்படித்தான் கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்து இருக்காங்க. இது எல்லாம் சொல்லக் கேட்டு நடந்துக்கிட்டேன்.

ஆத்துல துணி துவைக்கப் போனால் மூத்தவங்களும் வருவாங்க. அவுங்க எல்லாம் புடவை கட்டி இருப்பாங்க. நான் லுங்கி கட்டிக்கிட்டு இருப்பேன். ஆத்துல அவுங்க குளிப்பாங்க. பாவாடையை மாரு தெரியாம தூக்கிக் கட்டிக்கிட்டுக் காலத் தூக்கிக் கல்லுமேல வச்சு சோப்புப் போடுறதும் மஞ்சப் பூசிக்கிறதும் பாத்தா அசல் பொம்பளைங்க ஆத்துல கிராமத்துல எப்படிக் குளிக்கிறாங்களோ அப்படி இருக்கும். அதப் பாத்துட்டு நான் என்னோட மேல் சட்டையைக் கழற்றிட்டு லுங்கியை அவுங்கள மாதிரியே மாருக்கு மேல தூக்கிக் கட்டிக்கிட்டு அவுங்க செய்யற மாதிரி சோப்புப் போட்டு மஞ்சள் பூசிக்குவேன். அதப் பாக்குற மூத்தவங்க ‘இதோ பாருடி இந்தப் பொட்டைக்கு ஆசையை'ன்னு தமாஷ் பண்ணுவாங்க. சிலபேரு ‘மொதல்ல ஆப்ரேஷன் செஞ்சுக்கிட்டுப் பொம்பளையா மாறு; அதுக்கப்பறம் இதெல்லாம் பண்ணு’ என்று சொல்வாங்க. துணிகளைத் துவைச்சுட்டுக் குளிச்சுட்டு ரோட்டுல நடந்து வரும்போது ஆம்பள பொம்பளைங்க கேலி பண்ணுவாங்க. வித்தியாசமா என்னைப் பாப்பாங்க. ‘இது என்னடா அக்குரமம்? ஆம்பளப் பையன் இவுங்கள மாதிரி மஞ்சப் பூசிக்கிட்டுப் போகுது'ன்னு சொல்லுவாங்க. மூத்தவங்களப் பாத்துக்கூட ‘என்னம்மா வாரிசு ரெடியாகுதா?'ன்னு கேட்பாங்க. பதிலுக்கு ‘ஆமா புதுப்பொண்ணு. கல்யாணம் பண்ணிக்கிறயா'ன்னு சில ஆம்பளைங்களப் பாத்துக் கேட்பாங்க. இப்படி ரோட்டுல பேசிக்கிறது, லூட்டி அடிக்கிறது எல்லாம் வீடு வர்றதே தெரியாம அலுப்புத் தெரியாம இருக்கும்.

என்னோட நானி, காலா குரு, மூத்த சகோதரிங்க எப்படி ஆடுவாங்களோ அதேபோல் எனக்கும் வீட்டு மொட்டை மாடில ஆடக் கத்துக் கொடுப்பாங்க. ஒரு முறை என்னையும் ஒரு திருவிழாவுக்கு ஆடக் கூட்டிக்கிட்டுப் போனாங்க. கரக ஆட்டத்துக்கு எப்படித்

துணி போடுவாங்களோ அதே மாதிரி எனக்கும் வேஷம் போட்டுக் கூட்டிட்டுப் போனாங்க. தலையில ரெண்டு சடை போட்டுக் காகிதப் பூ வச்சுக் கொக்கு முடியைத் தலையோட பின்பாகத்துல குத்தி விட்டாங்க. 'இதுதான் உனக்கு மொதத் தடவையா மேக்கப் போட்டு விடுவோம். அடுத்த தடவை நீயே போட்டுக்கணும்'னு சொல்லிட்டு முகத்துல மேக்கப் கிரீம் பூசி பவுடர் போட்டுக் கண்மை வரைஞ்சு உதட்டுல சிவப்புச் சாயம் பூசிக் கண்ணுக்கு மேல ஜிகினா ஒட்டவச்சு விட்டாங்க. அரைக் கால் பாவாடை ஜாக்கட் மேல வாஸ்கோட், பாவாடை இடுப்புக்கு ஒரு வாஸ்கோட், கால்ல சலங்க எல்லாத்தையும் போட்டுக்கிட்டு அவுங்களோட ஆட்டோ ஏறி ஆடுற இடத்துக்குப் போனோம். ஆடப்போன இடத்தச் சுத்தி ஜனங்க கூட்டமா நிக்க, போன ஐந்து பேரில் ரெண்டு ரெண்டு பேரு ஆட, மீதி இருக்கிற நாங்க சனங்களோட உக்காந்துக்கிட்டோம்.

இவங்க பொம்பளையா, ஓம்போதா, ஆம்பளையான்னு பந்தயம் கட்டுறவங்க, இடுப்புல, தோள்ல கை போடுறவங்கன்னுகூட அந்தக் கூட்டத்துல இருந்தாங்க. எங்களோட மார்பகத்தப் பாத்து ஒரிஜினலா டுபிளிகேட்டான்னுகூடச் சிலபேரு கேட்டாங்க. கொஞ்சம் மொறச்சுப் பாத்தா எங்களப் பாத்து ஆடுடான்னு வீரமாப் பேசுவாங்க. அப்ப எனக்குத் தோணும், ஏன் இவுங்க சில பேரு இப்படிக் கேவலமா நடந்துக்கிறாங்க? இந்த உலகத்துல எப்படித்தான் பொழைக்கிறதுன்னு நெனப்பேன். கடவுள் நம்பளப் பொட்டையாப் படைச்சுட்டார். நமக்கு வேல வெட்டி படிப்புன்னு எதுவும் இல்ல. அம்மா அப்பாகூட நம்மளப் புரிஞ்சுக்க மாட்டாங்க. ஒத்துக்க மாட்டாங்க. இந்த உலகமும் நம்பளக் கேவலமாத்தான் பாக்குது. நமக்கு வயிறு இருக்கே. அதுக்கு மேல மனுசனா வாழணுங்கிற ஆசைகூட இருக்குது. அதனால இதை யெல்லாம் கண்டும் காணாம போகவேண்டியதுதான்னு பெரியவங்க சொல்லுவாங்க.

வீட்டவிட்டு வந்து ஒரு மாசம் ஆயிடுச்சு. அக்காவுக்குத் திருமணம்; அம்மா அப்பாவப் பாக்கணும். என்ன செய்யறது? குருகிட்ட இருந்து ஒரு செய்தியும் வரல. வீட்டுக்குப் போகலாமா? போனா இவ்வளவு நாள் எங்க இருந்தேன்னு கேட்பாங்க. அடிப்பாங்க. என்ன சொல்றது? இப்படி மனசுல குழப்பம் ஏற்பட்டது. எப்படியாவது அக்கா திருமணத் திற்குப் போகத்தான் வேண்டும் என்ற முடிவில் நானியிடம் சொல்லி விட்டு நாமக்கல் புறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டேன். அம்மா என்னைப் பாத்தவுடனே அழுதார்கள். எங்கடா ஒரு மாசமாப் போயிருந்தேன்னு திட்டுனாங்க. அண்ணன் கிரிக்கெட் பேட்டால அடிச்சான். 'உனக்கு என்னடா ஆச்சு? பைத்தியம் பிடிச்சுப்போச்சா? இவ்வளவு நாள்

உன்ன எங்கெல்லாம் தேடுறது? எங்களப் பத்தி உனக்குக் கவலையே இல்லையா'ன்னு அடிச்சு, சொல்லுடா எங்கடாப் போயி இருந்தேன்னு கேட்டாங்க. டூஷன் போறேன்னு சொன்ன, அனுப்பினோம். தினமும் வீட்டுக்கு லேட்டா வந்த. திடீர்னு காணாமப் போயிட்ட. உன்னோட மனசுல என்னதான் நினைக்கிற சொல்லுன்னு கேட்டாங்க.

நான் ஈரோட்ல இருக்கிற பொட்டைங்க வீட்டுக்குப் போனதாச் சொல்லல. டூஷன் நண்பனோடு அவுங்க ஊரு மதுரைக்குத் திருவிழா வுக்குப் போயிட்டேன். சொன்னா நீங்க அனுப்பமாட்டீங்க. திரும்பிச் சீக்கிரமா வந்துடலாம் என்று நினைத்தேன். அடிப்பீர்கள் என வரவில்லை என்று சொன்னேன். 'இப்போது மட்டும் எதுக்குடா வந்தே, இப்ப அடிக்க மாட்டோமா'ன்னு கேட்க, 'அக்காவோட திருமணத்துக்கு வந்தேன். இனி எங்கயும் போக மாட்டேன். நான் செய்தது தப்புத்தான். என்னை மன்னித்துவிடுங்கள்' என்று கூறி எப்படியோ ஒரு வழியாக அடிவாங்கித் தப்பித்துக் கொண்டேன். அதுவும் அக்கா திருமணம்வேறு நடக்க இருப்பதால் மிகப் பெரிதாக இந்த விஷயத்தைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிட்டனர். மேலும் நான் பொம்பள மாதிரி பேசுவதாலும் ஊரில் என்னை ஒம்பது என்று சொல்லுவதாலும் என் அண்ணன்களும் இந்தப் பொட்டத் தாயோலி இனி எங்க படிக்கப்போகிறான், தங்கை திருமணம் முடிந்த கையோடு வண்டியில் கிளினீராகப் போகட்டும். அப்பத்தான் கஷ்டம்னா என்னான்னு புரியும். இனி டூஷன் எதுவும் அனுப்பவேண்டாம் என்று சொல்லி எங்கள் லாரியிலேயே கிளினீராக வேலை பாக்கச் சொல்லி விட்டனர். மேலும் தலைமுடி ஏன்டா நீட்டமா உட்டு இருக்கே வெட்டுடான்னு சொல்ல, பொய்யாகத் திருப்பதிக்கு விட்டிருக்கேன்னு சொல்லிவிட்டேன். ஏன் திருப்பதி என்று கூறினேன் என்றால் அதுவேற மாநிலத்தில் இருப்பதாலும் அவ்வளவு சீக்கிரம் செலவு செய்து அங்குக் கூட்டிச் செல்லமாட்டார்கள் என்பதாலும்தான். பதிலுக்குச் சரி அடுத்த மாதம் போகலாம் என்று கூறிவிட்டனர்.

அக்கா திருமணம் முடிந்து எங்கள் வண்டியில் கிளினீராக வேலை செய்தேன். காலையில் ஐந்து மணிக்கு எழுந்து வண்டியின் கண்ணாடி யைக் கழுவித் துடைத்து ரேடியட்டருக்குத் தண்ணீர் ஊற்றி ஓட்டுநர் கால் பக்கம் உட்காரும் சீட் எல்லாம் துடைத்துப் பத்தி பற்ற வைத்து ரெடியாக இருக்க வேண்டும். அண்ணன்தான் ஓட்டுநர். லாரி புறப் பட்டுக் கிராமம் கிராமமாகச் சுற்றிப் பால் கேன்களை எடுத்துக் கொண்டு வரும். ஒவ்வொரு கேனிலும் 40 லிட்டர் பால் இருக்கும். அலுமினியக் கேன்கள். அவற்றை வண்டிக்குள் உருட்டிச் சென்று ஊர் வாரியாக அடுக்கி வைக்கவேண்டும். குறிப்பிட்ட நேரத்துக்குள் பால்

நிலையத்தில் சேர்க்கவேண்டும். பால் நிலையத்தில் பாலை எடுத்துக் கொண்டு கேன்களைச் சுத்தம் செய்து கொடுப்பார்கள். அதைக்கூட ஊர்வாரியாக அடுக்கி வைத்துவிட்டு வீடுவர பதினொரு மணி ஆகும்.

வண்டியில் பிரேக் அடிக்கும்போது கேன் மேல உருளுவதும், கேன் உருளும்போது காலில் பட்டு நகம் பேந்துகொள்வதும் வழக்கமா இருக்கும். ஒரு மருந்தோ ஊசியோ போடமாட்டார்கள். வண்டிக்கு ஊத்தும் ஆயிலை (பிரேக் ஆயில்) அடிபட்ட இடத்தில் ஊற்றி விட்டுத் துணியால் கட்டுப்போட்டுக் கொள்வேன். அப்படிதான் என் அண்ணன்மார்களும் செய்வார்கள். காலை பதினொரு மணிக்குமேல் சாப்பிட்டுவிட்டு வண்டிக்குக் கிரீஸ் அடிச்சு வண்டியைத் துடைத்துச் சுத்தம் செய்துவிட்டுக் கொஞ்ச நேரம் தூங்கிவிட்டு மாலை நான்கு மணிக்குத் திரும்பவும் பால் எடுக்க லாரியில் போக வேண்டும். வீடு திரும்ப இரவு பத்து மணி ஆகும். இப்படிக் கொஞ்ச நாள் என்னுடைய முடியை வளர்த்துக் கொண்டு இருந்தேன்.

என்னுடைய நிலையைச் சொல்லவும் முடியாமல் மறைக்கவும் முடியாமல் தினம் தினம் செத்துச் செத்துப் பிழைக்க வைக்கும் உணர்வுகள். மத்தில் அகப்பட்ட தயிர் போல, வெயிலில் அகப்பட்ட புழுப் போலச் சிக்குண்டு தவித்தேன். ஓடிப்போகலாம் என்றாலும் பயம். திருப்பி அண்ணன்கள் கையில் சிக்கிக்கொண்டால் கொலையே செய்து விடுவார்கள்.மேலும் என்னால் மற்ற பொட்டைகளுக்கும் கஷ்டம் ஏற்பட்டு அவர்களும் சேர்க்காமல் போய்விடுவார்களோ என்ற பயம். ஆண்கள் செய்யும் இந்தக் கனமான வேலைகளைக் கால் தெரிய லுங்கியை மடிச்சுக் கட்டிக் கன்னத்திலும் கையிலும் காலிலும் உடம்பிலும் வண்டி மையுடன் செய்து நான் பட்ட வேதனை எழுத்தால் கூற முடியாதது. பனிக் காலங்களில் கால் விரல் அடிபட்ட இடத்தில் வலி கொடுக்கும். தாங்கவே முடியாது. ‘பட்ட காலிலே படுமாம் கெட்ட குடியே கெடுமாம்’ என்று பழமொழி சொல்வார்கள். அதுபோலப் பட்ட காலிலேயே மீண்டும் மீண்டும் அடி படும். வண்டிக்குக் கீழே உள்பகுதியில் புகுந்து கிரீஸ் அடிக்கும்போது தவறி மேல எழுந்தால் போதும் தலையிலும் முதுகிலும் கம்பியோ மொத்த மான இரும்போ முட்டிக்கொண்டு காயமும் வலியும் ஏற்படுத்தும்.

ஒருநாள் நான் சரியாக வண்டியைச் சுத்தம் செய்யவில்லை என்று என் அண்ணன் என்னைக் கூப்பிட்டு எங்கள் வண்டியில் வேலை செய்யும் ஆட்கள் முன்பாக ‘அவுங்க மூத்திரத்தைக் குடிடா; அவுங்க புத்தி உனக்கு வரும்’ என்று கூறினார். மனதால், உடலால் எனக்கு ஏற்பட்ட கொடுமைகளை என்னால் தாங்கிக் கொள்ளவே முடிய வில்லை. இனியும் நாம் இங்கு இருக்கக்கூடாது என முடிவு செய்தேன்.

ஆனாலும் டெல்லியில் இருக்கும் என் குருவிடம் எப்படிச் செல்வது? அவருடைய முகவரியும் என்னிடம் இல்லை. நான் ஈரோட்டில் இருக்கும்போது டெல்லியில் வசிர்பூர், ஜேஜே காலனியில் வசிப்பதாகக் காதில் கேட்டது. இதை வைத்துக்கொண்டு போகலாமா? எப்படிப் போவது? பணத்திற்கு என்ன செய்வது என என் மனதுக்குள் ஒரே குழப்பமும் பயமும். சரியாகச் சாப்பிட முடியாமல் தூக்கமில்லாமல், நெஞ்சுப் படபடப்பும் கை கால் நடுக்கமும் ஏற்பட்டன.

இரண்டு நாள் இப்படி இருந்து கொண்டிருக்கையில் அன்று மாலை மூன்று மணி இருக்கும். என் அம்மா குளிப்பதற்காகப் பாத்ரூம் சென்றுவிட்டார். அப்பா, அண்ணன்கள் தூங்கிக் கொண்டிருந்தனர். வேலையாட்கள் வண்டியில் தூங்கிக்கொண்டிருந்தனர். இதுதான் நல்ல சமயம், எப்படியாவது வீட்டைவிட்டு ஓடிப் போய்விடலாம் என்று சமையல் அறையில் கடுகு டப்பாவில் கைவிட்டுப் பார்த்தேன். காசு ஏதும் இல்லை. அம்மாவின் காதுத் தோடு மட்டும் ஒரு ஜோடி இருந்தது. பாவம் அம்மா. காய்கறி வாங்கச் சில்லரைக் காசு களைத் தெரியாமல் வைத்திருக்கக் கடுகு டப்பாவில்தான் போட்டு வைத்திருப்பார். இன்றோ குளிக்கப்போவதால் தோடுகளைக் கழற்றி இதில் வைத்துவிட்டுச் சென்றுள்ளார். இதை வைத்துக்கொண்டு எப்படி டெல்லிக்குச் செல்வது, டெல்லிக்குப் போக எத்தனை ரூபாய் ஆகும் என்று எதுவும் தெரியவில்லை. எது எப்படி யானாலும்சரி இதையே எடுத்துச் செல்லலாம் என்று முடிவு செய்தேன். தோட்டில் ஒன்றை மட்டும் எடுத்து என்னுடைய அரைக் கால் டவுசர் பாக்கட்டில் போட்டுக்கொண்டு, மற்றொரு தோட்டை அதே கடுகு டப்பாவில் வைத்துவிட்டுப் பெட்ரூம் சென்றேன். அப்பா நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார். பீரோவைத் திறந்து அம்மாவின் இரண்டு புடவைகளை எடுத்து சிறிய மஞ்சள் நிறத் துணிப் பையில் வைத்துக்கொண்டு எங்கே அம்மா குளித்துவிட்டு வந்துவிடுவாரோ என்று படபடப்புடன் சீக்கிரமாக வீட்டைவிட்டு வெளியில் வந்து விட்டேன். என் கிராமத்தில் இருந்து ரோடு வழியாகச் சென்றால் என்னை விரட்டிப் பிடித்துவிடுவார்கள் என்று காடுமேடு ஏறிக் கடந்து சென்றேன்.

காடுகளில் புகுந்து செல்லும்போது சோளத் தட்டு உடம்பில் பட்டு எரிச்சலைக் கொடுத்தது. மேடுகளில் செல்லும் போது படபடப்பில் கால் தடுமாறி விழவைத்தது. ஏரியில் தண்ணீர் இல்லாமல் காய்ந்த முட்கள் கிடக்கும். அதுவும் எலந்த முள் சிறியதாக இருந்தாலும் கொக்கிபோல் துணியில், கையில் மாட்டிக்கொண்டு அதை எடுத்து விடப் பெரும்பாடு ஆகிவிடும். ஓடி ஓடி ஒரு வழியாக எப்படி டெல்லி

செல்வது என்று தெரியாமல் நாமக்கல்லில் உள்ள மலைக்கோட்டைக்கு வந்து சேர்ந்தேன். மாலை நான்கு மணி இருக்கும் அப்போது. என்னுடைய மலைக்கோட்டை நண்பர்கள் வந்தாலும் வரலாம்; வராவிட்டாலும் சொல்ல முடியாது. அப்படி வந்தாலும் இருட்டுக் கட்டுன பிறகுதான் வருவார்கள். என்ன செய்வது? யாராவது ஒரு நண்பனாவது வந்தால் அவனிடம் விசயத்தைக் கூறி டெல்லி செல்ல வழி கேட்கலாம் என்று எனக்கு நானே புலம்பிக் கொண்டு பயத்தில் காய்ச்சும் வெயிலில் மலைப்பாறைச் சூட்டில் உட்கார்ந்து கொண்டு காத்திருந்தேன்.

கும்புடப்போன தெய்வம் குறுக்கே வந்தமாதிரி என்னோட நண்பன் ஒருவன் மேல ஏறி வந்துகொண்டிருந்தான். அவனுக்குச் சொந்தமாக மளிகைக் கடை இருக்குது. அவனோட அம்மாதான் கடையைப் பார்த்துக்கொள்வார். இவனும் அம்மாவுக்கு உதவியாகப் படிப்பை ஒன்பதாவதோடு நிறுத்திவிட்டுக் கடையிலேயே வேலை செய்கிறான். அவனைக் கண்டவுடன் அவனை நோக்கி ஓடிச் சென்று அவனிடம் கதறிக் கதறி அழுதேன். பதிலுக்கு அவனும் 'ஏண்டி, ஏண்டி அழுவற? இவ்வளவு நாள் எங்க போயிருந்த? கடைசியா நாம் திண்டுக்கல் போனோம். அப்பத்தான் உன்னைக் கடைசியாப் பாத்தேன். நீ ஈரோடு போனதாச் சொன்னாங்க. இப்ப அங்க ஏதாவது பிரச்சனையா? உன்னோட வீட்ல ஏதாவது பிரச்சனையா? என்ன ஆச்சுடி சொல்லு. அழுவாதே'ன்னு சொல்லச் சொல்ல எனக்கு அழுகையை நிறுத்தவே முடியவில்லை. அதன் பிறகு மனதைத் தேற்றிக்கொண்டு எல்லா விசயத்தையும் அவனிடம் சொல்லிவிட்டு எப்படியாவது இந்தத் தோட்டை வைத்துக் கொண்டு எனக்குப் பணம் கொண்டு வந்து கொடு, என்னை டெல்லி செல்ல வண்டி ஏற்றிவிடு என்று கூறினேன். அவனும் என்ன செய்வது என்று தெரியாமல் யோசனை செய்துவிட்டு 'சரி, இங்கேயே இரு. நான் எப்படியாவது உனக்கு இந்தத் தோட்டை வைத்துப் பணம் கொண்டு வருகிறேன்' என்று கூறித் தோட்டை வாங்கிக்கொண்டு புறப்பட்டுச் சென்றுவிட்டான்.

தோட்டை அவன் எங்கு விற்றுப் பணம் கொண்டுவருவான், அவன் தோட்டை விற்கும்போது யாராவது இது யாருடையது, எப்படி உன்னிடத்தில் வந்தது, ஏன் விற்கிறாய் என அவனைப் பிடித்துக் கொண்டுவிட்டால் அவன் என்னையும் காட்டிக் கொடுத்துவிடு வானோ? அதன் பிறகு விஷயம் பெரிதாகி வீடுவரை சென்றால் என்ன ஆகுமோ என்ற பயம் ஒரு பக்கம். மற்றொரு பக்கம் அவன் வராமலே போய் விட்டால் எப்படி வீட்டுக்குச் செல்வது, எப்படி டெல்லிக்குச் செல்வது என்ற பயம். இப்படி நேரம் ஆகஆக என்னுள் பயம்

அதிகரித்தது. 'கடவுளே, என்னை ஏன் இப்படிச் சோதிக்கிற? எப்படி யாவது நான் டெல்லிக்குப் போய்விடவேண்டும். இல்லையென்றால் நான் இந்த மலைக்கோட்டையில் இருந்து விழுந்து இறப்பதைத் தவிர வேறு வழியே இல்லை' என்று மனதை இரும்பாக்கிக் கொண்டு கண்களில் கண்ணீர் வடிய உட்கார்ந்து இருந்தேன். அவனும் வந்தான். அவனைப் பார்த்தவுடன் மனம் சாந்தியானது. வந்தவன் என்னிடம் 350 ரூபாய் கொடுத்து 'என் அம்மாவிடம் தோட்டைக் காட்டி என் நண்பனுக்குப் பரிச்சைக்குப் பணம் கட்ட வேண்டுமாம். அவனோட அம்மா இந்தத் தோட்டைக் கொடுத்து விற்றுத் தரும்படிக் கூறினார்கள். நீ இதை வைத்துக்கொண்டு பணம் கொடும்மா என்று கேட்டேன். அம்மாவும் அதை வாங்கிக்கொண்டு கடையைப் பாத்துக்கோ இதோ வருகிறேன் என்று கூறிச் சென்றுவிட்டு சற்றுநேரம் கழித்து வந்து 350 ரூபாய்க்குத் தான் போகும் என்று கூறி இந்தப் பணத்தைக் கொடுத்தார்' என்று என்னிடம் கூறினான்.

'ரொம்பச் சந்தோஷம். கிடைத்தவரைக்கும் லாபம். என்னை எப்படி யாவது டெல்லி வண்டி ஏற்றிவிடுடா'என்று கூறினேன். அவனும் சரி என்றான். இருவரும் நாமக்கல் பஸ் ஸ்டாண்ட் வந்து அங்கிருந்து சேலம் பஸ் ஏறி அமர்ந்தோம். பஸ் புறப்படும்வரை என் உயிர் என்னிடத்தில் இல்லை.சேலம் வந்து சேர்ந்த நாங்கள் வேறு பஸ் பிடித்து ரயில் நிலையம் வந்து சேர்ந்தோம். நானும் அவனும் ரயில் நிலையத்தையோ ரயிலையோ பார்த்ததுகூட இல்லை. சேலத்திற்கு வருவதே இதுதான் முதல் தடவை. எங்கு செல்வது, எப்படிப் போவது, பணம் எங்கு கட்டுவது என்று தெரியாமல் திண்டாடினோம். உள்ளே சென்ற பிறகு தான் நீண்ட வரிசையில் நின்று டிக்கட் வாங்கிக்கொண்டு செல்பவர் களைப் பார்த்தோம். அந்த இடத்தில் தமிழில் 'டிக்கட் வாங்கும் இடம்' என்று எழுதியிருந்தது. இருவரும் வரிசையில் நின்றோம்.

'டெல்லிக்கு ஒரு டிக்கட் கொடுங்க. எவ்வளவு?' என்று கேட்க, டிக்கட் கொடுப்பவர், 'டெல்லி ரயில் இரவு பத்தரை மணிக்குத்தான். இரவு எட்டு மணிக்கு மேல்தான் டிக்கட் கொடுப்போம். அதன் பிறகு வாங்கிக்கொள்' என்று கூறினார். என்ன செய்வது? 'இப்போ இரவு ஏழு மணி. இன்னும் ஒரு மணிநேரம். அதுக்கப்புறம் டிக்கட் வாங்கிட்டு உள்ளே போயிடலாம். இப்போ வா, அந்தத் தூண் மறைவில் போயி உட்காரலாம்' என்று கூறிக் கூனிக் குறுகி இருவரும் பயந்தபடி உட்கார்ந்திருந்தோம். என் வீட்டில் இந்நேரம் தெரிந்து இருக்கும். அம்மா தோட்டக் காணோம், புடவையைக் காணோம், துரைசாமி யைக் காணோம் என்று புலம்புவாள். எல்லாரும் என்னைத் தேட முயற்சி செய்வார்கள். இங்க வந்துட்டா என்ன செய்யறதுன்னு

நண்பனிடம் பேசிக்கொண்டு இருந்தேன். அவனும் பதிலுக்குப் பயப்படாதே, இங்கெல்லாம் தேடமாட்டார்கள் என்று என் மனதைத் தேற்றிவிட்டுக் கொண்டிருந்தான்.

என்னுடைய நண்பனுக்கு என்னைப்போல் டெல்லிக்கு வர ஆசை யில்லை. காரணம் அவன் வீட்டில் ஒரே மகன். அதனால் அவனோட பெண் உணர்வுகளை அந்த மலைக்கோட்டையில் மட்டும் வெளிப் படுத்திக் கொண்டு வீட்டில் ஆண்பிள்ளையாக இருப்பதாகக் கூறினான். ஆனால் அவனோட ஆசைகளையும் கனவுகளையும் எப்படித்தான் மறைத்து வைத்தானோ, ஆச்சரியம்தான். என்னைவிட ஐந்து வயது பெரியவன். இருந்தாலும் டவுனில் வளர்ந்ததால் அவனுக்குச் சில விஷயங்கள் அதிகம் தெரிந்து இருக்கிறது. என்னோடு திண்டுக்கல் வந்தபோதுகூட மீசை வைத்துக்கொண்டேதான் புடவை கட்டி இருந்தான். தன்னுடைய கைக்குட்டையால் மீசையை மூடிக் கட்டிக் கொண்டான். வீட்டில் திட்டுவார்கள் என்ற பயம் இருந்தாலும் அவனுடைய பேச்சு நடவடிக்கை எல்லாம் என்னைவிட அதிக மாகவே அவனிடம் காணப்பட்டன. அவனிடம் 'நீயும் டெல்லிக்கு வா' என்று நான் கட்டாயப்படுத்தவில்லை. அவனும் 'நீ டெல்லி போக வேண்டாம்' என என்னைத் தடுக்கவுமில்லை. இருந்தாலும் என்னைக் காப்பாற்றிக் கரை சேர்த்த தெய்வமாக நின்றான் அன்று. என்னுடைய வாழ்க்கையில் மறக்க முடியாத நண்பன் என மனதில் நினைத்துக் கொண்டேன்.

250 ரூபாய் டெல்லிக்கு டிக்கட், சேலத்துக்கு வர பத்து ரூபாய். அவனுக்குத் திரும்பிப்போகக் கையில் பத்து ரூபாய் கொடுத்து விட்டேன். மீதி இருந்தது எண்பது ரூபாய் மட்டும்தான். மேலும் அவன் சீக்கிரம் வீட்டுக்குப் போக வேண்டும் என்பதால் டிக்கட் வாங்கிய பிறகு பிளாட்பார்ம் செல்ல என்னை உள்ளே அனுப்பிவிட்டு அவன் சென்றுவிட்டான். எந்தத் தண்டவாளத்தில் டெல்லி ரயில் வருகிறதோ அந்தத் தண்டவாளத்தை நோக்கி இரும்பால் ஆன படிக்கட்டுகளில் ஏறிச் சென்றேன். எப்படிச் செல்வது எனப் போகிறவர்களையும் வருகிறவர்களையும் கேட்டுக் கேட்டுச் சென்றேன். டெல்லி ரயில் வரும் தண்டவாளத்தைச் சேர்ந்த பிறகு ஒரு பக்கமாக உட்கார்ந்து கொண்டு மனதை அலைய விட்டுக்கொண்டு அங்கும் இங்கும் பார்த்துக் கொண்டிருந்தேன். எப்போது பத்தரை மணி ஆகும் என்று ரயிலின் வருகைக்குக் காத்துக் கொண்டிருந்தேன்.

# 3

அம்மாடியோவ்! எவ்வளவு நீட்டமா இருக்குது ரயில்! இதுல எந்தப் பெட்டியில ஏறி உட்காரணும்? எதுல வேணுமானாலும் ஏறிக்கலாம். நம்மகிட்டத்தான் டிக்கட் இருக்குதே, அப்புறம் ஏன் யோசிக்கணும்? ரயில் நின்றதும் நடுப்பக்கம் இருக்கும் அந்தப் பெட்டியில் ஏறி உள்ளே சென்றேன். அங்கு பஸ்ஸில் இருக்கும் சீட்டுகளைப்போல இல்லை. நீட்ட நீட்டமாக அதுவும் அலமாரி போல் அடுக்கடுக்கா இருந்தது. ஒவ்வொரு அடுக்கிலும் ஒவ்வொருவர் காலை நீட்டிப் படுத்துக் கொண்டு இருந்தனர். எனக்கு அப்போது ஒன்றும் புரியவில்லை. 'ஓ... படுத்துக்கிட்டே போகலாம்போல' என்று காலியா இருந்த ஒரு இடத்தத் தேடிக்கிட்டுப் போனேன். அங்கு ஒரு இடம் இருக்குது; அதுல போயி உட்காரலாம் என்று அந்த இடத்தில் அலமாரி போல் இருக்கும் காலி அறையில் தலையைக் குனிந்தபடி உட்கார்ந்தேன். ரயில் புறப்பட்டது. என் மனம் படபடப்பு இல்லாமல் பயம் இல்லாமல் 'தப்பிச்சோமடா சாமி' என்று நிம்மதி ஆனது.

ஒருவர் வந்து ஏதோ ஒரு பாஷையில் பேசி என்னை எழுந்திருக்கச் சொன்னார். நான் என்னுடைய டிக்கட்டை அவரிடம் காட்டினேன். அவர் அதைப் பார்த்துவிட்டு ஒப்புக்கொள்ளவில்லை. என்னை எழுப்பி விட்டு அவர் படுத்துக்கொண்டார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. 'இது அவரோட சீட் போல இருக்கு' என நினைத்துக் கொண்டு ரயில் கதவு பக்கம் வந்து பாத்ரூம் அருகில் நின்றுகொண்டேன்.

அப்போது அந்த வழியாகக் கருப்புக்கோட்டுப் போட்டுக்கொண்டு கையில் பேப்பர்களைப் பிடித்தபடி வந்த ஒருவர் என்னிடம் தமிழில் பேசினார். 'ஏன் இங்க நிக்கற? எங்க போகணும்? உன்னோட சீட் எது?' என்று கேட்டார். என்னுடைய டிக்கட்டை அவரிடம் காட்டி 'இங்க எங்கும் எனக்கு சீட் இல்லைங்க. நான் எங்க உட்காரணும்? நான் டெல்லிக்குப் போகணும்' என்று கூறினேன். 'உன்னோட டிக்கட்ல இந்தக் கம்பாட்மென்ட்ல போக முடியாது. இதுல ரிசர்வேஷன் செய்து

கொண்டவர்கள் மட்டும்தான் போகமுடியும். உன்னோட டிக்கட் சாதாரண டிக்கட். அதனால நீ அந்தக் கம்பாட்மென்ட்ல போகணும்' என்று அவர் கூறிவிட்டார். 'கம்பாட்மென்ட்னா என்னங்க, அது எங்க இருக்குது?'ன்னு கேட்டேன். 'கம்பாட்மென்ட்னா பெட்டி மாதிரி. இந்த ரயில்ல நெறய்யப் பெட்டிங்க இருக்குது. உன்னோட டிக்கட்ல போகணும்னா ரயில் எஞ்சின் பக்கத்தில் இருக்கிற டப்பாவுல போகணும். ரயில் பத்தி ஒன்னும் தெரியாம நீ மட்டும் தனியா வந்தியா? உன்கூட வேறு யாராவது வந்தாங்களா? டெல்லியில எங்க போற? யாரு உன்ன ரயில் ஏத்திவிட்டாங்க'ன்னு கேள்விமேல் கேள்வி கேட்க எனக்குப் பயமாப் போச்சு. பதில் சொல்லத் தெரியாமல் முழிச்சேன். 'என்னப்பா ஒண்ணும் பேச மாட்டிங்கற? பதில் சொல்லு'ன்னு கேட்டார். 'எங்க மாமா டெல்லில இருக்காரு. அவரு என்னை டெல்லி ஸ்டேஷன் வந்து கூட்டிட்டுப் போவாரு. என்னை எங்க அண்ணன்தான் வண்டி ஏத்தி விட்டாரு'ன்னு சொன்னேன். 'சரி, சரி அடுத்த ஸ்டேஷன் வந்ததும் நீ எஞ்சின் பக்கத்துல இருக்கற டப்பாவுல போயி உக்காந்துக்கோ. இங்க இருக்கக்கூடாது'ன்னு கண்டிஷனாச் சொல்லிட்டுப் போயிட்டாரு.

ஒன்றரை மணிநேரம் இருக்கும். பாத்ரூம் பக்கத்திலேயே நின்னுக் கிட்டுப் போன நான் ஜோலார்பேட்டை ரயில் நிலையத்தில் வண்டி நின்றதும் இறங்கி எஞ்சின் பக்கம் உள்ள பெட்டியைத் தேடிக்கொண்டு ஓடினேன். எஞ்சின் பக்கம் உள்ள பெட்டிங்க எல்லாம் சாத்தி இருந்தது. சன்னல் வழியாப் பாத்தால் ஜனங்க உட்காரக்கூட இடமில்லாமல் கீழே மேலே என்று நெருக்கியடித்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டும் நின்றுகொண்டும் இருந்தனர். 'நான் டெல்லிக்குப்போகணும், இதோ என்னிடத்தில் டிக்கட் இருக்கு, கதவைத் திறங்க... கதவைத் திறங்க'ன்னு கத்தினேன். வேடிக்கைதான் பார்க்கின்றார்களே தவிர கதவை யாரும் திறக்கலை. என்ன செய்யறதுன்னு கதவத் தடதடன்னு தட்டினேன். சரியாக முழுமையாகத் திறக்க முடியாதபடி மூட்டை முடிச்சுன்னு கதவுப் பக்கம் இருந்ததால ஒரு சைடாக் கொஞ்சமாத் திறந்தாங்க. எப்படியோ அந்தக் கொஞ்ச சந்துல முட்டிமோதி உள்ளே போயிட்டேன். போனா அங்க உட்காரக்கூட இடமில்லை. பாத்ரூம் பக்கம்கூட இடம் இல்லை. ஒரு காலு மூட்டைமேல ஒரு காலு ரயில் தரையில. இப்படிக் கஷ்டப்பட்டுக்கிட்டு விடியற வரைக்கும் போனேன். ஏதோ ஒரு ரயில் நிலையத்துல கொஞ்ச பேரு இறங்குனாங்க. ஓடிப்போய் நடக்கற வழியில் கீழ உட்காந்துக்கிட்டேன்.

பக்கத்துல உட்காந்து இருப்பவர்களை டெல்லி எப்போது வரும் எப்போது வரும் என்று கேட்டுக்கொண்டே இருப்பேன். ஒருமணி நேரத்துக்கு ஒரு முறை கேட்பேன். அவர்கள் இன்னும் மூன்று நாள்,

இரண்டு நாள் ஆகும் என்பார்கள். நம்பிக்கை இல்லாமல் ஒருவர் மாற்றி ஒருவரிடம் கேட்டுக்கொண்டே இருப்பேன். ரயில் இரண்டு இரவு கடந்து இரண்டு பகல் கடந்து, இரண்டாவது பகல் மாலை நான்கு மணிக்கு டெல்லி நிஜாமுதீன் வந்து சேர்ந்தது. என்னிடம் உள்ள பணத்தில் முதல் நாள் காலை மட்டும் இரண்டு இட்லி ஒரு வடை வாங்கிச் சாப்பிட்டதில் பதினைந்து ரூபாய் செலவாகிவிட்டது. அதனால் டெல்லியில் இருந்து வசீர்பூர் செல்ல வேண்டுமே என்று மீதி உள்ள பணத்தைச் செலவு செய்யாமல் கை கழுவும் பைப்பில் வரும் தண்ணீரைக் குடித்துக்கொண்டே டெல்லி வந்து சேர்ந்தேன்.

ரயிலை விட்டு இறங்கி ஜனங்களோட ஜனங்களா நானும் நடந்து சென்று ஒருவழியா ரயில் நிலையத்திற்கு வெளியில் வந்துவிட்டேன். எவ்வளவு பெரிய ரயில் நிலையம்! ஒரு தமிழ் வார்த்தை எங்கும் எழுதப்படவில்லை. எனக்கு இந்தி மொழி எப்படி இருக்கும் என்று கூடத் தெரியாது. ஏதோ ஒரு மொழியில் எழுதி உள்ளது; ஜனங்கள் ஏதோ ஒரு மொழியில் பேசிக்கொண்டு ஆட்டோ, கார் என்று ஏறிச் செல்கின்றனர். நாமும் ஒரு ஆட்டோ பிடித்துப் போகலாம் என்று ஒரு ஆட்டோ பக்கம் வந்து வசீர்பூர் வர்றீங்களா என்று கேட்டேன். பதிலுக்கு ஆட்டோ ஓட்டுநர் என்னைப் பார்த்து எனக்குப் புரியாத மொழியில் பதில் சொல்ல, நான் மீண்டும் வசீர்பூர் ஜே ஜே காலனி போகணும் என்று கூறினேன். 'மதராசி?'என்று ஆட்டோ ஓட்டுநர் கேட்க, நான் 'ஆமாம் மதராசி' என்றேன். ஐந்து விரலைக் காட்டி பச்சாஸ் ருப்பியா என்றார். நானும் ஆங்கிலத்தில் ஐம்பது ரூபாயா என்று கேட்டுவிட்டு சரி என்று ஆட்டோவில் உட்கார்ந்து கொண்டேன்.

ஆட்டோவில் போயிக்கிட்டு இருக்கறப்போ நான் ரோடுகள், பஸ், கார், பைக், பெரிய பெரிய பில்டிங், கடைகள் எல்லாம் பார்த்துப் பிரமித்துப் போனேன். எவ்வளவு பெரிய ஊர்! இந்த ஊரில் எப்படி என்னுடைய குருவைக் கண்டுபிடிப்பது? ஒரு வைராக்கியத்தில் வீட்டை விட்டு வந்துவிட்டோம். இந்த ஆட்டோக்காரன் சரியான இடத்தில் கொண்டுபோய் விடுவானா? சரியான இடத்தில் விட்டாலும் என் குரு அங்கு இருப்பார்களோ இல்லையோ என்று எனக்குள் பினாத்திக் கொண்டே சென்றேன். ஜே ஜே காலனி என்று சொல்லி ஒரு இடத்தில் இறக்கிவிட்டு ஐம்பது ரூபாய் வாங்கிக்கொண்டு ஆட்டோ சென்று விட்டது. ஜேஜே காலனி என்று எங்கும் தமிழில் எழுதப்படாததால் எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆட்டோவில் இறங்கின இடத்தை விட்டு ஒரு அரைக் கிலோமீட்டர் தூரம் நடந்து சென்று சுற்றுமுற்றும் பார்த்தேன். அந்த வழியாக இரண்டு மூக்குத்திப் போட்டுக்கிட்டுக் கால்ல பெரிய பெரிய கொலுசு போட்டுக்கிட்டு கருப்பா நாற்பது

வயதுள்ள ஒரு அம்மா நடந்து வந்தாங்க. அவுங்களப் பாத்தா நம்ம ஊருக்காரங்க போல இருந்துச்சு. 'அம்மா அம்மா நீங்க தமிழா?'ன்னு கேட்டேன். 'ஆமாம்பா. நீ தமிழா?'ன்னு அவுங்களும் கேட்க உடனே எனக்கு நிம்மதி ஆச்சு.

'அம்மா, நான் தமிழ்நாட்டுல இருந்து வரேன். இங்க எங்க அம்மா ஜே ஜே காலனியில் இருக்காங்க. அவுங்க பொட்டைங்க'ன்னு கையத் தட்டிக்காட்டி அவுங்க இங்க எங்க இருக்காங்கன்னு கேட்டேன். பதிலுக்கு அந்த அம்மா வழியைக் காட்டினாங்க. சின்னச் சின்ன வீதி. நடை பாதையில்கூடத் துணி துவைக்கிறவங்க, தண்ணி புடிக்கற வங்க, ஆம்பளைங்க சிலபேரு குளிக்கிறவங்க, பாத்திரம் கழுவும் பொம்பளைங்க இப்படி அந்தச் சின்னச் சந்துக்குள்ள புகுந்து புகுந்து ஒரு வழியாப் பொட்டைங்க இருக்கற இடத்தை வந்து சேர்ந்தேன். இங்க பெரும்பாலும் தமிழ்க்காரங்கதான் அதிகமா இருந்தாங்க. இட்லி தோசை ரோட்ல சுட்டு விக்கிறதப் பாத்தேன். பொட்டைங்களப் பாத்த உடனே மனசுல சந்தோஷம். நாம சரியான இடத்துக்குத்தான் வந்திருக்கோம். என்னோட குரு பேரைச் சொல்லி அவுங்க வீடு எங்க இருக்குன்னு பெரிய பொட்டைங்களைப் பாத்துக் கேட்டேன். 'நீ எந்த ஊருப்பா? உனக்கு அவுங்க என்ன ஆகணுமுன்னு' கேட்டாங்க. நா அவுங்களோட மகள் என்று சொல்ல விருப்பம் இல்லாம அவுங்க சொந்தக்காரப் பையன் என்று கூறினேன். அவர்களும் என்னைக் கையோடு கூட்டிச் சென்று என் குரு வீட்டில் விட்டனர்.

என்னப் பாத்தவுடனே குருவுக்கு இன்ப அதிர்ச்சி! அதோட நெஞ்சுப் படபடப்பு. கண்ணுல கண்ணீர். இப்படி அவுங்களப் பாத்த உடனே 'அம்மா'ன்னு கட்டிப்புடிச்சு அழ ஆரம்பிச்சேன். 'இந்தச் சின்ன வயசுல நீ எப்படி கண்ணு ஒண்டியாத் தமிழ்நாட்ல இருந்து வந்தே? வரும் வழியில் உனக்கு ஏதாவது பிரச்சனை ஏற்பட்டிருந்தால் உங்க அம்மா அப்பாவுக்கு நான் என்ன பதில் சொல்வேன்? வழி தெரியாம எங்கி யாவது போயிருந்தா நான் என்ன செய்வேன்? கடவுளே, என் மகள எங்கிட்டப் பத்திரமாக் கொண்டுவந்து சேத்த உனக்குக் கோடி நமஸ்காரம்'ன்னு பாசத்தோட கட்டித் தழுவி என் தலையைக் கோதி விட்டார்கள். குருகிட்ட நடந்ததை எல்லாம் சொல்லி இனிமே நா இங்கதான் இருப்பேன்னு சொல்லிட்டேன்.

நான் டெல்லிக்கு வரும்போது பொடவ கட்டிக்கிட்டுத்தான் வந்திருக்க வேண்டும். ஆனா ஆம்பளப் பையன் மாதிரி வந்துட்டதால 'அந்த ஏரியாவுல யாராவது உன்னப் பாத்தாங்களா, ஏதாவது கேட்டாங் களா, நீ என்ன சொன்ன?' என்று குரு கேட்டார். நானும் இங்கு எப்படி வந்தேன், யாரிடம் விசாரித்தேன் என்ற விவரத்தை எல்லாம்

சொன்னேன். ஆம்பளப் புள்ளையப் பொட்டையாக்கிவிட்டனர் என்று கருதுவார்கள் என நினைத்து உடனே பெண்கள் உடைகளை என்னிடம் கொடுத்து என்னுடைய குருவின் குரு (எனக்கு நானி) அவர்கள் இருக்கும் ஊரான ரபீக் நகர் சென்று அங்கு பத்து நாட்கள் தங்கியிரு; பிறகு கூட்டி வருகிறேன் என்று சொல்லி ஒரு வயதான வருடன் என்னை அனுப்பிவிட்டார். குருவைத் தவிர வேறு யாரையும் நான் பார்த்ததும் இல்லை; பழகினதும் இல்லை. இருந்தாலும் பொட்டைகளைப் பார்த்தால் பழகாமலே நீண்ட நாள் பழகின மாதிரி, நெருங்கின உறவுகள் மாதிரி இருந்துச்சு. அதனால் நானும் என் நானி இருக்கும் வீட்டுக்கு அவருடன் ஆட்டோ ஏறிச் சென்றுவிட்டேன்.

இப்போ நான் ஆம்பள கிடையாது. நான் ஒரு பெண். எனக்கென்று ஒரு குடும்பம். அம்மா, ஆயா, நாத்தனார்கள் என்ற உறவு உள்ளது. என்னோட ஆயா வீடு இந்திராகாந்தி கட்டிக் கொடுத்த காலனி. அங்க நிறையப் பொட்டைங்களும் வேற ஆண் பெண் இனத்தாரும் இருக் கின்றனர். வீடு என்றால் ஒரு பெரிய அறையும் சிறிய சமையல் அறையும்தான் இருக்கின்றன. பாத்ரூம் போக வேண்டும் என்றால் பொதுவாகக் கட்டியுள்ள பெண்கள் பகுதியில்தான் போக வேண்டும். நான் இன்னும் ஆப்ரேஷன் செய்து கொள்ளவில்லை. ஆதலால் ஆப்ரேஷன் செய்து கொள்ளவில்லை என்று யாரிடமும் சொல்லக் கூடாது. காட்டக் கூடாது. மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். பாத்ரூமில் கதவு இருக்கிறதா, தாழ்ப்பாள் இருக்கிறதா என்று பார்த்துப் போக வேண்டும். தண்ணீர்கூடப் பாத்ரூம் போகும்போது எடுத்துச் செல்ல வேண்டும். வீட்டுத் தேவைக்கும் குளிப்பதற்கும் தண்ணீர் தேவை எனில் சற்று தூரம் சென்று போர்வெல் மூலம் அடித்து எடுத்துக் கொண்டு வரவேண்டும். குளிப்பதற்குச் சமையல் அறையில் சிறிய பச்சல் உள்ளது. அதில்தான் குளிக்கவேண்டும். துணி துவைக்கப் போர்வெல் பக்கம் எடுத்துச் சென்று துவைத்து வரவேண்டும். இதை எல்லாம் இரண்டு நாட்களில் நானி மூலம் அங்கு சென்று கற்றுக் கொண்டேன்.

எல்லாப் பொட்டைங்களும் காலைல கடைகேட்கப் போவாங்க. ஒவ்வொரு ஏரியாவாப் போயிப் கடைகடையாக் காசு வசூல் பண்ணு வாங்க. ஏரியாவுக்குப் பஜார்னு சொல்லுவாங்க. பஜார் சுத்திக் கடைகேட்ட பணத்தக் கடைசியா எல்லோரும் பிரிச்சுக்குவாங்க. நான் நானி வீட்ல இருக்கறப்போ முதல்ல கடைகேட்கப் போகமாட்டேன். நானி கூடவே வீட்லதான் இருப்பேன். ஒரு நாளு நானிகிட்டக் கடை கேட்கப் போறாங்களே, அதவிட்டா வேற வேலை இல்லையான்னு கேட்டேன். 'இந்த இந்திய நாட்டுல இஜராங்களுக்குக் கடை கேட்கறது,

பதாய் கேட்கறது விட்டா வேற எந்த வேலையும் இல்ல. அந்தக் காலத்துல ராணிகளுக்குப் பணிப்பெண்ணா இஜராங்கள வச்சிருந் தாங்க. இப்பத்தான் ராஜா ராணி ராஜ்யம் போயி மந்திரிங்க ஆட்சி நடக்குதே. இந்தச் சர்க்காருலகூட இஜராக்களுக்கு ஒரு வேலையும் கொடுக்கல. புண்ணியவதி இந்திராகாந்தி ஆட்சியில் இருந்தபோது இங்க ஏழை எளிய மக்களுக்கும் இஜராங்களுக்கும் வீடு கட்டிக் கொடுத்தாங்க' என்றார் நானி.

'இஜராங்கன்னு நம்மள ஏம்மா சொல்றாங்க?' என்று கேட்டேன்.

'அது நம் முன்னோர்கள் காலத்துல இருந்தே வழிமொறையா நம்பள இஜராங்கன்னுதா சொல்லிக்கிறோம். இந்த டெல்லில காலங்காலமாக இஜராங்களத் தெய்வமா நினைக்கிறாங்க. நம்ம காலத் தொட்டு ஆசீர்வாதம் வாங்குவாங்க. நாம சொன்ன சொல்லுப் பலிக்குது. கடை கடையாக் கையத் தட்டி ராம் ராம் ஜி, நமஸ்தே பாபு இப்படிச் சொன்னாக் கடக்காரங்க விருப்பப்படி ஒரு ரூபாயோ, ஐந்து ரூபாயோ கொடுப்பாங்க. நாம் அவுங்க தலையில கைய வச்சு நல்லா இருங்கோ என்றும் கடையில யாவாரம் நல்லா ஆகோணும் என்றும் ஆசீர்வாதம் கொடுப்போம்' என்றார் நானி.

'நம்பளத் தெய்வமா நெனக்கிற இந்த டெல்லில எப்படி இந்தப் பாரம்பரியம் ஏற்பட்டிச்சு? ஏதாவது கதை இருந்தால் சொல்லுங்களேன்' என்றேன்.

'இஜராங்களப் பத்தி எவ்வளவோ சொல்லலாம். எனக்குத் தெரிஞ்ச ஒன்றை உனக்குச் சொல்றேன். ராமாயணம், மகாபாரதம் பற்றி நீ படிச்சு இருப்பே. கேட்டிருப்பே. ராமாயணத்துல ராமர் பதினாலு வருஷம் வனவாசம் போனப்போ ஊருக்காரங்க அத்தனை பேரும் ராமரை வழியனுப்பக் காட்டு எல்லைக்குப் போனாங்க. அப்போ ராமர் ஆண்களும் பெண்களும் அவுங்கவங்க வீடு நகரம் போங்க. நாங்க பதினாலு வருஷம் வனவாசம் முடிந்து நகரத்துக்கு வருகிறோம் என்று கூறி அனுப்பினாராம். அவரு சொன்ன மாதிரி ஆம்பள பொம்பள புள்ள குட்டிங்க எல்லாம் அவுங்கவங்க வீடு நகரங்களுக்குப் போயிட்டாங்க. பதினாலு வருஷம் முடிந்து ராமர் ஊர் எல்லைக்கு வரும்போது சில பேரு மட்டும் அங்கேயே இருந்தாங்களாம். 'நீங்கள் எல்லாம் யார்? ஏன் இங்க வசிக்கிறீங்க? நகரத்துக்குள் போகலியா?' என்று ராமர் கேட்டாராம். அங்க இருந்தவங்க, 'சாமி நாங்க ஆம்பளையிலும் கூட்டு இல்ல, பொம்பளையிலும் கூட்டு இல்ல. நீங்க ஆம்பள பொம்பள புள்ள குட்டி எல்லாத்தையும் அவுங்கவங்க இடத்துக்குப் போகச் சொன்னீங்க. எங்களப் போகச் சொல்லவில்லை. நாங்க உங்க மதிப்புக்குக் கட்டுப் பட்டு இங்கேயே இருக்கின்றோம்' என்று சொன்னார்களாம். ராமர்

இவுங்களோட பாவனைங்களை அறிஞ்சு பிரமிச்சுப்போய் பெருமப் பட்டாராம். அதோடு வரமும் கொடுத்தாராம். நீங்க சொல்லும் வார்த்தையில் நிஜம் இருக்கும். நீங்கள் கூறும் வார்த்தைகள் மெய்யாகும் என்று கூறினாராம். அப்போ இருந்தே இஜராங்க சொல்வாக்குப் பலிக்கும்னு இங்க இருக்கிறவங்க நம்புறாங்க. இத ஒரு தெய்வப்பிறவியா நினைக்கிறாங்க. இஜராங்க முகத்துல முழிச்சிட்டுப் போனா நல்லதே நடக்கும்னு நம்புறாங்க. யாவாரத்துக்குப் போறவங்ககூட நம்பளப் பாத்தா காலத் தொட்டு வணங்கிக் காசு கொடுத்துட்டு ஆசீர்வாதம் வாங்குறாங்க. இது இந்த நாட்டுல சனங்க நம்பளுக்குக் கொடுக்குற மரியாதை. அந்த மரியாதையை நாம காப்பாத்தணும். ஆம்பளைங்களப் பாத்து ஆசைப்படக் கூடாது. அவுங்ககிட்டத் தப்பா பழகக்கூடாது. நம்பளத் தெய்வமா நெனச்சுப் பணம் கொடுத்து ஆசீர்வாதம் வாங்கும் ஜனங்கள்கிட்ட கெட்டவங்கனு பேரு எடுக்கக் கூடாது. நாளைக்கு நீ கட கேட்கப் போனாக்கூடச் சேட்டுங்க அன்பாப் பேசுவாங்க. சில பேரு தமாஷ் பண்ணுவாங்க. நீ அவுங்களோட அப்படி இப்படித் தப்பா நினைக்கவோ நடந்துக்கவோ கூடாது. என்ன புரிஞ்சுதா?' என்றார் நானி.

'சரி நானி. இப்போ இங்க இருக்கற நம்பள மாதிரி அம்மாங்க கட கேட்கப்போறாங்க. பதாய்னா என்ன நானி? அதையும் கொஞ்சம் சொல்லுங்களேன். நானும் தெரிஞ்சுக்கிறேன்' என்றேன்.

'சொல்றேன். அதோ பீடாக்கடை தெரியுது பாரு, அங்க போயி ஏக்சோபீஸ் பான் ஒன்று வாங்கிட்டுவா. இந்தா ஒரு ரூபா' என்று என்னை அந்தப் பான் கடைக்கு அனுப்பினார். அங்குச் சென்றவுடன் ஏக்சோபீஸ் பான் கொடுங்கன்னு கேட்டேன். அப்போதுதான் எனக்குத் தெரிந்தது பான் என்றால் வெற்றிலை என்று. ஊரில் வெத்திலை, பாக்கு, சுண்ணாம்பு வைத்து மடித்துப்போடுவார்கள். இங்கு அதேபோல் வெத்திலையின் பின்பகுதியில் சுண்ணாம்பு தடவி வேறு என்னவோ (கத்தா) சிவப்பாகத் தடவி அதன் மேல் பொகலை போட்டுப் பாக்கு வெட்டியதைப்போட்டு மடித்து அது திறந்துகொள்ளாமல் இருப்பதற் காக லவுங்கத்தைக் குத்திப் பேப்பரில் மடித்துக் கொடுக்கின்றனர். அந்தப் பான் கடைக்காரன் என்னைப் பார்த்து 'நாம் கியா?' என்று கேட்டான். எனக்குப் புரியவில்லை. 'நானிக்கு' என்று பதில் கூறிவிட்டு வந்துவிட்டேன்.

பானை வாங்கிக் கொண்ட நானி 'பான் கொடுத்தால் பாவ்படுத்தி சொல்ல வேண்டும்' என்று கூறிவிட்டு 'பேட்டா, அந்தத் தூக்தனி கழுவிக் கொண்டுவா. நல்லா பளபளன்னு சுத்தமா வெளக்கி எடுத்துவா' என்று கூற 'தூக்தனின்னா என்னா நானி?'னு கேட்டேன்.'எச்சில் துப்புவதற்குப்

பயன்படுத்துவது' என நானி கூறத் தெரிந்து கொண்டேன். எனக்கு அந்தத் தூக்தனியில் இருக்கும் எச்சிலைப் பாத்து இதை எப்படி உள்ளே கைவிட்டுக் கழுவுவது எனச் சங்கடப்பட்டேன். 'தூக்தனி கழுவச் சங்கடப்படக் கூடாது. அசிங்கமா நினைக்கக் கூடாது. பெரியவங் களுக்கு உன்னைப் போன்ற சிறியவர்கள் செய்யும் சேவை இது. நாங்களும் உன் வயதில் எங்களுடைய குரு நானிகளுக்கு இப்படிப் பட்ட சேவைகளைச் செய்து வந்தோம். அதுபோல நீயும் இப்படிச் செய்ய வேண்டும்' என்று நானி கூற நானும் கஷ்டமாக இருந்தாலும் வேதனைப்படாமல் கழுவிக் கொண்டுவந்து கொடுத்தேன்.

என்னுடைய நானி அந்தப் பானை வாயில் போட்டு மென்று கொண்டு தூக்தனியை எடுத்து எச்சில் துப்பியபடியே 'என்ன கேட்ட? பதாய்னா என்னன்னு சொல்றேன் கேளு. டோலி பதாய்னு சொல்லு வாங்க. அதோ வீட்டுச் சுவரில் துணிகட்டித் தொங்கவிட்டு இருக்கு பாரு. அதான் டோலக். அந்த டோலக்க அடிச்சுட்டுப் பாட்டுப் பாடி டான்ஸ் ஆடுவாங்க. இத எங்க செய்வாங்கன்னா கொழந்த பொறந்த வீட்ல, திருமணம் ஆகிற வீட்ல, இஜராங்க ஜாதி ஜமாத்துல டோலக்கத் தட்டிக்கிட்டுப் பாட்டுப் படிச்சுக்கிட்டு ஆர்மோனியம் வாசிச்சு டான்ஸ் ஆடுவாங்க. கொழந்த ஆணா இருந்தா அதிகப் பணம்கேட்டு ஆடுவாங்க. கொழந்த பொறந்த வூட்டுக்காரங்க அவங்கவங்க வசதிக் கேற்பப் பணம், புடவை, அரிசி, கோதுமை இப்படிக் கொடுப்பாங்க. கொழந்த பொறந்த வீட்டத் தெரிஞ்சுக்கிட்டு அவுங்ககிட்ட இந்த நாளையில நாங்க வருவோம். உங்க குழந்தைக்கு ஆசீர்வாதம் கொடுப்போம். நீங்க பதாய் கொடுக்கோணுமுன்னு சொல்லுவாங்க. அதே மாதிரி அந்த நாளையில் போயிக் கொழந்தயோட அம்மா அப்பாவப் பத்திக் கேலி கிண்டலாப் பாட்டுப் படிச்சு டான்ஸ் ஆடி அவுங்களச் சந்தோஷப்படுத்திக் கொழந்தயக் கையில வாங்கி எந்த நோய் நொடியும் இல்லாம நல்லா வளரோனுமுன்னு ஆசீர்வாதம் கொடுத்துட்டு அவுங்க கொடுக்கறத வாங்குவோம். அவுங்க வசதியா இருந்து கம்மியாக் கொடுத்தாங்கனா இன்னும் அதிகமாக் கொடுங்க. நாங்க அதிகம்பேரு வந்து இருக்கோம்னு சொல்லிக் கேட்டு வாங்குவோம். இதுதான் டோலி பதாய்னு சொல்றது. அதே மாதிரி கல்யாணம் ஆகி மாப்புள பொண்ணுகள உட்கார வச்சு அவுங்களையும் கிண்டல் கேலி பண்ணிப் பாடி அவுங்களைச் சந்தோஷப் படுத்தி ஆடிப்பாடிப் பணம் வாங்கி வருவோம். இஜராங்க மகளையோ மருமகளையோ தத்து எடுத்துக்கும்போதுகூட இப்படி நமக்குள்ளேயே ஆடிப்பாடிப் பணத்தச் சுத்தித் தலையில போட்டுக் கொண்டாடு வாங்க. உனக்கு எல்லாம் போகப் போகத் தெரியும். நீயே பாத்துத் தெரிஞ்சுக்குவே. இப்போ வீட்ல இருக்கிற துணிய எல்லாம் எடுத்துக்

கிட்டுப் போயி அந்தப் போர்வெல் பக்கம் கொண்டு போயித் துவைச்சுட்டு வா' என்று கதையை முடித்தார்.

பொட்டையாப் பொறந்தா, பொட்டைங்களா வந்துட்டாக் காது குத்திக்கணும். மூக்குக் குத்திக்கணும். முடிய வெட்டக் கூடாது. பட்டன் தோடு போட்டுத் தலையில் விக்கு வச்சுட்டு மூக்குக் குத்தாம இருக்கிற பொட்டைங்களுக்கு மதிப்பில்லை. அதே போல இங்க ஆம்பளங்க எதுக்க வந்தா ஒதுங்கிப் போகணும். தலை குனிஞ்சு அடக்க ஒடுக்கமா நடந்துபோகணும். துணி விலகாமப் பாத்துக்கணும். இஜராங்களோட கலாச்சாரத்தத் தெரிஞ்சுக்கணும். விதிமுறைகளைக் கடைப்பிடிக்கணும். பெரியவங்களுக்கு மரியாதை கொடுக்கணும். சின்னவங்க துணிகூடப் பெரியவங்க மேல படாமப் பாத்துக்கணும். பெரியவங்க சொல்ற வேலையைத் தட்டாம செய்யணும். இதுதான் ஒரு இஜராவாக வாழ்பவளுக்கு அழகு.

பத்து நாளைக்குப் பிறகு என் நானியுடன் என் குரு இருக்கும் ஜே ஜே காலனிக்கு வந்தேன். என்னுடைய குரு குடும்பத்துல பதாய்க்குப் போக மாட்டாங்க. அதெல்லாம் டெல்லியில இருக்கிற இந்திக்கார இஜராங்க போவாங்களாம். நாங்க பதாய்க்குப் போகணும்னா அந்த இந்திக்கார இஜராங்க வீட்ல சேலா ஆகி அவுங்களோட இருந்துக் கிட்டுப் போகணும். நாங்க கடதான் கேட்கப்போவோம். என்னோட நானி வீட்லேதான் இருப்பாங்க. நான், குரு, மத்த வீட்டு இஜராங்க எல்லாரும் கட கேட்கப் போவோம். அப்படிக் கட கேட்கறப்போ கடைங்கள்ல இருக்கிற துணிகளப் பாத்தா இதை வாங்கணும்னு ஆசையா இருக்கும். லட்டு, முட்டாயிக் கடைங்களைப் பாத்தா அத வாங்கிச் சாப்பிடணும்னு ஆசையா இருக்கும். அதே சமயம் கடையில இருக்கிற சேட்டுங்க சிவப்பா அழகா இருந்தா அவுங்கமேல ஆசையா இருக்கும். நான் இப்படி ஆசைப்படுறத வெளியில சொல்ல முடியாது. மனசுக்குள்தான் ஆசைப்பட்டுக்கணும். நாமே கட கடயாப் பிச்ச கேட்கிறோம். நாமபோயி இதுக்கெல்லாம் ஆசப்பட்டாக் கிடைக்குமா? நமக்குத் தகுதிதான் இருக்கான்னு நெனச்சுக்குவேன்.

கடகேட்குற நேரத்தவிட்டு வீட்ல இருக்கிற நேரத்துல என் வீட்டோட ஞாபகம் வரும். அங்க அம்மா அப்பா அண்ணாங்க எப்படி இருப்பாங் களோ. என்னைப் பத்தி என்ன நினைக்கிறாங்களோ. அம்மா வேதனை அடைந்து உடல்நிலை சரியில்லாமல் போயிருக்குமோ. என்னைத் தேடிக் கொண்டு இருப்பார்களோ என்ற எண்ணம் தோன்றும். நான் வேதனைப்பட்டு என்ன பயன்? ஊருக்குத்தான் போக முடியுமா? போனாலும் என்னைப் பெண்ணாக ஏற்றுக் கொள்வார்களா? மூக்கும், காதும் குத்தியாச்சு. இனி வீட்டுக்குப் போகவும் முடியாது. குறைந்தது

கடிதம் மூலம் விசாரிக்கலாம் என்றால் விலாசம் தெரிந்து இங்கு வந்து கூட்டிச் சென்று முடியை வெட்டி ஆணாக இருக்கச் சொல்வார்கள். இல்லை அடித்தே கொன்றாலும் கொன்றுவிடுவார்கள். என்ன செய்வது? இனி இதுவே நம் உலகம், இதுவே நம் குடும்பம், இதுவே நம் தொழில் என நினைத்து வாழவேண்டியதுதான். இதுபோன்ற யோசனைகளைக் கூடப் பாத்ரூம், மொட்ட மாடி போன்ற யாரும் இல்லாத இடத்தில் தான் யோசிக்க முடியும். மனதில் ஏதோ யோசிக்கிறோம் என்று முகத்தில் தெரிந்தால்கூட பெரியவர்கள் காரணம் கேட்பார்கள் என்று பயமாக இருக்கும்.

தேனா பாபுஜீ, தோ ஜனே, பான்ஞ் ஜனே, ஆவ், ஜா இப்படி கொஞ்சம் கொஞ்சம் இந்தி பேசக் கற்றுக்கொண்டேன். சில சமயத்தில் என் குரு வேறு குரூப்புடன் கடை கேட்கச் சென்றால் என்னை வேறு ஒரு இஜராவுடன் கடை கேட்க அனுப்புவார். அவளுடன் கடை கேட்கச் சென்றால் அவள் கடை கேட்டு முடிச்ச பிறகு எந்தப் பஜாரில் கடை கேட்கப் போனோமோ அந்தப் பஜார் முடிவில் ரோட்டிலேயே உட்கார்ந்து பணத்தைப் பிரித்து என் பங்கைக் கொடுப்பாள். பிறகு அவள் பியர் வாங்கிக் குடிப்பாள். 'இப்படி ஓப்பனாகக் குடிக்கிறீங்களே, தப்பு இல்லியா?' என்று கேட்பேன். 'நான் குடிக்கறத நீ யாருக்கும் சொல்லக் கூடாது. சொன்னால் கட கேட்கக் கூட்டிவரமாட்டேன்' என்று கூறுவாள். அவள் குடிக்கும்போது நான் அங்கு இருக்கும் ஒரு பெட்டிக் கடைக்காரரிடம் – அவர் கேரளாவைச் சேர்ந்தவர் – தமிழில் பேசி அவருடன் பழகிக் கொள்வேன்.

இந்தப் பஜாருக்கு வாரத்தில் ஒரு முறை வருவோம். வீட்டுக்குக் கடிதம் எழுதினால் இந்தக் கேரளாக்காரரின் கடை அட்ரஸ் கொடுக் கலாம் என்று யோசித்து அவருடைய கடை முகவரியைக் கேட்டு வாங்கிக் கொண்டேன். என்னோட அம்மா, அப்பா, அண்ணன் இவுங்க எவ்வளவுதான் என்னை அடிச்சாலும் வெறுத்தாலும் அவுங்கள என்னால் மறக்க முடியவில்லை. அம்மா தோட்ட வேற எடுத்துட்டு வந்தது என் மனசுக்குக் கஷ்டமாகவும் வெறுப்பாகவும் உறுத்திக்கிட்டே இருந்தது. குருவோட சம்மதத்தில் கடிதம் எழுதலாம் என்றால் அவர் என்ன நினைத்துக்கொள்வார் என்ற கேள்வி என்னுள் இருந்தது. எனக்குத் தெரியாதது இல்லை. குருவின் விலாசத்தில் கடிதம் எழுதினால் என்னைப் பிடித்துச்செல்வது மட்டும் இன்றி என் குருவுக்கும் என்னைக் கடத்தி வந்துவிட்டதாகக் கெட்ட பெயர் வந்துசேரும். மேலும் குடும்பத்தைப் பத்தி நினைப்பவர்கள் இஜராங்களுடன் வாழ வந்தவர் இல்லை, பொழைக்க மட்டும் வந்தவர்கள் என்று நினைப்பார்கள். இதனால் என் குருவுக்குத் தெரியாமல் நான் அந்தக் கேரளக்

கடைக்காரர் விலாசத்தில் யாருக்கும் தெரியாமல் வீட்டுக்குக் கடிதம் எழுதினேன்.

'அன்புள்ள அம்மா அப்பாவிற்கு மற்றும் அண்ணார் அவர்களுக்கு டெல்லியில் இருந்து துரைசாமி எழுதிக்கொண்டது. முதலில் என்னை எல்லாரும் மன்னித்துவிடுங்கள். நான் உங்களிடம் சொல்லிக் கொள்ளாமல் வந்துவிட்டேன். நீங்கள் அனைவரும் என்னைத் திட்டியது, அடித்தது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் நான் என் நண்பன் மூலம் இங்கு உள்ள ஒரு பாத்திரக் கடையில் வேலை செய்கிறேன். நான் பணம் சம்பாதித்து நல்லபடியாக ஊருக்கு வருவேன். அம்மாவின் ஒரு தோட்டை வித்துத்தான் டெல்லி வந்தேன். அம்மா கவலைப்பட வேண்டாம். உங்களுக்கு நான் பணம் சம்பாதிச்சு ஒரு ஜோடி தோடு வாங்கிவந்து கொடுக்கிறேன். உங்களைப் பிரிந்து வந்ததில் இருந்து உங்கள் அனைவரின் ஞாபகம் வருகின்றது. என்னை நீங்கள் தேட வேண்டாம். நான் நலமாக இருக்கிறேன். நீங்கள் எல்லாரும் எப்படி இருக்கிறீர்கள் என்று எனக்கு இந்த விலாசத்துக்குக் கடிதம் எழுதவும். இப்படிக்குத் துரைசாமி' என்று கடிதம் எழுதி அனுப்பிவிட்டேன்.

ஒருமுறை டெல்லியில் உள்ள பெரிய ஆப்பிள் மண்டிக்குக் கடை கேட்கப் போயிருந்தோம். நான் டெல்லி வந்து 20 நாட்கள் ஆகி விட்டதால் கடைகளில் மற்றவர்கள் எப்படிப் பணம் வசூல் செய்கின்றனர் என்று பார்த்துப் பார்த்து நானும் கற்றுக்கொண்டேன். சில சமயம் கைதட்டிக் காசு கேட்கும்போது கடைக்காரர்கள் கை தட்டவேண்டாம், ஒருவர் மட்டும் உள்ளே வந்து எத்தனை பேர் என்று கூறிப் பணத்தை வாங்கிச் செல்லுங்கள் என்று கூறுவார்கள். எங்கள் கடை கேட்கும் குரூப்புகளுக்குத் தெரியும். இந்தக் கடைக்காரன் எவ்வளவு பணம் கொடுப்பான் என்று. அதனால் என்னை அனுப்பிப் பணத்தை வாங்கிவா என்று சொல்வார்கள். இப்படித்தான் அன்று ஆப்பிள் மண்டிக் கடை கேட்க நானும் அன்று பியர் குடித்தாளே அவளும் சென்றிருந்தோம். நான் இந்த லைன் கேட்கிறேன், நீ அந்த லைன் கேள் என்று கூறி அவள் எதிர்ப்புறம் உள்ள புரோக்கர் ஆபீஸ்களில் கடை கேட்க நான் மற்றொரு புறம் கடை கேட்டுக் கொண்டிருந்தேன்.

சில ஆபீஸ்களில் தமிழ்ப் பேசத் தெரிந்தவர்களும் இருந்தனர். லாரி டிரைவர்களும் ஆபீஸில் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் என்னிடம் தமாசாகவும் கிண்டலாகவும் தமிழில் பேசுவார்கள். நானும் மாமா எந்த ஊருங்க, நீங்க காசு கொடுங்க மாமா என்று இப்படி அவர் களுடன் நைசாகப் பேசிப் பணம் வாங்கிக்கொண்டு இருந்தேன். இப்படி ஒவ்வொரு ஆபீசாகச் சென்று பணம் வாங்கிக்கொண்டு இருக்கையில் நாமக்கல்லைச் சேர்ந்த ஒரு லாரி டிரைவரை நான்

பார்த்தேன், அவனும் என்னைப் பார்த்துவிட்டான். அவன் என்னுடைய குடும்பத்தைப் பற்றி நன்கு தெரிந்தவன். எங்கள் லாரியில்கூட டிரைவராக வேலை செய்தவன். என்னைப் பார்த்த உடனே 'தொரசாமி... தொரசாமி'ன்னு கூப்பிட்டான். நான் பயந்து போய் அந்த மண்டியைவிட்டு வெளியே ஓடிவந்து ஆட்டோ பிடித்து ஜேஜே காலனிக்கு வந்துவிட்டேன். என்னுடன் கடை கேட்க வந்திருந்தவளை விட்டுவிட்டு ஓடி வந்துவிட்டேன். என்னுடைய நானி மட்டும்தான் வீட்டில் இருந்தார். 'ஏன் பேட்டா இவ்வளவு சீக்கிரம் வந்துட்டே?' என்று கேட்டார். நான் நடந்ததைக் கூறினேன். 'பயப்படவேண்டாம். அந்த லாரி டிரைவர் உங்கள் வீட்டில் சொன்னாலும் உன்னைத் தேடி யார் வந்தாலும் நானி பார்த்துக் கொள்கிறேன். நீ பயப்பட வேண்டாம்' என்று எனக்கு ஆறுதல் கூறினார்.

மாலை என்னுடன் கடை கேட்க வந்த அந்த இஜராகூட சோகத்துடன் என் வீட்டுக்கு வந்தாள். என்னைப் பாத்தவுடன் 'ஏண்டா நீ எல்லாம் பொட்டையா? உனக்கெல்லாம் எதுக்கடா பொட்டவேஷம்? எங்கடா ஊம்பப் போன? எங்கடா தொலைஞ்சு போன? உன்னை எங்கெல்லாம் தேடுறது? இப்படிச் சொல்லிக்காம வந்துட்டா நான் என்ன நினைக்கிறது? சரியா இங்கு வந்து சேரலினா உன்னோட நானிக்கு யாருடா பதில் சொல்றது? இனிமே நீ எங்கூட கடை கேட்க வரக்கூடாது. நானும் உன்னைக் கூட்டிக்கிட்டுப் போகமாட்டேன்' என்று படபடவென்று அவளோட ஆத்திரத்தைக் கொட்டித் தீர்த்தாள். அதன் பிறகு என் நானி அவளைச் சமாதானப்படுத்தி நடந்ததை எடுத்துச் சொன்னார். அதன் பிறகு அவள் என்னிடம் மன்னிப்புக் கேட்டு அமைதி ஆனாள்.

டெல்லியில் என்னைப் பார்த்த லாரி டிரைவர் என் வீட்டில் போய்ச் சொல்லியிருப்பார் போல. எனக்குத் தெரியாது. ஆனால் நான் பொடவ கட்டிக்கொண்டு கடை கடையாகப் பிச்சை கேட்பது என் வீட்டுக்குத் தெரிந்துவிட்டது. என் வீட்டில் இருப்பவர்கள் என்ன நினைத்தார்களோ தெரியவில்லை. நாமக்கல்லில் இருக்கும் பொட்டைகள் என்று சற்று வெளிப்படையாகத் தெரிபவர்களைப் பிடித்துப் போலீசில் கொடுத்து என் மகனை இவர்கள்போல வேஷம் போட்டுப் பிச்சை கேட்க டெல்லிக்கு விற்றுவிட்டனர் என்று கூறிக் கேஸ் கொடுத்துவிட்டனர். அவர்களைப் போலீஸ் ஸ்டேஷனில் வைத்து விசாரித்துள்ளனர். பதிலுக்கு அவர்களே ஐடியா கொடுத்துள்ளனர். 'உங்கள் மகனை நாங்கள் டெல்லிக்குப் போகச் சொல்லவில்லை. உங்கள் மகன் கருப்பா சிவப்பா என்றுகூட எங்களுக்குத் தெரியாது. உங்கள் மகன் ஏதாவது கடிதத் தொடர்பு கொண்டிருந்தால் இங்கு வரவழையுங்கள்.

எங்கள் முன் நிறுத்திக் கேளுங்கள். நாங்கள் கடத்தினோமா அவனே போனானா என்று தெரியும்' என்று கூறியுள்ளனர். காலை முதல் இரவு வரை ஸ்டேஷனில் வைத்திருந்து விட்டுவிட்டனர். ஆனால் இந்த விசயம் எனக்குத் தெரியாது.

நான் டெல்லியில் கேரளக் கடைக்காரரிடம் சென்று அடிக்கடி விசாரிப்பேன். ஏதாவது லெட்டர் வந்ததா என்று. அப்போது ஒருமுறை 'அம்மாவுக்கு சீரியஸாக உள்ளது; உடனே புறப்பட்டு வரவும்' என்று தந்தி வந்திருந்தது. அந்தத் தந்தியைப் பார்த்தவுடனே எனக்கு ஊருக்குப் போக வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. இந்தக் கடிதத் தொடர்பைப் பற்றி நானியிடமும் குருவிடமும் சொல்லித்தான் ஆகவேண்டும் என்று பயந்து பயந்து என் அம்மா மீதுள்ள பாசத்தில் சொல்லிவிட்டேன். நானியும் குருவும் நான் தெரியாமல் கடிதம் போட்டதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் என்னை உடனே ஊருக்கு அனுப்பி வைத்தனர். ஆனாலும் அவர்கள் என்மீது வைத்திருந்த நம்பிக்கை போயிருக்கும் என்று நினைக்கிறேன். இவன் நமக்குத் தெரியாமல் வீட்டுக்குக் கடிதம் எழுதியவன், இன்னும் என்னவெல்லாம் செய்யலாம் என்ற எண்ணம் வந்திருக்கலாம் என்று நான் அப்போது நினைத்தேன். உண்மையில் போலீஸ் விசாரித்தவர்களை நானும் பார்த்ததில்லை. நாமக்கல்லில் வெளிப்படையாகப் பொட்டை என்று தெரிந்தவர்களிடம் நான் பேசவும் மாட்டேன். ஏன் என்றால் பயம். யாராவது பார்த்துவிட்டால் என்னையும் பொட்டை என்று நினைப்பார்கள். வீட்டில் என்னைப் பொட்டைங்களோட சேருவியான்னு அடிப்பார்கள் என்று பயம் இருந்தது.

# 4

என்னோட குரு எனக்கு டிக்கட் எடுத்துக் கையில் 1500 ரூபாய் பணத்தையும் கொடுத்துக் கூடவே ஒரு பேக்கில் இரண்டு புடவையும் கொடுத்து வண்டி ஏற்றிவிட்டார். இந்தத் தடவ ரயில்ல நான் புடவை கட்டிக்கிட்டுப் பொம்பளைங்க கம்பார்ட்மெண்ட்ல உட்கார்ந்துக் கிட்டுப் போனேன். என்னோட குரு ஆக்கிக் கொடுத்த அந்தப் புளிசோத்தத் தின்னுட்டு எங்க அம்மாவுக்கு என்ன ஆச்சோ என்ன ஆகுமோன்னு நினைச்சுட்டு ஒரு வழியாச் சேலம் ரயில் நிலையம் வந்து சேர்ந்தேன். அங்கிருந்து லோகல் பஸ் புடிச்சு சேலம் பஸ் ஸ்டாண்டு வந்து யோசனை செய்தேன். நாம் எப்படிப் பொடவ கட்டிக்கிட்டு ஊருக்குள்ள போறது? நாம் ஆம்பளப் புள்ளன்னுதானே வீட்டுக்குத் தெரியும். இப்படிப் பொடவ கட்டிக்கிட்டு ஊருக்குப் போனா அம்மா என்னோட கோலத்தப் பாத்து இன்னும் சீரியசா ஆகிவிடுவாங்க. அதனால ஆம்பள துணி போட்டுக்கிட்டுப் போகலாம்னு பஸ் ஸ்டாண்ட் பக்கம் உள்ள லாட்ஜ்களில் ரூம் கேட்டேன். யாரும் எனக்கு ரூம் கொடுப்பதாகத் தெரியவில்லை. அதனால பஸ் ஸ்டாண்டுல இருக்கற பொம்பள பாத்ரூமுக்குப் போகலாம்னு போனா அங்க காசு வாங்கிக் கிட்டு உள்ளே விடும் ஆள் என்னைப் பாத்துட்டுப் பொட்டை என்று தெரிந்து கொண்டு என்னை உள்ளே விடவில்லை. ஆம்பளைங்க பாத்ரூமிலாவது செல்கிறேன் என்று அவனிடம் கேட்டேன். அங்கும் என்னைப் போக விடவில்லை.

இது என்ன வம்பாப் போச்சு. டெல்லியில நாம பொம்பள பாத்ரூமுக்குத் தானே போறோம். இங்க என்னடான்னா விட மாட்டேங்கிறாங்க. அப்படியே விட்டாலும் நாம் வரும்போது ஆம்பள துணியப் போட்டு வந்தா பிரச்சனை ஆகுமே என்ன செய்யறது. இப்படி எனக்குக் குழப்பமாப் போச்சு. எப்படியாவது ஆம்பள துணிய மாத்திக்கிட்டுத் தான் ஊருக்குப் போகவேண்டும் என்று உறுதியாக அந்தப் பாத்ரூம் காசு வாங்கி அனுப்புபவரிடம் 'நான்

ஆம்பளதான். ஆட்டத்துக்கு வேஷம் போட்டுக்கொண்டு ஆடி முடிச் சுட்டு வந்துட்டேன். இதை அவுத்துட்டு ஆம்பள துணி போடணும். தயவு செய்து ஆம்பள பாத்ரூமிலாவது விடுங்க'ன்னு சொன்னேன். என்னிடம் ஐந்து ரூபாய் வாங்கிக்கொண்டு உள்ளே விட்டான். உள்ளே போனால் சிறுநீர் கழித்துக்கொண்டிருந்த ஆண்கள் கூச்சப் பட்டுச் சத்தம்போட்டனர். 'ஆம்பளதான் ஆம்பளதான்னு' நான் சொல்லிக்கிட்டே ஒரு பாத்ரூம் கதவைச் சாத்திக்கிட்டு உள்ளே ஓடிப்போயிட்டேன். நான் ஒரு தப்பு செய்துட்டேன். ரயிலில் பாத்ரூம் உள்ளேயே ஆம்பள துணிய மாத்தி இருக்கணும். அப்போது எனக்கு அந்த நினைப்பே வரல. அதுவும் நான் பொம்பள கம்பார்ட்மென்ட்ல வந்துக்கிட்டு இருந்தேன். திடீரென்று நான் ஆம்பளையா மாறிட்டா என்ன நினைப்பாங்கன்னு பயம் வேற.

டெல்லிக்கு மொதமொதப் போட்டுக்கிட்டுப் போன உடையையே போட்டுக்கொண்டு மூக்குத்தி, தோடு எல்லாத்தையும் கழட்டிப் பையில வெச்சுக்கிட்டுக் கையில் போட்டிருந்த பித்தளை வளையலக் கழட்ட முடியாம வாயில பல்லால் கடிச்சு மடிச்சு மடிச்சு இழுத்து ஒடைச்சு எடுத்துக்கிட்டு ஆம்பளப் பையனா வெளியில வந்துட்டேன். என்னோட முடி கழுத்துக்குக் கீழே இருந்துச்சு. அதனால பஸ் ஸ்டாண்ட் கடையில ஒரு தொப்பி வாங்கி முடி தெரியாம போட்டுக்கிட்டு நாமக்கல் பஸ் புடிச்சுப் போனேன். என்னோட கிராமத்தை நோக்கி நடந்தே போனேன். போகும் வழியில என்ன நடக்குமோ, வீட்டில் என்னை அடிப்பார்களா, தலையை மொட்டை அடிப்பார்களா, என்ன பதில் சொல்வது என்று யோசிச்சிக்கிட்டே போனேன். எதுவேண்டு மானாலும் நடக்கட்டும் என்று வீட்டிற்கே சென்றுவிட்டேன்.

என் அம்மா நன்றாகத்தான் இருந்தார். நான் வீடு வந்து சேர்ந்த நேரம் காலை எட்டு மணி இருக்கும். அப்பா, பெரிய அண்ணன், சிறிய அண்ணன் எல்லாரும் வண்டிக்குச் சென்றுவிட்டனர். அம்மாவும் நடு அண்ணனும் வீட்டில் இருந்தனர். நான் அம்மாவைப் பார்த்தேன். அம்மா நன்றாகத் தான் இருந்தார். அண்ணன் வாசல் கதவைத் தாழ்ப்பாள் போட்டு விட்டுக் கிரிக்கெட் பேட் எடுத்துவந்து என்னைத் திட்டியபடி அடித்தான். 'ஓம்போதுங்ககூடச் சேருவியா, பொடவ கட்டுவியா, டான்ஸ் ஆடுவியா, பொட்டத் தாயோலி உனக்கு எவ்வளவு தைரியமடா, இப்படிச் சொல்லிக்காம ஓடி ஓடிப் போற. உன்ன அடிச்சே சாவடிக்கிறேன்' என்று கூறிக் கண்மண் தெரியாம பலமா அடித்தான். என் மண்டையில் அடி விழாமல் தடுக்க என் கைகளைத் தலைமீது வைத்துக் கொண்டேன். என் கை எல்லாம் வீங்கிப்போய்விட்டது. காலில் அடிக்க முதுகில் அடிக்கக் கையை

அங்குக் கொண்டு செல்லும்போது மண்டையில் அடி விழ மண்டை உடைந்து ரத்தம் ஊற்றியது. அம்மாகூட 'இவனைக் கையைக் காலை ஒடச்சு ஒரு மூலைல உட்கார வைடா. அப்பத்தான் வீட்டைவிட்டு ஓடமாட்டான்' என்று அண்ணனுக்குச் சொல்லிக் கொடுக்கின்றார்.

வலி தாங்க முடியாம நான் அண்ணனைத் தள்ளிவிட்டு ஒரு அறைக்குள் ஓடிப்போய்க் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டேன். இவங்கிட்ட அடி வாங்கி வலி தாங்க முடியாம சாவறதவிட நாமளே ஏதாவது செய்துகொண்டு இறந்து விடலாம் என்ற முடிவுக்கு வந்தேன். வீட்டுக்குள் நான் சாவதற்கு ஏதாவது கிடைக்குமா என்று தேடிக் கொண்டிருக்கையில் என் அண்ணன் கதவைத் தட்டித் தட்டி அந்தத் தாழ்ப்பாள் கொண்டியை நெம்பி உடைத்துக் கதவைத் திறந்து உள்ளே வந்து மீண்டும் அடித்து அவனுக்குக் கை வலித்தவுடன் விட்டுவிட்டான்.

'ஏன் என்னோட உணர்ச்சியைப் புரிஞ்சுக்கமாட்டிங்கிறீங்க? என்ன ஏதுன்னு கேட்காம என்னை மாட்டை அடிக்கிற மாதிரி போட்டு அடிக் கிறீங்க. உங்க மேல வெச்சுருக்கிற பாசத்தாலேதான் உங்களத் தேடி இங்க வந்தேன். நான் என்ன தப்பு செய்தேன் என்னை அடிக்கிறதுக்கு?' என்று தேம்பித் தேம்பி அழுதுகொண்டு கேட்டேன். அதன்பிறகுதான் அண்ணன் கூறினான். டெல்லியில நான் புடவை கட்டிக்கொண்டு பிச்சை எடுத்தது, ஆப்பிள் மண்டியில் என்னைப் பார்த்தது, நாமக்கல்லில் பொட்டைங்களைப் போலீசில் விசாரித்தது எல்லாம் எனக்குத் தெரிந்தது.

அம்மா கண்கலங்கி 'உனக்கு என்னடா கொற வச்சோம்? போட்டுக்கத் துணி வாங்கிக் கொடுக்கலையா? சாப்பாடு இல்லாம கஷ்டப்படுத்தினோமா? நம்மகிட்ட வேலை செய்ய இத்தனை ஆட்கள் இருக்க நீ பொடவ கட்டிக்கிட்டு பொட்டைகளோட சேந்துக்கிட்டுப் பிச்ச கேட்கின்ற நெலம உனக்கு எதுக்குடா? நம்ம சாதி என்ன, நம்ம குடும்பம் எப்படிப்பட்ட குடும்பம்! இதெல்லாம் மறந்துட்டு இப்படிப் போறதுக்கு உனக்கு மனசு எப்படித்தான் வந்துச்சுடா' என்று சொல்லிக் கொண்டே அடிபட்ட காயத்திற்கு மருந்து போட்டுவிட்டார். நானும் என் அம்மாவிடமிருந்தும் என் அண்ணன்களிடமிருந்தும் தப்பிக்க வேண்டும், மீண்டும் அடி விழாமல் இருக்கவேண்டும் என்று 'எனக்கு ஒன்றும் தெரியாதும்மா. எப்படியோ என்னை மயக்கி அவர்களைப் போல இருக்க ஆசை ஏற்படுத்திவிட்டனர். அதனால் புத்தி கெட்டவன் போலச் சென்றுவிட்டேன். இனி நான் போகமாட்டேன். உங்க காலப் புடிச்சுக் கேட்கிறேன். அப்பா, அண்ணாங்க வந்தா இனியும் அடிக்க விடாம பாத்துக்க. என்னால் அடி வாங்க முடியல. வலிக்குதுமா'ன்னு அழுதேன்.

'மொதல்ல அவன் தலைமுடியை மொட்டை அடிக்கணும். நான் போய் நாவிதனை வீட்டுக்கே கூட்டியாரேன்' என்று அண்ணன் கூற, 'வேண்டாம். நாளைக்குச் சமயபுரம் கோயிலுக்குக் கொண்டு போய் முடி காணிக்கை கொடுக்கலாம். அந்தச் சமயபுரத்தா இவனுக்குப் புடிச்ச பொம்பள மோகினிப் பிசாசு போயித் தொலஞ்சு நல்ல புத்தியக் கொடுக்கட்டும்' என்று அம்மா கூறிவிட்டார்.

அன்று அப்பா முகத்திலும், மற்ற அண்ணன்கள் முகத்திலும் முழிப் பதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு ரூமுக்குள்ளேயே படுத்திருந்தேன். நான் இப்படிச் சென்றது ஊர்க்காரர்களுக்குத் தெரியாது. பையன் ஏதோ பைத்தியம் பிடித்து எங்கியோ போய்விட்டு இப்போது வந்திருக்கான் என்றுதான் நினைத்தார்கள். என் வீட்டுக்கு அக்கம் பக்கம் உள்ளவர்களில் எதிர்வீட்டு அக்கா நான் பொட்டைங்களோட தான் போயிருந்தேன் என்று தெரிந்துகொண்டார். நான் எப்போதும் முதலில் அவர்கள் வீட்டில்தான் பெண்போல நடிப்பது, பேசுவது, துணி போடுவது, வேஷம் போடுவது என்று இருந்ததால் அவருக்குத் தெரியும். எங்க அண்ணனுங்க என்ன நினைப்பாங்களோன்னு பயந்து அவுங் களும் என்னை வந்து பாக்கல. அன்னைக்கு அப்பாவும் என்ன ஏதுன்னு எங்கிட்டக் கேட்கல. மற்ற அண்ணனுங்க நடு அண்ணன்கிட்டயும் அம்மாகிட்டயும் என்னைப் பத்தி பேசுனது மட்டும் என் காதுல கேட்டுச்சு. எங்க பெரிய அண்ணன் சொல்லும்போது 'என்னவோ அவனோட கெட்ட நேரம் இப்படி ஆச்சு. இனிமே அவன அடிக்க வேண்டாம். சின்னப் பையன். வலி தாங்க மாட்டான். நாளைக்கு நான் வண்டிக்குப் போகல. நானும் கோயிலுக்கு வருகிறேன். கூட்டிச் சென்று மொட்டை அடிக்கலாம்' என்று கூறினார்.

மறுநாள் காலைல திருச்சி பஸ் புடிச்சு என்னை நடுவில் உட்கார வச்சு இரண்டு பக்கமும் இரண்டு அண்ணன்கள் உட்கார்ந்துகொண்டு அம்மா முன்சீட்டில் உக்காந்தபடி சமயபுரம் கோயிலுக்குக் கூட்டிச் சென்றனர். அண்ணன் அடிச்ச வலியைவிட கோயிலில் என் தலையை மொட்டை அடிச்சதுதான் எனக்கு அதிக வலியைத் தந்தது. 'அட, தெய்வமே எனக்கு மட்டும் ஏன் இந்தச் சோதனை? உன்னிடம் வரும் பக்தர்களுக்கு இல்லை என்று வாரி வாரி வரம் கொடுப்பதாக நான் கேள்விப்பட்டேன். ஆனால் என் வாழ்க்கையில் பெரும் துன்பத்தைக் கொடுத்துவிட்டாயே. நான் செய்த தவறுதான் என்ன? என்னை ஆம்பளையாப் படைச்சதும் நீதான். எனக்குப் பொம்பள உணர்வு களைக் கொடுத்ததும் நீதான். நீ செய்த தவறுக்கு உன் முன்னாலேயே எனக்குத் தண்டனை. நீயும் ஒரு பொம்பளை தெய்வம்தானே? ஒரு பொம்பள மனசு ஒரு பொம்பளையா இருக்கிற உனக்குத் தெரியலையா?

உனக்கு இரக்கமே இல்லையா? நீ சக்தி உள்ள தெய்வமா இருந்தா அடுத்த வருடத்துக்குள்ள என்னையும் உன்னை மாதிரி பொம்பளையா வாழ வைக்கனும். இல்லாட்டி என்னைச் சுத்தமான ஆம்பளையா மாத்திக் கொடு'ன்னு மனம் உருகி மனசுக்குள்ளே வேண்டிக்கொண்டு கண்ணீர் வடித்தேன்.

வீட்ல மொட்டைத் தலையோட வெளில வரமுடியாம வெட்கப் பட்டுக்கொண்டு வேதனைப்பட்டுக் கொண்டிருந்தேன். பற்றாக் குறைக்குத் தெரிந்தவர்கள் என் வீட்டிற்கு வந்தால் சும்மாவே இருக்க மாட்டார்கள். இவனுக்கு என்ன கேடு வந்துச்சு? இவனுக்கு என்ன கொற வச்சாங்களாம்? நல்லா மூனுநேரம் மூக்குப் புடிக்கத் தின்னுட்டுக் கொழுத்துப்போய்த் திரிகிறான் என்று சொல்வார்கள். சிலபேர் ஏதாவது மாய மந்திரம் செய்திருப்பார்கள், எங்கியாவது கூட்டிச் சென்று விபூதி மந்திரிச்சுப் பூசுங்கனு சொல்லுவாங்க. காயம் இருப்பவனுக்குதான் வலி தெரியும் என்று சொல்வதைப்போல மனதால் உடலால் காயம் ஆன எனக்குத்தான் தெரியும் அந்த வேதனையும் கஷ்டமும். இவர்களுக்குச் சொன்னாலும் புரியாது என்று நினைத்துக் கொள்வேன்.

சில நாட்கள் சென்றபிறகு மீண்டும் என்னை எங்கள் வண்டியில் வேலை செய்யக் கூட்டிச் சென்றனர். ஊரில் பேசியது பத்தாதுன்னு பால் பண்ணையில் வேலை செய்யும் சூப்பர்வைசர் முதல் கேன் கழுவிப் போடுபவர்வரை 'டெல்லிக்கு ஓடிப்போனியாமே ஒம்போதுங் களோட? அங்க என்னடா பண்ணுனே'ன்னு கேட்பாங்க. சில சமயத் துல யாரும் இல்லைன்னா மார்புப் பகுதியைக் கிள்ளிப் பாக்குறது, என்னோட பின்பகுதியத் தொட்டுத் தடவிக் கொடுக்கறதுன்னு பல சேட்டைகளைச் செய்வாங்க. அண்ணன்கிட்டச் சொல்லவும் பயமா இருக்கும். இப்படி ஒவ்வொரு இரவும் ஒவ்வொரு பகலும் எனக்குப் பொட்டைகளோட போயிப் பொம்பளையா ஆப்ரேஷன் பண்ணிக் கிட்டு நாம் பொம்பளையா இருந்தா இவுங்க இப்படி நடந்துக்க மாட்டாங்க. எப்படியாவது முடிய வளத்துக்கிட்டுத் திருப்பி டெல்லிக்கே ஓடிப் போயிடணும்.மொட்டத் தலையாப் போனா மதிப்பு இருக்காது. அதனால இன்னும் கொஞ்ச நாளைக்குக் கஷ்டப்பட்டு இங்கேயே இருந்துட்டு ஓடிப்போகலாம்னு நெனச்சுட்டே இருப்பேன்.

நான் நினைத்தபடியே மூன்று மாதங்களுக்குப் பிறகு டெல்லிக்குப் புறப்பட்டுச் சென்றேன். இந்த முறை நான் சேலம் ரயில் நிலையத்தில் ரயில் ஏறியவுடனே பெண் உடையைப் போட்டுக் கொண்டேன். எனக்கு இது மூன்றாவது முறையாக ரயில் பயணம் என்பதால் ரயில் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொண்டேன். டெல்லியில் நானியும் குருவும் நடந்ததைக் கேட்டுக்கொண்டு என்னை அங்கிருந்து மும்பைக்கு வண்டி

ஏற்றி அனுப்பினார்கள். காரணம் என் தலையில் அதிகம் முடி இல்லை. அதுவும் நான் ஆப்ரேஷன் செய்துகொள்ளவில்லை. டெல்லியில் ஆப்ரேஷன் செய்து கொள்ளாமல் இருந்தால் இஜரா வர்க்கத்திற்கே கேவலமாக நினைப்பார்கள்.மேலும் என் வீட்டில் நான் டெல்லியில் இருந்தது தெரிந்துவிட்டது. இப்படிப் பல காரணங்களினால் என்னை டெல்லியில் இருந்து என் குரு பம்பாயில் உள்ள மற்றொரு இஜராக் களின் வீட்டுக்கு அனுப்பி வைத்துக் கொஞ்ச நாள் அங்க இரு, முடி வளந்த பிறகு உன்னைக் கூட்டி வருகிறோம் என்று கூறி என்னிடம் விலாசத்தைக் கொடுத்துக் கூடவே ஒரு இஜராவையும் அனுப்பி வைத்தார்.

பம்பாயில் இருக்கும் நானி வேறு. என் குருவுக்கு அம்மா. இஜராக் களின் கலாச்சாரத்தில் சேலாவுக்கு எல்லா விதத்திலும் தொழில் செய்ய வழிகாட்டியாக, இருக்க இடம் கொடுப்பவராக, சேலாக்களின் நல்லது கெட்டது அத்தனையும் பார்த்துக் கொள்பவர் தான் குரு. அம்மா என்பது வேறு. ஒரு இஜராவுக்கு வளர்ப்பு மகள் (பால்மகள்). அது தாய் வீடுபோல. குரு வீடு, கட்டிக்கொடுத்த வீடுபோல. சம்பந்தி உறவு முறையாகும். அந்த வழியில் என் குருவின் தாய் வீட்டிற்குத்தான் என்னை அனுப்பி வைத்தார்.

# 5

டெல்லியைவிடப் பாம்பே எனக்கு வித்தியாசமாக இருந்தது. அங்கு வசிக்கும் மக்கள், கலாச்சாரம், சமுத்திரம், மின்சார ரயில் இப்படி எல்லாமே புதுமையாக இருந்தது. என் குருவோட அம்மா வீடு மும்பையில் காட்குப்பர் என்னும் பகுதியில் உள்ளது. அவர்களின் பரிவார் மிகப் பெரியது. அங்குள்ள நானிதான் எல்லாருக்கும் பெரியவர். அவர் பரிவாரில் அவர்களுக்குச் சேலா, நாத்தி, சடக்நாத்தி (மகள், பேத்தி, கொள்ளுப்பேத்தி)என 500க்கும் மேற்பட்டோர் இருக்கின்றனர். சிலர் தமிழ்நாட்டில், சிலர் டெல்லியில், சிலர் பம்பாயில். வேறு வேறு இடங்களில், ஏன் சிங்கப்பூரில்கூட இருக்கின்றனர். நானி இருக்கும் வீடு டெல்லியில் என் குரு வீடுபோல வறுமையான வாடகை வீடு கிடையாது. இங்குச் சொந்த வீடு. வசதியான வீடுகூட.

இங்குள்ள நானிக்குச் சொந்தமாகக் காமாட்டிபுரத்தில் பாலியல் தொழில் செய்யும் வீடும் உள்ளது. அங்கு அவர் சேலா நடத்திக் கொண்டிருந்தார். வீட்டிலும் நானி சேலாக்கள், சில நாத்தி சேலாக்கள் வீட்டு வேலைகள் செய்துகொண்டும் கடைகேட்கச் செல்லவும் இருந்தனர். இங்கு துணி துவைக்கவோ பாத்ரூம் செல்லவோ வெளியில் போக வேண்டியது இல்லை. எல்லா வசதிகளும் வீட்டிலேயே இருந்தன. மூத்தவர் நானியைக் கண்டால் எல்லாருக்கும் பயம், பக்தி, மரியாதை இருக்கும். நானி வெளியில் சென்றுவிட்டால் எல்லாரும் ஃபிரியாகப் பேசுவார்கள். டிவி பார்ப்பார்கள். நானி வருகின்றார் என்றால் எல்லாரும் அமைதியாக இருப்பார்கள். அதற்காக நானி கொடுமைக்காரி என்று நினைக்க வேண்டாம். அவரும் டிவி பார்க்கச் சொல்வார். ஆடச் சொல்வார். பாடச் சொல்வார். எப்படி நம்முடைய வீடுகளில் பெரியவர் களுக்கு மரியாதை கொடுப்போமோ அதைப் போலத்தான் இங்கும்.

காமாட்டிபுரம், பாண்டுப், சோனாப்பூர், முல்லன், கோலிவடா, மாதுங்கா, மைகீம், பைகளா இப்படி எல்லா இடங்களிலும் இஜராக்கள் வசிக்கின்றனர். தொழில் என்று பார்த்தால் டெல்லியைப்போல கடை

கேட்பது, பதாய்க்குப் போவது மட்டுமல்ல. டெல்லியைவிட வித்தியாச மாகப் பாலியல் தொழில் செய்பவர்களும், பாலியல் தொழில் நடக்கும் வீடுகளும் இங்கு உள்ளன. பொதுவாக இங்குப் பதாய்க்குப் போகின்ற வர்கள் பாலியல் தொழில் செய்யமாட்டார்கள்.

இஜராக்களின் உறவுமுறைகள் என்று பார்த்தால் அம்மா, மகள், பேத்தி, கொள்ளுப் பேத்தி, பால்மகள் என உறவுமுறைகள் உள்ளன. ஒரு இஜராவை மற்றொரு இஜரா சேலாவாக ஆக்கிக்கொள்ள மூத்த இஜராக்களின் முன்னிலையில் ஜமாத்(மீட்டிங்) கூட்டி, அங்கு இவருடைய சேலா இவர் என்று அங்கீகரிக்கப்படுகின்றது. இந்தச் சேலா முறை எந்த ஒரு சட்டப்படியும் கிடையாது. இஜராக்களின் சட்டம், திட்டம், கலாச்சாரம் எல்லாம் அவர்களுக்குள் மட்டும்தான். ஜமாத் என்பது இதுபோன்ற நல்லது கெட்டது எனப் பேசி முடிவு செய்யும் இடமாகவும் செயல்படுகின்றது.சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்டுச் சட்டத்தில் இடம் இல்லாமல் உரிமைகள் கிடைக்காத இஜராக்களின் வாழ்க்கை கேள்விக்குறி ஆகும்போது நான் இருக்கிறேன் என்று சொல்லிக் கொள்வதுதான் இந்த இஜராக்களின் கலாச்சாரம். இங்கு சாதி மதம் என்ற வேற்றுமை கிடையாது. எந்த ஒரு மதமோ, ஏழையோ, பணக்காரனோ யாராக இருந்தாலும் இஜராக்கள் இருக்கிறார்கள்.

கீழ்ச்சாதி,மேல்சாதி என்ற வித்தியாசம் இஜராக்களில் இல்லை. இஜராங்கன்னு ஒரே சாதிதான். ஆனால் இஜராக்களில் ஏழு வீடுகள் உள்ளன. ஒவ்வொரு வீட்டுக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு. நான் முன்கூட்டியே கூறியதைப்போல ஒவ்வொரு விட்டையும் சவுக்கன் வீடு என்று கூறுவார்கள். ஒரு வீட்டில் இருந்து மற்றொரு வீட்டிற்குக் குருவை மாற்றிக் கொள்ளும் பழக்கமும் இஜராக்களில் உள்ளது. மும்பையில் ஏழு வீட்டிற்கும் ஒவ்வொரு தலைவியைத் தேர்ந்தெடுத்து இருக்கின்றனர். அவர்கள் நாயக் என்று கூறப்படுகிறார்கள். நாயக் மற்றும் நாயக் பரிவார்கள் அதிகமாகப் பதாய்க்குச் செல்வார்கள். ஒரு நாயக்கின் பரிவாரில் அக்கா, தங்கை, மகள், பேத்தி இப்படி அவரவர் களுக்கும் பரிவார்கள் உள்ளனர். தனித்தனியாகவும் வசிக்கின்றனர். ஏதாவது விசேஷங்கள், ஜமாத் என்றால் எல்லாரும் ஒன்றாகக் கூடிக் கொள்வார்கள். இப்படி இன்னும் பல விஷயங்களை மும்பைக்கு வந்த பிறகு நான் பார்த்துப் பேசிப் பழகித் தெரிந்து கொண்டேன். கட்டுப்பாடு, ஒழுக்கம், உரிமைகள் இவற்றைப் பேணிக் காக்கத்தான் இப்படிப்பட்ட இஜராக் கலாச்சாரம் அமைந்துள்ளது எனப் புரிந்துகொண்டேன்.

வாரம் முழுதும் மும்பையில் கடை கேட்கச் செல்வேன். திங்கள் விடி மற்றும் சர்ச்கேட், செவ்வாய் பாந்திரா, புதன் மான்கூர், வியாழன் சன்டாஸ்ரோட், வெள்ளி மச்சித்பந்தர், சனி சைன்கோலிவடா,

ஞாயிறு செம்பூர். இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பகுதிக்குக் கடை கேட்கச் செல்வேன். ஆரம்பத்தில் என்னைக் கடைகேட்க இஜராக்கள் கூட்டிச் சென்றனர். ஒரு மாதத்திற்குப் பிறகு நான் தனியாகவே சென்று கடை கேட்டு வருவேன். டெல்லியில் உள்ள என் குரு வந்து என்னை அழைத்துச் செல்வார் என்று நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால் அவரிடமிருந்து ஒரு செய்தியும் வரவில்லை. நான் மும்பைக்கு வந்து இரண்டு மாதங்கள் ஆகியும் அங்கிருந்தும் ஒரு கடிதமோ, போன் தொடர்போ வரவில்லை.

மும்பை வீட்டில் இருக்கும் என் நானி அவர்களின் சேலா பெயரில் என்னைச் சேலாவாக விருப்பமா என்று கேட்டார்கள். அத்துடன் எனக்குச் சீக்கிரமாக ஆப்ரேஷன் செய்துவிடுவதாகவும் கூறினார்கள். பெரியவர்கள் பேச்சுக்கு மரியாதை கொடுக்க வேண்டும். மேலும் டெல்லி குருவிடம் இருந்து ஒரு சேதியும் வரவில்லை. என்ன செய்வது எனத் தயங்கினேன். பதிலுக்கு நீ டெல்லி குரு பெயரில் சேலா ஆகியிருந்தாலும் என் சேலா முறையில் சேலா ஆகியிருந்தாலும் நீ இருவருக்கும் சேலாதான். அதுவும் நீ ஊரில் அவள் பெயரில் சேலா ஆகி உள்ளாய். அந்த முறை வேறு. மும்பை முறை வேறு. அதனால் மும்பை முறைப்படி என் சேலா பெயரில் நீ சேலா ஆகலாம். தப்பு இல்லை. இஜராக்களில் தமிழ் நாட்டுக்கு ஒரு குரு இருக்கலாம். மும்பையில் ஒரு குரு இருக்கலாம் என்று நானி கூறினார். நானும் சரி என்று ஒப்புக்கொண்டேன்.

தமிழ்நாட்டுக் குரு சேலா உறவு முறை தமிழ்நாட்டுக்கு மட்டும்தான் செல்லும். மும்பை குரு சேலா உறவு முறை தமிழ்நாட்டில் செல்லாது. மும்பையில் சேலா ஆனவர்கள் மும்பை சேலாக்கள். டெல்லியில் சேலா ஆனவர்கள் டெல்லி சேலாக்கள். அதுபோல் ஒவ்வொரு மாநிலத்திலும் வட இந்தியாவில் தனித்தனி வீடுகளும் அந்தந்த வீடுகளில் அவரவர் பரிவார்களும் இருக்கின்றனர். கர்நாடகாவில் மும்பையின் ஏழு வீட்டு இஜராக்களும் வசிக்கின்றனர். இதில் தமிழ்நாட்டிற்கு மட்டும் தனிச்சிறப்பு. அங்கு ஒரு குரு இருக்கலாம். அதேபோல் தமிழ்நாட்டைவிட்டு வேறு ஒரு குருவும் இருக்கலாம்.

காமாட்டிபுரத்தில் வசிக்கும் மும்பை குரு பெயரில் சேலா ஆக்குவதற்கு ஏழு விடுகளில் உள்ள நாயக்குகள் இருக்கும் இடமான பைக்களா கூட்டிச் சென்றனர். நான் சேலா ஆகப்போகும் வீட்டின் நாயக் வீட்டுக்குச் சென்று என் குரு பெயரில் என்னைச் சேலா செய்வதாகக் கூறினர். அங்கு மற்ற வீட்டு நாயக்குகளும் அழைக்கப் பட்டுச் சட்டாய் (பாய்) விரித்து அதன்மேல் உட்கார்ந்து ஜமாத் கூட்டி இன்னார் வீட்டில் இன்னார் பரிவாரில் இன்னார் சேலாவுக்கு

ரேவதியைச் சேலா செய்வதாக எல்லாரும் கேட்கும்படி கூறினர். அதற்கு எல்லாரும் கைதட்டினர். என்னைப் பெரியவர்களுக்குப் பாவ்படுத்தி சொல்லச் சொன்னார்கள். நானும் எல்லாருக்கும் பாவ்படுத்தி என்று கூறினேன். பிறகு என்னை என் குரு காட்டுப்பர் அழைத்து வந்துவிட்டார்.

ஜமாத்தில் சேலா ஆகும்போது என்னை இதற்கு முன் எந்த வீட்டில் சேலா ஆகி இருந்தாய், எத்தனை வீட்டில், இல்லை இதுதான் முதல் தடவையாகச் சேலா ஆகின்றாயா என்று கேட்டார்கள். தமிழ்நாட்டில் ஒரு ஜமாத்தில் சேலா ஆகியிருக்கேன் என்று கூற, தமிழ்நாட்டு ஜமாத் இங்கு செல்லாது பேட்டா. மும்பை, டெல்லி, ஐதராபாத் இப்படி எங்கியாவது சேலா ஆகியிருக்கியா என்று கேட்டார்கள். இல்லை என்றேன். அப்படி என்றால் கோரி மூரத்தான் என்றனர். முதல் முதல் ஒரு குருவுக்குச் சேலா ஆகுபவள் என்று பொருள். சேலா செய்யும் முறைக்கு ரீத்போடுதல் என்று கூறுகின்றனர். ரீத் போட்ட பிறகு எனக்குத் துணிமணிகளைக் கொடுத்து அதை வைத்துக்கொள்ளப் பெட்டி படுக்கையைக் கொடுத்து எங்கு வைத்துக்கொள்ளவேண்டும் என்ற இடத்தையும் கொடுத்துச் சில அறிவுரைகளைக் கூறினார்கள்.

| | |
|---|---|
| படுதாதி | - ஆயாவின் குரு. எனக்கு அம்மாச்சி |
| தாதா குரு | - பாட்டியின் குரு. எனக்கு ஆயா |
| நானா குரு | - குருவின் குரு. எனக்குப் பாட்டி |
| குரு | - அம்மா |
| காலா குரு | - என்னுடைய குருவின் சகோதரிகள் |
| குருபாய் | - என்னுடைய சகோதரிகள் |
| படா குருபாய் | - பெரிய சகோதரி |
| சோட்டா குருபாய் | - சிறிய சகோதரி |
| சேலா | - மகள் |
| நாத்திசேலா | - பேத்தி |
| சந்திசேலா | - கொள்ளுப்பேத்தி |
| சடக் நாத்தி | - கொள்ளுப்பேத்தியின் மகள் |

இதுபோன்ற உறவு முறைகளைச் சொல்லிக் கொடுத்து இதில் பெரியவர்கள் சொல்லும் வேலைகளைச் செய்ய வேண்டும், மரியாதை கொடுக்க வேண்டும், பெரியவர்கள் எதிரில் வந்தால் பாவ்படுத்தி சொல்லவேண்டும், அவர்களின் மீது நாம் கட்டி இருக்கும் துணி படக்கூடாது, சொம்பில் தண்ணீர் கொடுத்தாலும் மரியாதையுடன் கொடுக்க வேண்டும், மூக்குத்தி,தோடு, கொலுசு, வளையல் இல்லாமல் இருக்கக் கூடாது, தலைமுடியை வெட்டக் கூடாது, முகத்தில் முடி முளைத்தால் ஷேவிங் செய்யக்கூடாது, அதற்கென்று ஜிமிட்டா

(பிளக்கர்) வைத்துப் பிடுங்கிக் கொள்ளவேண்டும். மேலும் கடை கேட்டுச் சம்பாதிக்கும் பணத்தில் குருவுக்கும் நானிக்கும் நம் வசதி போல் பணம் கொடுக்க வேண்டும். எவ்வளவு கொடுத்தாலும் சரி, அவர்களே நமக்குத் தேவையானதை வாங்கிக் கொடுத்து என்ன செய்ய வேண்டுமோ அதையும் செய்து வைப்பார்கள்.

நான் என்னுடைய குரு இருக்கும் இடத்தில் வசிக்கவில்லை. நானி வீட்டில் இருந்துகொண்டு கடை கேட்டு அதில் வரும் வருமானத்தை என் நானியிடமே கொடுத்தேன்.

இரவில் நானியின் கால்களைப் பிடித்துவிட்டுத்தான் தூங்குவேன். என் நானி படுத்திருக்கும் கட்டில் அருகிலேயே பாயை விரித்துத் தூங்குவேன். ஒரு சமயம் அப்படி என் நானிக்குக் கால் பிடித்துக் கொண்டிருக்கையில் 'ஏ பேட்டா, தமிழ்நாட்ல பந்தி வச்சுக்கிட்டு இருந்தியா'(பந்தி என்றால் புருஷன், பார்ட்னர்) என்று கேட்டார். 'இல்லைங்க நானி' என்று கூறினேன். 'குடிக்கிற பழக்கம் இருக்கா' என்று கேட்டார். 'இல்லைங்க நானி' என்று சொன்னேன். 'பேட்டா சில பொட்டைங்களோட சேர்ந்து குடிக்கக் கிடிக்கக் கத்துக்காதே. தப்பு. அதெல்லாம் கத்துக்கிட்டே, புருஷன் வச்சுக்கிட்டே, நானி உன்னோட மண்டைய ஒடச்சுப்புடுவேன்' என்று கூறினார். 'நானி சொல்றமாதிரி கேட்டு நல்ல புள்ளையா நடந்துக்கிட்டா உனக்கு நிர்வாணம் பண்ணிவிடுவேன்' என்று கூறினார். (நிர்வாணம் என்றால் ஆப்ரேஷன் மூலம் ஆண் உறுப்பை அகற்றிக் கொள்வது.)

'நிர்வாணம் ஆனபிறகு நீ உன்னோட குருகிட்ட இருந்தாலும் இருக்கலாம். இல்லாட்டி நானிகூடவே இருக்கலாம். ஊருக்குப் போகணும் என்றால் அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும். உன்னுடைய வீட்டில் உன்னை இஜராவாக ஒப்புக்கொள்வார்களா' என்று கேட்டார். நான் என் குடும்பத்தின் விஷயங்களைக் கால் பிடித்து விட்டுக்கொண்டே சொன்னேன். அதைக்கேட்ட என் நானி 'இப்ப எல்லாம் ஊருக்குப் போகிறேன் என்ற நினைப்பே வரக்கூடாது. போனால் முடி வெட்டி விடுவார்கள். பொட்டைகளுக்கு முடி வெட்டிவிட்டால் கேவலம். அதனால் போக வேண்டாம். அவர்களே தேடி வந்தால் நானி பேசிக் கொள்கிறேன்' என்று கூறினார். இப்படி என் நானி, என்னுடைய உறவு முறைகள் எல்லாரும் அன்பாகப் பேசுவதும் அறிவுரை சொல்வதும் என்றிருந்தனர். அவற்றைக் கேட்டுக் கொண்டு என் வேலைகளைச் செய்துகொண்டு ஒரு ஆறுமாதங்கள் ஓடின.

என்னுடைய குருபாய் சேலாங்க ரெண்டுபேரு என்னை மாதிரி கடை கேட்டுக்கிட்டு வீட்டு வேலை செஞ்சுக்கிட்டு எனக்கு முன்னாடியே

ஒரு வருஷமா இருக்காங்க. குல தெய்வமான போத்ராஜி மாத்தா (சேவல் மீது அமர்ந்து காட்சி கொடுக்கும் மாத்தா) போட்டோவுக்கு பூஜை போட்டு அவர்களை நிர்வாணத்துக்கு அனுப்ப ஏற்பாடுகள் நடந்துகொண்டு இருந்தன. அன்று காலை எட்டு மணி இருக்கும். நான் வீட்டுவேலைகளைச் செய்து கொண்டிருக்கும்போது நானி என்னைக் கூப்பிட்டு, 'பேட்டா நீ இன்னிக்குக் கடை கேட்கப் போகவேண்டாம். இரண்டு செட் புடவை, பாவாடைகளை எடுத்து வைத்துக்கொள்' என்று கூறினார். நானியிடம் எங்கு அனுப்புகிறீர்கள் என்று கேட்க முடியாமல் நான் எடுத்து வைத்துக்கொண்டு யோசித்தேன். ஒருவேளை பொட்டைங்க நிர்வாணத்துக்குப் போகின்றார்களே அவர்களைப் பார்த்துக்கொள்ள நம்மைக் கூட அனுப்புவார்களோ என்னவோ என்று யோசித்தேன்.

கொஞ்சநேரம் கழித்து மீண்டும் என்னை அழைத்து 'நீ தாயம்மா நிர்வாணத்துக்குப் போறியா, டாக்டர் நிர்வாணத்துக்குப் போறியா?' என்று கேட்டார். (தாயம்மா நிர்வாணம் என்றால் இஜராக்களே இஜராக்களுக்குச் செய்யும் நிர்வாணம், டாக்டர் நிர்வாணம் என்றால் டாக்டர்கள் மருத்துவமனையில் செய்யும் ஆப்ரேஷன்.) எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ஒரே சந்தோஷம்.என்னுடைய மனதில் அப்படியே துள்ளிக் குதிக்கவேண்டும்போல் ஒரு ஆர்வம். ஆனால் நானி கேட்கிறார், உடனே பதில் கூறவேண்டும், தாமதித்தால் என்னை அனுப்புவாரோ மாட்டாரோ என்று 'உங்க இஷ்டங்க நானி, நீங்க எங்க போகச் சொல்றீங்களோ அங்கே போகின்றேன்' என்று கூறினேன். என்னுடைய மனதில் தாயம்மா நிர்வாணத்திற்குப் போகச் சற்று பயம் தான். இருந்தாலும் தாயம்மா நிர்வாணம் செய்துகொண்டவர்களுக்குத் தனி மரியாதை. எது எப்படி ஆனால் என்ன? நான் பெண்ணாக மாறவேண்டும் என்ற ஆவல்தான் அப்போது இருந்தது.

இந்த ஆண் உறுப்பு போய்விட்டால் போதும், நானும் மற்ற பெண்களைப்போலச் சுதந்திரமாக இருக்கலாம் என்ற நினைப்பு எனக்கு. 'தாயம்மா நிர்வாணம் செய்து கொண்டால் உன்னால தாக்குப் பிடிக்க முடியாது. அதனால் நீ டாக்டர் நிர்வாணத்திற்குப் போ' என்று கூறினார்.

# 6

நான் ஆம்பள உடையில இருக்கின்றபோது பெண்கள் உடை போட்டுக்கனும்னு தோன்றியது. பெண்ணாக வாழ வேண்டும் என்று பெண்களைப்போல் உடை அணிந்தபிறகு என்னை நான் ஆம்பளையாத்தான் பார்க்க முடிஞ்சுது. ஆம்பள உடம்புக்குள்ள இருக்கின்ற என்னோட பெண்மைக்கு இன்று விடுதலை கிடைக்கப் போகின்றது. அதுவும் இவ்வளவு சீக்கிரமாக என்று நினைக்கையில் சொல்லமுடியாத சந்தோஷம். எங்கள் இரண்டுபேரையும் அனுப்ப ஏற்பாடுகள் செய்தனர். எங்க இரண்டுபேருக்கும் அந்த மருத்துவமனை தெரியாது. எங்களோட துணைக்குக்கூட யாரையும் அனுப்பவில்லை. எங்கள் கையில் இருவருக்கும் ரயில் டிக்கட்டும், பணம் ஏழாயிரம் ரூபாய் ஆப்ரேஷனுக்கும் என்று கூறிக் கொடுத்துத் தமிழ்நாட்டில் உள்ள திண்டுக்கல்லுக்கு அனுப்பி வைத்தனர்.

காலை எட்டு மணி இருக்கும். நாங்க இரண்டு பேரும் மருத்துவ மனைக்கு வந்துசேர்ந்தோம். அப்போது அந்த ஆஸ்பத்திரி சிறிய வீடு போலத்தான் இருந்தது. அங்கு வேறு ஆண்கள் பெண்கள் என்று படுக்கைகளில் சேர்க்கப்பட்டவர்களையும் அவர்களுக்குத் துணையாக இருப்பவர்களையும் பார்த்தோம். இங்கு எல்லாவிதமான நோய்களுக்கும் வைத்தியம் பார்க்கின்றனர் எனப் புரிந்தது. சிறியதொரு ஓட்டு வீடு அந்த ஆஸ்பத்திரியில் ஒரு பக்கம் பூட்டி இருந்தது. அங்குதான் நிர்வாணம் செய்வார்கள் என்று தெரிந்துகொண்டோம்.

மணி காலை பதினொன்றுக்கு டாக்டர் வந்தார். நாங்கள் இருவரும் டாக்டரைப் பார்த்தோம். யாருக்கு நிர்வாணம் என்று கேட்டார். இருவருக்கும் என்று கூறினோம். உங்களுடன் வேறு யாரும் வர வில்லையா என்று கேட்டார். இல்லை என்று கூறினோம். ஒருவருக்கு ஆப்ரேஷன் செய்ய 2500 ரூபாய்; மேலும் ஊசி மாத்திரை நீங்களே வாங்கிக்கொள்ள வேண்டும் என்றார். (அது 1986ஆம் வருடம்.) உங்களுக்கு ஊசி மாத்திரை, சாப்பாடு வாங்கிக் கொடுக்க ஒரு ஆயா

இருக்கிறார். அவருக்குப் பணம் கொடுத்தால் அவர் உங்களைப் பார்த்துக் கொள்வார். உங்கள் இருவருக்கும் ஐயாயிரம் ரூபாய் கட்டிவிட்டு ஒரு பேப்பரில் கையெழுத்துப் போடுங்கள் என்று கூறினார்.

மறுநாள் காலையில் யார் முதலில் ஆப்ரேஷன் செய்துகொள்வது என யோசிக்கையில் என்னுடைய குருபாய் சேலா, 'அம்மா அம்மா, நீங்க பெரியவங்க. நான் முன்னாடி ஆப்ரேஷன் செய்து கொண்டால் என்னை நீங்கள் கவனித்துக் கொள்வீர்கள். நீங்கள் முதலில் நிர்வாணம் செய்து கொண்டால் என்னைக் கவனிக்க யாரும் இல்லை. அதனால் நான் முதலில் செய்து கொள்கிறேன்' என்றாள். மும்பையில் என் நானியோ 'நீதான் பெரியவள். அதனால் உனக்குத்தான் முதலில் நிர்வாணம் செய்ய வேண்டும். நீயே முதலில் செய்துகொள்' என்று கூறியிருந்தாள். இங்கு இவளோ நான் முதலில் செய்துகொள்கிறேன் என்கிறாளே என்ன செய்வது. பாவம் இருவரும் ஒரே வயதாக இருந்தாலும் உறவுமுறையில் எனக்குச் சேலா ஆகிறாள். வாய்விட்டுக் கேட்கிறாள். ஆகவே அவளே முதலில் செய்து கொள்ளட்டும் என்று சொல்லிவிட்டேன்.

இரவு ஏழு மணிக்கு என் குருபாய் சேலாவுக்கு ஆப்ரேஷன் செய்யும் பகுதியில் ஷேவிங் செய்து விட்டனர். அவனுக்கு ஐம்பது ரூபாய் கொடுக்கவேண்டும். பிறகு எனிமா கொடுத்தனர். சிறிதுநேரம் கழித்து அவள் அவ்வப்போது பாத்ரூம் சென்று சென்று வந்தாள். எனிமா கொடுத்த பிறகு எதுவும் சாப்பிடக்கூடாது எனக் கூறினர். மும்பையில் இருந்து புறப்படும்முன் எங்கள் குல தெய்வம் போத்ராஜி மாத்தாவுக்கு தேங்காய் உடைத்து, ஊதுபத்தி பற்ற வைத்து, கற்பூரம் காட்டி எங்களை விழுந்து வணங்கச் சொல்லி அத்துடன் ஒரு மஞ்சள் துணியில் ஒன்னேகால் பணம் வைத்துக் கையில் கட்டிவிட்டனர். கூடவே ஒரு முழுத் தேங்காய், ஒரு எலுமிச்சம் பழம் கொடுத்து இதை உங்களுடனே வைத்துக் கொள்ளுங்கள் என்று கூறினர். இந்த நிர்வாணத்திற்குச் செல்பவர்களுக்குக் காத்துக் கருப்பு அண்டாமல் மாத்தா நம்முடன் இருப்பாள் என்றனர்.

இரவு முழுதும் எங்கள் இருவருக்கும் ஆஸ்பத்திரியில் தூக்கமே வரவில்லை. நாங்கள் எடுத்து வந்த போத்ராஜி போட்டோ ஒன்றை ஆஸ்பத்திரிச் சுவரில் மாட்டிவிட்டு அதையே பார்த்துக்கொண்டு 'மாத்தா நீதான் எங்களுக்குத் துணை' என மனதால் வேண்டிக்கொண்டு இருந்தோம். என்னுடன் வந்த என் குருபாய் சேலா 'அம்மா அம்மா நாளை நடக்க இருக்கும் ஆப்ரேஷனில் எனக்கு ஏதாவது ஆகிவிட்டால் நீதான் என்னை எங்கே சேர்க்கவேண்டுமோ அங்கே சேர்க்கவேண்டும். மேலும் ஆப்ரேஷன் செய்யும்போது என்னுடனே இருக்கவும்' என்று

கூறினாள். 'ஆகட்டும் பேட்டா. நான் கூடவே இருப்பேன். உனக்கு ஒன்றும் ஆகாது. நாம் வணங்கும் அந்த மாத்தா நம்முடன் துணையாக இருப்பாள். நல்லவிதமாக உனக்கு ஆப்ரேஷன் ஆகிவிடும். உன்னை நான் பார்த்துக்கொண்டாலும் மறுநாள் எனக்கு நடக்கும் ஆப்ரேஷன் போது யார் என்னுடன் இருப்பார்கள்? யாரும் இல்லையே' என்று கூறிச் சற்று நேரம் மவுனமாக இருந்துவிட்டு யோசித்தேன்.

ஏன் நம்முடன் நானி யாரையும் அனுப்பவில்லை? இருவரும் ஆப்ரேஷன் செய்து கொள்வதால் யாராவது கூட இருந்தால் எவ்வளவு உதவியாக இருக்கும் என்று நினைத்துக்கொண்டு என் பெற்றோர் களையும் நினைத்துக்கொண்டு கண்ணீர் விட்டேன். சிறிய ஆப்ரேஷனா இது? உயிர் நிலையையே எடுத்துவிட்டு நாம் எப்படி உயிரோடு இருக்கப் போகிறோம். உயிர் நிலையைக் கையால் இறுக்கிப் பிடித்தால் உயிர் போகும் அளவில் வலிக்கிறது. அதை எடுத்தால் எப்படி வலிக்கும் என்று நினைத்தபோது பயம் அதிகமாகிவிட்டது. கடவுள் பெண்ணாகப் படைத்து இருந்தால் நமக்கு இதுபோன்ற நிலை வருமா? இந்த ஆப்ரேஷன் மூலம் நான் இறந்துபோய்விட்டால் இனி என் குடும்பத்தாரைப் பார்க்க முடியாது. கடைசியாக ஒரு முறையாவது அம்மா அப்பாவைப் பார்த்துவிட்டு வந்திருந்தால் நிம்மதியாக இருந்திருக்கும். இப்போதுகூட தமிழ்நாட்டுக்குத்தான் வந்திருக்கோம். இப்படியே போய் அம்மா அப்பாவைப் பார்க்கவும் முடியாது. எல்லாம் கடவுள் விட்ட வழி. இறந்தாலும் சரி, உயிரோடு இருந்தாலும் சரி நான் முழுப் பெண்ணாகவே சாகவும் நினைக்கிறேன். வாழவும் நினைக்கிறேன். இப்படி என்னுள் பல எண்ணங்கள் பல யோசனைகள் மனதுக்குள் இருந்துகொண்டு தூக்கம் வராமல் இருந்தது. இரவும் ஓடியது.

மறுநாள் காலை எட்டு மணி இருக்கும். ஐம்பது வயதுப் பெண் ஒருவர் எங்களிடம் வந்து 'உங்களப் பாத்துக்கொள்ள ஆயா வேண்டும் என்று சொன்னார்கள். யாருக்கு உடம்பு சரியில்ல, யாரைப் பார்த்துக் கொள்ள வேண்டும்?' என்று கேட்டார். எங்கள் இருவருக்கும்தான் என்றோம். 'என்ன உடம்புக்கு?' என்று கேட்டார். நாளை எனக்கும் இன்று இவளுக்கும் ஆப்ரேஷன் செய்யப்போகிறார்கள். இருவரும் ஆப்ரேஷன் செய்து கொள்வதால் எங்களுக்குச் சாப்பாடு, மாத்திரைகள் வாங்கிக் கொடுக்க ஆள் தேவைப்பட்டது. அதனால் உங்களை அனுப்பி உள்ளனர் போல என்று கூறினோம். பதிலுக்கு 'ஓ.. சரி சரி! எனக்குத் தெரிந்துவிட்டது என்ன ஆப்ரேஷன் என்று. ஒரு வாரம் முன்புகூட உங்களைப்போல இரண்டு பேருக்கு நான்தான் சமையல் செய்து கொண்டு வந்து கொடுத்தேன். அதைப்போலவே உங்களுக்கும் மதிய உணவும் இரவு உணவும் கொண்டுவந்து கொடுக்கிறேன்.

காலையில் வந்து என்ன வேண்டுமோ அதை வாங்கிக் கொடுக்கிறேன். ஏழு நாளைக்கு இருக்கும் உங்களுக்கு நான் இதைச் செய்வதால் 500 ரூபாய் கொடுக்க வேண்டும்' என்று கூறினார். சரி என்று கூறி முதலிலேயே 500 ரூபாயை அவரிடம் கொடுத்துவிட்டோம்.

காலை பதினொரு மணிக்கு என்னுடைய குருபாய் சேலாவை ஆப்ரேஷன் தியேட்டருக்கு அழைத்துச் சென்றனர். போகும்போது குரு என்னைப் பார்த்துக்கொள்ளுங்கள் என்று கூறி முகம் வாடச் சென்றாள். எனக்கும் பயம் அதிகமானது. ஆப்ரேஷன் நல்லபடியா ஆகணும் அவளுக்கு. அப்படி ஆனாத்தான் நானும் ஆப்ரேஷன் செய்து கொள்வேன் என்று மனதில் நினைத்துக்கொண்டு அவளுடன் சென்றேன். ஆப்ரேஷன் தியேட்டர் உள்ளே என்னை அனுமதிக்கவில்லை. வெளியிலேயே இருக்கச் சொல்லிவிட்டு அவளை மட்டும் உள்ளே கூட்டிச் சென்று விட்டனர்.

வெளியில் உட்கார்ந்து இருக்கும் எனக்கு நெஞ்சு படபடன்னு துடிக் கின்றது. உள்ளே என்ன நடந்து கொண்டு இருக்கும், எப்படி நடந்து கொண்டிருக்கும் என்று நினைத்துக்கொள்கிறேன். இரண்டரை மணி நேரம் கழித்து என்னை ஆப்ரேஷன் தியேட்டருக்குள் அழைத்துச் சென்றனர். இரண்டு கால்களையும் அகட்டின நிலையில் உயிர் நிலையில் ஒரு நீளமான டியூப் வைத்து ரத்தம் துடைத்த பஞ்சுகளையும், சுற்றி நின்ற டாக்டர், நர்ஸ், கத்தி, கத்திரிகளையும் பார்த்தவுடனே எனக்குத் தலைசுத்தல் வந்து கண்ணு சொருகிப்போய் விழுந்துவிட்டேன். என்னைத் தட்டி எழுப்பி 'ஒன்னும் இல்லை. இங்க பார் உன்னுடன் வந்தவள் எப்படி இருக்கிறாள்' என்று டாக்டர் கூறினார்.

கண்விழித்துச் சுயநிலை திரும்பி டாக்டரைப் பார்த்தேன். 'பயப்பட வேண்டாம். நாளை உனக்கு இப்படித்தான் செய்யப் போகின்றோம். உன்னால் பார்க்க முடியாது அல்லவா? அதனால்தான் பார்க்கக் கூப்பிட்டேன். பார், உன்னுடன் வந்தவளுக்கு ஆப்ரேஷன் முடிந்து விட்டது' என்று கூறினார். என்னுடைய குருபாய் சேலாவும் 'அம்மா அம்மா, பயப்பட வேண்டாம். இங்க என்னப் பாருங்க. எனக்கு ஆப்ரேஷன் முடிஞ்சு நான் நல்லா இருக்கேன்' என்று கூற அவளுடைய குரல் கேட்டு எழுந்து அவளைப் பார்த்தேன். என்னைப் பார்த்துச் சிரிக்கின்றாள். 'என்னம்மா இப்படிப் பயப்படுறீங்க. ஆப்ரேஷன் செய்துகொண்ட நானே சிரிச்சுட்டு நல்லா இருக்கேன். நீங்க ஏன் இப்படிப் பயப்படுறீங்க? எனக்கு வலி எதுவும் தெரியவில்லை' என்று நன்றாக என்னுடன் பேசியதைக் கண்டு வியப்படைந்தேன்.

என்னடா இது ஆண் உறுப்பைப் பூராவும் எடுத்து விட்டார்கள். இவள் என்னடான்னா சிரிக்கிறாள், வலி இல்லே என்று கூறுகிறாள்

எப்படி என்று நினைத்துக் கொண்டிருக்கையில்,'சரி சரி, நீங்க வெளியில இருங்க. இவங்களக் கொஞ்ச நேரம் கழிச்சுப் பெட்ல போடுவோம். அப்ப அவுங்களோட பேசலாம்' என்று கூறி என்னை வெளியில் அனுப்பிவிட்டுக் கதவைச் சாத்தினாள் நர்ஸ்.

இரும்புக் கட்டில்மேல் பிளாஸ்டிக் விரிக்கப்பட்டு அதன்மேல் என் குருபாய் சேலாவைக் கொண்டுவந்து போட்டார்கள். ஒரு அரை மணிநேரம் என்னுடன் சிரித்துப் பேசிய அவள் அதன் பிறகு எரிகிறது, வலிக்கிறது என்று கத்த ஆரம்பித்தாள். அவள் கத்துவதைப் பார்த்து எனக்குப் பயம் அதிகரித்துவிட்டது. இவ்வளவு நேரம் நன்றாக இருந்தவள் இப்போது கத்துகின்றாளே என்ன செய்வது எனத் தெரியாமல் அவளுக்குச் சமாதானம் கூறினேன். கொஞ்சம் பொறுத்துக்கோ, சரியாப் போயிடும் என்று கூறினேன். 'அம்மா எனக்கு எரிச்சல் தாங்க முடியல. என் உயிர் போய்விடும் போல இருக்கிறது. வலி தெரியாமல் இருக்க ஏதாவது ஊசி போடச் சொல்லுங்க'ன்னு கதறி அழுதா. நான் டாக்டர் அறைக்குச் சென்றேன். டாக்டர் போய்விட்டதாகக் கூறினர். நான் நர்ஸிடம் சொன்னேன். 'அது அப்படித்தான் கொஞ்ச நேரத்துக்கு வலிக்கும். பிறகு சரியாகிவிடும். ஊசி எதுவும் இப்போது போடக் கூடாது' என்று கூறி விட்டார்.

திரும்பி அவளிடம் வந்தபோது கதறி அழுதுகொண்டுதான் இருந்தாள். எங்களைப் பார்க்க வந்த ஆயா பால் இல்லாத டீ போட்டு வந்து கொடுத்தார். அதை அவளுக்குக் குடிக்கக் கொடுத்தேன். அவளு டைய வலியையும் எரிச்சலையும் நான் அனுபவிப்பது போலிருந்தது. இரண்டு மணி நேரம் கதறி அழுதவள் பிறகு மயக்க நிலையில் தூங்கி விட்டாள். அன்று இரவெல்லாம் தூங்கிக் கொண்டுதான் இருந்தாள். எனக்கு மதியம் இரண்டு மணி அளவில் ஷேவிங் செய்துவிட்டு எனிமா கொடுத்து நாளை காலை ஒன்பது மணிக்கு ஆப்ரேஷன், எதுவும் சாப்பிட வேண்டாம் என்று கூறினர். மதியம் எனிமா கொடுத்த பிறகு மாலை வரை பாத்ரூம் சென்று வந்தேன். பால் இல்லாத பிளாக் டீ குடித்தவள் வலிக்கிறது எரிகிறது என்று கத்தியவள் தூங்குகிறாள். நாளை நமக்கும் இப்படித்தான் எரியுமோ வலிக்குமோ என்று நினைத்துக்கொண்டு இரவு முழுவதும் இவள் தூங்குகிறாளா, உயிர் இருக்கிறதா இல்லையா என்று அவளையே பார்த்துக்கொண்டு தூங்காமலேயே இரவைக் கழித்தேன்.

மறுநாள் காலை ஒன்பது மணிக்கு என்னை ஆப்ரேஷன் தியேட்ட ருக்கு அழைத்துச் சென்றனர். போகும்முன் என் 'குருபாய் சேலாவிடம் சொல்லிவிட்டுப் போகலாம் என்றால் அவள் இன்னும் தூங்கிக் கொண்டுதான் இருந்தாள். நான் சொல்லிக் கொள்ளவோ எனக்கு

தைரியம் சொல்லவோ யாரும் இல்லை. ஆப்ரேஷன் தியேட்டரில் டாக்டர், ஒரு நர்ஸ், அட்டண்டர் மூன்றுபேர் மட்டும்தான் இருந்தனர். முதலில் என் துணிகள் எல்லாவற்றையும் கழட்டச் சொல்லி உள் பாவாடையை மட்டும் மார்பகம்வரை தூக்கிக் கட்டிக் கொள்ளச் சொன்னார்கள். ஆப்ரேஷன் செய்வதற்கு வசதியாக நான் படுத்துக் கொள்ள டேபிள் ஒன்றின்மீது உட்கார வைத்துத் தலை கால்களை முட்டும் அளவில் வளையச் சொன்னார்கள். அப்போது டாக்டர் 'உனக்கு முதுகு எலும்பில் ஒரு ஊசி போடப்போகிறோம். இந்த ஊசி போட்டுக் கொண்டால் ஆப்ரேஷன் செய்வது உனக்குத் தெரியாது' என்று கூறினார். நரம்போ சதையோ கிடைக்காமல் முதுகில் ஊசி போட முடியாமல் ஏதோ செய்தார்.

எனக்குப் பயம் அதிகமாகி விட்டது. ஒருவேளை இந்த ஊசி சரியாகப் போடாவிட்டால் ஆப்ரேஷன் செய்யும்போது வலிக்குமே என்று சந்தேகம் வந்துவிட்டது. ஊசியைப் போட்டுவிட்டுச் சடனாக என்னை நீட்டிப் படுக்க வைத்து இரண்டு கால்களையும் அகட்டி வைத்தார் டாக்டர். என்னை ஒன்று இரண்டு என்று எண்ணச் சொன்னார். பத்து வரை எண்ணினேன். ஒரு சுத்தியலை எடுத்து என் காலில் தட்டி வலிக்கிறதா என்று கேட்டார். இல்லை என்றேன். அதன் பிறகு 'உனக்கு ஆப்ரேஷன் செய்யப் போகிறோம்; உங்கள் மாத்தாவை நினைத்துக்கொள்' என்று டாக்டர் கூறினார். கத்தியை வைக்கும்போது வலிக்குமோ என்ற அச்சத்தில் 'டாக்டர் வலிக்காதே' என்று கேட்க, 'வலிக்காதும்மா. உனக்கு வலி தெரியாமல் இருக்கத்தான் ஊசி போட்டுள்ளோம்' என்றார். 'ஊசி போட்டபின் எனக்கு மயக்கம் எதுவும் வரவில்லை. சுயநினைவுடன் தான் இருக்கிறேன். எல்லாரையும் பார்க்க முடிகின்றது. எல்லாச் சத்தமும் கேட்கின்றது' என்று டாக்டரிடம் சொன்னேன். 'இது மயக்க ஊசி இல்லை. உன்னுடைய இடுப்புக்குக் கீழே மரத்துப்போய்விடும். இடுப்புக்குமேல் சுயநினைவு இருக்கும்' என்றார் டாக்டர். 'பாத்துங்க டாக்டர், எனக்குப் பயமா இருக்குது. வலிக்கப்போகுது' என்றேன். 'இப்போது வலிக்குதா' என்றார். இல்லை என்றேன். 'நாங்கள் ஆப்ரேஷன் செய்துகொண்டு தான் இருக்கிறோம்' என்றார்.

நர்ஸ் என் கண்களில் துணியைப்போட்டு மூடிப் பிடித்தவளாக மாத்தா மாத்தா என்று சொல்லு என்றார். நானும் மாத்தா மாத்தா என்று கூறிக் கொண்டிருந்தேன். ஒரு அரைமணி நேரம் டாக்டர் என்னுடன் பேசிக்கொண்டே ஆப்ரேஷன் செய்தார். என்னால் பார்க்க முடியா விட்டாலும் கத்தி, கத்திரிகளின் சத்தம் கேட்டது. 'என்னம்மா ரேவதி என்று பெயர் வைத்துக்கொண்டாயே, நீ பிராமினா' என்று கேட்டார்.

'இல்லை டாக்டர்' என்று கூறினேன். 'உனக்குப் பெண்களைப்போலக் கீழே ஒன்னுக்குப்போற மாதிரி வைக்கவா இல்லை மேலே வைக்கவா?' என்று கேட்டார். 'நான் பெண்ணாகத்தான் வாழவேண்டும் என்று நினைத்து ஆப்ரேஷனும் செய்துகொள்ள வந்துள்ளேன். எனக்குப் பெண்கள்போலத்தான் வேண்டும். எனக்குப் பெண்கள் எப்படி ஒன்னுக்குப் போவார்கள் என்று தெரியாது. ஆனால் நான் பெண்களைப் போலத்தான் வாழவேண்டும் என்று விரும்புகிறேன்' என்றேன். இரண்டு மணிநேரம் ஆனபிறகு என் முதுகைத் தலையுடன் சற்று உயர்த்திப் பிடித்துக்கொண்டு ஒரு கிண்ணியில் கிடந்த துண்டுச் சதைகளைக் காட்டி 'இதுதான் உன்னுடைய உறுப்பு; பார் வெட்டி எடுத்து உன்னைப் பெண்ணாக மாற்றிவிட்டோம்' என்று கூறினார்.

ஒரு குழந்தையைத் தூக்கிக்கொண்டு போவதைப்போல் அட்டண்டர் என்னைத் தூக்கிச் சென்று என் குருபாய் சேலா பக்கத்தில் உள்ள படுக்கையில் படுக்க வைத்தார். ஆப்ரேஷன் செய்த இடத்தில் டியூப் மூலம் ஒன்னுக்குச் செல்ல கவர் ஒன்றும் 'பெட்'டில் கட்டி விட்டுச் சென்றுவிட்டனர். என்னுடைய குருபாய் சேலா இன்னும் தூங்கிக் கொண்டுதான் இருந்தாள். என் அருகில் யாரும் இல்லை. ஒரு ஹாலில் ஒதுக்குப்புறமாக இருந்த இரண்டு 'பெட்'களில்தான் நாங்கள் இருந்தோம். மறைப்புக்குப் பலகையாலான தடுப்பு ஒன்று வைக்கப் பட்டிருந்தது. கட்டிலில் படுக்கை ஏதும் இல்லை. அப்போது எங்களைக் கையில்தான் தூக்கிவந்து கட்டிலில் போட்டனர். வசதிகள் எதுவும் இல்லை.

நான் பெண்ணாக மாறிவிட்டேன் என்ற சந்தோஷம் ஒருபுறம் இருந்தாலும் கொஞ்ச நேரம் கழித்து வலிக்குமோ என்ற பயம் மற்றொரு புறம். இப்படிப் படபடவெனத் துடித்தது இதயம். ஒரு மணிநேரம் கழித்து எரிச்சலும் வலியும் அதிகமாகத் தொடங்கின. ஆரம்பத்தில் எரிச்சலைத் தாக்குப்பிடித்தேன். வலி அதிகம் ஆகஆக என்னால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. 'ஐயோ என்னால் தாங்க முடியலையே! எரிகிறதே; வலி தெரியாமல் இருக்க ஏதாவது ஊசி போடுங்களேன்' என்று கத்த ஆரம்பித்தேன். 'யாரும் இல்லையா? டாக்டர், நர்ஸ் தயவுசெய்து இங்க வாங்க. எனக்கு வலி தாங்க முடியலை. உயிர் போய்விடும்போல இருக்கின்றதே. யாராவது வாங்க' என்று கதறிக் கதறி அழத் தொடங்கிவிட்டேன்.

நர்ஸ் நிதானமாக என் அருகில் வந்து, 'ஏன் இப்படிக் கத்திக் கூச்சல் போடுகிறாய்? அக்கம் பக்கத்துல இருக்கிறவங்களுக்குத் தெரியணுமா உனக்கு என்ன ஆப்ரேஷன் என்று? சும்மா வலியைப் பொறுத்துக்கிட்டு இரு. அது அப்படித்தான் கொஞ்ச நேரம் வலிக்கும்' என்று என்னைத்

திட்ட ஆரம்பித்தாள். பக்கத்துப் பெட்டில் தடுப்புப் பலகைக்கு மறுபுறம் இருந்து ஒரு வயதான அம்மா ஓடிவந்து 'இந்தப் பொண்ணுக்கு என்ன ஆச்சு? இப்படிக் கத்திக் கொண்டு இருக்கிறாள்' என்று நர்சிடம் கேட்டாள். பதிலுக்கு 'வயிற்று வலி. ஆப்ரேஷன் செய்துள்ளோம். அதுதான் வலிக்கிறது' என்றாள். நான் புரிந்துகொண்டேன். இதுபோல ஆப்ரேஷன் செய்வது யாருக்கும் தெரியாதுபோல என்று நினைத்துக் கொண்டேன். எங்களுக்குச் சாப்பாடு கொண்டுவந்து கொடுக்கும் ஆயா அப்போது பால் இல்லாத டீ போட்டுக் கொண்டுவந்து கொடுத்தார். 'இன்னும் இருக்கிறது. அவ்வப் போது குடி. இதோ, பக்கத்தில் வைக்கிறேன்' என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார்.

இந்த ஆப்ரேஷன் செய்துகொண்ட இஜராக்கள் நாற்பது நாட்களுக்குப் பால், பழம் எதுவும் சாப்பிடக்கூடாது என்பது ஒரு சாத்திரம். நாற்பதாம் நாளன்று குலதெய்வம் மாத்தாவுக்குப் பூஜை செய்து பால்குடம் ஏந்தி ஆற்றிலோ குளத்திலோ ஊற்றிவந்த பிறகுதான் பால் பழம் வகைகளைச் சாப்பிட வேண்டும் என்று மூத்த இஜராக்கள் சொல்லி அனுப்பியிருந்தனர். மேலும் பிளாக் டீ அதிகமாகக் குடிக்க வேண்டும். அப்போதுதான் ஒன்னுக்கு ஃபிரீயாக வரும் என்று கூறினார்கள். ஒன்னுக்குப் போகும் டியூப்பை மூன்றாவது நாள்தான் எடுக்க வேண்டும். அதுவரை எதுவும் சாப்பிட வேண்டாம் என்று கூறினர்.

என்னுடைய வலிக்கு ஆதரவாக அந்தப் பக்கத்துப் பெட்டில் அட்மிட் ஆகியிருந்த பெரியவரின் மனைவியான அந்த அம்மாதான் ஆறுதல் கூறி அவ்வப்போது டீயை எடுத்து எனக்குக் குடிக்க வைப்பார். புண்ணியவதி யாரோ எனக்குத் தெரியாது. ஆனால் இதுபோன்ற ஆறுதலும் சேவையும் என் குலதெய்வமான மாத்தாவைப் பார்ப்பது போல இருந்தது. இரண்டு மணிநேரம் புழுவாகத் துடித்த எனக்கு நெஞ்சு அடைப்பதுபோல உணர்வு. அப்படியே வாந்தி எடுத்ததில் குடித்த டீ எல்லாம் வெளியில் வந்துவிட்டது. அந்தச் சமயம் என் உயிர் என்னை விட்டுப் பிரிகிறது என்றுதான் நினைத்தேன். அந்த வாந்தி வந்த பிறகுதான் எரிச்சலும் நெஞ்சுப் படபடப்பும் குறைந்து உயிர் போய் உயிர் வந்ததுபோல இருந்தது. என்னுடைய வாந்தியை யார் துடைத்தார்கள் என்று தெரியாமல் மயக்கமாகத் தூங்கிவிட்டேன்.

மறுநாள் காலையிலும் தூங்கி அன்று மாலை ஏழு மணி அளவில் தான் கண்விழித்துப் பார்த்தேன். என்னோட குருபாய் சேலா கட்டிலில் உட்கார்ந்தவாறு சாப்பாடு கொண்டுவந்து கொடுக்கும் ஆயாவுடன் பேசிக்கொண்டு ரசம் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். கண் விழித்துப் பார்க்கையில் என்னைப் பார்த்து 'எப்படிம்மா இருக்கு?' என்று சிரித்துக்கொண்டே கேட்டாள் என் சேலா.

ஆயாவும் எனக்கு டீ எடுத்துக் கொடுத்து 'குடிம்மா' என்றார். என் சேலா ஆயாவைப் பார்த்து 'எங்களுக்குப் பிளாக் டீதான் கொடுக்க வேண்டும் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்டாள். 'ஏன் சாமி, எம்புட்டுப் புள்ளைங்களுக்கு இந்த ஆஸ்பத்திரியில என்னோட கையால சோறு பொங்கிப்போட்டு இருக்கேன். இதுகூடத் தெரியாதா?' என்று சொன்னார்.

ஆப்ரேஷன் செய்த மூன்றாவது நாள் ஒன்னுக்குப் போகும் டியூபை எடுத்துவிட்டபிறகு பாத்ரூம்போய்த்தான் ஒன்னுக்குப் போக வேண்டும். அப்போது ஜாக்கட் புடவை கட்டிக்கொண்டுதான் போகவேண்டும். அப்போது நைட்டிகூட இல்லை. எங்களுக்கு நடக்க முடியாமல் காலை அகட்டி அகட்டிப் புடவையையும் பாவாடையையும் ஆப்ரேஷன் இடத்தில் படாமல் இரண்டு கைகளாலும் தூக்கிப் பிடித்தவாறுதான் போக வேண்டும். ஒன்னுக்கு ஃபிரியாக போகாவிட்டால் முக்கினால் போதும். வலி தாங்க முடியாது. சில சமயம் ரத்தம்கூட வந்துவிடும். அந்த நிலைமையை இப்போது நினைத்தாலும் உடம்பு நடுங்குகிறது. பாத்ரூம்கூடக் கட்டியாகச் சரியாக வராமல் கஷ்டப்படுவேன். முக்கினால் போதும், நரம்புகள் இழுத்துப் பிடித்துக்கொண்டு தையல் பிரிந்துபோகும் அளவில் வலிக்கும்.

என்னுடைய சேலாவுக்குத் தையல் பிரிக்கும்போது ஏழாவது நாள். எனக்கு அன்று ஆறாவது நாளே தையல் பிரித்தனர். காரணம் எங்களிடம் பணம் 500 ரூபாய்தான் இருந்தது. அதனால் மும்பைக்குப் போகலாம் என்று முடிவு செய்து, தையல் பிரித்த அன்றே இருவரும் ஊருக்குப் போகிறோம் என்று டாக்டரிடம் கூறினோம். தையல் பிரிக்கும்போது வலிக்குமா என்று டாக்டரிடம் கேட்டோம். இலேசாக வலிக்கும் என்றார். அதேபோல் முழுத் தையலும் பிரிக்காமல் கொஞ்சம் மட்டும் பிரித்துவிட்டு மீதி உள்ளது தானே கொட்டிவிடும் என்று டாக்டர் கூறினார். பிரிக்கும்போதுகூடச் சுரீர் என்று வலி இருந்தது. பெண்ணாக மாறவேண்டுமானால் இதையெல்லாம் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று மனதில் நினைத்துக்கொண்டு மாத்தா மாத்தா என்று கண்ணை இறுக்கி மூடிப் பல்லைக் கடித்துக் கொண்டேன்.

கையில் இருந்தது 500 ரூபாய். நாங்கள் ஊருக்குப் போகிறோம் என்றதும் அட்டண்டர், நர்ஸ், ஆஸ்பத்திரியில் வேலை செய்பவர்கள் எல்லாரும் தலையைச் சொரிந்தவாறு வந்து நின்றனர். மற்ற நேரங்களில் கூப்பிட்டாலும் கத்தினாலும் வரமாட்டார்கள். ஆப்ரேஷன் செய்து கொள்ள வரும்போது முதன் முதலாக நடக்கும் கவனிப்பு ஆப்ரேஷன் ஆனபிறகு இல்லை. இப்போது மும்பை போகிறோம் என்றவுடன்

நாங்கள் ஏதாவது பணம் தருவோம் என்று வந்து நின்றுகொண்டார்கள். இருவரும் தலைக்கு 50 ரூபாய் கொடுத்துவிட்டு மீதியுள்ள 400 ரூபாயுடன் ஆஸ்பத்திரியில் இருந்து ஆட்டோ பிடித்து ரயில்வே ஸ்டேஷன் வந்தோம். திண்டுக்கல் ரயில்வே ஸ்டேஷனில் உள்ள ஆட்டோக்காரர்கள், அங்குள்ள ஜனங்கள் எங்கள் இருவரையும் பார்த்து ஏதோ சொல்லிச் சிரித்தார்கள். கிண்டல் செய்தார்கள். அவர்களிடம் சண்டை போட எங்களுக்குத் தெம்பு இல்லை. எங்களுடைய வலி, நடக்க முடியாத சூழ்நிலை, சரியான உணவு இல்லாமல் சத்து இல்லாத உடம்பு. என்ன செய்வது? ஒன்றுமட்டும் புரிந்தது. எங்களுக்கு ஆப்ரேஷன் ஆகியுள்ளதை அறிந்துகொண்டு அதைப்பற்றித்தான் ஒரு சிலர் கிண்டல் செய்கின்றனர்.

அன்று மாலை வரவேண்டிய ரயில் லேட்டாகத்தான் வந்தது. கூட்டம் அதிகமாக இருந்ததால் எங்களால் ரயிலில் ஏற முடியவில்லை. கொஞ்ச நேரத்தில் ரயில் புறப்பட்டுப் போய்விட்டது. அதனால் திரும்பி அங்கிருந்து ஆட்டோ பிடித்து பஸ் ஸ்டாண்ட் வந்து சென்னை பஸ் ஏறினோம்.

# 7

சென்னை பஸ்சில்கூட எங்களுக்கு முன்சீட் கிடைக்கவில்லை. பின்னால் கடைசி சீட்டில்தான் அமர்ந்தோம். நாங்கள் இரண்டு உள்பாவாடை கட்டிக்கொண்டு ஆப்ரேஷன் இடத்தில் பஞ்சு வைத்து அது கீழே விழாமல் இருக்கத் துணியால் கோவணம் கட்டிப் பத்திரமாகத் தான் சென்றோம். பஸ்சில் பின்சீட் என்பதால் தூக்கிப் போடும்போது ஆப்ரேஷன் செய்த இடத்தில் குத்தலும் குடைச்சலும் அதிகமாக இருந்தன. சில சமயங்களில் முன்சீட்டின் கம்பியைப் பிடித்துக் கொண்டு காலைப் பஸ் தரையில் ஊன்றிக் கொண்டு சீட்டில் படாமல் எங்களைத் தூக்கியவாறு வரவேண்டிய சூழ்நிலை ஆனது. கால்கைகள் வலித்து உட்கார்ந்தால் போதும், பஸ் தூக்கிப் போடும்போது ஆப்ரேஷன் செய்த இடத்தில் அடிபட்டுப் பயங்கரமா வலிக்கும். வாய்க்குள்ளேயே மாத்தா மாத்தா என்று முனகிக்கொண்டு ஒரு வழியாகச் சென்னை வந்து சென்ட்ரல் ரயில் நிலையத்தை அடைந்தோம்.

காலை 9.30 மணி இருக்கும். அப்போது மும்பை ரயில் மாலை நான்கு மணிக்குத்தான் என்றனர். அதுவரை என்ன செய்வது என்று தெரியவில்லை. பயணிகள் தங்கும் அறையில் இருக்கலாம் என்றால் ரிசர்வேஷன் டிக்கட் இருப்பவர்கள் மட்டும்தான் அங்கு தங்க முடியும் என்று தெரிந்து கொண்டோம். அதனால் ஜனங்கள் நிறைய உட்கார்ந்து கொண்டிருந்த பொது இடத்தில் சென்று நாங்களும் உட்கார்ந்து கொண்டோம். எங்களால் அதிக நேரம் உட்கார முடியவில்லை. படுக்கலாம் என்றால் அங்குப் படுக்க முடியவில்லை. சுவர் ஓரம் கிடைத்தால்கூடக் கால் நீட்டி உட்காரலாம் என்று பார்த்தால் சுவர்ப் பக்கம் பூராவும் கடைகள் ஆபீசுகள்தான் இருக்கின்றன. பெரிய ஹால். அதில் நடுப்புறம் உட்கார்ந்து இருந்த எங்களைப் போகின்றவர்கள் வருகின்றவர்கள் என எல்லாரும் வித்தியாசமாகப் பார்த்த வண்ணம் சென்றனர்.

டீயோ டிபனோ வாங்கிக் கொடுக்கக்கூட யாரும் இல்லை. பஸ்ஸில் வந்த அலுப்பு. எங்களால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாத நிலை. பற்றாக்குறைக்கு ஜனங்களின் பார்வை. இவற்றையெல்லாம் நினைக்கும்போது ஏன்தான் ஆப்ரேஷன் செய்துகொண்டோமோ என்று தோன்றியது. கடவுளே, எங்களுக்கு நீதான் துணை. எங்களை எப்படியாவது மும்பை கொண்டு சேர்த்து விடுன்னு வேண்டிக் கொண்டோம். பசி தாங்க முடியாமல் என் குருபாய் சேலா மெதுவாக எழுந்து சென்று இட்லி வாங்கி வந்தாள். அதை இருவரும் சாப்பிட்டோம். சற்று நேரத்தில் எனக்குப் பாத்ரூம் வந்தது. நானும் மெதுவாக எழுந்து காலை அகட்டி நடந்தால் கேவலமாகப் பார்ப்பார்களே, அதுவும் ஆப்ரேஷன் ஆகியுள்ளது தெரிந்து ரயிலில் போகவிடாவிட்டால் என்ன செய்வது என்ற பயத்தில் வலியைத் தாங்கிக்கொண்டு மனதை உறுதிப் படுத்திக்கொண்டு பெண்கள் பாத் ரூமுக்குள் சென்றேன்.

அங்கு இருந்த ஒரு பெண் போலீஸ் என்னைப் பார்த்து, 'நீ ஆப்ரேஷன் செய்துகொண்டு வந்திருப்பது தெரிகின்றது. ஏன் மத்த ஆம்பளைங்க மாதிரி ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு வேலை வெட்டி பார்த்துக் கொண்டு நல்ல ஆம்பளையா லட்சணமா இருக்கக்கூடாதா?' என்று கேட்டாள். என்னோட கஷ்டம் அவளுக்கு எங்க புரியப்போவது. ஈசியாச் சொல்லிட்டாங்க. அவளுக்குப் புரியவைக்க எனக்குத் தெம்பு இல்லை. புரிய வைக்கிற நிலைமையிலும் நான் இல்லை என்று நினைத்துக்கொண்டு மறுபேச்சு எதுவும் பேசாமல் பாத்ரூம் உள்ளே சென்று கதவை மூடிக்கொண்டேன்.

புடவை, பாவாடையைத் தூக்கிச் சுருட்டிக்கொண்டு கட்டி இருந்த பஞ்சை எடுத்துப் பார்த்தால் பஞ்சு பூராவும் ரத்தம் நிறைந்து உள்ளது. ஆப்ரேஷன் செய்த இடத்தில் தையல் போடப்பட்ட இடம் தசை விலகி ரத்த ஈரம் பட்டுக்கொண்டு இருந்தது. என்ன செய்யறது, சுடுதண்ணி இருந்தாலாவது சுத்தம் செய்து வேறு பஞ்சை வைத்துக் கட்டிக் கொள்ளலாம் என்று நினைத்தேன். சுடுதண்ணியும் இல்லை. அதனால் ரத்தம் உள்ள பஞ்சை எடுத்துக் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டுப் பாத்ரூம் சென்ற பிறகு ஆப்ரேஷன் செய்த இடத்தில் தண்ணீர் படாதவாறு கழுவிக்கொண்டு, நான் கொண்டு வந்திருந்த பஞ்சைக் கொஞ்சம் எடுத்துப் புண்மேல் துடைத்துப் போரிங் பவுடரைப் புண்மீது கொட்டி மீண்டும் புதிய பஞ்சை வைத்துப் பழையபடி கோவணமாகக் கட்டிக்கொண்டேன். இவை எல்லாம் செய்து முடிப் பதற்குள் தலை சுற்றலே வந்துவிட்டது.

குருபாய் சேலாவுக்கு என்னைப் போல் ரத்தம் கசியவில்லை என்று கூறினாள். மேலும் தையல் போட்ட சதைகள்கூட விழவில்லை.

அவளுக்கு வலி, உடல் தளர்ச்சி, மயக்கம் இப்படித்தான். ஒருவழியாக இருவரும் காலைக் கடன்களை முடித்துவிட்டு அந்தப் பெரிய ஹாலில் படுக்க முடியாமல் எவ்வளவு நேரம் உட்காந்தே இருப்பது என்று மும்பை ரயில் வரும் பிளாட்பார்ம் சென்று பெண்கள் பெட்டி எங்கு வந்து நிற்குமோ அங்கு சென்று ஓர் ஓரமாக எங்களின் கைகளையே தலைக்கு வைத்துக்கொண்டு படுத்துக்கொண்டோம். எங்களிடம் டிக்கட் வாங்க அவ்வளவு பணம் இல்லை. டிக்கட் இல்லாமல்தான் போகவேண்டும். கையில் இருந்த பணம் செலவாகி விட்டது. யாராவது டிக்கட் கேட்டால் என்ன செய்வது? ஏன் நானி நமக்கு இன்னும் அதிகப் பணம் கொடுத்து அனுப்பி இருக்கக்கூடாது? டிக்கட் இல்லாமல் சீட்டில் கூட அமரமுடியாது. செக் செய்பவர் வந்து கேட்டால் சீட்டைவிட்டு இறக்குவது இல்லாமல் ரயிலைவிட்டே இறக்கிவிடுவார் என்ற பயம் இருந்தது.

நேரம் ஆகஆகப் பிளாட்பாரத்தில் கூட்டமும் அதிகம் ஆனது. நாங்கள் உஷாராக ரெடியாக இருந்தோம். ரயில் வந்ததும் எப்படியாவது சீட் பிடிக்கணும்னு காத்திருந்தோம். அந்தச் சமயத்துல மும்பைக்குப் போறதுக்காக நான்கு இஜராக்கள் வந்தனர். அவர்கள் எங்களைப் போல் ஆப்ரேஷன் செய்து கொண்டு வந்தவர்கள் அல்ல. எப்போதோ ஆப்ரேஷன் செய்தவர்கள். அவர்கள் எங்களைப் பார்த்தவுடனே 'பொட்டைங்கடி' என்று சொல்லிக்கொண்டு எங்களிடம் வந்து எங்களைப் பற்றி விசாரித்தனர். 'எந்த ஊருக்குப் போறீங்கடி, யாரு வீட்டுக்குப் போறிங்க, யாரு சேலா நீங்க?' என்று கேட்டனர். நிர்வாணம் ஆயிட்டு வந்திருக்கோம். மும்பை போக வேண்டும். அங்கு என் நானி குரு பெயரைச் சொல்லி அவர் வீட்டுச் சேலா நாத்திங்க நாங்கன்னு சொன்னோம். டிக்கட் எடுக்கக்கூடப் பணம் இல்லாததைச் சொன்னோம்.

எங்களுடைய கஷ்டங்களை அவர்களிடம் பரிமாறிக் கொண்ட பிறகு கொஞ்சம் பயம் போய் மனதிற்கு ஆறுதலாக இருந்தது. எங்கள் இருவருக்கும் டிக்கட் எடுக்காமலேயே ரயில் வந்த பிறகு அந்த நான்கு இஜராக்களின் உதவியுடன் சீட் பிடித்து உட்கார்ந்து கொண்டோம். அந்த நான்கு பேரும் சென்னையைச் சேர்ந்தவர்கள். அவர்கள் மும்பையில் கடை கேட்டுக்கொண்டு கோவண்டி என்ற இடத்தில் வசிக்கின்றனர். இப்போது அவர்கள் ஊருக்கு வந்துவிட்டுத் திரும்பி மும்பை செல்கின்றனர். எங்களுக்குச் சாப்பாடு கொடுத்து, அவர்களின் மடியில் படுக்க வைத்துக்கொண்டார்கள். மனதிற்கு ஆறுதலாகப் பேசிக்கொண்டு சென்றோம்.

ரயில் கொஞ்ச தூரம் சென்று கொண்டிருந்தபோது டிக்கட் செக்கிங் செய்பவர் வந்தார். அந்த நான்கு பேருக்கு மட்டும்தான் டிக்கட்

இருந்தது. எங்களுக்கு இல்லை. அதனால் அந்த நான்குபேரும் அவரிடம், 'ஐயா நாங்க பொட்டைங்க. வயித்துப் பொழப்புக்கு மும்பை போகிறோம். கடைகடையாய்ப் பிச்சை எடுத்துத்தான் பிழைக்க வேண்டும். இவங்க இருவருக்கும் வயிற்றில் கட்டி இருந்து ஆப்ரேஷன் ஆகியுள்ளது. பெருந்தன்மையோடு எங்களுக்கு உதவி செய்யுங்கள்' என்று கேட்டனர். அதற்கு அவர், 'நான் உங்களை டிக்கட் இல்லாமல் விட்டாலும் ஆந்திராவில் விடமாட்டார்கள். என்ன செய்யப் போறீங்க'ன்னு கேட்டுவிட்டுச் சென்றுவிட்டார். மவராஜன் புள்ள குட்டியோட நல்லா இருக்கணும்னு எங்கள்ல ஒருத்தி அவரை வாழ்த்தினாள்.

'பொட்டைங்களுக்கு நிர்வாணம்னா மறு ஜென்மம் மாதிரி. நிர்வாணம் செஞ்சுக்கிட்டாத்தான் மரியாதை. நாம் முழுப் பெண்ணா வாழணுமுன்னா நிர்வாணம் பண்ணிக்கிட்ட பிறகுதான் அது நிஜம் ஆகுது. பொம்பளையா ஆகணும்னா அவ்வளவு ஈசியா? கஷ்டப் பட்டுத்தான் ஆகணும். நீங்க தாயம்மா நிர்வாணம் செய்துகொண்டி ருந்தால் என்ன சொல்வீர்களோ? இந்த டாக்டர் நிர்வாணத்துக்கே உங்களுக்கு இவ்வளவு கஷ்டம்னா நான் என்னத்தச் சொல்ல? பயப் பட வேண்டாம். எல்லாம் நல்லபடியா புண்ணுங்க ஆறுனபிறகு நீங்க சந்தோஷமா இருப்பீங்க. இப்ப நாங்க உங்களோட வந்து சேந்துக்கிட்டதால உங்கள நாங்க கூட்டிக்கிட்டு உங்க நானி வீட்ல விட்டுட்டுத்தான் போவோம்' என்று கூறினர்.

கடவுள் புண்ணியத்துல எங்கள யாரும் ரயிலைவிட்டு இறக்கி விடல. எப்படியோ எவ்வளவு வலி இருந்தாலும் இஜராக்கள் நாலுபேரு எங்களுடன் இருந்தது வலி தெரியாம இருந்தது. எவ்வளவுதான் இருந்தாலும் யாருன்னு தெரியாட்டிக்கூட இஜராங்கன்னு தெரிஞ்சா உதவி செய்வார்கள். அவுங்களோட கஷ்ட நஷ்டம், உணர்வுகள், வலி எல்லாம் இஜராக்களுக்கு மட்டும்தான் தெரியும். அறிமுகம் இல்லாத ஒரு இஜராவுக்கு இன்னொரு இஜராதான் உதவி செய்யறாங்க. எல்லா விதத்திலும் ஆறுதல்னு பார்த்தா அது இஜராக்களுக்கு இஜராக்கள் மட்டும்தான். ஒருவகையான காக்காக் கூட்டம் மாதிரி.

# 8

மும்பை தாதர் நிலையம், சென்னை சென்ட்ரல் நிலையம், ரயில் பயணம் இவற்றில் எல்லாம் நான் கண்ட காட்சிகள் என் மனதைப் பெரிதும் வேதனைக்கும் துக்கத்திற்கும் ஆளாக்கின. ஆண் பெண் முதற்கொண்டு என்னையும் என்னுடன் வந்தவர்களையும் பார்த்துச் சிரிப்பதும், கேலி செய்வதும், பயப்படுவதுமாக இருந்தனர். அன்றாட வாழ்க்கை வாழ்வதே இஜராக்களுக்குப் பெரும் பாடாகத்தான் இருக்கும் போலத் தோன்றியது. இந்த உலகத்தில் ஆணாகவோ பெண்ணாகவோ இருப்பவர்கள் குடும்பத்துடன் இருக்கும்போதும் வெளியில் வரும்போதும் அவர்களைப் பார்ப்பவர்கள் இப்படியா கேலியும் கிண்டலும் செய்கிறார்கள்? கால் ஊனமான ஒருவரைப் பார்த்தால்கூட, கண் தெரியாத ஒருவரைப் பார்த்தால்கூட ஐயோ பாவம் என்று உதவி செய்கின்றனர்.குடும்பத்தில் உள்ளவர்களுக்குச் சிறிது உடல் நிலை சரியில்லை என்றால்கூட குடும்பத்தில் உள்ளவர்களும் வெளியில் பார்ப்பவர்களும் எப்படி ஒத்துழைப்புக் கொடுக்கின்றனர். இப்போது எங்கள் நிலை மனிதனைப் பார்ப்பதுபோல்கூட இல்லை.

தாதர் ரயில் நிலையத்தில் இறங்கி டாக்சி பிடிக்கப் பல படிக் கட்டுகள் ஏறிப் பாலத்தைக் கடந்தபோது எனக்கு ஆப்ரேஷன் செய்த வலியைவிட எங்களைப் பொதுமக்கள் பார்க்கும் விதம் பெரும் வலியாக இருந்தது. இந்த வலி நானே தேடிக்கொண்டதா என்ற கேள்வியும் என்னுள் எழுந்தது. நான் நொண்டியோ முடவனோ குருடனோ எப்படியிருந்தாலும் ஒரு ஆணாகவோ பெண்ணாகவோ இருந்திருக்கக்கூடாதா? என்னை ஏன் இந்தக் கடவுள் இப்படிப்பட்ட உணர்வுகளைக் கொடுத்து இந்த மக்கள்முன் சித்திரவதை செய்ய வேண்டும்? ஆப்ரேஷன் செய்துகொண்ட நாங்கள் இருவரும் சென்னையில் இஜராக்களைச் சந்திக்காவிட்டால் எங்களுடன் அவர்கள் வராமல் இருந்திருந்தால் நாங்கள் உயிரோடு வந்துசேர்ந்திருப்போம் என்ற நம்பிக்கை எங்களிடம் இல்லை.

காட்குப்பரில் நானி வீட்டுக்குச் சென்றவுடன் எங்கள் இருவருக்கும் தேங்காயில் சூடம் ஏற்றிச் சுத்தி உடைத்துவிட்டு ஆரத்தி எடுத்து உள்ளே வரச் சொன்னார்கள். 'வாங்கடி பொம்பளைங்களா' என்று கூறியவாறு என் நானி வந்தார். என் காலா குரு எங்களுக்காகக் குளிக்கச் சுடுதண்ணீர் போட்டுக்கொண்டிருந்தார். வீட்டில் உள்ள அனைவரும் நலம் விசாரித்தனர். எங்களை வீடுவரை கூட்டிவந்து விட்ட இஜராக் களுக்கும் நல்ல மரியாதை செய்து அவர்கள் வீட்டிற்கு அனுப்பி வைத்தனர். நானியிடமும் காலா குருவிடமும் ஆஸ்பத்திரி முதல் கொண்டு இங்கு வந்து சேர்ந்ததுவரை எல்லாவற்றையும் கூறினோம். 'சும்மாவா பேட்டா பொம்பளையாகணும்னா' என்ற பதில் வந்தது. 'இதுக்கே இப்படின்னா தாயம்மா நிர்வாணம் போய் இருந்தா இன்னும் என்ன அவதிப் பட்டிருக்கணும் தெரியுமா?' என்றும் கூறினார். காலா குரு எங்களை ஒவ்வொருவராக உடம்புடன் குளிக்க வைத்து எங்கள் ஆப்ரேஷன் இடத்தில் சோப்பு போட்டுக் கழுவித் துடைத்து போரிங் பவுடர் போட்டுவிட்டு நன்றாக ஆப்ரேஷன் செய்து இருக்கின்றனர் என்று கூறினார்.

தாயம்மா நிர்வாணம், டாக்டர் நிர்வாணம் எதுவாக இருந்தாலும் சில விஷயங்களைக் கடைப்பிடிக்கவேண்டும். சில உணவுகளைச் சாப்பிடக்கூடாது. நிர்வாணம் செய்துகொண்ட நாள் முதல் நாற்பது நாட்களுக்கு இவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆப்ரேஷன் செய்த இடத்தை இரண்டு கால்களாலும் இடுக்கிக் கொண்டோ இரண்டு கால்களையும் சேர்த்து வைத்தோ படுக்கக் கூடாது. காலை அகட்டி வைத்துத்தான் தூங்கவேண்டும். காரணம் ஒன்னுக்கு வரும் துவாரம் புண்ணாக இருப்பதால் ஒட்டி மூடிக்கொண்டுவிடும். மேலும் துவாரம் புண்ணாக இருப்பதால் நன்றாக ஒன்னுக்குப் போக பால் இல்லாத டீ அடிக்கடி குடிக்க வேண்டும். முகத்தைக் கண்ணாடியில் பார்க்கக் கூடாது. ஆண்களைப் பார்க்கக் கூடாது. தலையில் சீப்பு போட்டுச் சீவக் கூடாது. பெரிய இஜராக்களுக்குப் பாவ்படுத்தி சொல்லக் கூடாது. மேலும் உணவு வகையில் எந்த ஒரு பழத்தையும் சாப்பிடக்கூடாது. பால் குடிக்கக் கூடாது. அதிகமாகப் பாகற்காய், சப்பாத்தி சாப்பிட வேண்டும். ஆட்டுக்கால் சூப், தலைக்கறி இப்படிச் சத்தான உணவைச் சமைத்துக் கொடுப்பார்கள். எங்களால் சப்பாத்தியும் பாகற்காயும் சாப்பிடவே முடியாது. நானி நாங்கள் சாப்பிடும்வரை குச்சியை வைத்துக்கொண்டு மிரட்டி மிரட்டிச் சாப்பிட வைப்பார்.

பன்னிரண்டாம் நாள், இருபதாம் நாள் தலைக்குத் தண்ணீர் ஊற்ற அக்கம் பக்கம் உள்ள இஜராக்களை அழைப்பார்கள். மேலும் வீட்டில் உள்ள பெரியவங்களும் எங்களுக்குச் சமமாக இருப்பவர்களும்கூட

உடம்பு முழுக்க மஞ்சள் பூசி, ஆரத்தி எடுத்துச் சர்க்கரையை வாயில் போட்டுக் காசு சுத்திப்போட்டுத் தண்ணீர் ஊற்றிவிடுவார்கள். எங்களைப் பார்க்க வருபவர்களும் கோதுமை, சர்க்கரை, நெய், டீத்தூள் என வாங்கி வருவது இஜராக்களின் வழக்கமாக இருக்கும். பால் இல்லாத டீயில் நெய் போட்டுக் குடித்தால் உடம்பு சத்தாகவும் தெம்பாகவும் இருக்கும். எங்களுக்கு இருபது நாள் கழித்துத் தண்ணீர் ஊற்றும்போது புண் ஆறி ஒரு சிறிய பொட்டுப்போலத்தான் காயம் இருந்தது.

சுடுதண்ணீரில் கழுவும் முன் நிர்வாணம் செய்துகொண்ட இடத்தில் மருந்து ஊற்றி அந்த மருந்து பொங்கி அழுக்குகளை எடுத்து வந்தபிறகு பஞ்சால் துடைத்துத் தண்ணீர் ஊற்றிச் சோப்புப் போட்டுக் கழுவி விட்டுக் காட்டன் துணியால் அழுத்தி ஈரம் இல்லாமல் துடைத்துப் போரிங் பவுடர் போட்டுவிடுவார்கள். தினமும் பக்கத்தில் உள்ள டாக்டரிடம் பெனிசிலின் ஊசியும் பதினைந்து நாட்களுக்குப் போட்டு விட்டனர். என்னுடைய காலாகுருதான் எங்கள் இருவருக்கும் இது போன்ற சேவைகளைச் செய்வார். அவர் எங்கிருந்தாலும் நூறு வருடம் நன்றாக இருக்கவேண்டும். எங்களைச் சிறியவர் என்று பாராமல் ரத்தக் கறை படிந்த துணிகளையும் துவைத்துப் போடுவார்.

புண் நன்றாக ஆறியபிறகு எங்களையும் விட்டுக்குள்ளேயே வேலை செய்யச் சொன்னார்கள். நாற்பதாம் நாள் கிட்ட வரவர எங்கள் முகங்களும் கை கால்களும் மெதுவாகப் பெண்களைப் போல் ஆகத் தொடங்கின. நாற்பதாவது நாள் எங்களுக்கு ஹல்திமேந்தி (மருதாணி விழா)வைத்து மாத்தாவுக்குப் பூஜை போட்டு எங்களுக்குச் சடங்கு நடத்தப்படும். அதன் பிறகு நாங்கள் எல்லாரையும் போல வெளியில் செல்லலாம். முகத்தைக்கூடக் கண்ணாடியில் பார்க்க முடியாமல், வெளியில் செல்ல முடியாமல் விட்டுக்குள்ளே அடைபட்டுக் கிடந்து நாற்பது நாள் எப்போது முடியும் என்று நாட்களை எண்ணிக் கொண்டிருந்தோம். வயசுக்கு வந்த பெண்கள் எப்படி வீடுகளில் இருப்பார்களோ அவர்களுக்கு எப்படிச் சடங்குகள் நடத்துவார்களோ அதைப்போல இஜரா சமுதாயத்திலும் நிர்வாணம் செய்து கொண்டவர் களுக்கும் திட்டுக் கழிக்க நாற்பதாவது நாள் சடங்கு செய்வது வழக்கம்.

நாற்பதாவது நாள். என்னுடைய நானியின் வீடு பாண்டுப்பில் என் குருபாய் இருந்துகொண்டு கவனித்து வந்தாள். அது பெண்களையும் இஜராக்களையும் கொண்டு பாலியல் தொழில் செய்து வரும் விடுதி. என் நானிக்கு மட்டும் அல்லாமல் இன்னும் எத்தனையோ இஜராக் களின் பாலியல் தொழில் செய்யும் விடுதி அங்கு உள்ளது. அரசு அங்கீகாரம் வழங்கப்பட்டது எனக் கூறப்படுகிறது. இருக்கலாம்.

இல்லையென்றால் வெளிப்படையாகப் பாலியல் தொழில் செய்ய முடியுமா? ஒரு ஐந்து ஏக்கர் சுற்றளவு கொண்ட இடத்தில் பல பேரால் நடத்தப்பட்டு வந்தது. அங்குதான் எங்கள் இருவருக்கும் சடங்கு செய்ய ஏற்பாடு செய்திருந்தனர்.

சமையல் தடபுடலாகத் தயாராகிக் கொண்டிருந்தது. வண்ண வண்ணப் புடவை அணிந்துகொண்டு மூத்தவர்முதல் சிறியவர்வரை இஜராக்களும் பாலியல் தொழில் செய்யும் பெண்களும் எங்கள் சடங்கில் கலந்துகொள்ள வந்திருந்தனர். எங்களை ஒரு தனி அறையில் உட்கார வைத்து இருந்தனர். வெளியில் என்ன நடக்கிறது என்று எங்களுக்குத் தெரியாது. ஆனால் நிறையப் பேர் ஆடிப்பாடிக் கொண்டு சந்தோஷமாக இருப்பது தெரிந்தது. எங்களைப் பார்க்கவும் சிலபேர் வந்தனர். 'யாருக்கடி சடங்கு? எங்கடி பொம்பளைங்க?' என்று நக்கலாகவும் கிண்டல் செய்து கொண்டும் எங்களைப் பார்க்க வந்தனர். வந்தவர்கள் எல்லாரும் சாப்பிட்டுவிட்டு எங்களுக்கும் சாப்பாடு கொடுத்துவிட்டனர். இரவு சுமார் இரண்டு மணி இருக்கும். எங்கள் இருவரையும் பாவாடை மட்டும் மார்புக்கு மேல் தூக்கிக் கட்டியபடி உட்கார வைத்து வந்தவர்கள் எல்லாரும் மருதாணி, மஞ்சள் பூசிவிடுவது ஒருபுறமும் குலதெய்வமான மாத்தாவுக்கு அலங்கார வேலைகள் மற்றொரு புறமும் சிறப்பாக நடந்துகொண்டிருந்தன.

நிர்வாணம் செய்துகொண்டவர்களின் குருதான் ஜோக் கொடுக்க வேண்டும். பச்சைக் கலரில் புடவை, ஜாக்கட், பாவாடை. மூக்குத்தி, கொலுசு, மெட்டி ஆகியவைதாம் நிர்வாணம் செய்து கொண்டவர் களுக்கு நாற்பதாவது நாளில் குரு கொடுக்கும் ஜோக். இந்த ஜோக் அணிந்து மாத்தா முன் வைத்துள்ள பால் குடத்தைத் தலையில் சுமந்து கொண்டு பக்கத்தில் உள்ள ஆற்றிலோ குளத்திலோ கடலிலோ எனத் தண்ணீர் இருக்கும் இடம் சென்று அந்தப் பாலை ஊற்றி விட்டு அங்கிருந்து தண்ணீருடன் குடத்தைச் சுமந்து வந்து மாத்தா படத்தைப் பார்க்க வேண்டும். அதுவரை முகத்தை மூடிக் கூட்டிச் செல்வார்கள்.

எங்கள் இருவருக்கும் குளித்த பிறகு தலை வாரிப் பூ வைத்துக் குரு கொடுத்த ஜோக்கை அணிய வைத்து முந்தானையால் முக்காடு போட்டு இஜரா தோழிகள் மாத்தா போட்டோ முன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். சாம்பிராணி வாசமும் கற்பூர வாசமும் மணந்தன. அதனுடன் மாத்தாவுக்குப் பாட்டுப் பாடித் தேங்காய் உடைத்துப் பூஜைகள் செய்தனர். ஜெய் ஜெய் சந்தோஷி மாத்தா ஜெய் ஜெய் என்ற பாட்டை இஜராக்கள் அனைவரும் பாடிப் பூஜைகள் செய்து எங்கள் இருவருக்கும் கழுத்தில் மாலை அணிவித்து மடியில் தேங்காய்,

வெற்றிலை பாக்கு வைத்துக் கட்டிவிட்டு மாத்தா எங்கள்மீது இறங்கு வதற்கு மாத்தா மாத்தா என்று சொல்லச் சொன்னார்கள். அந்தச் சாம்பிராணி வாசம், இஜராக்களின் கைதட்டல், மாத்தா மாத்தா என்று அழைக்கும் சத்தம் அதிகாலை நான்கு மணி இருக்கும் என் உடம்பைப் புல்லரிக்க வைத்து, தலையையும் உடம்பையும் ஆட்ட வைத்தது.

அந்த நேரத்துக்காகக் காத்திருந்த இஜராக்கள் மாத்தா மாத்தா என்று இன்னும் ஜோராகச் சத்தம் போட்டுக்கொண்டே என் தலைமீது பால்குடத்தைத் தூக்கி வைத்துப் பின்பக்கமாக இரண்டுபேர் பிடித்துக் கொண்டனர். அதேபோல் என்னுடன் நிர்வாணம் செய்துகொண்ட என் குருபாய் சேலாவுக்கும் பால் குடத்தைத் தூக்கிவைத்து இருவரை யும் பக்கத்தில் உள்ள கிணற்றுக்கு அழைத்துச் சென்று கிணற்றைப் பார்க்காமல் தலையில் இருந்தபடியே குடத்தைப் பிடித்துக்கொண்டு அந்தப் பாலைக் கிணற்றில் கொட்டச் செய்தனர். பிறகு கிணற்றில் உள்ள நீரை இறைத்துக் குடத்தில் ஊற்றி இன்னும் இரண்டு முறை தண்ணீரைக் கிணற்றில் ஊற்றவைத்துப் பிறகு குடம் நிறையத் தண்ணீர் சுமந்தபடி மாத்தா போட்டோமுன் இறக்கி வைத்துவிட்டு எங்கள் முகத்தை மறைத்திருந்த துணியை விலக்கி மாத்தா முகத்தைப் பார்த்து 'என்னோட உருவத்த எடுத்துக்கிட்டு உன்னோட உருவத்தக் கொடு' என்று சொல்லச் சொன்னார்கள்.

சடங்கு நடந்து முதன்முதலில் மாத்தா போட்டோவைப் பார்த்த போது ஜெகஜோதியாக இருந்தது. மாத்தாவின் முகம் தகதகவென மின்னியது. பார்க்கும் எனக்கு அம்மா மாத்தா என் உருவத்தை எடுத்துக்கொண்டு உன் உருவத்தைக் கொடு என்று கூறும்போது என் கண்களில் கண்ணீர் வடிய அந்த மாத்தாவையே பார்த்துக் கொண்டிருந்தேன். அதன் பிறகு தோப்புக்கரணம் போட்டு என் முகத்தைக் கண்ணாடியில் பார்க்கச் சொல்லிக் கண்ணாடியைக் காட்டினர். அந்தக் கண்ணாடியில் என் முகமும் மாத்தா முகமும் சேர்ந்து தெரியும் வகையில் காட்டினார்கள். அந்த ஜோக்கும் மாத்தா அலங்காரத்திற்கும் என் முகத்தை நானே அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. நாற்பது நாள் முகத்தைப் பார்க்காமல் இருந்தேன். நிர்வாணம் ஆனபிறகு என் முகத்தில் மாற்றம் உள்ளது எனக்குத் தெரிந்தது. இப்போதுதான் பூத்த பூப்போல என் முகம் எனக்குத் தெரிந்தது. அந்த ஆண் உருவம் மாறி முழுப் பெண்ணுக்குண்டான உருவம் எனக்குத் தெரிந்தது. மனதில் பெரும் மகிழ்ச்சி எனக்கு. 'சரி சரி இஜராக்களை விருப்பப்பட்டதை எடுத்துச் சாப்பிடச் சொல்லுங்க' என்று ஒருவர் கூற எங்கள் இருவரையும் விருப்பப்பட்ட பொருள் ஏதாவது முதன் முதலில் எடுத்துச் சாப்பிடுங்கள் என்று கூறினர்.

மாத்தாவுக்குப் படைக்கப்பட்ட ஒன்பது பழவகைகள், போண்டா, பஜ்ஜி, இனிப்பு ஆகியவையும் ரவையால் செய்யப்பட்ட கேசரியும் இருந்தன. அதன் மீது ஓம் என்று எழுதப்பட்டு இருந்தது. நாங்கள் விழித்தோம் எதை முதலில் எடுத்துச் சாபிடுவதென்று. நாங்கள் எதை முதலில் எடுப்போம் என்று ஆவலுடன் காத்திருக்கும் இஜராக்கள். எதை முதலில் எடுப்பது என்று நான் யோசனை செய்து கொண்டு அந்த ரவையில் செய்த கேசரியைச் சிறிது புட்டு வாயில் போட்டுக் கொண்டேன். 'நல்லது எடுத்திருக்கா ஈசா ஈசா' என்று இஜராக்கள் ஆரவாரம் செய்தார்கள். என்னுடன் இருந்தவளும் ஆப்பிள் பழம் எடுக்க அவளுக்கும் நல்லது ஈசா ஈசா என்று ஆரவாரம் செய்துகொண்டு அவரவர் கை வைத்துத் தேவையானதைத் தேடித் தேடி எடுத்துச் சாப்பிட்டனர்.

எதை எடுத்து முதலில் சாப்பிடுகிறோமோ அதற்கேற்ப வாழ்க்கை எப்படி என்று தெரிந்துவிடும் என்பது இஜராக்களின் நம்பிக்கை. இனிப்பு, பழங்கள் எடுத்தால் இனிப்பான வாழ்க்கை அமையும். ஆனால் முதலில் எதைச் சாப்பிட வேண்டும் என்பதைச் சொல்லித் தரமாட்டார்கள். எனக்கும் தெரியாது. இதற்குமுன் யாருக்காவது இதுபோல் சடங்கு நடந்து இருந்து நான் சென்றிருந்தால் எனக்கும் தெரிந்திருக்கும். எனக்கு அதுபோல வாய்ப்புக் கிடைக்கவில்லை. முதன் முதலில் என் சடங்கைத்தான் எப்படிச் செய்கிறார்கள் என்று பார்க்கிறேன்.

சடங்கு முடிந்து எல்லாருக்கும் பாவ்படுத்தி சொல்லச் சொன்னார்கள். நாங்களும் பெரியவர்களின் காலில் விழுந்து ஆசிர்வாதம் வாங்கினோம். எங்களை ஆசிர்வாதம் செய்தவர்கள் சிலர் கூறும்போது 'நல்லா இரு பேட்டா. குருவோட பெயர் எடுக்கணும், ஓடிப்போய் வேற வீட்ல சேலா ஆயிடப்போற, குருவோட பேச்சக் கேட்டுக் கஷ்டமோ நஷ்டமோ அனுசரித்து நல்ல பெயர் எடுக்கணும். புருஷன் கிருஷன் வச்சுக்கிட்டு வாழ்க்கையை விண்பண்ணிக்காதே, குருவோட பரிவாரு நாளை உன்னோட பரிவாரு, நல்லா இருக்கணும். அதுபோல நடந்துக்கோ, நிர்வாணம் ஆயிட்டோம், பொம்பளையா ஆயிட்டோம்னு சண்ட சாடி வந்தாத் துணியைத் தூக்கிக் காட்டாதே பேட்டா, நிர்வாணம் ஆயிட்டே. இனி இஜரா சமுதாயக் கலாச்சாரத்தைப் பயபக்தியோட கடைப்பிடிச்சு நடந்துக்கோ, பொம்பளையா ஆயிட்டே, பொம்பளை கணக்கா நடந்துக்கோ, முடிய வெட்டறது, பேண்ட் சர்ட் போடறது, சொல்லிக்காம ஊருக்கு ஓடிப்போறது இதெல்லாம் இருக்கக்கூடாது. இப்படி ஒவ்வொருவரும் புத்திமதிகளைக் கூறினர். மருதாணி விழா முடிஞ்சு அங்கு இருக்கின்ற அனைவருக்கும் பாவ்படுத்தி, நன்றி

கூறிவிட்டு நானும் அவளும் என் குருவோடு டாக்சி பிடித்து அந்த மருதாணி விழா ஜோக்கோடு காட்குப்பர் வீட்டுக்கு நானியைப் பார்த்துப் பாவ்படுத்தி சொல்ல வந்தோம்.

பாண்டுப்பில் உள்ள பாலியல் தொழில் செய்யும் பெண்களில் மூத்தவர்கள் எங்களைப் பிஞ்சு என்று கூப்பிடுவார்கள். பிஞ்சு என்றால் இளையவள், சிறியவள் என்று பொருள். நாங்களும் பதிலுக்கு அவர் களைப் பாவ்படுத்தி என்று கூறுவோம். சிறிய பெண்கள் சிலர் அம்மா என்று அழைப்பார்கள். இவர்களும் இஜரா கலாச்சார முறையைக் கடைப்பிடித்து நடக்கின்றனர் என்று அப்போதுதான் தெரிந்தது. என் நானி வீட்டிலேயே கடை கேட்கச் செல்வதால் இதுபோன்ற பல விஷயங்கள் எனக்குத் தெரியாமலேயே இருந்தன. மேலும் இஜராக் களில் பாலியல் தொழில் செய்யும் விடுதிகள் பாண்டுப், சோனாப்பூர், பயளப்பள்ளி, காமாட்டிபுரம் இப்படிப் பல இடங்களில் உள்ளன. எல்லா இஜராக்களுக்கும் பாலியல் விடுதி இல்லை. ஒரு சிலருக்கு மட்டும்தான். என்னுடைய நானி விட்டில் சடங்கு செய்தால் வசதியாக இருக்காது. மேலும் அங்கு நிறையப் பேர் இருக்கின்றனர். வசதியாக இடம் இருக்கின்றது என்பதால் பாண்டுப்பில் சடங்கு நடத்தினர். என் நானி சடங்கில் கலந்துகொள்ளவில்லை. இந்தச் சடங்கு நாளில் பாண்டுப்பில் பல விஷயங்கள் தெரிந்துகொண்டேன்.

காட்குப்பர் வீட்டிற்கு வந்தவுடன் வாங்கடி பொம்பளைங்களா என்று என் நானி எங்களைக் கூப்பிட நாங்களும் ஓடிப்போய் நானி காலில் விழுந்து 'பாவ்படுத்தி நானி' என்றோம். அவள் பாவ்படுத்தி தாதி என்றாள். ஜிய்யோ பேட்டா, நல்லா இருங்க என்று நானி வாழ்த்தினார். அதன் பிறகு நானி, 'பேட்டா, நீங்க இப்ப முன்னமாதிரி இல்ல. நிர்வாணம் ஆயிட்டீங்க. அதனால நம்மகிட்டத்தான் குஞ்சு கொட்ட இல்லையேன்னு பொட்டைங்க சண்டையில, கடை கேட்கும்போது ரோட்டுல, கடக்காரங்க காசு கொடுக்காட்டித் துணியத் தூக்கிக் காட்டக்கூடாது. கர்வம் பிடிக்கக்கூடாது. நாம் பொம்பளையா வாழணும்னுதான் நிர்வாணம் பண்ணிக்கிறோம். அத வெளியில காட்டி அசிங்கப்படுறதுக்கு இல்லே. அதனால பாத்து நடந்துக்குங்க. இந்தக் குரு கொடுத்த ஜோக்கு பச்சகலர் புடவை பாவாடை ஜாக்கட் இனிமேல போட வேண்டாம். இன்னிக்கு ஒரு நாளைக்குப் போட்டிருந்துட்டு இதக் கழற்றி அக்குவா பொட்டைங்களுக்குக் கொடுத்துடுங்க. நானி உங்களுக்கு மறு ஜோக் கொடுக்கிறேன். அதப் போட்டுக்குங்க'ன்னு வேற புடவை கொடுத்தார் நானி.

எங்களோட சடங்கு ஜோக் புடவையை வாங்கிக்க ரெடியா அக்குவா பொட்டைங்க புக் பண்ணிட்டாங்க. அந்த அக்குவா

இஜராங்க ஜோக் புடவையைக் கட்டிக்கிட்டா அவுங்களும் சீக்கிரமா மாத்தா உக்காந்து நிர்வாணத்துக்குப் போகலாம்னு நம்பிக்கை வைக்கிறாங்க. அக்குவா இஜராக்கள் நிர்வாணம் செய்துகொள்ளாத வர்கள். நான் கொடுத்த ஜோக்கை வாங்கிக் கொண்டவள் என்னோட சிறிய குருபாய். அவள் என் குரு நடத்தும் காமாட்டிபுரம் பயளகள்ளி யில் உள்ள விடுதியில் இருந்தாள். என்னுடன் நிர்வாணம் செய்து கொண்டவளின் ஜோக் அவளுடைய குருபாய்க்குக் கொடுத்தாள். அவள் அவளோட குரு வீட்டில் பாண்டுப்பில் இருந்தாள்.

'காசு பணம் இருந்தாலும் நிர்வாணத்திற்குப் போகலாம் என்று நினைத்தாலும் அதற்கெல்லாம் நேரம் காலம் வந்தால்தான் ஆகும். நேரம் காலம் வராவிட்டால் நாம் நிர்வாணம் செய்துகொள்ளப் போனாலும் ஏதாவது தடைப்பட்டுவிடும். அந்த மாத்தா நம்மீது உட்கார வேண்டும். அப்போதுதான் நமக்கு நிர்வாணம் ஆகும். இப்போ பார் உனக்கு இங்க வந்து ஆறுமாதம்தான் ஆகிறது. அதற்குள் நீ பொம்பளையா ஆயிட்ட. நாங்க எல்லாம் மூன்று வருஷம் ஆகியும் கூட நிர்வாணம் போக முடியல. உங்க நானி எங்கள அனுப்பல. உன்னோட நிர்வாணம் செஞ்சுகிட்டவளுக்கு இரண்டு வருஷம் ஆச்சு. அதன் பிறகுதான் இப்போது உன்னோட நிர்வாணம் ஆனாள். அதுபோல எப்ப நமக்கு நிர்வாணம் ஆகணும்னு மாத்தா கையில்தான் உள்ளது. உனக்கு மாத்தா உட்காந்துட்டதால நீ சீக்கிரமா நிர்வாணம் ஆகிப் பொம்பளயா ஆயிட்ட' என்று என் காலா குரு கூறும்போது அவரிடம் நம்பிக்கையும் பக்தியும் எவ்வளவு உள்ளது என்று புரிந்து கொண்டேன்.

என்னைப் பொருத்தவரை அது நம்முடைய நம்பிக்கையாக இருந்தாலும்கூட நான் செய்யும் வேலைகள், என்னுடைய கடமைகள், மரியாதை, இப்படி என்னோட நடவடிக்கைகள் நானிக்குப் பிடித்து இருந்தன. அதனால் ஆறு மாதத்தில் நிர்வாணம் செய்துகொள்ள அவர் விரும்பி இருப்பார் என்றுகூட நினைத்தேன்.

என்னுடன் நிர்வாணம் செய்துகொண்டவளை அவள் குரு இருக்கும் பாண்டுப்புக்கு நானி போகச் சொல்லிவிட்டார். என்னை நானி வீட்டிலேயே பழையபடி கடை கேட்கவும் வீட்டு வேலை செய்யவும் இருக்க வைத்துக்கொண்டார்.

# 9

நிர்வாணம் செய்துகொள்வதற்குமுன் ஏதோ ஒரு அச்சம் இருந்தது. குளிக்கும்போது, வெளியில் செல்லும்போது ஏதோ ஒரு உறுத்தல் இருந்தது. என்னை நான் முழுப் பெண்ணாகப் பார்க்க முடியவில்லை. ஆனால் இப்போது அந்த அச்சம், உறுத்தல் என்னிடம் இல்லை. நான் ஒரு முழுப் பெண் என்ற அங்கீகாரம் எனக்குள் நானே கொடுத்துக் கொண்டது சந்தோஷமாக இருந்தது. கடை கேட்கும்போதுகூடக் கடைக்காரர்கள் என்னைப் பார்த்து 'க்யா சிக்னி ஹோகயா'(என்ன ரொம்ப அழகாயிட்டே) என்று கூறுவார்கள். நான் தனியாகக் கடை கேட்கப் போவதால் ஒரு சில கடைகளில் என்னைப் பார்த்து என்ன வேண்டும் என்று கேட்பார்கள். நான் கையைத் தட்டிக் கை நீட்டினால் தான் இஜரா என்று தெரிந்துகொள்வார்கள். தெரிந்த கடைக்காரர்கள் என்னுடைய மாற்றங்களைப் பார்த்து வியப்படைந்து ஆசைப்படுவார்கள். காசு கொடுக்கும்போது கையைப் பிடிப்பார்கள். கடைகளில் தனியாகக் கடைக்காரர் இருந்தால் என்னை அழைத்து உட்கார வைத்துச் சிறிது நேரம் பேசிக்கொண்டு ஐந்து ரூபாய், பத்து ரூபாய் என்று கொடுத்து அனுப்புவார்கள். நானும் தைரியமாக இப்போது அவர்களிடம் பேசவோ பக்கத்தில் உட்காரவோ முடிந்தது. ஆனால் நிர்வாணம் செய்து கொள்ளாதபோது பயம் இருந்தது.

மழைக்காலம் வந்தாலும் வெயில் அடித்தாலும் தினமும் கடை கேட்கப் போக வேண்டும். மழைக் காலத்தில் விடாமல் மாதம் முழுவதும் புயல் அடிக்கத்தான் செய்யும். அப்பொழுதுகூட மழையில் நனைந்துகொண்டு கடை கேட்பேன். அதுவும் ஒரு சந்தோஷம்தான். ரயிலில் பயணம் செய்யும்போது கூட்டமாக இருந்தாலும் பெண்கள் பக்கத்தில் தைரியமாக நிற்க முடிந்தது. இஜராக்கள் பெரும்பாலும் மின்சார ரயிலில் ஓரமாக உட்கார்ந்து பயணம் செய்வார்கள். சீட்டில் உட்காரமாட்டார்கள். மேலும் மின்சார ரயிலில் பயணம் செய்ய டிக்கட்கூட வாங்க மாட்டோம். எங்களிடம் கேட்கவும் மாட்டார்கள்.

வேலைக்குச் செல்பவர்கள் ஆண் பெண் எப்படிப் போகின்றார்களோ அதைப்போல நானும் என் வேலைகளைச் செய்யப் போவேன்.

என்னோட நானி என்மீது நல்ல அபிப்ராயமும் நம்பிக்கையும் வைத்திருந்தார். அவரை மீறி நான் எந்தத் தப்பும் செய்ய முடியாது. நல்ல பழக்கவழக்கங்களை அவரிடம் இருந்து கற்றுக்கொண்டேன். வீட்டில் உள்ள என்னோட காலா குருக்களுடன் நன்றாகச் சமைக்கவும் கற்றுக் கொண்டேன். வெள்ளிக்கிழமை நாள்களில் முல்லன் சென்று அங்குள்ள காய்கறி மார்க்கட்டில் காய்கறிகளைக் கடைகேட்டுக் கொண்டு வருவேன். மாலையில்தான் காய்கறிக் கடைக்குச் செல்ல வேண்டும். சாக்குப் பையைப் பிடித்துக்கொண்டு பிளாட்பார்ம், கடை என வைத்துக்கொண்டு காய்கறி விற்பவர்களிடம் சென்று கைதட்டினால் ஒரு காய், ஒரு தக்காளி என்று கொடுப்பார்கள். அவற்றைச் சாக்குப் பையில் வாங்கிப் போட்டுக் கொள்வேன். சாக்குப்பை நிறைந்தால் அதைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு காட்குப்பர் வீட்டிற்கு வருவேன். கொண்டுவந்த காய்கறிகளைத் தனித்தனியாகப் பிரித்துக் கவரில்போட்டு பிரிஜ்ஜில் வைப்பேன். இந்தக் காய்கறி கேட்கும் கடைக்கு வெள்ளிக்கிழமைதான் போவேன்.

காய்கறிக் கடைகளில் என்னைப்போல் வேறு இஜராக்களும் காய்கறிக் கடை கேட்க வருவார்கள். இல்லை என்று சொல்லாமல் அவர்களுக்கும் காய்கறிகளைக் கொடுப்பார்கள். ஒரு சில இஜராக்கள் வலுக்கட்டாய மாக இன்ன காய்தான் வேண்டும் என்று கேட்பார்கள். அது அதிக விலையாக இருந்தால் கொடுக்கமாட்டார்கள். கை வைத்துக் காயைத் தூக்கிக்கொண்டு சண்டை போடும் இஜராக்களும் உண்டு. நானோ கடைக்காரர்களின் கஷ்டம் தெரிந்து அவர்கள் கொடுக்கும் காய் கறிகளையே வாங்குவேன். எனக்குத் தேவைப்பட்டால் அவர்களிடம் நைசாகப் பேசிக் கடைக்கு நல்ல வியாபாரம் ஆகும் என்று அசீர்வாதம் கொடுத்துக் கேட்பேன். கொடுக்க முடியாது, அதிகவிலை, வேண்டு மானால் இந்தா இரண்டு ரூபாய் கொடுக்கிறேன் என்பார்கள். சில காய்க் கடைக்காரர்கள் கெட்டுப்போனதையும் சொத்தையாக உள்ளதையும் கொடுப்பார்கள். அதையும் வாங்கிக்கொள்வேன். வீட்டில் காய்கறி களைக் கொட்டிப் பிரிக்கும்போது காலா குருக்கள் சில சமயம் என்னைத் திட்டுவார்கள், நல்ல காய்கறிகளை வாங்கக் கூடாதா என்று. அவர்களுக்கென்ன சொல்லிவிட்டார்கள் சுலபமாக. என்னுடைய கஷ்டமும் கடைக்காரர்களின் கஷ்டமும் எங்கே புரியப் போகின்றது என மனதில் நினைத்துக் கொள்வேன்.

காய்கறிக்காகக் கடை கேட்கும்போதும் காசுக்காகக் கடை கேட்கும் போதும் கடைகளிலும் வீதிகளிலும் எனக்குப் பிடித்த சில ஆண்களைப்

பார்த்தால் என் மனதில் ஆசை ஏற்படும். அவர்களுடன் அன்பாகப் பேசவும் பழகவும் காதலிக்கவும் ஆசையாக இருக்கும். ஆனால் அது மனதில் மட்டும்தான். வெளியில் சொல்ல முடியாது. காரணம் நான் ஒரு இஜரா. அதுவும் கைநீட்டிக் கடை கடையாய்ப் பிச்சை எடுப்ப வளுக்கு இதுபோல ஆசையா என்று நினைப்பார்கள். காசு கொடுக்கும் மாலிக் (முதலாளி) நமக்குத் தெய்வம் போல. நம்மைக்கூடத் தெய்வ மாகத்தான் மாலிக்குகள் நினைக்கின்றனர். யாரோ ஒரு சில கடைக் காரர்கள் என் அழகைக் கண்டு என்மீது ஆசைப்படுவதுபோல எல்லாரும் ஆசைப்பபடுவது இல்லை. எனக்கும்கூட என் அம்மாவைப் போல, என் அக்காவைப் போல இந்த ஊர் உலகத்தைப் போல ஒருவரைத் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்ற ஆசை இருக் கின்றது. ஆசை இருந்தாலும் இஜராவாகிய என்னை யார் திருமணம் செய்து கொண்டு குடும்பம் நடத்துவார்கள் என்ற கேள்விகளும் என்னுள்ளேயே இருந்துவரும்.

ஒரு சில இஜராக்கள் தங்களுக்குக் கணவன் இருக்கிறான் என்று கூறுவதும் உண்டு. எப்படி என்று பார்த்தால் திருமணம் இல்லை. உனக்குப் பிடித்து இருக்கு, எனக்கும் பிடித்து இருக்கு என்று இருவரும் ஒரு வீட்டில் தனியாக இருக்கவும் செய்வார்கள். அப்படி எனக்குக் கணவன் கிடைத்தாலும் நான் தனி வீடு எடுத்துச் செல்ல என் நானியோ குருவோ அனுமதிக்கமாட்டார்கள். எனக்கு நல்லது கெட்டது எல்லாம் பார்த்துக்கொள்ளும் நானியை விட்டுச் செல்லவும் முடியாது. ஒரு சிலர் நானியையும் குருவையும் பிரிந்தோ தனியாக இருந்துகொண்டோ தங்கள் இஷ்டப்படி இருக்கின்றனர். ஆனால் நான் அப்படி அல்ல. கூட்டுக் குடும்பத்தோடு இருக்கிறேன். ஆம்பளை வாடையே பார்க்க முடியாத சம்சாரி வீட்டில் இருக்கிறேன். பாலியல் தொழில் செய்யும் வீடுகளுக்கு என்னை அனுப்ப நானிக்கு மனம் இல்லை. மேலும் பாலியல் தொழில் செய்வது எனக்கும் அப்போது பிடிக்கவில்லை. எனக்கு நிர்வாணம் செய்யும்வரை நான் செக்ஸ்க்கு இடம் கொடுக் காமல் இருந்தேன். கடை கேட்கும்போதும் வெளியில் செல்லும்போதும் மனதில் ஆசை இருந்தாலும் முதலில் நான் பெண்ணாக மாறவேண்டும் என்ற ஆசையைத்தான் கொண்டிருந்தேன்.

கடை கேட்கும்போது வேறுவேறு வீடுகளின் இஜராக்களைச் சந்திப்பேன். அவர்களில் சிலர் கணவனால் அனுபவித்த கொடுமை களையும் கதைகளையும் கேட்டு இருக்கிறேன். முகத்தில் பிளேடு போட்டவர்களையும் மருந்து குடித்து உயிருக்காகப் போராடியவர் களையும் தீக்குளித்து வெந்து இன்றும் உயிருடன் இருப்பவர்களையும் நேரில் பார்த்துப் பேசி இருக்கிறேன். இஜராக்களுக்குக் கணவனால்

இது போன்ற கொடுமைகளா என்று நினைப்பேன். சிலர் கணவனோடு நன்றாக இருப்பதையும் கேட்டு இருக்கிறேன். இதனால் காதல், திருமணம் என்ற பேச்சுக்கே இடம் கொடுக்காமல் இருந்தேன். நாம் திருமணம் செய்துகொண்டால் குழந்தை பெற்றுக்கொள்ள முடியாது. இந்த உலகமும் ஒத்துக்காது. எத்தனையோ பேர் திருமணத்தால் இன்று அடிவாங்கி உதை வாங்கிப் பொருள்களை இழந்து பணத்தை இழந்து கஷ்டமான நிலையில் இருக்கின்றனர்.

சகுந்தலா (பெயர் மாற்றப்பட்டுள்ளது) என்னுடைய தோழி. வெள்ளிக் கிழமை மஸ்ஜித்பந்தர் கடைகேட்கும்போது பழக்கம் ஆனவள். மஸ்ஜித்பந்தர் கடைகேட்கும்முன் முதல் முதலில் எல்லாரும் ஒரு டீக்கடையில் உட்கார்ந்து டீ குடித்துவிட்டு அவன் கடையிலேயே போனி பண்ணிவிட்டுத்தான் அடுத்த கடைகளுக்குக் கடைகேட்கப் போவார்கள். அப்போது சகுந்தலாவும் என்னைப்போலத் தனியாகத்தான் கடைகேட்க வருவாள். அவள் என்னோட பரிவாரைச் சேர்ந்தவள் அல்ல. எனக்குக் குருபாய் முறை ஆனாலும் சகுந்தலா சவுக்கன் வீட்டு இஜரா. நாங்கள் இருவரும் நல்ல தோழிகளாகப் பழகினோம். சகுந்தலா மும்பை வந்து ஐந்து வருடங்கள் அப்போது. அவளுடைய குருவுக்கு நான்கு வருடங்கள் கடைகேட்டுக் கடைகேட்டுப் பணம் கொடுத்தும் கூட அவளுக்கு நிர்வாணம் செய்யவில்லை. இன்று அனுப்புகிறேன், நாளை அனுப்புகிறேன் என்று காலத்தைக் கடத்தி வந்ததனால் சகுந்தலா குருவிடம் சண்டைபோட்டுக் கொண்டு தனியாக வீடு பிடித்துக் கடை கேட்ட பணத்தைச் சேர்த்து வைத்து நிர்வாணம் செய்து கொண்டாள்.

நிர்வாணம் செய்துகொண்டபின் சகுந்தலாவின் குரு மருதாணி விழா நடத்தியுள்ளார். அது ஒரு குருவோட கடமையும் ஆகும். அவளோட குரு, 'நீ தனியாகப் போய் இருந்தாலும் எனக்கு மாதம் ஒரு முறை கேட்கும் பணத்தைக் கொடுக்க வேண்டும்' என்று கூறியுள்ளார். ஆனால் சகுந்தலா அதை மறுத்துள்ளாள். 'குரு கேட்கும் பணத்தைக் கொடுக்க முடியாது. என்னால் முடிந்ததைச் சேலா என்ற முறைக்குக் கொடுக்கிறேன். இதற்கு முன் நான்கு வருடங்கள் உங்களுக்கு எல்லாப் பணமும் கொடுத்தேன். இனி அதுபோல இருக்க முடியாது. நானும் என் அம்மா அப்பா வீட்டுக்குப் போகணும். அவர்களையும் பார்க்கணும். என்னையும் நான் பார்த்துக் கொள்ள வேண்டும். நாலு பணம் சேத்து எனக்காகவும் என் செலவுக்காகவும் வைத்துக்கொள்ள வேண்டும். இஜராக்களின் நல்லது கெட்டதில் கலந்து கொள்ளும்போது கையிலோ கழுத்திலோ என் வசதிக்கு நகை செய்யணும். அதனால் நான் நீங்கள் கேட்கும் பணத்தைக் கொடுக்க முடியாது. குரு என்று நான் உங்களைத்

தேடி வரும்போது என் கையில் உள்ளதைக் கொடுப்பேன்' என்று கூறிவிட்டாள்.

அவளோட குரு, 'என்ன பேட்டா, நீ என்கிட்ட வரும்போது எப்படி இருந்தேன்னு கொஞ்சம் நினைத்துப் பார். கிராப்புத் தலையோட புடவை கட்டத் தெரியாம பைருப்பியா (ஆண்களைப் போல) வந்தியே, இப்போ மாசோக்கா (நல்ல நிலைமை) ஆயிட்ட, திமிரா உனக்கு? உனக்குக் காது குத்தி இருக்கேன், மூக்குக் குத்தி இருக்கேன், இஜராக்களுக்குள்ளே நல்லது எது, கெட்டது எது என்று கத்துக் கொடுத்திருக்கேன். ஒன்னுமே தெரியாம வந்த நீ இன்னிக்கு இவ்வளவு தூரம் வந்து எனக்கு சரிக்குச் சரியாப் பதில் கொடுக்கிறாயே' என்று கூறி முடியைச் சுழற்றி உதைத்து அடித்துள்ளார். குருவோட ஆத்திரம் தீர்ந்தபிறகு சகுந்தலா அவளோட வீட்டுக்குப் போய்விட்டாள். குரு சொல்லிக் கொண்டிருக்கிறாராம் அவள் எங்கயோ இருக்கட்டும். எனக்குத் தேவை பணம் என்று. சகுந்தலாவும் மாதம் ஒரு முறை குரு இருக்கும் இடம் சென்று குரு கேட்ட பணத்தைக் கொடுக்க முடியா விட்டாலும் அவளுக்குத் தகுந்த வசதியில் பணம் கொடுத்துவிட்டுக் குரு திட்டின திட்டை வாங்கிக் கொண்டு வருவது வாடிக்கையாக இருந்தது.

சகுந்தலா குடி இருக்கும் பகுதியில் அந்த ஏரியா ரவுடி ஒருவன் சகுந்தலா போகும்போதும் வரும்போதும் ஆசை வார்த்தைகளைக் கூறிக் காதலிப்பதாகவும் சொல்லியிருக்கிறான். சகுந்தலாவுக்கு அவன் ரவுடி என்பது தெரியாது. ஒரு நாள் சகுந்தலாவைச் சந்தித்து உன்னை நான் காதலிக்கிறேன் என்று கூறி அவன் கையில் சிகரட்டால் சூடு போட்டுக் கொண்டான். சகுந்தலாவும் அவனை விரும்பியிருக்கிறாள். இருவரின் காதல் அந்த ஏரியாவுக்கே தெரியவந்தது. சகுந்தலாவை ஏமாற்றி ஏமாற்றிப் பணத்தை வாங்கிக் கொண்டு கிளப்பில் சூதாடுவதும் அடிதடி என்று செல்வதும் வாடிக்கையாக இருந்தன. சகுந்தலாவும் வேறு வழி இல்லாமல் அவன் கேட்கும்போதெல்லாம் பணத்தைக் கொடுத்துக் கொண்டேயிருந்தாள்.

சில சமயத்தில் இவனுக்கு ஏன் பணம் கொடுக்க வேண்டும்? இவன் உழைத்து வந்து நமக்குக் கொடுத்தால் என்ன என்று நினைத்து ஒரு வாரம் கடைகேட்கப் போகாமல் உடல் நிலை சரியில்லை என்று படுத்துக்கொண்டாள். ஏன் கடை கேட்கப் போகவில்லை என்று சகுந்தலாவை அடித்திருக்கிறான். இனி என்னுடன் இருக்கவேண்டாம். நாம் இருவரும் பிரிந்துவிடலாம் என்று சகுந்தலா கூறியிருக்கிறாள். அவனோ,'என்னடி பிரிந்து போவதா? என்னை விட்டுட்டு வேற ஒருத்தன வச்சுக்கிலாமுன்னு நினைக்கின்றாயா? உன் அழகுதான்டி உன்னை இப்படிப் பேச வைக்குது. இந்த மும்பையில் எந்த மூலையில்

இருந்தாலும் உன்னை விடமாட்டேன். உன் முகத்தில் ஆசிட் ஊற்றிவிடுவேன்' என்று மிரட்டுகிறானாம். சகுந்தலா இப்போது குருவுக்கும் பணம் கொடுக்க வேண்டும். இவனுக்கும் பணம் கொடுக்க வேண்டும். நம்ம உழைப்பு, நம்ம இஷ்டம். ஏன் இவுங்க இப்படி என்னை உபயோகப்படுத்துகின்றனர். இவனை விட்டுச் சென்று விடலாம் என்றாலும் பயம். இவனைப் பற்றிக் குருவிடம் சொல்லி அங்கேயே தங்கிவிடலாம் என்றாலும் பயம். ஏன்தான் இஜராவாக ஆனோம்னு நினைக்கிறேன் என்றாள்.

சகுந்தலா பார்ப்பதற்குப் பெண்ணைப் போலவே இருப்பாள். அவள் கறுப்பாக இருந்தாலும் அவளுடைய கண்கள் முட்டை முட்டையாக இருக்கும். பார்க்கும் பார்வையே அவள் என்ன நினைக்கிறாள் என்று சொல்லிவிடும். அழகு இருந்தாலும் ஆபத்துதான் போல. சகுந்தலா கடைகேட்கும்போது கடைக்காரர்களைக் கண்களால், புருவத்தால் மயக்கி அவளுடைய பாவனைகள் மூலம் சிரித்தே கடைகேட்பாள். அவள் முகத்தைப் பார்த்த போது எனக்கே பொறாமையாக இருக்கும். அப்படி ஒரு புன்னகை. அந்தப் புன்னகை முகத்தில்; ஆனால் மனதில் எவ்வளவு வேதனைகள்! இப்படித்தானே ஒவ்வொரு இஜராவும் மனதில் ஒவ்வொரு வேதனையையும் கஷ்டத்தையும் சுமந்துகொண்டு வாழ்கின்றனர் என்று நினைத்துக்கொள்வேன்.

சகுந்தலாவிடம் பேசிக்கொண்டிருக்கும் போது அவள் அம்மா அப்பா ஒப்புக்கொண்டால் மும்பையை விட்டு அவளுடைய சொந்த ஊருக்கே போவதாகக் கூறினாள். அவளுடைய அம்மா அப்பா கதையை மற்றொரு நாள் கூறுவதாகச் சொன்னாள். மீண்டும் நான் அவளைச் சந்திக்க முடியவில்லை. என்ன ஆயிற்று, ஊருக்கே போய்விட்டாளா என்று தெரியவில்லை. நான் சகுந்தலாவோடு பேசுவதுகூட என் வீட்டு இஜராக்களுக்குப் பிடிக்காது. என் நானியிடம் கூறிவிடுவார்கள். என் நானியும் என்னைக் கண்டிப்பாள். 'நீ கடைகேட்கப் போனோமா வந்தோமான்னு இருக்கணும். உனக்குப் பேசவேண்டும், பழக வேண்டும் என்றால் நம் வீட்டு இஜராக்களுடன் பேசு. பழகு. சவுக்கன் வீட்டு இஜராக்களோடு உனக்கு என்ன பேச்சு? அவளே குருவை மதிக்கத் தெரியாதவள். தனியாக ஒரு வீடு எடுத்துக்கொண்டு ரவுடியைச் சேர்த்துக் கொண்டு வாழ்பவள். அவளிடம் உனக்கு என்ன பேச்சு? அவள் வீட்டில் சேலா ஆகப்போறியா என்ன?' என்று என்னைத் திட்டினார்.

சவுக்கன் வீட்டு இஜராக்களுடன் பேசினால் அவர்கள் என் புத்தியைக் கெடுத்து அவர்கள் வீட்டில் வேறு ஒரு குரு பெயரில் சேலா செய்து விடுவார்கள் என்று நினைப்பார்கள். ஒரு குரு பிடிக்கவில்லை

என்றால் தனியாக இருக்கக் குருவின் ஒப்புதல் வேண்டும். தனியாக இருந்தாலும் சகுந்தலாவுக்கு வந்ததுபோல வேறுவேறு தொந்தரவுகள் வரும். எந்த வீட்டில் வேண்டுமானாலும் ஓடிப்போய்ச் சேலா ஆகலாம். ஆனால் நானி அல்லது குருவின் வீடுகளில்தான் இருக்கவேண்டும். அவர்கள் சொல்படிதான் கேட்கவேண்டும். இது இஜராக்களின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டது. இதை மீறினால் கஷ்டம் நமக்குத்தான். ஒரு சில விஷயங்களில் இஜராக்களின் சட்ட திட்டங்கள் நல்லவை யாகவே ஆகின்றன. குரு, நானி, மூத்தவர் ஆகியோருக்குள்ள சுதந்திரம் இளையவர்களுக்கும் இருக்க வேண்டும் என்கிறார்கள். அதே குருவும் நானியும் இளையவர்களாய் இருக்கும்போது அவர்களும் சட்ட திட்டங்களுக்கும், அவர்களின் குரு, நானிகளுக்கு மதிப்பு மரியாதை கொடுத்தும் அவர்களின் பேச்சைக் கேட்டும்தான் நடந்து கொண்டனர். என்னைப் போன்றவர்களும் குரு நானி ஆகும்போது முழுச் சுதந்திரம் கிடைக்கும் என்று புரிந்துகொண்டேன்.

# 10

பதினெட்டு வயது. பாலுணர்வைக் கட்டுப்படுத்த முடியவில்லை. வயிற்றுப் பசி எப்படியோ அப்படிதான் உடல்பசிகூட. ஆனா நான் திருமணம் செய்து கொள்ளமுடியாது. என் நானி வீட்டிலும் அதற்குச் சம்மதிக்க மாட்டார்கள். பாலியல் தொழில் நடத்தும் இடத்திற்குச் சென்றாலாவது எனக்குத் தேவையான செக்ஸ் கிடைக்கலாம். நான் பாலியல் தொழில் செய்கிறேன் என்று நானியிடம் எப்படிச் சொல்வது என்று புரியாமல் வேறு வீட்டில் போய்ச் சேலா ஆகிவிடலாம் என்று நினைத்தேன். யார் வீட்டிற்குச் செல்வது? யார் நமக்குச் சவுக்கன் வீட்டுக்காரர்கள் என்று தெரிந்து கொள்ளவேண்டும். தவறி நம் வீட்டு இஜராக்கள் இருக்கும் இடத்திலேயே போய் உங்கள் வீட்டில் சேலா ஆகிறேன் என்று கூறினால் என்ன நடக்கும் என்று தெரியாமல் குழப்பத்தில் இருந்தேன்.

ஒருநாள் காலையில் எல்லாரும் தூங்கும்போது நான் வாசல் கூட்டித் தண்ணீர் தெளித்துக் கோலம் போட்டேன். பிறகு குப்பை டப்பாவை எடுத்துக்கொண்டு குப்பைத் தொட்டியில் டப்பாவோடு போட்டு விட்டுக் கட்டிய புடவையோடு அங்கிருந்து ஓடிவிட்டேன். எங்கே என்னைத் தேடிவந்து பிடித்துக்கொள்வார்களோ என்ற பயத்தில் எங்கு செல்வது என்று புரியாமல் எனக்கு என் குரு பெயரில் சேலா செய்வதற்குக் கூட்டிச் சென்றார்களே பைக்ளா அந்த இடத்திற்கே சென்றுவிட்டேன். அங்கு ஏழு வீட்டு இஜராக்களும் தனித்தனி வீடு களில் இருப்பார்கள். அதில் என் வீட்டுக்கே சென்றுவிட்டால் ஆபத்து. சவுக்கன் வீடு எது என்றும் தெரியவில்லை. ஆயினும் ஏதோ ஒரு வீட்டிற்குள் சென்றுவிட்டேன்.

'ஆஜா பேட்டா, கோன் ஹோனா?' என்று என்னை உள்ளே கூப்பிட்டு யார் வேண்டும் என்று கேட்டனர். பதிலுக்கு நான் சேலா ஆக வந்தேன் என்றேன். 'யார் வீட்டு இஜரா நீ இதற்கு முன்?' என்று கேட்டனர். நானும் என் வீட்டின் பெயரைக் கூறினேன்.

(இஜராக்களின் ஏழு வீடுகளுக்கும் தனித்தனிப் பெயர்கள் உண்டு. அவற்றை இங்கு நான் கொடுக்கவில்லை.) 'சரி, பேட்டா நீ இங்க சேலா ஆகணும்னா நீ யார் பேர்ல ஆகணும்? உன்னோட குரு பேரைச் சொல்லு' என்றனர். 'எனக்கு இந்த வீட்டில் எந்தக் குரு பெயரும் தெரியவில்லை' என்று கூறினேன். 'மாதுங்காவிலும் மைகீமிலும் நம்ம வீட்டு இஜராக்கள் இருக்காங்க. அங்கபோயி உனக்குப் பிடித்த குருவைத் தேர்வு செய்து அவரையும் அழைத்துவா. எந்தப் பரிவாரில் நீ சேலா ஆகப்போகின்றாய் எனத் தெரிந்துகொண்டு உன்னைச் சேலா செய்கின்றோம். நீ இங்கு தனியாக வந்தால் ரீத்து போடமாட்டோம்' என்று கூறிவிட்டனர்.

உடனடியாக அங்கிருந்து மின்சார ரயில் பிடித்து மகிம் சென்று அங்கு ஜோப்பட்பட்டியில் உள்ள ஒரு இஜரா வீட்டுக்குச் சென்றேன். நான் சேலா ஆகப்போகும் விசயத்தைக் கூறியவுடன் அந்த வீட்டில் உள்ள இஜரா 'என்னோட குரு மாதுங்காவில் இருக்கிறார். உன்னை அங்கு அழைத்துச் செல்கிறேன். அவரிடம் விஷயத்தைச் சொல்லு' என்று மகிமில் இருந்து பக்கத்தில் இருந்த மாதுங்காவுக்குக் கூட்டி வந்தாள்.

மாதுங்கா ஸ்டேஷன் எல்லாம் ஜோப்பட்பட்டி. அங்கு சுவர் ஏதும் இல்லை. ரயில்வே இரும்பு வேலி. அதைப் படுதா மூலம் கட்டி வீடு போல் பயன்படுத்தினர். தட்டி, சாக்குப்பை, படுதாவைக் கொண்டு சிறிய சிறிய வீடுகள். மைகீமில் இருந்து மாதுங்கா தாதர் வரை ரயில்வே வேலியில் இணைத்து இதுபோன்ற ஜோப்பட்பட்டிக் குடிசைகள் இருக்கின்றன. ஜோப்பட்பட்டி பின்புறம் ஸ்டேஷன். எதிர்ப்புறம் பெரிய ரோடு. எதிர்ப்புறம் பெரிய பெரிய மாடி வீடுகளும் கடைகளும் இருக்கின்றன. ஜோப்பட்பட்டியில் கூலிவேலை செய்யும் ஆண் பெண்கள்தான் அதிகம். ஏழை மக்கள். அதில் என்னோட புதிய குருவுக்கு இரண்டு குடிசைகள் இருந்தன. ஒன்று பாலியல் தொழில் செய்வதற்கும் இன்னொன்று சமையல் செய்வதற்கும்.

இந்த வீட்டின் கூரை படுதா தான். தட்டிகள்தான் சுவர்கள். தகரக் கதவு இருந்தது. ரோட்டில் தான் உட்கார்ந்திருக்க வேண்டும். இங்குக் குளியல் அறையோ சமையல் அறையோ படுக்கும் அறையோ இல்லை. இந்த ஒரே சிறிய குடிசையில் தான் எல்லாம். இதில் ஒரு கட்டில் மட்டும் போடப்பட்டு அந்தக் கட்டில் மூலம் தடுப்பு கட்டப்பட்டிருந்தது. பாத்ரூம் போக வேண்டுமென்றால் சற்று தூரம் யாரும் இல்லாத ரயில் தண்டவாளத்தில்தான் போக வேண்டும். குளிக்க அந்த ஜோப்பட்பட்டியில்தான் தண்ணீர் எடுத்து வந்து குளிக்க வேண்டும். குளிக்கும் தண்ணீர் ஜோப்பட்பட்டி பின்புறம் உள்ள ரயில் தண்டவாளத்தை ஒட்டித்தான் செல்லும். இரவில் படுக்கவேண்டுமானால்

ஜோப்பட்பட்டி முன்பக்கமுள்ள ரோட்டில்தான் படுக்கவேண்டும். இப்படி அங்குள்ள நிலைகளைப் பார்த்து மனதுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. இப்போது வேறு வழியில்லை. திரும்பிப் போகலாம் என்றாலும் எங்கு செல்வது என்று புரியவில்லை. அதனால் இந்த வீட்டில் சேலா ஆகச் சம்மதித்தேன்.

என்னைக் கூட்டி வந்தவள் என்னை விட்டுவிட்டு மகீம் சென்று விட்டாள். இங்கு நான் சேலா ஆகப்போகும் குரு, அவளுடைய சேலா, என்னுடைய குருபாய்கள் இரண்டு பேர், என் குருபாய் சேலா ஒருவர் ஆக மொத்தம் ஐந்துபேர் அங்கு இருக்க வேண்டும். என்னைச் சேலா ஆக்கிக்கொள்ள இந்தக் குருவுக்கு இஷ்டம். அந்த வீட்டில் இருந்த மற்றவர்கள் என்னைச் சற்றுப் பொறாமையாகப் பார்த்தனர். அவர்களைப் பார்த்து குரு, 'ஏண்டி இப்படி எடுத்தெறிந்தாற்போல் பேசுகிறீர்கள்? இஜரா நம்மளத் தேடி வந்திருக்கு. அவகிட்ட பேசுங்க. அன்பா நடந்துக்குங்க' என்று அவர்களைக் கண்டித்துவிட்டு என்னைப் பார்த்து, 'நீ சிவப்பா அழகா இருக்கே. பொம்பள மாதிரி வேற இருக்கே. எங்க இவுங்களுக்குக் கஸ்டமர் கிடைக்க மாட்டாங்களோன்னு பொறாமப்படுறாங்க' என்று சிரித்துக்கொண்டே கூறினார்.

நான் ஏன் இங்கு சேலா ஆக வந்தேன், எப்படி இந்த இடம் தெரியும், என் சொந்த ஊர் எது, யார் வீட்டில் இருந்து இங்கு வந்தேன், யார் சேலா முதலில் என்று எல்லா விசயமும் கேட்டனர். நானும் பதிலுக்கு ஒரு சில விசயங்களை மாற்றிச் சொன்னேன். காட்குப்பர் நானி பெயர் சொல்லி, அவர் வீட்டுப் பெயர் சொல்லி, என் குரு பெயரும் சொன்னேன். நான் ஊருக்குப்போக வேண்டும் என்றேன், அனுப்பவில்லை; அதனால் இங்கு வந்துவிட்டேன் என்று கூறினேன். நிர்வாணம் யார் செய்துவிட்டார் என்று கேட்டார். என் நானிதான் என்று கூறினேன். தந்தா (பாலியல் தொழில்) பண்ணிக்கிட்டு இருந்தியா என்று கேட்டார். இல்லை. கடை கேட்கச் சென்றேன் என்றேன். அம்மா அப்பா ஞாபகம் வந்தால் ஊருக்குப் போகவேண்டும் என்று கூறினேன். எப்ப வேண்டுமானாலும் போகலாம். ஆனால் சொல்லாமல் போகவேண்டாம் என்று கூறினார்.

தற்பொழுது எனக்கு இரண்டாவது குரு. இவர் பெயரில் நான் சேலா ஆகிவிட்டால் முதல் குருவோ நானியோ என்னை ஒன்றும் செய்ய முடியாது. ஒருவேளை நான் சேலா ஆகாமலேயே இங்கு இருந்தால் இஜராக்களின் சட்டதிட்டங்களின்படி என்னை அழைத்துச் சென்று விடலாம். சேலா ஆகிவிட்டால் பழைய குருவுக்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் இல்லாமல் போய்விடும். என்னைத் திட்டவோ அடிக்கவோ அவர்களுக்கு உரிமை இல்லை. இஜரா கலாச்சாரத்தின் சட்டதிட்டங்

களுக்குக் கட்டுப்பட்டு நடப்பார்கள். மேலும் சேலா செய்யும் இடத்தில் இதுபற்றிப் பேசுவார்கள். அதன்படி பழைய குருவின் வீட்டிலிருந்து ஏதாவது எடுத்து வந்திருந்தாலோ கடன் வாங்கிக் கட்டாமல் வந்திருந் தாலோ இங்கு அதைப் பற்றி விசாரித்து வசூல் செய்து கொடுப்பார்கள். ஏழு வீட்டு நாயக்குகளும் ஒன்றாக அமர்ந்து விசாரித்துத்தான் சேலா செய்வார்கள்.

ஜமாத்தில் என்னிடம் ஏன் அந்த வீட்டில் இருந்து வந்துவிட்டாய் என்று கேட்டனர். எனக்கு இருக்கப் பிடிக்கவில்லை என்று கூறினேன். உனக்குப் பணமோ நகையோ கொடுத்தார்களா என்று கேட்டனர். இல்லை என்றேன். ஏதாவது எடுத்துக்கொண்டு வந்திருக்கிறாயா என்று கேட்டனர். நான் சம்பாதித்துக் கொடுத்தேன். எனக்கு நிர்வாணம் செய்துவிட்டார்கள். மூக்குத்தி, லச்சா, கொலுசு போட்டு விட்டார்கள் என்று கூறினேன். கொடு என்று ஜமாத்தில் வாங்கிக்கொண்டு இன்னும் ஏதாவது போட்டுவிட்டார்களா என்று கேட்டனர். இல்லை என்றேன். இப்போது யார் பெயரில் சேலா ஆகப் போகின்றாய்? உனக்கு விருப்பமா? இல்லை கட்டாயமா? என்றனர். நான் இப்போது ஆகும் குருவைக் காண்பித்து இவர்கள்மீது சேலா ஆகிறேன். என்னை யாரும் கட்டாயப் படுத்தவில்லை என்று கூறினேன். பழைய வீட்டில் எனக்குப் போட்டு விட்ட பொருள்களை வாங்கி அந்த வீட்டு நாயக்கிடம் கொடுத்தனர். நான் எந்த வீட்டில் நிர்வாணம் ஆகி இருந்தேனோ அந்த வீட்டிற்கு 150 ரூபாய் பணம் கட்டிவிட்டு என்னைத் தற்போது சேலா செய்யும் குரு பெயரில் சேலா செய்தனர்.

என்னோட மனசுல இருந்தது எல்லாம். பழைய குருபேருல இருந்தப்போ நானி வீட்ல நல்லாத்தான் பாத்துக்கிட்டாங்க. எனக்கு எந்தக் குறையும் இல்லை. எந்தத் தொந்தரவும் இல்லை. என்னோட சந்தோஷம், என்னோட ஆசைகள், பாலியல் உணர்வுகள் ஆகியவற்றின் காரணமாகத்தான் தற்போது சேலா ஆகிவிட்டேன்.

தண்டவாளத்துல ரயில் போகும்போது ஜோப்பட்டட்டி தரையே அதிரும். உள்ளே இருந்து பின்பக்கம் ரயில் நிலையத்தையும் அங்கே பிளாட்பாரத்தில் நிற்பவர்களையும் பார்க்க முடியும். படுதாத் தடுப்பை விலக்கிப் பார்த்துக்கொண்டுதான் கஸ்டமரைப் பிடிக்க வேண்டும். மும்பையில் இவ்வளவு நாள் கழிந்தபிறகுதான் என் உதட்டில் லிப்ஸ்டிக் போடுகிறேன். பவுடர் பூசுகிறேன். இது எல்லாம் காட்குப்பர் நானி வீட்டில் போட முடியாது. இங்கு வரும் வாடிக்கையாளர்கள் புதிதாக இருப்பவர்களைக் கூப்பிடுவார்கள். புதிதாக இருப்பது தெரிந்தால் வந்து விடுவார்கள். நான் இப்போது புதியவள்தான். என்னுடைய குருபாய்கள் தான் கஸ்டமர்களிடம் பணம் வசூல் செய்வார்கள். பணத்தை வெளியில்

உட்கார்ந்து இருக்கும் குருவிடம் கொடுப்பார்கள். கஸ்டமர் 30, 40, 50 ரூபாய் இப்படிக் கொடுத்தால் என்னை அனுப்ப முடியாது, தன்னிடம் வா எனக் குருபாய்கள் கூறுவார்கள். என்னை 100 ரூபாய்க்குக் குறைந்து போகக் கூடாது என்று சொல்வார்கள். அங்கு வருபவர்கள் 100 ரூபாய் கொடுத்தால் அதைப் பெரிதாக நினைப்பார்கள்.

வீட்டில் பாலியல் தொழில் செய்வது அக்கம்பக்கம் தெரியும். தெரிந்தாலும் அவர்கள் ஒன்றும் சொல்லமாட்டார்கள். அதிகமாகக் குடிகாரன், காசு கம்மியாக உள்ள கஸ்டமர்கள்தான் வருவார்கள். சில சமயத்தில் ஐம்பது ரூபாய் கொடுத்து நான்தான்வேண்டும் என்றால் என்னிடமே அனுப்புவார்கள். எனக்குப் பிடித்த கஸ்டமர்களைவிட பிடிக்காத கஸ்டமர்கள்தான் அதிகம் வருவார்கள். என்ன செய்வது, தொழில் என்று இறங்கிவிட்ட பிறகு நான் அவனிடம் போக மாட்டேன், இவனிடம் போகமாட்டேன் என்று சொல்ல முடியுமா? பாத்ரூம் வந்துவிட்டால் டப்பாவில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வெகுதூரம் சென்று புல்சந்துகளில் உட்கார்ந்து வரவேண்டும். தண்ணீர் எடுக்கக்கூட வெகுதூரம் சென்று போரிங்கில் அடித்துக்கொண்டுதான் வரவேண்டும். தினமும் குளிக்கும் அளவில்கூட நிலமை இல்லை. ஆரம்பத்தில் நான் நிர்வாணம் செய்துகொண்டு சில மாதங்களே ஆனதால் முரட்டுத் தனமான கஸ்டமர்களிடம் அனுப்பமாட்டார்கள். எனக்குக் கிடைப்பது டிப்ஸ் காசு பத்து ரூபாய், ஐந்து ரூபாய்தான். அதைக் கொண்டுதான் ஜாக்கட் தைக்க வேண்டும், பவுடர், லிப்ஸ்டிக் வாங்க வேண்டும்.

என் குரு இரவில் தாராவி சென்று சாராயம் (அப்போது கலர் சாராயம் கிடைக்கும்) குடித்துவிட்டு என் குருபாய்களுக்கும் கொண்டு வந்து கொடுப்பார். என்னையும் குடி என்று கூறுவார்கள். எனக்குப் பழக்கம் இல்லை. வேண்டாம் என்று கூறுவேன். கட்டாயப்படுத்த மாட்டார்கள். குடிசையில் ஏழையாக இருந்தாலும் நான் நன்றாக இருக்கிறேன், நன்றாகப்பேசுகிறேன் என்பதால் இந்த வீட்டில் செல்லப் பிள்ளையாக இருந்தேன். எனக்குப் பாலியல் தொழில் செய்ய விருப்பம் இல்லாவிட்டாலும் அதைச் செய்யவேண்டியது நிர்ப்பந்தம் ஆனது. சுகத்திற்காகச் சென்ற நான் நாளடைவில் அதைத் தொழிலாகத் தான் நினைக்க முடிந்தது. கரண்ட்கூட இல்லை. தீபம் ஏற்றி அந்த வெளிச்சத்தில்தான் பாலியல் தொழில், சாப்பிடுவது எல்லாம். காட்குப்பர் வீட்டில் தனித்தனி அறைகள். பாத்ரூம்கூட வீட்டுக் குள்ளேயே இருந்தது. டிவி பார்க்கலாம். ஆனால் அங்கு வேலைகளும் அதிகம். அங்கு தங்கக் கூண்டுக்குள் அடைச்ச கிளி மாதிரியான ஒரு உணர்வு. இங்கு சுதந்திரமாய் இருப்பதுபோன்ற உணர்வு இருந்தது.

இரவில் தூங்கவேண்டும் என்றால் ரோட்டில் ஜோப்பட்பட்டி முன்புறம்தான் சாக்கு விரித்துப் போர்வை போர்த்தித் தூங்க வேண்டும். அந்தச் சமயத்தில் ரவுடிகள் யாராவது வந்தால் என்னைத் தெரியாமல் போர்வையைப் போட்டு மூடித் தூங்குவதைப்போல இருக்க வைத்து விட்டு என் குருபாய்கள் அவர்களிடம் போவார்கள். ஜோப்பட்பட்டி எதிர்ப்புறம் ஒரு பணக்காரக் குடிகாரன். அவன் போகும்போதும் வரும் போதும் என்னையே பார்ப்பான். அவன் இங்கு வரமாட்டான். ஏனெனில் இங்கு வந்தால் அவனுடைய வீட்டிற்குத் தெரிந்துவிடும் என்ற பயம். அப்படியும் சில சமயம் கரண்ட் இல்லையென்றால் வருவான். அவனை நாங்கள் சேர்க்கமாட்டோம். அவனை விரோதித்துக் கொள்ளவும் முடியாது. அதனால், 'பையா(அண்ணா) எதிர்ப்புறம் இருப்பவர் நீங்கள்தான் எங்களைப்போன்ற ஏழைகளுக்குப் பாதுகாப்பு. நீங்க இங்க இந்த ஏழைக் குடிசைக்கு வந்தால் பார்ப்பவர்கள் எங்களைத் தான் திட்டுவார்கள்' என்று கூறி அனுப்பிவிடுவோம்.

'தெரி மாக்கி சூத் நீங்க என்ன தொழில் செய்யறீங்கனு எனக்குத் தெரியாதா? நான் பணம் கொடுக்கமாட்டேனா காகே கோரி' என்று என்னைக் கேட்பான். சாமி சாமி அவ ஊரில் இருந்து மேமானாக (விருந்தாளியாக) வந்திருக்கா. அவளுக்கு உடம்பு சரியில்ல. தயவுசெய்து நீங்க இங்க நிக்காதீங்க. உங்க வீட்ல இருந்து யாராவது பாத்துட்டா எங்கள இங்க வாழவே விடமாட்டாங்கன்னு இப்படி ஏதாவது சொல்லிச் சமாளித்து அனுப்பிவிடுவார்கள்.

ஒருசமயம் அவன் நண்பர்களோடு குடித்துவிட்டு இரவில் ரோட்டில் நாங்கள் தூங்கிக்கொண்டிருக்கையில் துணிகளில் தீக்குச்சியைப் பத்த வைத்து எங்கள் மீது போட்டுவிட்டு ஓடிவிட்டான். இதை அவ்வப் போது வழக்கமாகச் செய்துகொண்டிருப்பான். எங்களுக்குச் சுடும் போதுதான் எழுந்து கூச்சல்போட்டுக்கொண்டு அணைப்போம். அதை வேடிக்கை பார்த்துச் சிரித்துக்கொண்டு நண்பர்களுடன் எஞ்சாய் செய்வான். அவன் இப்படி அடிக்கடி செய்வதால் எங்களில் ஒருவர் (என்னைத் தவிர) மாற்றி மாற்றி இரவு முழுவதும் தூங்காமல் விழித்து இருப்போம். அந்தக் குடிகாரன் குடித்துவிட்டால் பைத்தியக்காரன் போல் பேசுவான். அவனை எதிர்த்துத் திட்டவோ அடிக்கவோ அவன் வீட்டில் சொல்லவோ எங்களுக்குப் பயம். மராட்டியர்கள் அவர்கள். அவர்களை எதிர்த்தால் நாங்கள் இங்கு வாழ முடியாது. நாங்கள் செய்யும் தொழிலும் அப்படி. என்ன செய்வதென்று புரியாமல் தினம் அவனுக்காகப் பயந்தே இருப்போம்.

ஏழைகள் அதுவும் இஜரா ஜென்மங்கள் நாங்க இதுபோலப் பணக் காரப் பயலுவளுக்கு டைம்பாஸ் போல. போலீசுக்குப் போகலாம்னா

அவுங்களும் நமக்கு சப்போட் பண்ண மாட்டாங்க. இதெல்லாம் எங்க தலையெழுத்துன்னு இருப்போம். இதுபோல வேறுவேறு விசயங்க. ரவுடிகளால் தினமும் பயந்தே வாழவேண்டும். இந்த பயம்போகத் தூக்கம் வர நானும் சாராயம் குடிக்க ஆரம்பித்தேன். முதன்முதலில் கசப்பாகவும் நெஞ்சு எரிச்சலாகவும் இருந்தது. அதுவே போகப்போக என் குரு எப்போது வாங்கி வருவாள் என்று காத்திருப்பேன். பணக்கார ரவுடிகள் மட்டுமல்ல, எங்களைப்போல ஜோப்படட்பட்டியில் இருக்கின்ற ரவுடிகளும் வருவார்கள். குருவை மிரட்டி குடிக்க பணம் வாங்கிச் செல்வார்கள்.

கருப்பா வளத்தியா ஒரு ரவுடி ஒருமுறை வலுக்கட்டாயமாக செக்ஸ் செய்யக் கூப்பிட்டான். நான் உள்ளே ஓடிப்போக அவனும் உள்ளே வந்துவிட்டான். என் குருவும் ஏதும் சொல்ல முடியாத நிலை. குருபாய்கள் ஓடிப்போய்விட்டனர். என்னை மறைத்து வைக்கமுடியாத சூழ்நிலை அன்று. என்ன செய்வது என்று தெரியாமல் அவனிடம் செக்ஸ் வைத்துக்கொள்ள நிர்ப்பந்தம் ஆனது. என்னிடம் எனக்குப் பிடிக்காத முறையில் செக்ஸ் செய்யச் சொன்னான். நான் அதுபோலச் செய்ய முடியாது என்று அவன் காலைப் பிடித்துக் கெஞ்சினேன். என்னைத் தகாத வார்த்தைகளால் திட்டி வலுக்கட்டாயமாக உறவு (ஏனல் செக்ஸ்) வைத்துக்கொண்டான். நானோ வலி தாங்க முடியாமல் கத்தினேன். என் குருவைக் கத்திக் கூச்சல் போட்டுக் கூப்பிட்டேன். என் வாயை அவனோட கையால் பொத்திக்கொண்டு நீண்ட கத்தியைக் காட்டி மிரட்டினான். என்னைக் குத்திவிடுவதாகவும் கூறினான்.

என் குருவோ உள்ளே வரமுடியாமல் யாரிடமும் உதவி கேட்க முடியாமல் என்ன செய்வது என்று புரியாமல் 'பேட்டா நாம் இங்க வாழணும். அவுங்க சொல்லுற மாதிரி கேட்காவிட்டால் இங்க பொழைக்க முடியாது. அவன் கேட்ட மாதிரி அவனைச் சந்தோஷப் படுத்து' என்று கூறிவிட்டார். பாவம் அவர் என்ன செய்வார். இப்படித் தான் என்னுடைய குருபாய்களும் வேதனைப்பட்டு இருப்பார்கள். இதற்கெல்லாம் விடிவு காலமே இல்லையா? இஜராங்களா இவங் களுக்கு என்ன இளக்காரமோ தெரியலையேன்னு மனசுக்குள்ளே நினைத்துக்கொண்டு வலி தாங்க முடியாமல் அவன் சொன்னபடி கேட்டேன். என்னுடைய அந்தப் பகுதி மேல் தோல்கள் இரண்டு பக்கமும் கிழிந்து ரத்தம் வந்தது. அதைப் பார்த்தும்கூட இரக்கப்படாமல் என்னிடம் உள்ள மணிபர்சைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டான். இவனெல்லாம் என்னைப்போல இஜராவாக ஆகி இவனைப்போல ஒருவன் உறவு கொண்டால்தான் என் வலியும் கஷ்டமும் என்னவென்று புரியும்.

அவன் சென்ற பிறகு என் குரு உள்ளே வந்து என்னைப் பார்த்தார். எனக்கு ஏற்பட்ட நிலையைக் கூறிக் காட்டினேன். இதற்குமுன் நீ இதுபோல் செக்ஸ் வைத்துக்கொண்டதில்லையா என்று கேட்டார். இல்லை என்றேன். ஆயில் ஏதாவது போட்டுக்கொண்டு செக்ஸ் வைத்துக் கொள்ள வேண்டும் என்றார். ஐயோ இதில் எனக்கு விருப்பம் இல்லை. இவன் ரவுடி, கத்தியைக் காட்டுகிறான் என்ன செய்வது? வலுக்கட்டாயமாக இதுபோலச் செய்துவிட்டான் என்று கூறினேன். அப்போது என் சொந்த ஊரில், சிறிய வயதில், அந்த மலைக்கோட்டை யில் தோழிகளுடன் இருக்கும்போது ஒருத்திக்கு ஏற்பட்ட நிலை இன்று எனக்கு வந்துள்ளது. இப்படித்தானே அவளும் வேதனைப்பட்டு இருப்பாள் என்று நினைத்துக்கொண்டேன்.

தாராவியில் உள்ள ஒரு டாக்டரிடம் குரு என்னைக் கூட்டிச் சென்றார். இதுபோன்ற வலிகளுக்கு அந்த டாக்டரிடம்தான் இஜராக்கள் செல்வார்கள். டாக்டர் என் காயங்களைக்கூடப் பார்க்க வில்லை. குரு ஏதோ சொல்ல ஊசிபோட்டு மாத்திரை எழுதிக் கொடுத்து அனுப்பிவிட்டார். வீட்டில் சுடுதண்ணீர் வைத்து ஒரு அகலப் பாத்திரத்தில் டெட்டால் ஊற்றி அதன்மேல் என் காயப் பகுதி முழுதும் மூழ்கும் அளவுக்கு உட்கார்ந்து இருப்பேன். அப்போதுதான் எரிச்சல் இல்லாமல் இருக்கும். மூன்று நாட்கள் எரிச்சல் தாங்க முடியாமல் இதுபோலச் செய்துகொண்டு மருந்து மாத்திரைகளை நேரம் தவறாமல் சாப்பிட்டுக்கொண்டு வேதனையும் கஷ்டமும் அனுபவித்தேன்.

அதே ரவுடி திரும்பி ஐந்து நாட்கள் கழித்து வந்துவிட்டான். என்னிடமும் குருவிடமும் தன்னோட பணம் 500 ரூபாயும் கோல்ட் வாட்சும் இங்கு காணாமல் போய்விட்டன என்றும் நான்தான் எடுத்தேன் என்றும் கூறினான். என்னோட 500 ரூபாயையும் கோல்ட் வாட்சையும் திருப்பித் தராவிட்டால் என் முகத்தில் அறுப்பு போட்டு விடுவதாகவும் ஜோப்படாவைத் தீ வைத்து எரித்துவிடுவதாகவும் சண்டைபோட்டான். என்னைப் பலவந்தமாக அனுபவித்துவிட்டு என்னோட மணிபர்சில் இருந்த பணத்தையும் எடுத்துக்கொண்டு இப்போது என்னைத் திருடி என்கிறானே என்ன செய்வது? அவனை எதிர்த்துப் பேசவும் முடியவில்லை. அவனே ஒரு ரவுடி. அவன் வரும் போது கத்தியைத் தவிர கையில் வாட்சு எதுவும் இல்லை. சும்மாவே கூறி இன்னும் பணம் புடுங்க வந்திருப்பான் போல. என் குரு என் முகத்தைப் பார்த்தார். 'ஐயோ அம்மா, சத்தியமாக நான் எடுக்க வில்லை' என்று கூறிக்கொண்டே அந்த ரவுடியின் காலில் விழுந்து கத்தினேன், கதறினேன். அந்த ரவுடி சாயந்திரமா நான் வருவேன்.

அதற்குள் என் பணமும் வாட்சும் திருப்பித் தரவேண்டும். இல்லை என்றால் நடப்பதே வேறு என்று சொல்லிவிட்டுச் சென்றுவிட்டான். போகும்போது ஜோப்பட் வீட்டின் தகரக் கதவை ஓங்கி அடித்துவிட்டுச் சென்றான்.

குரு எனக்குத் தைரியம் கூறினார். 'அவன் புதிதாக அழகாக யாராவது வந்தால் இப்படித்தான் வருவான். செக்ஸ் செய்வான். இனி அவன் வரமாட்டான். அவன் சும்மா நம்மைப் பயமுறுத்திவிட்டுச் செல்கிறான். நீ பயப்படவேண்டாம்' என்றார். 'நான் காசு பணம் சம்பாதிக்கணும்னு இந்தத் தொழிலுக்கு வரலை. என்னோட உணர்ச்சிகளுக்குத் தடை போட முடியாத நிலையில்தான் இந்தத் தொழில் செய்ய வேண்டியதா யிற்று. இப்போ இந்தத் தொழில்ல இவ்வளவு கஷ்டமும் கொடுமையும் இருக்கறதத் தெரிஞ்சுக்கிட்டேன். இந்தத் தொழிலே எனக்கு வேண்டாம். நான் எங்க சொந்த ஊருக்கே அம்மா அப்பாகிட்டப் போய் அவுங்க கால்ல கையில விழுந்தாவது எங்க வீட்டோட சேர்ந்துகொள்கிறேன்' என்று அழுதேன்.

'நீ இங்க வந்து இரண்டு மாசம் கூட ஆகல. உன்னோட குருபாய்ங்க ரெண்டு வருஷமா இங்க சம்பாதிச்சுக் கொடுத்துக்கிட்டு இருக்காங்க. அவுங்களையே நான் இன்னும் ஊருக்கு அனுப்பவில்லை. உன்னை எப்படி அனுப்புவது?' என்றுகேட்டார். மேலும் 'ஒரு வருஷத்துக் காவது சம்பாரிச்சுக் கொடு. அதுக்கு மேல ஊருக்கு அனுப்புறே'ன்னு சொன்னாங்க. 'எனக்கு நீங்க ஒன்னும் கொடுக்க வேண்டாம். இப்போதைக்கு என் மனசு சரியில்ல. ஒரு பத்து நாட்களுக்காவது ஊருக்குப் போகிறேன்' என்றேன். 'உங்க வீட்ல ஒத்துக்காட்டி என்ன செய்வே? மொட்டை அடிச்சு ஒதச்சா என்ன செய்வே?' என்று என்னோட குருபாய்ங்க கேட்டாங்க. 'டெல்லியில இருந்து போனப்போ எனக்கு ஆப்ரேஷன் ஆகல. இப்போ நிர்வாணம் ஆயிட்டேன். அத வச்சு அம்மா அப்பாகிட்ட அழுது எப்படியாவது ஒத்துக்க வைப்பேன். கொஞ்சம்கூடப் பாசம் இல்லாமப் போகுமா?' என்று உதட்டளவில் தான் பதில் சொல்ல முடிந்தது. ஆனால் அந்த வீட்டில் என்னால் ஒரு நிமிடம் கூட இருக்கமுடியவில்லை. ஏதாவது ஒரு காரணம் சொல்லி அங்கிருந்து போய்விடவேண்டும் என்ற எண்ணம் மட்டும்தான் இருந்தது.

'ரவுடி வந்து மிரட்டிச் சென்றதால் இஜரா பயப்படுகிறாள். ஊருக்கு அனுப்பாவிட்டால் ஓடிப்போய் வேறு வீட்டில் சேலா ஆகிவிடுவாள். அதனால் இவளை ஊருக்கு அனுப்பி வையுங்க குரு' என்று என் குருபாய் கூற என் குருவும் எனக்கு ஆயிரம் ரூபாய் பணமும் ஐந்து புடவையும் கொடுத்து விடி ரயில் நிலையத்தில் கன்னியாகுமரி எக்ஸ்பிரசில் டிக்கட்

வாங்கிக் கொடுத்து ரயில் புறப்படும்வரை என்னுடனே இருந்தனர். நானும் வேறு வழியின்றி ஊருக்கே போகலாம் என்று ஒருமனதோடு ரயில் புறப்படுவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ரயிலும் புறப் பட்டது. குருபாய் வழியனுப்ப வந்தவள் 'பத்து நாட்களில் வந்துவிடு' என்று கூறி டாடா காட்டினாள்.

முதல் தடவையாக டெல்லிக்குப் போகும்போது எப்படி விலாசம் தெரிந்து இஜராக்கள் வீட்டிற்குச் செல்வேன் என்ற பயம் என்னுள் இருந்தது. அம்மாவுக்கு உடல்நிலை சரியில்லை என்று ஊர் வந்தபோது நான் இஜராவா இருப்பது வீட்டிற்குத் தெரியாது என்று நினைத்துக் கவலையில்லாமல் வந்தேன். வீட்டுக்குச் சென்றபின் என்னோட நிலைமையே வேறு ஆயிற்று. திரும்பவும் வீட்டைவிட்டு மும்பை வந்து ஒருவருடம் ஆகியிருக்கும். இப்போது பெண்ணாக மாறிய நிலையில் ஊருக்குச் செல்கிறேன். ஊரில் என்னை எப்படிப் பார்ப்பார்கள், வீட்டில் என்ன நடக்கப்போகிறது, கூடப் படித்த நண்பர்கள் என்ன சொல்வார்கள், அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் என்ன நினைப்பார்கள் என்று ஒரே குழப்பமாக இருந்தது.

பெண்ணாக மாற வேண்டும்; மாறி ஆயிற்று. இருந்தாலும் ஆணாக இருப்பது மட்டும்தான் ஊருக்குத் தெரியும். என்னோட உணர்வுகள், நான் பெண்ணாக மாறுவதற்குக் காரணங்கள், இஜராக்களுடன் தொடர்புகள் இவை எதுவும் என் ஊர் மக்களுக்குத் தெரியாது. ஒருவேளை வீட்டில் ஒப்புக்கொண்டாலும் ஊர் மக்கள் ஒப்புக் கொள்ளாவிட்டால் என்ன செய்வது? இப்படி ஏராளமான சந்தேகங் களும் கேள்விகளும் என்னுள் இருந்தன. என்னுடைய கவலைகளால் பசி என்னவென்றுகூடத் தெரியவில்லை. என் மனசுக்குள்ளே கேள்வி களும் பதில்களும் கொடுத்துக்கொண்டு வீட்டில், ஊரில் இது கேட்டால் இது பதில் என்று பயிற்சி எடுத்துக்கொண்டே சென்றேன்.

# 11

முதல் தடவையா எங்க ஊருக்குப் புடவையோட முழுப் பெண்ணாகப் போய் இறங்கினேன். எங்க ஊரு டவுன்ல என்னை யாரும் அடையாளம் கண்டுபிடிக்கவில்லை. அங்கிருந்து எங்க கிராமத் துக்கு ஆட்டோ பிடித்து வீட்டுக்குச் சென்று இறங்கினேன். மொதத் தடவையா வீட்டுக்குள்ள அடி எடுத்து வைக்க அம்மாதான் என்னை அடையாளம் கண்டுக்கிட்டு, 'நீ செத்துப்போயிட்டேன்னு நெனச்சோம். அது உண்மையா இருந்திருக்கக் கூடாதா? இது என்னடா வேஷம்? இப்படி ஆகக்கூடாதுன்னுதானே உன்ன அடிச்சோம்? மொட்ட அடிச்சோம்? திருப்பி இப்படிச் சொல்லிக்காம ஓடிப்போயிட்டு இப்ப இந்த நிலையில வந்து நிக்கிறியே. உனக்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் இருந்தாத் தைரியமா வந்திருப்பே?' என்று சத்தம்போட்டுப் பேச என் அண்ணன் ரூமுக்குள் படுத்திருந்தவன் எழுந்து வந்து என்னைப் பார்த்தவுடன், 'பொட்டத் தாயோலி எங்கடா வந்த? எங்க மானம் மரியாதையை எல்லாம் காற்றில் விட்டது போதாதுன்னு இப்போ பொம்பள வேஷம் போட்டுக்கிட்டே வீட்டுக்கு வந்திட்டியா? உனக்கு எவ்வளவு தைரியம்' என்று சொல்லிக் கொண்டே என்னை அடிக்க ஒரு குச்சியைத் தேடி எடுத்துக்கொண்டு வந்தான்.

'நான் இப்போ ஆப்ரேஷன் செய்துகொண்டு முழுப் பெண்ணாக மாறிவிட்டேன். இனி என் இஷ்டம் போல்தான் இருப்பேன். என்னை இனிமேல் அடிக்க உதைக்க உனக்கு உரிமை இல்லை. ஒரு பெண்மீது கை வைத்தால் சட்டத்தில் என்ன தண்டனை என்று உனக்குத் தெரியுமா? என்னை நீ அடித்தால் நான் போலீசுக்குப் போய்விடுவேன்' என்று கூறினேன். 'நீ பொம்பளையாடா' என்று கூறிக்கொண்டு என்னை அடிக்கக் குச்சியை ஓங்க, நான் 'புடவையைத் தூக்கிப் பாருடா நான் பொம்பளையா இல்லை ஆம்பளையா' என்று சொல்லிக் காட்டிவிட்டேன்.

'குஞ்ச அறுத்து நாய்க்குப் போட்டுட்டா நீ பொம்பளையாடா?' என்று கூறிக்கொண்டு ஓங்கின குச்சியை அடிக்காமல் நிறுத்த என் அம்மா நான் புடவையைத் தூக்கிக் காண்பித்ததைப் பார்த்துவிட்டு வாய்வாயாக அடித்துக்கொண்டு, 'மூனும் முடிச்சோட அறுத்துப் போட்டுட்டு வந்துட்டானே. எப்படித்தான் அறுக்க மனசு வந்துச்சோ? எப்படித்தான் உயிரோட இருக்கானோ? குழந்தையா இருக்கறப்போ மாணியத் தொட்டுத் தொட்டு முத்தம் கொடுத்து வளத்தேனே. இப்போ அறுத்துவிட்டுப் பட்ட மரமாட்டம் நிக்கிறானே. பெத்தவ முன்னாடியே தூக்கிக் காட்டி என்னோட மனச நோகடிக்கிறானே. இத எங்க இப்படிச் செய்துகிட்டான்? இதுபோல செஞ்சுகூட உயிரோடு இருக்க முடியுமா? ஐயோ... ஐயோ' என்று கூறிக்கொண்டே மயக்கம் அடைந்துவிட்டார்.

அக்கம்பக்கம் வீட்டில் இருப்பவர்கள் அம்மாவின் சத்தம் கேட்டு வந்துவிட்டார்கள். பக்கத்து வீட்டு அக்கா என்னைப் பார்த்து, 'துரைசாமி இது என்னடா வேஷம்? இப்போ நிஜமாவே பொம்பளையா மாறி விட்டாயா? ஏன்டா உங்க அம்மா, அப்பா, அண்ணன், அக்கா இவர்களைப் பற்றி உனக்குக் கொஞ்சம்கூட நினைப்போ பாசமோ இல்லையாடா? என்னடா ஆச்சு உனக்கு?' என்று கேட்டார். 'நான் இனி ஆம்பளை இல்ல. என்னை வாடா போடா என்று கூறவேண்டாம். துரைசாமி என்று அழைக்கவேண்டாம். என் பெயர் ரேவதி. ரேவதி என்று சொல்லுங்கள்' என்றேன்.

அதற்கு 'ஏண்டா உன்னைச் சின்ன வயசுல இருந்து தூக்கி வளர்த் திருப்போம்; துரைசாமி துரைசாமின்னு கூப்பிட்டிருப்போம். இப்ப எப்படிடா ரேவதின்னு கூப்புடறது. இது உனக்கே நாயமாப் படுதாடா? நீ சேலை கட்டிக்கிட்டா உன்னப் பொம்பளையா நினைக்க முடியுமா? சட்டுபுட்டுனு ஊருக்குத் தெரிந்து போறதுக்குள்ளே உன்னோட வேஷத்தைக் கலைச்சுப்புடுடா'ன்னு அந்த அக்கா சொல்ல, அண்ணன் எனக்கு லுங்கி சட்டையை எடுத்துக்கிட்டு வந்து 'மாத்திக்கிடா பொட்டத் தாயோலி' என்று சொல்லிக் கொடுக்க வந்தான். நான் மாத்திக்க முடியாதுன்னு சொன்னேன். இந்த வேஷத்துல இங்க இருந்தா ஊரே சிரிக்கும்டா. மரியாதயாச் சொல்றேன். இந்த ஆம்பளைத் துணியைப் போட்டுக்கோன்னு சொன்னான்.

எனக்குக் கடுமையான கோபம் வந்தது. என்னோட மனசுக்குள்ள இருந்ததப் போட்டு உடச்சுப்புடனும்னு ஆத்திரம் வந்தது. என்ன நடந்தாலும் சரி என்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு 'எதுடா வேஷம்? நான் இப்ப போட்டுகிட்டு இருக்கிறது நிஜம். இதற்கு முன் நான் போட்ட துணி, வாழ்ந்த வாழ்க்கை, நடந்துகொண்ட

முறைகள்தான்டா வேஷம். இனி இதுதான் என் நிஜமான வாழ்க்கை. யார் என்னை என்ன நினைத்தாலும் சரி, யார் என்னை என்ன சொன்னாலும் சரி. நான் இப்படித்தான் இருப்பேன்' என்று சத்தம் போட்டுக் கூறினேன். 'கொழுத்துப் போயி ஆடப்போறன் ஆடப் போறன்னு ஊருக்குள்ள பொம்பள வேஷம் போட்டு ஆடிப்புட்டு இப்போ ஆப்ரேஷன் பண்ணி வாழ்க்கையை நாசம் பண்ணிட்டு இந்த வாழ்க்கையை நிஜம்னு சொல்லி எங்க மானம் மரியாதையைக் குழிதோண்டிப் புதைக்கிறாயா? சரி, இனி உயிரோடு இருந்தால் என்ன, இறந்தால் என்ன' என்று அண்ணன் கூறினான். 'நான் ஒன்றும் கொழுத்துப்போய் அறுத்துக்கொள்ளவில்லை. என்னோட உணர்வுகள், என்னோட ஆசைகள், பெண்ணாக இருக்கவேண்டும் என்ற துடிப்புகள். அதனால்தான் பொம்பளையா மாறினேன். இனி இப்படித்தான் வாழ்வேன்' என்று உறுதியாகக் கூறிவிட்டேன்.

பக்கத்து வீட்டுப் பெண்கள் எல்லாரும் அம்மாவின் முகத்தில் தண்ணீர் தெளித்துத் தண்ணீர் குடிக்க வைத்துச் சுயநினைவுடன் அவரை மெல்ல உட்கார வைத்தார்கள். அம்மா நான் பேசியதைக் கேட்டுக்கொண்டுதான் இருந்தார் போல. என்னிடம்'பொம்பளையாப் பொறந்தவங்க எல்லாம் கஷ்டப்படறது போதாதா? ஆம்பளப் புள்ளை இல்லையேன்னு தவமா இருக்கிறாங்க. நீ ஆம்பளையாப் பொறந்து பாதியில இப்படிப் பொம்பளைன்னு சொன்னா இந்த ஊரும் உலகமும் ஒத்துக்குமா? ஊருக்குள்ள பத்துபேரு முன்னாடி தலைநிமிர்ந்து போக முடியுமா? உனக்கென்ன, யாரு என்ன வேண்டுமானாலும் சொல்லிட்டுப் போகட்டும்னு இருப்பே. நாங்க ஒரு கல்யாணம், கச்சேரி, சாவுன்னு போறபக்கம் எல்லாம் துரைசாமி பொம்பளையா ஆயிட்டானாமேன்னு ஊரே கேக்குறப்போ எங்களத் தல குனிய வச்சுட்டியேடா' என்று அம்மா புலம்பினார்.

'இந்த ஊரும் உலகமும் என்னை மட்டுமல்ல. கொஞ்சம் ஊனமாக இருந்தாலும் சரி, கெட்டுப் போயிட்டாலும் சரி. அதைப் பற்றி விவரமாகப் பேசுவதும் சாடை சொல்றதும் தூற்றுவதும் செய்வார்கள். அவர்களுக்கு நாம் ஏன் பயப்படணும்? எனக்காக நீங்கள் ஏன் தலைகுனிய வேண்டும்? உங்கமேல இருக்கிற பாசத்தாலதான் நான் இங்க வந்தேன். நான் இப்படி இருப்பது உங்களுக்கு அவமானம், தலைக்குனிவு என்றால் நான் எங்கள் இனத்தோடு போய்ச் சேர்ந்து கொள்கிறேன். உங்கள் சொத்து சுகம் எதுவும் எனக்கு வேண்டாம். எங்குக் கையெழுத்துப் போடச் சொல்கிறீர்களோ அங்குக் கையெழுத்துப் போட்டுவிட்டு நான் போகிறேன். என்னால் யாரும் தலைகுனிய வேண்டிய அவசியம் இல்லை. உங்களுக்கு ஒரு புள்ளை இல்லை என்று நினைத்துக்

கொள்ளுங்கள்' என்று வேதனையுடன் அடிவயிற்றில் வலி ஏற்படும் வகையில் கூறினேன்.

'ஒரு ஆம்பளையோட ஒரு பொம்பளை சிரிச்சுப் பேசிட்டா போதும் அவனுக்கும் அவளுக்கும் தொடர்பு இருக்குன்னு ஊரே பேசும். நீ இப்போ பொடவ கட்டிக்கிட்டு நாலு பக்கம் போனா வாய் கூசாம உன்னைப் பத்தி மட்டுமல்ல, என்னையும் சேத்து என்ன புள்ள வளத்தி இருக்கான்னு தூத்துவாங்கடா. டேய் வேண்டாமுடா. வேணும்னா உங்க இனத்தோட இருக்கறப்போ பொடவை கட்டிக்கிட்டு இருந்துக்கோ. இங்க ஆம்பளை துணியை மாத்திக்கிட்டு இருடா' என்று அம்மா சொல்ல, அண்ணன்,' நீ ஏம்மா அவங்கிட்டப்போயிக் கெஞ்சிக்கிட்டு இருக்க. கத்திரிக்கோல எடுத்தாந்து முடியக் கத்திரிச்சுப்போட்டுக் கன்னம் கன்னமா ரெண்டு கொடுத்தாத் தன்னாப்ல ஆம்பளத் துணிய மாத்திக்கிட்டுப் போறான்' என்று கூறினான்.

யுத்தமே நடந்துகொண்டிருந்தபோது அப்பா மோட்டார் பைக்கில் வீட்டிற்கு வந்தார். அப்பா பைக் சத்தம் கேட்டு அங்கிருந்த பக்கத்து வீட்டுப் பெண்கள் அவரவர் வீட்டிற்குச் சென்றுவிட்டனர். அண்ணனும் அம்மாவும் பேசாமல் இருந்தனர். எனக்கோ நெஞ்சு படபடவென அடித்துக்கொண்டது. அப்பாமுன் எப்படிப் பேசுவது, இந்தக் கோலத்தில் எப்படி இருப்பது என்று பயம் அதிகமானது. அப்பா வீட்டிற்குள் வந்தார். நான் தலைகுனிந்து நின்றேன் பயத்தோடு. 'யார் இது? ஏன் இப்படி உட்காந்து இருக்க?' என்று அம்மாவைக் கேட்டார். 'பாருங்க இவன. எப்படியெல்லாம் இவனுக்குச் செல்லம் கொடுத்து வளர்த்தி இருப்போம். நம்பள எல்லாம் மோசம் பண்ணிவிட்டு இப்போ பொடவ கட்டிக்கிட்டு ஆப்ரேஷன் செய்துக்கிட்டு நான் பொம்பளை, பொம்பளையாதான் இருக்கப் போறேன் என்று சொல்றான்' என்று அம்மா பதில் சொல்ல, அப்பா என்னிடம் எதுவும் பேசவில்லை. என்ன நினைத்தார் என்றும் தெரியவில்லை.

வீட்டுக்குள் சென்றுவிட்டுத் துணியை மாற்றிக்கொண்டு வெளியில் வந்து 'அவன் இஷ்டம்போல் இருக்கட்டும். நாம் அடிச்சுப் பார்த்தோம். மொட்டைகூடப் போட்டு அடிச்சோம். அவன் அடங்கவில்லை. இப்ப என்ன அவன் பொண்டாட்டி கட்டிப் புள்ள பெத்துப்புட்டா இப்படி ஆனான்? அவனோட தலையெழுத்து இப்படி ஆகணும்னு இருக்கு. யாரால மாத்த முடியும்? இப்போ என்ன செய்து என்ன ஆகப் போறது? ஒன்றுமில்லை. எல்லாம் முடிஞ்சு போச்சு. இவனோட கூடப் பொறந்தவங்க எல்லாம் பொண்டாட்டி புள்ளையின்னு குடும்பமா இருப்பாங்க. இவனுக்குக் குடும்பம் என்று சொல்லிக்கொள்ள நாம் இருக்கற வரைதான். நாம செத்துட்டாத்தான் இவனுக்குக் கஷ்டம்

தெரியப்போவுது. இனிமேல் இவன் ஆம்பள துணியைப் போட்டுக் கிட்டாலும் ஊரு சனங்க பொட்டையா ஆப்ரேஷன் செஞ்சுக் கிட்டான்னுதான் சொல்லுவாங்க. அதனால அவன் இஷ்டம், அவனோட தலையெழுத்து எப்படியோ போகட்டும். வெந்த சோத்தத் தின்னுட்டுக் கிடக்கட்டும்' என்று வேதனையோடும் கண்ணீர் விடாத குறையாகவும் கூறினார் அப்பா.

அப்பாவுக்கு எல்லாரும் பயப்படுவார்கள். நான்கூடத்தான். அப்பா என் இஷ்டம்போல இருக்கச் சொல்லியும் அப்பாவிடம் நான் மறுபேச்சு எதுவும் பேசவில்லை. என்னால் பேசவும் முடியவில்லை. அவர் காலில் விழுந்து அழவேண்டும் என்று என் மனம் துடித்தாலும் ஏதோ ஒரு பயம் என்னை ஒன்றுமே செய்யவிடாமல் கட்டிப்போட்டுவிட்டது. அப்பா வெளியில் சென்றுவிட்டார். அம்மாவும் அண்ணனும் என்னை வெளியில் சுத்தப்போகக் கூடாது, நல்லது கெட்டது என்று பொது நிகழ்ச்சிகளுக்குப் போகக் கூடாது, முக்கியமாக ஆண்களோட சேர்ந்து பேசறது, சுத்தறது வைத்துக்கொள்ளக் கூடாது என்று கட்டளை போட்டார்கள். கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்கள். நானும் எதுவும் பேசாமல் மவுனமாய் இருந்தேன்.

எனக்கும் மனதில் வெட்கம், பயம் எல்லாம் இருந்தது. ஊர் மக்கள் என்ன நினைப்பார்களோ, உடன் படித்தவர்கள் என்ன சொல்வார் களோ, சொந்தக்காரர்கள் என்ன கேட்பார்களோ என்ற பயமும் இருந்தது. நடு அண்ணனுக்கும் சின்ன அண்ணனுக்கும் அப்போது திருமணம் ஆகவில்லை. என்னைக் கண்டிப்பது நடு அண்ணன்தான். அக்கா அவரோட கணவன் ஊரில் ஒரு ஆண்குழந்தையுடனும் மாமியாருடனும் வசித்து வந்தாள். பெரிய அண்ணன் எங்கள் ஊரிலேயே வேறு வீட்டில் வசித்து வந்தார். எங்கள் சொந்த வண்டியில் அப்போது வேலை செய்யவில்லை. வேறு ஒரு ஓனர் வீட்டு வண்டியில் டிரைவராக இருந்தார். அவர் காதல் திருமணம் செய்துகொண்டு தனிக்குடித்தனம் போய்விட்டார். மற்ற இரண்டு அண்ணன்களும் எங்கள் சொந்த வண்டியில் டிரைவராக இருந்தார்கள்.

எங்க வீட்ல அண்ணனுங்க, அம்மா, அப்பா, அக்கா எல்லாரும் துரைசாமின்னுதான் கூப்பிடுவாங்க. அவுங்க அப்படிக் கூப்பிடும்போது மனசுக்குக் கஷ்டமாத்தான் இருக்கும். என்ன செய்யமுடியும்? என்னைப் பொம்பளையாப் பொடவையோட ஒத்துக்கிட்டதே பெரிய விசயம் என்று நினைத்துக்கொள்வேன். என்னோட அக்கா என்னை வந்து பார்த்துச் செல்வாள். அவளோட குழந்தை என்னைக் குடுமி மாமா குடுமி மாமா என்று கூப்பிடும். அப்போது ஐந்து வயதிருக்கும். ஆண் குழந்தை. அக்காவுக்கு இன்னொரு ஆண்குழந்தையும் பொறந்தது.

அக்கா வீட்டுக்கும் நான் சென்று வருவேன். அப்போது அக்காவுக்கும் மாமாவுக்கும் மட்டும்தான் நான் துரைசாமி என்று தெரியும். அக்கா ஊரில் உள்ளவர்களுக்குத் தெரியாது. அக்காவோட தங்கை என்றுதான் என்னைச் சொல்லிக்கொண்டனர். எங்கள் ஊரில்தான் எல்லாருக்கும் தெரிந்திருந்தது நான் இப்படி இருப்பது. அக்கா ஊருக்குப் போக வேண்டுமானால் எங்கள் ஊரில் இருந்து நாமக்கல் டவுன் சென்று அங்கிருந்துதான் பஸ் ஏறிப் போகவேண்டும். அதற்காக நாமக்கல் டவுன்வரை அப்பாவோ அண்ணன்களோ கூட்டிவந்து விடுவார்கள். நான் வெளியில் வருவேன் என்று ஆவலுடன் ஊர்க்காரர்கள் சிலர் காத்திருப்பார்கள் என்னைப் பார்க்க வேண்டும் என்று.

நாமக்கல் டவுனில்கூட என்னை அப்போது யாரும் அடையாளம் கண்டுகொள்ளவில்லை. ஒரு பெண் சாதாரணமாக எப்படிப் போய் வருவாளோ அதைப்போலத்தான் நானும் சென்று வருவேன். என்னுடைய குரல் மட்டும்தான் கொஞ்சம் ஆண்குரல்போல இருக்கும். மெதுவாகப் பேசித்தான் பஸ்ஸில் டிக்கட் வாங்குவேன். எங்கே என் குரல்மூலம் என்னைப் பொட்டை என்று கண்டுபிடித்து விடுவார்களோ என்ற பயம் இருந்தது. பஸ்ஸில் பெண்கள் பக்கம்தான் அமர்ந்து செல்வேன். பக்கத்தில் இருக்கும் பெண்களிடம் பேசவே மாட்டேன். அவர்களே ஏதாவது கேட்டால்கூட அதிகம் பேசாமல் குறைத்துப் பேசிச் சமாளிப்பேன். அக்கா வீட்டுக் குழந்தைக்கு ஏதாவது பிஸ்கட் வாங்க வேண்டும் என்றால் பஸ் ஸ்டாண்ட் கடையில் வாங்குவேன். அந்தக் கடைக்காரரின் காதில் விழாதவாறு ஊமை சாடையில் பிஸ்கட் வாங்குவேன். என்னைப் பொட்டை என்று தெரிந்துவிட்டால் கிண்டல் செய்வார்களோ என்று பயம். இந்த விசயம் வீட்டிற்குத் தெரிந்தால் வீட்டில் என்ன சொல்வார்களோ என்ற பயமும் இருந்தது. மறைந்து மறைந்து வாழ வேண்டிய சூழ்நிலை அப்போது இருந்தது.

அக்கா வீட்டில் மாமா என்னுடன் அன்பாகப் பேசுவார். குழந்தைகளைப் பார்த்து அவர்களுடன் விளையாடுவது என் மனதுக்குச் சந்தோஷமாக இருக்கும். அக்காவின் குழந்தைகளை என் குழந்தைகளாக மனதில் நினைத்துக்கொள்வேன். அக்கா குழந்தைகளுக்குத் தண்ணீர் ஊற்றும் போது துணையாக நானும் குளிக்க வைப்பேன். அக்கா வீட்டில் நான் நார்மலாகப் பேசினாலும் அக்கம் பக்கம் இருப்பவர்கள் வந்தால் என்னுடைய குரலைக் குறைத்துப் பேசுவேன். சில சமயம் அறைக்குள் போய்விடுவேன்.அதிக நாட்கள் அக்கா வீட்டில் இருக்கமாட்டேன். போனால் இரண்டு நாள் அல்லது காலையில் சென்று மாலையில் வந்துவிடுவேன். அக்கா என்னிடம் ஏன் நான் இப்படி ஆனேன் என்று எதுவும் கேட்கமாட்டாள். அப்பாவைப் போல 'ஏதோ உன்னோட

தலையெழுத்து, யார் செய்த பாவமோ நீ இப்படி இந்த வயதில் மாறவேண்டும் என்று இருக்கின்றது' என்று மட்டும்தான் சொல்வாள். சின்ன வயதில் இரண்டுபேரும் சண்டை போட்டாலும் அக்காவுக்குத் திருமணம் ஆகிக் குழந்தை குடும்பம் என்று வந்தவுடன் எவ்வளவோ பொறுப்புகளைச் சமாளித்துக்கொண்டு இனிமையான வாழ்க்கை வாழ்ந்து வந்தாள். அக்காவைப் பார்க்கும்போது நானும் பெண்ணாகப் பிறந்திருந்தால் அக்காவைப் போலக் குழந்தைகள் பெற்றுக்கொண்டு சந்தோஷமாக இருந்திருக்கலாம் என்று நினைத்துக்கொள்வேன்.

என்னோட கிராமத்தில் என்னைப் பத்திப் பெருசாப் பேசிக் கிட்டாங்க. என்னைப் பார்க்கணும்னு நிறையப்பேரு நினைச்சாங்க. பழக்கம் இல்லாம எப்படி வீட்டுக்குப் போயிப் பார்க்கறதுன்னு சிலபேரு நினைச்சாங்க. எங்க சொந்தக்காரங்க அம்மா வழியில அப்பா வழியில இருக்கிறவங்க என்னைப் பத்தித் தெரிஞ்சுக்கிட்டா வந்து பாப்பாங்க. அம்மா வழியில இருக்கறவங்கன்னா அம்மாவுக்குக் கூடப்பிறந்தவங்க, அம்மா, அப்பா, பாட்டி யாரும் இல்லை. அம்மா சின்னக் குழந்தையா இருந்தப்போ அவுங்க அம்மா அப்பா இறந்துபோயிட்டாங்க. அம்மா வோட ஆயாதான் அம்மாவை வளத்தாங்க. சாலையோரம் மண் போடுவதும் மரத்திற்குச் சுண்ணாம்புக் கரை கட்டுவதுமான வேலை செய்து அம்மாவை வளர்த்து அப்பாவுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். அம்மாவோட சித்தப்பா, சின்னம்மா, பெரியப்பா, பெரியம்மா குடும்பங்கள் இருந்தன. அவர்கள் எங்கள் ஊருக்கு அவ்வப்போது வந்துபோவார்கள். அவர்களின் ஊர்களில் திருவிழா, திருமணம் என்றால் அம்மாவை அழைக்க வருவார்கள். எங்கள் ஊருக்கும் அம்மாவின் சொந்தக்காரர்கள் ஊருக்கும் 20 மைல் தூரம் உள்ளது. அம்மாவின் சொந்தக்காரர்கள் எல்லாரும் ஏழைகள். விவசாயம் செய்தும் கூலிவேலை செய்தும் பிழைப்பவர்கள்.

அப்பாவுடன் பிறந்தவர்கள் இரண்டு அண்ணன்கள், நான்கு தங்கைகள். என்னோட பெரியப்பாக்கள் எங்கள் வீட்டை ஒட்டியே உள்ளனர். என்னோட அத்தைகள் எல்லாரும் நாமக்கல், சேலம் இப்படி இருந்தார்கள். என்னோட அம்மா, அப்பா வழியில் உள்ள சொந்தக் காரர்கள் எங்கள் வீட்டுக்கு வரும்போது என்னைப் பற்றியும் பேசு வார்கள். எல்லாரும் எனக்குச் சப்போட் பண்ணித்தான் பேசுவார்கள். 'என்ன ஆம்பளையா இருந்திருந்தா பொண்டாட்டி கட்டிப் பிள்ளை குட்டியோட அவன் அவனுடைய பரிவாரத்தோட இருந்திருக் கலாம். என்ன பண்றது, அவனோட ஜாதகத்துல இப்படிப் பாதியில பொம்பளையா மாறணும்னு இருக்குபோல. அத மாத்த யாரால் முடியும்? ஏதோ நீங்கதான் இனிமே இவனுக்கு ஆதரவா இருக்

கணும். ஊர்க்காரப் பய புள்ளைங்க என்னவேணும்னாலும் சொல்லிக் கிட்டுப் போகட்டும். எத்தனை நாளைக்குப் பேசுவாங்க. போகப் போகச் சரியாப் போயிடும். நீங்க மனசைப்போட்டுக் கொளப்பிக்க வேண்டாம். புள்ளையாப் பொறந்து வாழாவெட்டியா வந்தா வச்சுக் காப்பாத்த மாட்டோமா? அதுபோல நினைச்சுக்குங்க. அவனோட மனசு நோகற மாதிரி நடந்துக்க வேண்டாம். அவன் சாமியோட ஒன்னு.' இப்படி எனக்கும் என் குடும்பத்தில் உள்ளவர்களுக்கும் ஆறுதல் கூறிச் செல்வார்கள்.

என் அப்பா வழியில் உள்ளவர்கள் எல்லாரும் வசதியானவர்கள். அவர்கள் ஊரில் திருவிழா என்றாலோ, அவர்கள் வீட்டில் நல்லது கெட்டது என்றாலோ அழைக்கும்போது அண்ணார், அக்கா, அம்மா, அப்பாவுக்கு மட்டும்தான் பத்திரிகை கொடுத்து வரச் சொல்வார்கள். என்னைக் கூப்பிடமாட்டார்கள். அதே அம்மா வழிச் சொந்தக்காரர்கள் என்னைக் கட்டாயம் வரவேண்டும், அங்கு உன்னை யாரும் அடை யாளம் கண்டுகொள்ள மாட்டார்கள், நாங்களும் உன்னைக் காட்டிக் கொடுக்க மாட்டோம், உன்னைப் பெண் என்றுதான் சொல்வோம் என்று என்னைப் பெசலாகக் கூப்பிடுவார்கள். அம்மா வழியில் உள்ள சொந்தக்காரர்களுக்குப் பாசமும் அன்பும் அரவணைப்பும் அதிகம். அப்பா வழியில் பாசமும் அன்பும் உதட்டளவில் மட்டும்தான். சிலருக்கு மனதில் மட்டும் இருந்தாலும் அவர்களின் கௌரவம், மதிப்பு என்னால் பாதிக்கப்பட்டுவிடுமோ என்று நினைத்தார்கள். ஆரம்பத்தில் நான் அம்மா வழியில் உள்ள சொந்தக்காரர்கள் வீட்டுக்குப் போகத் தயங்கினேன். என் வீட்டில் அங்குப் போகக் கூடாது என்று கூறினர். அவர்கள் அழைக்கும்போது கண்டிப்பாக வருகிறேன் என்று கூறுவேன். ஆனால் போகமாட்டேன். இப்படிச் சொந்தக்காரர்களிடம் ஆரம்பத்தில் பேச வெட்கமாக இருக்கும்.

அம்மா வழியில் சொந்தக்காரர்கள் உள்ள ஊரில் வருடம் ஒருமுறை திருவிழா நடக்கும். அப்போது நான் முதல் தடவையா புடவை யுடன் பெண்ணாக அவர்கள் ஊருக்குச் செல்ல அம்மாவிடமும், அண்ணனிடமும் அனுமதி வாங்கிக்கொண்டு சென்றேன். சிறிய வயதில் ஆண்பிள்ளையாக இருந்தபோது இதுபோன்ற திருவிழாவுக்குச் சென்று இருக்கிறேன். என்னோட அக்காவின் நகைகளைப் போட்டுக் கொண்டு சென்றேன். அங்கு அம்மாவின் சொந்தக்காரர்கள், எனக்கு ஆயா முறை உள்ளவர்கள், மாமா முறை உள்ளவர்கள் வீடுகளுக்குச் சென்றேன். என்னை அவர்கள் வீட்டில் துரைசாமி என்று கூப்பிடும் போது அப்படிக் கூப்பிடவேண்டாம் என்று கூறுவேன். ரேவதி என்று கூப்பிட்டால் எனக்குச் சந்தோஷமாக இருக்கும்.

கோயில் திருவிழா பார்க்க ஆயா, அத்தை முறை உள்ளவர்களோடு போய்ச் சாமி கும்பிட்டு வருவேன். அவர்களின் ஊர்க்காரர்கள் இந்தப் பொண்ணு யாரு என்று கேட்டால் என் அம்மாவின் பெயரைச் சொல்லி அவர்களின் மகள் என்பார்கள். என் குடும்பத்தைத் தெரிந்த வர்கள் 'ஏன் கண்ணு ஒங்க வீட்டுக்காரரு, புள்ளைங்களக் கூட்டி வரலையா?'ன்னு கேட்டார்கள். இல்லே திருமணம் ஆகவில்லை என்று பதில் சொல்லும் போது என் அம்மாவுக்கு ஒரே ஒரு பொட்டப்புள்ள, அதுக்குத் திருமணம் ஆகிவிட்டதே என்று கூறும்போது அவர்கள் என் அக்காவை நினைத்துப் பேசுவது தெரிந்தது. உடனே பதிலுக்கு அக்காவின் தங்கை என்று கூறி ஆயா, அத்தை முறை இருப்பவர்கள் சிரிப்பார்கள். அவர்களுக்குப் பதில் சொல்ல முடியாமல் மெதுவாகக் குசுகுசுன்னு துரைசாமிதான் இப்படி ஆகிவிட்டான் என்பார்கள்.

மாமா வீட்டில் மாமா மகன் என்னை அவனோட மோட்டார் சைக்கிளில் ஊருக்குள் கூட்டிச் செல்லும்போது ஊரில் உள்ள அவரோட நண்பர்களைப் பார்த்து, 'பொண்ணு எப்படி? தள்ளிக்கிட்டு வந்திட்டேன்' என்று கூறுவார். பதிலுக்கு நண்பர்கள் 'என்னடா சொல்ற? யாருடா இந்தப் பொண்ணு?' என்று ஆச்சரியமாகக் கேட்பார்கள். பதிலுக்கு மாமா மகனும் சிரித்துக்கொண்டே 'என்னோட அத்தைப் பையன். மும்பை போய் இப்படி மாறி வந்துவிட்டான்' என்று சொல்லத் தலைமீது கையைத் தட்டிச் சிரித்துவிட்டு அன்பாகப் பேசுவார்கள். தமாஷாக, நல்ல பொண்ணுதான், உங்க அத்தைகிட்ட எத்தனை பவுன் போடு வாங்க, எவ்வளவு பணம் கொடுப்பாங்கன்னுக் கேட்டுக் கல்யாணம் முடிச்சுக்கோன்னு சொல்லுவாங்க.

மனசுக்குள்ள கபடு சூது இல்லாம தமாசாக அவங்க பேசறது என்னையும் நெகிழ வைக்கும். அது நிஜமா ஆகக் கூடாதான்னு நினைக்க வைக்கும். ஆனால் நானும் ஒரு பெண் என்று நினைத்தாலும் ஏதோ ஒரு பக்கம் நாம் ஆணாகப் பிறந்துதானே இப்போப் பெண்ணாக இருக்கிறோம். நம்மால் குழந்தை பெற்றுக் கொடுக்க முடியுமா, திருமணம் செய்துகொள்ள முடியுமா என்ற விஷயம் குத்திக்கொண்டே இருக்கும். தமாசாகப் பேசுவதைச் சிரிப்பதைத் தவிர நடைமுறைக்குக் கொண்டுவர முடியாதே என்று மனதில் நினைத்துக்கொள்வேன். இப்படி அந்த ஊரில் ஒருவருக்குத் தெரிந்தது பலருக்கும் தெரிய வந்தது. என்னை ஆவலுடன் பார்ப்பார்கள். ஆனால் அங்கு என்னை யாரும் கேலி கிண்டல் செய்யவில்லை. என்னிடம் அதிகமாகப் பேசுவதற்கும் பழகுவதற்கும் பெண்கள் இஷ்டப் படுவார்கள். நான் இஜரா என்று அவர்கள் தெரிந்து கொண்டதால் அவர்களிடம் பேசச் சற்றுக் கூச்சப்படுவேன்.

ஒருமுறை என்னோட அத்தை முறை கொண்டவர் என்னிடம் நைசாக மெதுவாகக் கேட்டார் 'உனக்கு எங்களைப்போல மார்பகம் இருக்கிறதா?' என்று. நானும் ஆம் என்றேன். எப்படி இதெல்லாம் வந்தது என்பார். அதற்கு ஊசி இருக்கிறது என்றேன். ஆனால் உண்மையில் அப்போது எனக்கு மார்பகம் இல்லை. ஊசி இருப்பது உண்மை. நான் அந்தச் சமயம் போட்டுக் கொள்ளவில்லை. எனக்கு மார்பகம் இல்லையென்று கூறவும் முடியவில்லை. அதனால் அவரிடம் பொய் சொன்னேன். அத்தை வீட்டில் குளிக்க மட்டும்தான் பாத்ரூம் உள்ளது. ஒன்னுக்கு ரெண்டுக்குப் போக வேண்டுமானால் காடு கரைகளுக்குத்தான் போகவேண்டும். அங்குள்ள பெண்கள் காடு கரைகளுக்குப் பாத்ரூம் சென்றாலும் நான் செல்வதற்குக் கூச்சப்படுவேன். என்னோட சொந்தக்காரர்கள் திருவிழாவில் என்முன் கூறாவிட்டாலும் என் பின்னால் 'ஆம்பள தாண்டி. பொம்பளையாப் பொடவ கட்டிக் கிட்டு வந்திருக்கு' என்று பேசுவார்கள். மாமா மகனின் நண்பர்கள் சிலபேருக்கு மும்பைக்கு வண்டியில் டிரைவராகப் போகும்போது என்னைப் போன்றவர்கள் பிச்சை எடுப்பதும் பாலியல் தொழில் செய்வதும் பாலியல் தொழில் விடுதி நடத்துவதும் தெரிந்து இருந்தது. அதனால் அவர்களும் என்முன் கிண்டல் செய்யாவிட்டாலும் பின் அவர்களின் சக நண்பர்களிடம் என்னைப் பற்றிப் பேசிக்கொள்வார்கள்.

எத்தனை நாளைக்குச் சொந்தக்காரங்க வீட்ல இருக்கமுடியும்? திருவிழான்னு போனோம். அவர்களுக்குப் பாரமா இருக்கக் கூடாது. ஏதோ கூப்பிட்ட மரியாதைக்குப் போனோம். இருக்கச் சொன்னாலும் என்னோட மனசில் ஒருத்தருக்குப் பாரமா அங்கயே இருந்துக்கிட்டுச் சாப்பிட்டுக்கிட்டு இருக்கக்கூடாது என்ற எண்ணம். அதுவும் நான் ஒரு இஜரா. பாத்ரூம் செல்லவோ பேசவோ கஷ்டமா இருக்கு. நம்ம வீடுன்னா நம்ம அண்ணா, அம்மா, அப்பான்னு அந்தக் கதையே வேற. அடிச்சாலும் உதைச்சாலும் நம்ம வீடு, நம்ம உரிமை என நினைப்பேன். வீட்டுக்குள்ள எத்தனை நேரம்தான் முடங்கிக் கிடக்கிறது என்று போகப் போக வீட்டு வாசலில் உட்கார ஆரம்பித்தேன். எங்கள் வீட்டுக்குப் பக்கத்திலேயே தண்ணீர் பிடிக்கும் குழாய் பஞ்சாயத்தில் போட்டிருந் தார்கள். அங்கு அதிகமாக எங்கள் வீதியிலிருந்தும் சந்து பொந்து களிலிருந்தும் பெண்கள் தண்ணீர் பிடிக்க வருவார்கள். எங்கள் வீட்டுக்குள்ளேயே கிணற்றில் மோட்டார் வைத்துத் தண்ணீர் எடுத்துக் கொள்வோம். தண்ணீருக்குக் குழாய்க்குப் போக வேண்டிய அவசியம் இல்லை.

தண்ணீர்க் குழாயில் பெண்கள் என்னைப் பற்றிக் குசுகுசுவெனப் பேசிக்கொண்டு என்னைப் பார்ப்பார்கள். எங்க ஊருல இருக்கிறவங்க

வெளியூர் ஆட்களுக்குச் சொல்வார்கள் 'ஆம்பள பாரு பொம்பள வேஷம் போட்டுக்கிட்டு உக்காந்து இருக்கு' என்று. இப்படி என்னைப் பத்திப் பேசறப்போ, என்னைப் பார்க்கறப்போ கஷ்டமா இருக்கும். சில சமயத்தில் கோபம்கூட வரும். இப்படித்தான் எங்க ஊருப் பெண்ணுக்குத் திருமணம் ஆகி மாப்பிள்ளையோட ஊர்வலமா வந்தாங்க. நான் வாசக் கதவைக் கொஞ்சமாத் திறந்து அந்தத் திருமண ஊர்வலத்தைப் பார்த்தேன். எங்கள் வீட்டிற்கு அருகில் வரும்போது எங்கள் ஊர்க்காரர்கள் சிலருடைய பார்வை என் வீட்டுமீதுதான் இருந்தது. நான் நிற்பதைப் புரிந்துகொண்டு மாப்பிள்ளை ஊர்க்காரர்களுக்குக் கண் ஜாடை காட்டி மெதுவாகப் பேசி என்னைக் காட்டினார்கள். திருமணக் கோலத்தில் இருக்கும் பெண், மாப்பிள்ளையிடம் ஏதோ குசுகுசுவெனச் சொல்ல, மாப்பிள்ளை என்னைப் பார்க்க எனக்கு மனசு கஷ்டமாக இருந்தது. அடுத்தவர்களை விமர்சிக்கக் குறை சொல்ல ஜனங்கள் எப்படியெல்லாம் ஆர்வமாக இருக்கின்றனர் என்று புரிந்து கொண்டேன். என்னைப் பார்ப்பது, சிரிப்பது ஒரு பொழுது போக்காகவும் அதிசயத்தைப் பார்ப்பதாகவும், காமெடியாகவும் நினைத்திருந்தனர்.

இதேபோல் புதிதாகத் திருமணம் ஆனவர்கள், கணவன், மனைவி, நண்பர்கள் இப்படி மோட்டார் சைக்கிளில் போனால்கூட நான் வீட்டு வாசலில் உட்கார்ந்து இருந்தால் என்னைப் பார்க்கச் சொல்வார்கள். பைக் ஓட்டுபவருக்கு என்னைப் பற்றித் தெரியாவிட்டால் பின்னால் உட்கார்ந்திருப்பவர் அவர் காதில் சொல்ல பைக் ஓட்டுபவர் என்னைத் திரும்பத் திரும்பப் பார்த்துக்கொண்டே பைக் ஓட்ட எங்கே ஆக்சிடெண்ட் ஆகிவிடுமோ என்ற பயம் இருக்கும் எனக்கு. இப்படி என்னைப் பார்ப்பவர்களை நான் என் நாக்கைக் கடித்துக் காட்டி மிரட்டுவதைப்போல நடிப்பேன். முகத்தைத் திருப்பிக்கொண்டு போவார்கள். நடந்துவரும் ஆண்கள் பெண்கள், பக்கத்துக் கிராமத்தினர், குழந்தைகள்கூட என்னைப் பார்க்க வேண்டும் என்று எங்கள் வீட்டின் முன் நின்று குடிக்கத் தண்ணீர் கேட்பார்கள். அம்மா சில சமயத்தில் தண்ணீர் கொடுப்பார்கள். அப்போது என்னைப் பற்றி விசாரிப்பார்கள். அம்மாவும் ஏதாவது பதில் சொல்வார்கள். தண்ணீர் கேட்டவர்கள் துரைசாமி ஏம்மா இப்படி சேலை கட்டிக்கிட்டு இருக்கான்? ஆப்ரேஷன் கூட பண்ணிக்கிட்டானாமே என்று கேட்க என் அம்மா 'யாரோ அவனோட மனசை மாத்திப் பித்து பிடிக்கவைத்து இப்படிக் கொழுத்துப் போயிச் செஞ்சுட்டாங்க. எல்லாம் என்னோட தலையெழுத்து. யார் செய்த பாவமோ என் புள்ளைக்கு இதுபோல ஆயிடுச்சு' என்று பதில் சொல்வார்கள்.

சமயபுரம் மாரியம்மன் கோயிலுக்குப் போகலாம்னு அம்மாகிட்டக் கேட்டேன். அம்மாவும் என்னைக் கூட்டிக்கிட்டுப் போனாங்க.

நான் அன்னைக்கு அக்காவோட பட்டுப்புடவையைக் கட்டிக்கிட்டு அக்காவின் நகைகளைப் போட்டுக்கிட்டு வீட்டைவிட்டு ஒரு அரை கிலோமீட்டர் நடந்துசென்று நாமக்கல் பஸ் ஸ்டாண்ட் செல்ல டவுன்பஸ் பிடிக்கச் சென்றோம். ரோட்டில் செல்பவர்கள் என்னை ஆச்சரியமாகப் பார்த்தனர். சில பெண்கள் என் அம்மாவைப் பார்த்து 'உனக்கு இனி ஒரு மகள் இல்லை இரண்டு மகள்கள்' என்று கூறினார்கள். அம்மாவும் புன்சிரிப்போடு ஆமாம் என்றார். என்னைப் பார்த்து 'பொம்பள தோத்துப் போகனும் உன் முன்னாடி' என்று கூறி 'என்ன பேரு வச்சிருக்க?' என்று கேட்டார்கள். நானும் ரேவதி என்று சொன்னேன். 'இனி நாங்க துரைசாமின்னு கூப்பிடக்கூடாது. ரேவதின்னுதான் கூப்பிடணும் ஏங்கண்ணு' என்று சொன்னார்கள். நானும் ஆமாம் என்றேன். டவுன் பஸ்ஸுக்காகக் காத்திருந்தபோது அங்கு எங்களைப் போல டவுனுக்குச் செல்பவர்கள், கல்லூரிக்குச் செல்பவர்கள், அக்கம் பக்கம் உள்ள கடைக்காரர்கள் எல்லாம் என்னையே பார்த்தார்கள். எங்க ஊரு என்பதாலும் எங்க அம்மா பக்கத்தில் இருப்பதனாலும் யாரும் என்னைக் கேலி கிண்டல் செய்யவில்லை. என் கண்களும் சுற்றிச் சுற்றி யார் என்னைப் பார்க்கிறார்கள், என்னைப் பற்றி ஏதாவது பேசுகிறார்களா, அவர்கள் மனதில் என்ன நினைக்கின்றார்கள் என்று நோட்டம் இட்டுப் பார்த்தன. வச்ச கண்ணு வாங்காம எல்லாரும் என்னையே பார்த்துக்கொண்டு இருந்தார்கள்.

டவுன் பஸ்ஸில் ஏறிப்போகும்போது நான் பஸ்ஸின் கம்பியைக் பிடித்துக் கொண்டு இருக்கும் விதம், புடவை விலகிவிட்டால் அதைச் சரி செய்வது, முகம் வேர்த்துவிட்டால் கைக்குட்டையால் துடைத்துக் கொள்வது இப்படி என் ஒவ்வொரு செய்கையையும் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். தெலுங்கு பேசும் சில தலித் பெண்கள் அங்குள்ள வர்களுக்குத் தெலுங்கு தெரியாது என நினைத்து நான் நடந்துகொள்ளும் விதம் பெண்கள் போலவே இருக்கு என்று பேசிக் கொண்டார்கள். மெதுவாகப் பேசு, காதில் விழப்போகிறது என்றும் கூறினார்கள். 'ஆம்பளையா? எப்படி இப்படிப் பொம்பளை மாதிரி ஆச்சு? ஆச்சரியமா இருக்கே. யாரு வீட்டுப் பையன்?' என்று கேட்டுக் கொண்டார்கள். என்னுடைய பெயர் ரேவதி என்றும், ரேவதி என்றுதான் கூப்பிட வேண்டும் என்றும் பேசிக்கொண்டார்கள். சில பெண்கள் தைரியமாக 'ரேவதி நல்லா இருக்கியா?' என்றார்கள். நானும் பதிலுக்கு 'நல்லா இருக்கேன்' என்று கூறினேன்.

கல்லூரி செல்லும் பசங்கள் நேரடியாகக் கிண்டல் செய்யப் பயந்து ஜாடையாக 'மச்சான், டைம் என்னடா? டைம் ஒம்போதுடா' என்று சத்தமாகச் சொல்லி என் காதிலும் மற்றவர்கள் காதிலும் விழுமாறு

கூறினார்கள். பற்றாக்குறைக்கு 'ஒம்பதாம் நம்பர் பஸ்சைப் பிடிக்க முடியுமா' என்றும் பேசிக்கொண்டு என்னை ஒம்போது என்று ஜாடை காட்டி மற்ற நண்பர்களுக்குக் கண் அசைவைக் காட்டிச் சென்றார்கள். முகத்தில் வேதனை தாண்டவம் ஆட மனதில் ஆத்திரம் பொங்கப் பல்லை நறநறவெனக் கடித்துக் கொண்டேன். இவர்களுக்கு என்னைப் பற்றிப் பேச எவ்வளவு சந்தோஷம். இவர்கள் வீட்டில் அண்ணனோ தம்பியோ என்னைப் போல இருந்திருந்தால் இவர்கள் இப்படித்தான் பேசுவார்களா? அவர்களைக் கன்னம் கன்னமாக அறைய வேண்டும் போல் இருக்கும்.

நாமக்கல் டவுனில் இருந்து திருச்சி பஸ் பிடித்துப் போகும்போது யாரும் என்னைக் கண்டுகொள்ளவில்லை. புதிய ஆட்களால் என்னை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. இங்குக்கூட என்னை அடையாளம் கண்டு ஜாடைபேசுவார்களோ என்று நினைத்துக் கொண்டு என் கண்கள் பஸ்ஸில் உள்ளவர்கள்மீது இருந்தன. நார்மலாக அழகான பெண்களைப் பார்த்து எப்படி சில ஆண்கள் சைட் அடிப்பார் களோ அப்படித்தான் என்னைச் சிலர் பார்த்தனர். பெண்கள்கூட என் புடவை நகைகளைத்தான் பார்த்தனர். யாரும் என்னைப் பார்த்துச் சிரிப்பதையோ, குசுகுசுவெனப் பேசுவதையோ காணவில்லை. என்னையும் பெண்ணாகத் தான் நினைக்கிறார்கள் என்று மனதில் நினைத்துக்கொண்டேன்.

சென்ற வருடம் இதே சமயபுரத்தில் நான் வெட்கப்பட்டுத் தலை குனிந்து, மனதில் பல ஆசைகள் நினைவுகள் நிறைவேறாமல் மனதால் அழுதுகொண்டு என் தலைமுடியைக் காணிக்கையாக மாரியம்மனுக்குக் கொடுத்தேன். கொடுக்க வைத்தார்கள். அப்போது சக்தி உள்ள அம்மனாக இருந்தால் என் உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுத்து உன்னைப் போல் என்னை ஆக்கிக் காட்டு என்று வேண்டிக்கொண்டேன். என் வேண்டுதல் மோசம் போகவில்லை. அந்த மாரியம்மனும் என்னை மோசம் செய்யவில்லை. இன்று பெண்ணாக உருவெடுத்து அவள் முன் நிற்கிறேன். அம்மனைப் பார்த்து ஆனந்தக் கண்ணீரோடு,'அம்மா தாயே உன் கருணையே கருணை. நீ சக்தியுள்ள தெய்வம்மா. என்னோட வேண்டுதலை நிறைவேற்றி வைத்தது மட்டும் இல்லாமல் என் குடும்பத்தோடு சேத்தியும் வைத்துவிட்டாய். நான் உனக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். நான் உன்னை ஒருபோதும் மறக்க மாட்டேன் தாயே' என்று விழுந்து கும்பிட்டுச் சந்தோஷமாக அம்மன் போட்டோ வாங்கிக்கொண்டு வீடு திரும்பினோம்.

# 12

அம்மா அடிக்கடி சொல்லுவாங்க, 'நாங்க இருக்கறவரைதான் சோறு போடுவோம்; பாதுகாப்பு கொடுப்போம். நாளைக்கு எங்களுக்கு வயசாகி இறந்துபோயிட்டா உன்னோட நிலை என்ன ஆகும் என்று நினைத்தால் பயமாக இருக்கிறது. உன்னை யார் பார்த்துக்குவாங்க?' அம்மா சொன்னது நிஜந்தான். நமக்குன்னு எதிர்காலத்துல யார் இருக்காங்க? நம்மகிட்ட நாலு காசு இருந்தாத்தான் நம்பள மதிப்பாங்க. நாம் பொம்பளையா ஆயிட்டா கல்யாணம் செய்துகொள்ள முடியுமா? யார் என்னைத் திருமணம் செய்து கொள்வார்கள்? என்னால் குழந்தை பெற்றுக்கொள்ள முடியுமா? அண்ணார்கள் அவரவர் குடும்பத்தைத்தான் பார்ப்பார்கள். என்னைப் பார்த்தாலும் என்னிடம் பணம் இருந்தால் தான் என்னிடம் மதிப்பு மரியாதை இருக்கும். ஒருவேலை வெட்டி இல்லாமல் தண்டச்சோறு தின்றுகொண்டு இருக்கிறேன் என்று கூறி விட்டால் என்ன செய்வது?

பணம் இல்லாட்டிப் பொணம்கூட மதிக்காது. நமக்குப் பூ வேணும், பொட்டு வேணும்,சோப்பு வேணும், கண்மை வேணும், புடவை ஜாக்கட் வேணும். இப்படி ஒவ்வொன்றுக்கும் யார் கையை நாடுவது? அம்மா அப்பா சோறுதான் போடுவாங்க. அத விட்டு வேறு எதுவும் வாங்கிக் கொடுக்கவும் மாட்டாங்க. நான் ஏன் அவங்களுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கணும்? எனக்கு வயசு இருக்கு. எனக்குத் தேவையானதை வாங்கிக்கொள்ள நான் ஏன் சம்பாதிக்கக் கூடாது? காசு பணம் நம்பளத் தேடி வந்தா மதிப்பு மரியாதை நம்பளத் தேடிக்கிட்டு வரும். வயசுல உக்காந்து தின்னுப்புட்டு வயசான பிறகு சம்பாதிக்க முடியுமா? பத்தாவதுகூட முடிக்காத எனக்கு இந்தக் கோலத்துல யாரு வேல கொடுப்பாங்க? யாருகிட்டப்போயி வேல கேட்கிறது? மும்பைக்குப் போகலாம்னா ரவுடிங்க தொல்ல. 15 நாள்ல திரும்பி வரச் சொல்லி அனுப்புனாங்க. இப்போ மூனுமாசத்துக்கு மேல ஆயிடுச்சு. இப்பப் போனாக் குரு திட்டுவாங்க. பழைய குரு, நானி

வீட்டுக்குத் திரும்பிப் போகலாமா? அங்க சொல்லிக்காம வேற வீட்ல சேலா ஆகிவிட்டுத் திரும்பிப் போனாத் திட்டுவாங்க அடிப்பாங்கன்னு பயம்.

அண்ணனுங்க சம்பாதிக்கிறாங்க. நான் சும்மா இருக்கேன். தொட்டதுக்கெல்லாம் குத்தம் சொல்றாங்க. திட்டுறாங்க. அடிக்கிறாங்க. சப்போட் பண்ண யாரும் இல்லை. பொம்பளையா வண்டியில கிளீனராகவும் போக முடியாது. என்ன செய்யறது? இப்படி மனசுக்குள்ள புழுக்கமா இருந்தது. நாம ஏன் பழைய நானி வீட்டுக்கே திரும்பிப் போகக் கூடாது? எத்தனையோ இஜராக்கள் ஓடிப்போயிட்டுத் திரும்பி வர்றது இல்லையா? நானி திட்டுவாங்க அடிப்பாங்கன்னு நான் ஏன் நினைக்க வேண்டும்? அவர்களிடம் நடந்த உண்மையைக் கூறினால் ஏற்றுக் கொள்ளலாம். சந்தோஷப்படலாம். இஜரா சமுதாயத்துல வேற வீட்டுக்குப் போயிச் சேலா ஆகுறது, திரும்பிப் பழைய வீட்டுக்கு வர்றது ஒன்னும் புதுசு இல்ல. அதனால் ஒரே முடிவாகப் பழைய நானி வீட்டிற்கே போயிக் கட கேட்டுப் பிழைக்கலாம்னு முடிவு செய்து அம்மாவிடம் 'எங்க ஆளுங்ககூடவே ஆட்டத்துக்குப் போயி நாலு பணம் சம்பாதித்து என் சொந்தக் காலில் நிற்கிறேன்' என்று கூறிவிட்டுத் திரும்ப மும்பை சென்றுவிட்டேன்.

மும்பை சென்றதும் நேராகக் காட்குப்பர் நானி வீட்டிற்குச் சென்றேன். என்னுடைய காலா குரு, 'வாடி ரேவதி! அம்மா ரேவதி வந்திருக்கா' என்று கூறிக்கொண்டு உள்ளே அவரும் நானும் சென்றோம். அங்கு இருந்த மூத்தவர்களுக்கும் நானிக்கும் பாவ்படுத்தி சொல்லிவிட்டு என் நானி காலைப் பிடித்து 'என்னை மன்னித்து விடுங்கள் நானி. நான் தப்பு செய்துவிட்டேன். உங்களிடம் சொல்லிக்காமல் சென்றுவிட்டேன்' என்று அழுதேன். 'நாங்க தூங்கறப்போ எங்கமேல கல்லைத் தூக்கிப் போட்டுவிட்டுப் போயிட்ட பேட்டா. இது உனக்கே நல்லா இருக்கா? உனக்கு என்ன கொற வைத்தோம்? நல்லாத்தானே இருந்த? நானி உனக்கு நிர்வாணம் செய்து பால் ஊற்றிவிட்டேனே. இப்படி எங்கள ஏமாத்திவிட்டு ஓடிப்போய் வேற வீட்ல சேலா ஆகிவிட்டு என்னோட மனசுக்குக் கஷ்டத்தக் கொடுத்துட்டியே' என்று நானி கூறினார்கள்.

என்னோட உணர்வுகள், நான் திருமணம் செய்துகொண்டு குடும்பம் நடத்த வேண்டும் என்ற ஆசைகள், அது முடியாத காரணத்தால் பாலியல் தொழிலில் என் ஆசையை நிறைவேற்றிக்கொள்ளச் சென்ற விதம், அங்கு ஏற்பட்ட தொந்தரவுகள், அதைவிட்டு ஊருக்குச் சென்று அம்மா அப்பா அண்ணன் அக்காவுடன் இருந்த கதைகள் எல்லாம் நானியிடம் கூறிக் கத்திக் கதறி அழுதேன். 'பொம்பளையாப் பொறந்தவங்களே லட்ச லட்சமாப் பணத்தக் கொட்டிக் கொடுத்துட்டுக்

கல்யாணம் செஞ்சுக்கிட்டு புருஷங்ககிட்ட அடிவாங்கி உதை வாங்கி அல்லல்பட்டுக்கிட்டுக் கெடக்குறாங்க. நம்ம இஜராக்களுக்கு எதுக்கடி கல்யாணம்? உனக்கு ஆம்பள ஆசையே வரக்கூடாதே, அந்த ஆசையே இருக்கக் கூடாதுன்னு தானே சொன்னேன். இஜராவாக வந்தோமா, பத்து சேலா நாத்தி செய்தோமா, சம்பாரிச்சமான்னு இருக்கறத விட்டுப்புட்டுப் பறக்கறத நினைக்க வேண்டா'முன்னு நானி கூறினார். மேலும் 'நீ உன்னோட மனசுல சுதந்திரமா இருக்கணும். எப்போ உனக்கு ஆம்பளைங்க மேல ஆச வந்துச்சோ இனி கடை கேட்கப் போக வேண்டாம். உன் ஆசைப்படியே நான் வேறு இடத்துக்கு அனுப்பி வைக்கிறேன். அங்குச் செல்கிறாயா?' என்று கேட்டார்.

'நீங்கள் எங்கு அனுப்பினாலும் நான் அங்குச் செல்கிறேன்' என்று கூறினேன்.'நான் அனுப்பி வைக்கும் இடம் நம்ம பரிவார்கள் வீடு இல்ல. என் குருபாய் பரிவார். அவர்கள் இடத்தில் நல்லபெயர் எடுத்துக் கொண்டு இருக்கணும். நானியைப் பார்க்க அவ்வப்போது வந்து போகணும். இஜராக்களுடன் சேர்ந்து குடிக்கிற பழக்கம், ஊர் சுற்றும் பழக்கம், சண்டைபோட்டுக் கொள்வது இதெல்லாம் கூடாது. முக்கியமா புருஷன் கிருஷன் வச்சுக்கிட்டு இருந்த உன்னோட தோல உரிச்சுத் தொங்கப்போட்டுவிடுவேன்' என்று அறிவுரை கூறி என்னை அங்கு அனுப்பி வைத்தார்.

என்னுடைய பழைய குரு என்னைப் பைக்களாவில் உள்ள நாயக் வீட்டுக்கு அழைத்துச் சென்று அங்குத் திரும்ப என் பழைய குருமீது என்னைச் சேலா செய்துகெண்டு பைக்களாவில் இருக்கும் என் குரு நடத்தும் பாலியல் தொழில் விடுதிக்கு அழைத்துச் சென்றார். அங்குள்ள என் குருபாய், குருபாய் சேலாக்களை அறிமுகப்படுத்தி வைத்தார். இனி எங்கேயும் ஓடிப்போகக் கூடாது, நானி சொன்ன மாதிரி நடந்துக்கணும், நீ சென்றிருக்கும் இடத்தில் ஏதாவது தொந்தரவு என்றால் என்னிடம் வந்து சொல்லணும், அடிக்கடி குருவை வந்து பாத்துட்டுப்போகணும் என்று கூறி என்னுடைய துணிமணிகளை எடுத்துக்கொண்டு பைக்களாவில் இருந்து பக்கத்தில் உள்ள கிரைன் ரோடுக்குக் கூட்டிச் சென்று விட்டார்கள்.

காமாட்டிபுரத்தில் என் குரு நடத்தும் பாலியல் தொழில் விடுதி போல இன்னும் ஏராளமான விடுதிகள் உள்ளன. இஜராக்களால் பெண்களைக் கொண்டு நடத்தப்படும் பாலியல் தொழில் விடுதிகளும், பெண்களைக்கொண்டு பெண்களே நடத்தும் விடுதிகளும் இருந்தன. என் குரு நடத்தும் விடுதி ஒரு பில்டிங். அதில் ஒரு வீடு பாலியல் தொழில் செய்வதற்கும் இன்னொரு வீடு சமையல் செய்வதற்கும் என இரண்டு வீடுகள் இருந்தன. அக்கம் பக்கம் மற்ற இஜராக்களின்

விடுதியும், பெண்கள் விடுதியும் இருந்தன. இந்த பில்டிங் கீழே விடுதிகள், மார்வாடிக் கடைகள், புடவை, சென்ட், வெள்ளி, தங்கம், கடன் கொடுப்பது, அடகு வைப்பது போன்ற கடைகள் உள்ளன. பாலியல் தொழில் மாடியில் நடக்கும். தற்போது நான் சென்ற இடம் கிரைன்ரோடு அருகில் ப்ளவுஸ் என்று அழைக்கப்படும். இங்கு பெண்களே பெண்களைக்கொண்டு நடத்தும் வீடுகளும், இஜராக்களே இஜராக்களைக்கொண்டு நடத்தப்படும் வீடுகளும் இருந்தன. இந்த இடத்தில் ஒரு கிலோமீட்டர் தூரம் இரண்டு பகுதிகளிலும் பாலியல் தொழில் செய்யும் விடுதிகள்தான் அதிகம் இருந்தன. அது மட்டுமன்றி மளிகைக் கடைகள், பியர் பார்கள், கிளப், மருத்துவமனை, மார்வாடிக் கடைகள், பான் கடைகள், ஓட்டல், டீக்கடைகள் எனவும் இருக்கின்றன.

பெரிய மெயின் ரோடான ப்ளவுஸின் இருபுறமும் பப்ளிக்காகப் பாலியல் தொழில் செய்யும் விடுதிகளும் பாலியல் தொழில் செய்யும் பெண்களும் இஜராக்களும் அவரவர் வீட்டுமுன் மாடர்ன் துணியுடன் நின்றுகொண்டு வாடிக்கையாளர்களை அழைப்பதும் ரோட்டில் நடந்து செல்பவர்கள் விடுதிகளையும் பெண்களையும் பார்ப்பதும் நடக்கும். கார், பைக், பஸ், குதிரை வண்டி, டேக்சி என்று ஜன நெருக்கம் அதிகமாக இருக்கும். பெரிய அளவில் வண்டிச் சத்தங்களும் பெண்களின் குரல்களும், பார்களில் ஓட்டல்களில் ரேடியோ பாடல் களும், பாலியல் தொழிலாளர்களை நம்பி வாழும் கடைக்காரர்களும், வாடிக்கையாளர்களை நம்பி வாழும் பாலியல் தொழில் செய்பவர் களும் என அந்த ஏரியா முழுவதும் ஓயாத ஒரு திருவிழாச் சந்தை போலக் காட்சி அளிக்கும்.

இஜராக்களில் பார்ப்பதற்குப் பெண்களைப்போல இருப்பவர்கள் மட்டும்தான் இங்குப் பாலியல் தொழில் செய்வார்கள். இஜராவாகத் தெரிபவர்களை இங்குப் பாலியல் தொழில் செய்யச் சேர்த்துக்கொள்ள மாட்டார்கள். இங்குப் பெண்கள் என்று நினைத்துத்தான் வாடிக்கை யாளர்கள் வருகின்றனர். இஜராக்களின் பாலியல் தொழில் தந்தா என்று கூறப்படும். விடுதிக்குக் காந்தரா. தந்தா காந்தரா என்றால் பாலியல் தொழில் செய்யும் விடுதி. நான் இருந்த வீட்டில் என்னைப்போல இன்னும் இரண்டு இஜராக்கள் இருந்தனர். இரண்டு படுக்கைகளைக் கொண்ட இந்தச் சிறிய வீடு ரோட்டு முன்வாசல் கொண்டு உள்ளது. குளிப்பதற்குச் சிறிய இடம் இருந்தது. பாத்ரூம் போக வேண்டுமென்றால் அந்தப் பில்டிங்கில் உள்ள மேல் பகுதியில் எல்லா வீடுகளுக்கும் பொதுவில் உள்ள பாத்ரூம்களுக்குத்தான் போக வேண்டும்.

நான் இருந்த பில்டிங்கில் உள்ள எல்லா வீடுகளிலும் இஜராக்கள் மட்டும் தான் இருந்தனர். மேலே உள்ள வீடுகளில் தந்தா செய்யும்

இஜராக்கள் கீழே வந்து ரோட்டு ஓரமாக நின்றுகொண்டு வாடிக்கை யாளர்களை அழைத்துச் செல்வார்கள். அவரவர் வீடுகளில் அவரவர் களே சமைத்துக் கொள்வார்கள். மேல் வீட்டில் தந்தா செய்பவர் களுக்கும் கீழ் வீட்டில் தந்தா செய்பவர்களுக்கும் வாடிக்கையாளர் களை அழைப்பதில், கூட்டிச் செல்வதில் அடிக்கடி சண்டை நடக்கும். எத்தனை சண்டை நடந்தாலும் இஜராக்களுக்குத் தொந்தரவு என்றால் எல்லாரும் ஒன்றாகக் கூடிவிடுவார்கள்.

நான் தந்தா செய்யும் வீட்டை ஒட்டியே ஒருபுறம் மளிகைக் கடையும் பக்கத்தில் வீட்டுப் படிக்கட்டு அருகில் பான் கடையும் மறுபக்கத்தில் மற்றொரு தந்தா காந்தராவும் இருக்கின்றன. நான் அங்குச் சென்ற புதிதில் புடவை கட்டிக்கொண்டுதான் தந்தாமீது நின்றுகொள்வேன். எனக்கு ஒரு போனிகூட ஆகாது. (முதல் வாடிக்கையாளர் வந்தால் போனி என்பர்.) என்னுடன் உள்ள மற்ற தந்தா செய்பவர்கள் ஜீன்ஸ், ஸ்கர்ட், மிடி என்று போட்டுக்கொண்டிருப்பார்கள். அவர்களுக்குத்தான் கிராக்கி செல்லும். (கிராக்கி என்றால் வாடிக்கையாளர்.) என்னுடைய வீட்டில் உள்ள முதலாளி அம்மா எனக்குக் காலா குரு முறை. அவர் எனக்கு மற்ற தந்தா செய்யும் இஜராக்களின் உடைகளைக் கொடுக்கச் சொல்வார். தந்தா செய்து உனக்கு வரும் பணத்தில் நீ மாடர்ன் துணி வாங்கிக்கொள். இங்குப் புடவை கட்டி நாட்டுப்புறம் போல் இருந்தால் யாரும் உன்னைச் சட்டை பண்ணமாட்டார்கள் என்று கூறினார்.

இங்கு உள்ள இஜராக்களில் அதிகம்பேர் கன்னடக்காரர்கள். பயளக்கள்ளி காமாட்டிபுரத்தில் உள்ளவர்கள் அதிகம்பேர் தமிழ்க் காரர்கள். ப்ளவுசில் பெண்கள் காந்தரா நார்த் கன்னடியன்,நேபாள் பெண்கள் அதிக அளவில் இருந்தனர். இங்க இஜராக்கள் மிகக் குறைவு தான். பெண்கள் காந்தராவும் பெண் தந்தா செய்பவர்களும்தான் அதிகம். இதில் சொல்லப் போனால் நேபாள் பெண்கள்தான் அதிகம் இருந்தனர். இஜராக்கள் இருக்கும் பில்டிங்கைவிட்டு மற்ற ஒருசில பில்டிங்கில் மாடியில் இருக்கும் அறைகள். ஒரு அறை ஒரு வீடாகவும் ஒரு ஓனருடையதாகவும் இருக்கின்றது. அப்படிப்பட்ட வீடுகள் சில தந்தா செய்வதற்கு மட்டுமின்றிக் குடும்பங்கள்கூட இருக்கின்றன. ஒரு ரூம் கொண்ட வீட்டில் மூன்று பெட்டுகள் கொண்ட பெரிய கட்டில் இருந்தால் அந்த மூன்று பெரிய கட்டில்மேல் மூன்றுபேர்களும் மூன்று கட்டில் கீழ் மூன்றுபேர்களும் தனித்தனியாகத் தங்கிக் கொண்டிருப் பார்கள்.

அவர்களில் அதிகமாகக் காந்தரா இல்லாமல் வெளியில் தந்தா செய்யும் பெண்கள் வாடகைக்குக் கொடுக்கப்படும். காந்தராவில் தங்களின் கிராக்கியைக் கூட்டிச் சென்று தந்தா முடித்து இதுபோன்ற

வீடுகளில் தங்கிக் கொள்வார்கள். அவர்களைப்போல உள்ள பெண் களுக்குக் கணவன்மார்கள், குழந்தைகள்கூட இருக்கும். கட்டில்மேல் இருப்பவருக்குத் தினம் 50 ரூபாய் வாடகையும், கீழ் உள்ளவர்களுக்கு 25 ரூபாய் வாடகையும் ஓனர் வசூலிப்பார். அவர்களுக்குக் குளிக்க, பாத்ரூம் செல்லப் பொதுவாக உள்ளதில்தான் போக வேண்டும். அவரவர் பொருள்களை அவரவர் இருக்கும் இடத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இதுபோன்ற வீடுகளையும் அங்குப் பார்த்தேன்.

நான் அங்குப் பார்த்தவை பழகியவை கேட்டவை எல்லாம் புதிய அனுபவங்கள். நான் இதுபோலக்கூட இருக்குமா என்று நினைத்துக் கூடப் பார்க்க முடியாத ஒன்று. எத்தனை பேர்கள் பிழைக்க வயிற்றைக் கழுவிக்கொள்ள எப்படியெல்லாம் கஷ்டப்படுகின்றனர். வறுமையின் காரணமாகக் குடும்பப் பாரங்களைச் சுமக்கவும் அநாதையாக வாழ வழியின்றி வந்தவர்களும், கணவனால் கைவிடப்பட்டவர்களும், பெற்றோர்களாலேயே விடப்பட்ட பிள்ளைகளும், காதலர்களால் கைவிடப்பட்டவர்களும், பாலியல் பலாத்காரத்தால் கற்பை இழந்து தனித்து ஒதுக்கப்பட்டவர்களும் இப்படி எத்தனையோ காரணங்களால் நாட்டை விட்டு, ஊரைவிட்டு, உறவுகளைவிட்டுப் பெற்றோரை இழந்து, வீட்டைவிட்டு வாழ வழியின்றி இஷ்டப்பட்டோ இஷ்டம் இல்லாமலோ இங்குப் பல கனவுகளோடும் கண்ணீரோடும் கஷ்டப் படுபவர்களைக் கண்டு என் மனம் நெகிழ்ந்தது.

நான் இதுவரை காணாத ஒரு உலகம். எத்தனையோ பேர்களின் கஷ்டங்களை நேரில் கண்ட அனுபவங்கள் வித்தியாசமான உலகத்துக்கு வித்திட்ட உணர்வு எனக்கு இருந்தது. பாலியல் தொழில் செய்யும் பெண்கள், இஜராக்களின் அழகை வர்ணித்து ஆசை வார்த்தை கூறித் தங்களின் அடிமைகளாக்கிக்கொண்டு அவர்கள் சம்பாதிக்கும் பணத்தைத் தின்று ஏப்பம் விடும் சில ஆண்களுக்கு மத்தியில் வெந்து போன முகத்தோடும் கத்தியால் மார்க் போடப்பட்ட முகத்தோடும் பாலியல் விடுதியில் வேலையாட்கள்போலக் கடைகளுக்குச் சென்று வருவதும் பாத்திரம் கழுவுவதும் எனச் சொல்ல முடியாத அவல நிலையில் வாழ்கின்றனர்.

எத்தனையோ பாலியல் விடுதி முதலாளிகளுக்குப் பணத்தைச் சம்பாதித்துக் கொடுத்துவிட்டுக் கடைசியில் ஏமாற்றத்துடன் வேறு இடங்களுக்குச் செல்பவர்களையும், பாலியல் தொந்தரவுகளால் சரியான மருத்துவ வசதி செய்துகொள்ள முடியாமல் இறந்து கொண்டி ருப்பவர்களையும், 15 ரூபாய் முதல் 50 ரூபாய்வரை கொடுத்து விட்டு அவர் இஷ்டப்படியெல்லாம் அனுபவித்துவிட்டுக் காட்டுமிராண்டித் தனமாக அங்கங்களைக் கடித்துக் கீறி ஒரு வெறி நாயைப்போலச்

செய்யும் சில கிராக்கிகளிடத்தில் சகித்துக்கொள்பவர்களையும், மனதில் பல கஷ்டங்களைச் சுமந்துகொண்டு வெளியில் காட்டிக் கொள்ளாமல் பவுடர் போட்டு லிப்ஸ்டிக் பூசிப் புன்னகை முகத்தோடு கிராக்கியைக் கூப்பிடும் இளம் வயதினரையும், யாரோ செய்த தவறுக்குப் போலீசாரால் பிடித்துச் செல்லப்பட்டு சாட்டை அடியும் லாட்டி அடியும் ஷூக் கால் உதையும் பெற்று கரணட் ஷாக்குடன் போராடி லஞ்சம் கொடுத்து விட்டு அந்தக் காயத் தழும்புகளோடு இருப்பவர்களையும் இதுவரை காணாத இந்த உலகத்தில் கண்டேன். இந்த உலகத்தில் நானும் சம்பாதிக்க, வாழ வந்திருக்கிறேன். எப்படி வாழப்போகிறேன்? எப்படி யாவது வாழ்ந்துதானே ஆகணும். பலபேருடைய கஷ்டங்களின் முன்னால் என் கஷ்டங்கள் எம்மாத்திரம். எதிர்காலத்தில் வாழ்க்கைக்குத் தேவையானதைச் சேர்த்து வைக்கத்தான் இங்கு வந்தேன். அது முடியுமோ முடியாதோ. எது நடந்தாலும் சரி, இந்த உலகத்தில் பயணித்துப் பார்ப்போம் என்று இருந்தேன்.

திரைப்படங்களில் வரும் கதாநாயகிகள்போல உடை அணிவதும் மேக்கப் போட்டுக் கொள்வதும், முடியை வெட்டிக்கொள்வதும் என அங்குள்ள மற்றவர்களைப் பார்த்து நானும் கற்றுக்கொண்டேன். அழகுபடுத்திக்கொள்ள அழகு நிலையமே இருப்பது அப்போதுதான் எனக்குத் தெரியும். அதிகமாகப் புருவத்தைச் சரிசெய்துகொள்ளவும், முடியை முகத்துக்குத் தகுந்தாற்போல மார்ட்டனாக வெட்டிக்கொள்ள வும், முகத்தில் கரும்புள்ளிகள் இல்லாமல் அழகாக இருக்க பிளீச், பேசல் என்று செய்து கொள்ளவும் அழகு நிலையத்திற்குச் செல்வேன். ஆரம்பத்தில் கிராக்கிகளை எப்படி அழைப்பது, என்னைப் பார்த்து வரும் கிராக்கியிடம் எப்படிப் பேசுவது எனத் தெரியவில்லை. என் குரல் மூலம் இஜரா என்று தெரிந்துவிட்டால் என்ன செய்வது என்பதால் என் வீட்டு முதலாளி அம்மா மற்ற தந்தா செய்யும் இஜராக்களிடம் கிராக்கியைப் போகச் சொல்வார். அவர்கள் என்னைக் காட்டி எப்படிப் பேசிப் பணம் வாங்குகின்றார்கள் என்று பார்ப்பேன். போகப்போக நானே கற்றுக் கொண்டேன்.

ஒருநாளைக்கு ஐந்து கிராக்கி வந்தால் வரும் பணத்தை அப்படியே வீட்டு முதலாளியிடம் கொடுத்துவிடவேண்டும். மறுநாள் காலையில் மொத்தம் 500 ரூபாய் என்றால் 250 ரூபாய் எனக்கும் 250 ரூபாய் வீட்டு முதலாளிக்கும் பிரித்துக்கொள்வோம். இது என் வீட்டிலுள்ள தந்தா செய்பவர்களுக்கும் முதலாளிக்கும் இருக்கும் கணக்கு ஆகும். மறுநாள் என்பதால் சரியாக ஞாபகம் வைத்துக்கொண்டு சரியான முறையில் எத்தனை கிராக்கி எத்தனை பணம் என்பதைச் சொல்ல வேண்டும். தந்தா செய்பவர்கள் தனித்தனியாக முதலாளியிடம் சென்று எத்தனை

கிராக்கி உட்கார்ந்தோம், மொத்தம் எவ்வளவு பணம் என்று கூறி அவரவர் பங்கைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

நான் புதிதாக இருப்பதால் மற்ற தந்தா செய்பவர்கள் எத்தனை கிராக்கி உட்கார்ந்த, எவ்வளவு பணம் கிடைத்தது என்று கேட்பார்கள். நானும் உள்ளது உள்ளபடியே கூறிவிடுவேன். மற்றவர்களைவிட நான் அதிகமாகப் பணம் இன்று சம்பாதித்தேன் என்று தெரிந்தால் பொறாமைப்பட்டு என்னிடம் வலுக்கட்டாயமாகச் சண்டைப் போடுவார்கள். அவர்கள் சம்பாதிக்கும் ஒருநாள் கணக்கை என்னிடம் சொல்லவும் மாட்டார்கள். நானும் கேட்கமாட்டேன். வேண்டுமென்றே என்னிடம் வரும் கிராக்கியின் பின்னால் சென்று என்னைத்தான் கூப்பிட்டான் என்று சண்டை போட்டு வாக்குவாதம் செய்வார்கள். முதலாளி அம்மா வந்து எங்களைச் சமாதானப்படுத்திக் கிராக்கியிடம் யார் வேண்டும் என்று கேட்டு கிராக்கி நான் என்று சொன்னால் பிறகு அமைதியாகச் சென்று விடுவார்கள்.

சில சமயங்களில் இதுபோன்ற நேரத்தில் தன் அழகையோ கண் சாடையையோ காட்டி என்னிடம் வா என்று அழைக்கக் கிராக்கியும் என்னை வேண்டாம் என்று கூறிவிடுவார்கள். இது சீனியருக்கும் ஜூனியருக்கும் இருக்கும் வித்தியாசம் ஆகும். நம்மை ஏமாளி என்று தெரிந்துகொண்டு ஏமாற்றிக் கிராக்கியைத் தட்டிச் சென்றுவிடுவார்கள். ஒரே வீட்டில் இருப்பவர்கள் மட்டும் இன்றி மேல்வீட்டில் இருப் பவர்கள் ரோட்டில் வந்து நின்றுகொண்டிருக்கும்போது என்னைப் பார்த்து வரும் வாடிக்கையாளர்களைப் பலவந்தமாகச் சட்டையைப் பிடித்து இழுத்துச் சென்றுவிடுவார்கள். முதலாளி அம்மா இருந்தால் இதுபோன்ற செயல்கள் நடக்கும்போது விட்டுக்கொடுக்கமாட்டார். அவர் இல்லாத சமயம் இதுபோல நடந்து அதை நான் தட்டிக்கேட்டால் என்னிடம் சண்டை போடுவார்கள்.

ஒருமுறை என்னையே பார்த்துக்கொண்டு ஒரு கஸ்டமர் சுற்றிக் கொண்டு இருந்தான். அவனுக்கு உள்ளே வருவதற்குப் பயம். வெட்கம் அதிகம் போல. அதனால் சந்தர்ப்பம் தேடிச் சுற்றிக்கொண்டு உள்ளே வர இருந்தான். அதைப் பார்த்த மற்ற இஜராக்கள் மூன்றுபேர் ஒன்றாகச் சேர்ந்து அந்தக் கஸ்டமரையும் பார்ப்பது, என்னையும் பார்ப்பது என்று இருந்தனர். அவன் என் வீட்டுக்குள் வரும் நேரம் பார்த்து அவனை அந்த மூன்று பேரும் சட்டையைப் பிடித்து இழுத்தனர். அவனோ அந்த மூன்று பேரிடம் சிக்கிக்கொண்டு அவர்கள் இழுத்ததைப் பார்த்துப் பயந்து தடுமாறிக் கீழே விழுந்து சட்டையைக் கிழித்துக்கொண்டு அவர்கள் பிடியில் இருந்து தப்பியோடிவிட்டான். அதைப் பார்த்த நான் 'ஏன் இப்படிச் செய்தீர்கள்? அவன் என்னிடம் வந்ததைப் பார்த்தும் நீங்கள்

இதுபோலச் செய்வது தவறு. நான் உங்களைப்போல உங்களிடம் வரும் கஸ்டமரை இழுத்துச் செல்கின்றேனா? இப்போ உங்களுக்கும் கிடைக் காமல் எனக்கும் கிடைக்காமல் போய்விட்டான்' என்று கூறினேன். அவர்கள் மூன்றுபேரும் என்னிடம் சண்டை போட்டார்கள். அதைப் பார்த்த எதிர்வீட்டுத் தந்தா செய்யும் இஜராக்களும் தட்டிக் கேட்காமல் சும்மா நின்று வேடிக்கை பார்த்தார்கள்.

'நீ என்ன அவனுக்கு அக்ரிமெண்ட் போட்டிருக்கியா? உங்கிட்டத் தான் அவன் வந்தான் என்று எப்படிச் சொல்கிறாய்? நீ என்ன பெரிய ரதியா? பெரிய கதாநாயகி, இவ அழகைப் பார்த்து அவன் இவகிட்ட வந்தானாம்' என்று அந்த மூன்றுபேரும் சேர்ந்து என்னை அடித்தார்கள். என் வீட்டில் இருப்பவர்கள்கூட விலக்கிவிடுவதுபோல என் தலைமுடி யைப் பிய்த்து எடுத்துவிட்டனர். இதுபோன்ற சின்னச் சின்ன சண்டைகள் இங்கு எனக்கு மட்டுமின்றி இன்னும் எத்தனையோ பேர்கள் மத்தியில் நடக்கும். ஒரு சில இஜராக்களின் அழகு, வீக்னஸைக் கண்டுகொண்டு பொறாமைப்பட்டு இதுபோலச் செய்வது இங்கு வாடிக்கையாக இருக்கும். என்னைப்போல ஏமாற்றம் அடைந்த சண்டை போட முடியாதவர்கள் கவலையை மறக்கப் பார்களுக்குச் சென்று குடிப்போம்.

என்னிடம் 15 ரூபாய் இருக்கிறது, வேறொரு இஜரா விடத்தில் 15 ரூபாய் இருந்தால் இருவரும் பாருக்குச் சென்று 30 ரூபாய்க்கு ஒரு குவாட்டர் வாங்கிக் குடிப்போம். அந்த நேரத்தில்தான் நாங்கள் ஒருவருக்கொருவர் கஷ்டங்களைப் பரிமாறிக்கொள்வோம். எங்களு டைய கஷ்ட நஷ்டங்களை அந்தப் பாருக்குள் மட்டும்தான் பேசிக் கொள்ள முடியும். ஆனால் அந்தக் கஷ்டங்களுக்குத் தீர்வு காண முடியாது. காரணம் அப்போது சிறிய இஜராவாக இருந்த எங்களைப் போன்றவர்கள் மூத்த இஜராக்களின் பேச்சை மீற முடியாது. அவர்கள் சொல்படிதான் நடக்க முடியும். அதை மீறினால் பெரியவர்களுக்கு மதிப்பு கொடுக்கவில்லை என்று கூறுவார்கள். மூத்தவர்களாக இருப் பவர்கள் சிறியவர்களைத் தங்களின் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ளத்தான் பார்ப்பார்கள். மூத்தவர்களைப் பகைத்துக்கொண்டால் அங்கு வாழவும் முடியாது.

கஷ்ட நஷ்டங்களைப் பரிமாறிக்கொள்ளவும் கவலையை மறக்கவும் ஆரம்பிக்கப்பட்ட குடிப்பழக்கம் என்னைத் தினமும் குடிக்க வைத்தது. 15 ரூபாய் கிடைத்துவிட்டால் போதும் யாராவது ஷேர் செய்து கொண்டால் குடிக்க ஓடிவிடுவேன். 50 ரூபாய் கிடைத்தால் நானே தனியாகச் சென்று பியர் வாங்கிக் குடித்துவிட்டு வந்துவிடுவேன். நான் தந்தாமீது இல்லை, எங்கேயோ சென்றுவிட்டேன் என்று முதலாளி

அம்மாவுக்குத் தெரிந்தால் திட்டுவார்கள் என்று பாருக்குப் போவதும் தெரியாமல் வருவதும் தெரியாமல் நிதானமாகக்கூட குடிக்க முடியாமல் விஷத்தைக் குடிப்பதைப்போல மடமடவென வாயில் ஊற்றிக் கொண்டு ஒன்றும் தெரியாதமாதிரி வந்து வீட்டுமுன் நின்றுகொள்வேன். என் வீட்டில் தந்தா செய்யும் இஜராக்கள் தெரிந்துகொண்டு என்னிடம் வேறு காரணங்களுக்காகச் சண்டை வளர்த்து முடிவில் முதலாளியிடம் நான் குடித்துவிட்டுச் சண்டை போட்டேன் என்று மாட்டிவிடுவார்கள்.

நான் குடித்து யாருக்கும் தொல்லை கொடுத்தது கிடையாது. நான் குடிப்பதால் எனக்குத்தான் நஷ்டமானது. குடித்து வந்துவிட்டால் என் வீட்டுக் கதைகளையும் இஜராக்களின் கஷ்டங்களையும் பக்கத்தில் உள்ளவர்களிடம் பேசிக்கொண்டு கிராக்கியைப் பார்ப்பது, தந்தா பண்ணுவதைவிட்டு அரட்டை அடித்துக்கொண்டு இருப்பேன். என்னைப் பார்த்து வரும் கிராக்கியையோ, என்னைக் கூப்பிடும் கிராக்கியையோ கவனிக்காமல் பேசிக்கொண்டு இருப்பேன். அந்தச் சமயத்தில் வேறு இஜராக்கள் அந்தக் கிராக்கியைத் தட்டிச் சென்று விடுவார்கள். இப்படி நடந்துகொண்ட நிலையில் வீட்டு முதலாளி அம்மா என்னைக் கண்டித்தார். 'இனி நீ பகலில் குடிக்கக் கூடாது. இரவில்தான் வீடு மூடினபிறகு குடிக்கவேண்டும். இல்லை என்றால் உன் நானியிடம் கூறிவிடுவேன்' என்றாள்.

ஒருமுறை பகலில் போய்க் குடித்துவிட்டு வரும்போது முதலாளி அம்மா என்னைப் பார்த்துவிட்டார். அன்று என்னை வீட்டுக்குள் இழுத்து அடித்தார். என்னால் வலி தாங்க முடியாமல் என்னை அடிக்க உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது என்று கேட்டுவிட்டேன். குளிக்க உட்காரும் மணைப்பலகையை எடுத்து மண்டையிலும் முதுகிலும் அடித்தார். அவர் அடிக்கும்போது அவர் அணிந்திருந்த கண்ணாடி வளையல்கள் உடைந்து கீழே விழுந்தன.என்னால் அவரைத் திருப்பி அடிக்கவோ திட்டவோ முடியாத நிலையில் அந்தக் கண்ணாடி வளையலில் ஒரு உடைந்த துண்டை எடுத்து என் நெற்றியில் கிழித்துக் கொண்டேன். ரத்தம் கொட்ட அதைப் பார்த்த முதலாளி அம்மா அடிப்பதை நிறுத்திவிட்டார். என்னோட வலி, கோபம் என்னையே காயப்படுத்திக்க வைத்தது.

கண்ணாடி வளையலின் உடைந்த துண்டு முனையில் கூர்மையாக இருந்ததால் என் மேல்நெற்றியில் முடிக்கும் அருகில் ஆழமாக நான்கு இன்ஞ் அளவில் கிழித்துவிட்டது. இதனால் முகம் முழுவதும் ரத்தம் ஆறாக ஓடப் பயந்துபோன என் வீட்டில் தந்தா செய்யும் இஜராக் களில் ஒருத்தி காயம்பட்ட இடத்தைத் துணியால் அழுத்தி ரத்தம் வெளியில் வராமல் பிடித்துக்கொண்டு என்னைப் பக்ககத்தில் உள்ள

ஆஸ்பத்திரிக்குக் கூட்டிச் சென்றாள். டாக்டர், 'தையல் போட்டால் முகத்தில் அசிங்கமாக இருக்கும். என்னால் முடிந்தவரை தையல் போடாமலேயே காயத்தைச் சரி செய்ய முயற்சி பண்றேன்' என்று கூறி ஊசி போட்டு மாத்திரையும் எழுதிக் கொடுத்தார். அன்று இரவு மாத்திரைகளைப் போட்டுக்கொண்டு தூங்கிவிட்டேன். மறுநாள் காயம் வெளியில் தெரியாதவாறு தலை முடியால் மறைத்துக்கொண்டு தந்தாமீது நின்றேன்.

இரண்டு வாரத்துக்கு ஒருமுறை என் நானியைப் பார்த்து எனக்குக் கிடைத்த வருமானத்தை அப்படியே அவர்களிடம் கொடுத்து விடுவேன். டிப்ஸ் பணத்தில் மேக்கப் பொருள்களும் துணிகளும் வாங்கிக் கொள்வேன். இப்படி ஐந்து மாதத்தில் இவ்வளவு விஷயங்களை அடிபட்டு உதைபட்டு வெளியில் சொல்ல முடியாமல் அட்ஜஸ்ட் செய்துகொண்டிருந்தேன். என்னைப் பொருத்தவரை இங்கு இருப்ப வர்கள் வேறு பரிவார்களில் உள்ளவர்கள். எல்லாருக்கும் சொந்தக் குருபாய், குரு,சேலா, நாத்தி என்று இருக்கிறார்கள். என்னுடைய பரிவார் என்று சொல்லிக்கொள்ள என்னுடன் குருபாய், சேலா, நாத்தி என்று இல்லை. என்னுடைய குரு ஒருபக்கமும் நானி ஒருபக்கமும் இருந்தனர். நாம் பிழைக்க வந்த இடம் என்று என்ன நடந்தாலும் என் குருவிடமோ நானியிடமோ சொல்லவில்லை. எனக்குக் கிடைக்கும் வருமானத்தை ஏமாற்றாமல் அப்படியே கொண்டுபோய்க் கொடுத்து விடுவேன்.

இங்கு ஒரு இஜராவுடன் நான் சண்டைபோட்டால் அவர்கள் வீட்டில் உள்ள சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை – தப்பு அவர் பக்கம் இருந்தாலும் அதை மறைத்து – சண்டைபோட வந்துவிடுவார்கள். எனக்கோ பிழைக்க வந்த இடத்தில் யாரும் இல்லாததால் சகித்துக் கொண்டு இருப்பேன். என்னைப் பார்த்து நான்கு கிராக்கிகள் வரத்தான் செய்தனர். ஆனால் அங்கு அந்த நான்கு கிராக்கிகளும் என்னிடம் வருவதற்குள் பிரச்சினை செய்து சண்டைக்கு இழுத்தனர். இதே என் குருவுக்கு இதுபோல இங்கு வீடிருந்து என் குருபாய் சேலா நாத்தியுடன் நான் இருந்தால் கதையே வேறு. எனக்கும் சப்போட் கிடைத்திருக்கும். மற்றவர்களும் பயப்படுவார்கள். என்னோட முதலாளி அம்மாவோ வீட்டுமுன் என்ன நடக்கிறது என்று பார்க்காமல் பெரிய இஜராக் களுடன் சீட்டு ஆடப் போய்விடுவார். என்னுடன் தந்தா செய்பவர்களும் எனக்கு சப்போட் செய்வதில்லை. காலையில் பணம் வாங்கும்போதும் சண்டை போட்டுக்கொள்ளும்போதும் என்னையே தவறானவளாகக் கருதுவார். நான் அதிகமாகக் கிராக்கி செய்தால்தான் வீட்டு முதலாளி அம்மாவுக்குப் பணம் கிடைக்கும். நான் தந்தாவில் விருப்பம் இல்லாமல்

கவனமாக இருந்து கிராக்கியைப் பிக்கப் செய்யாவிட்டாலும் என்னை அடிக்கிறார்கள். நான் என்ன செய்வது? முதலாளி அம்மாவைச் சீட்டு ஆடப்போக வேண்டாம். இங்கேயே இருங்கள் என்றும் என்னால் சொல்ல முடியாது. அதிர்ஷ்டம் இருந்தால் என்னிடம் வருபவர்களைத் தந்தா செய்துகொண்டு யாரிடமும் வாய் கொடுத்துச் சண்டையை வளர்த்தாமல் இருந்துவிடுவேன்.

நான் அங்கிருந்த சமயம் ஒரு முறை இந்து – முஸ்லிம் கலவரம் பெரிய அளவில் ஏற்பட்டது. எங்கு பார்த்தாலும் வீடு எரிப்பு, கார் பஸ் எரிப்பு, உயிர்ச்சேதம் என்றானது. அந்தச் சமயத்தில் நான் தந்தா செய்த வீட்டில் இரண்டுபேர் உட்பட முதலாளி அம்மாவும் ஊருக்குச் சென்று விட்டனர். புதிதாக வந்து சிலநாள்களே ஆன ஒரு சிறிய இஜராவும் நானும்தான் இருந்தோம்.மும்பை முழுவதும் ஊரடங்குச் சட்டம் போட்டிருந்தனர். யாரும் வெளியில் செல்ல முடியாது. வீட்டுக்குள்ளே தான் இருக்க வேண்டும். காலை 6 மணியில் இருந்து 7 மணிக்குள் மளிகைக்கடை திறந்திருக்கும். அதற்குள் வேண்டியதை வாங்கிக்கொள்ள வேண்டும். அப்போது கடைகளில் அதிகக் கூட்டம் இருக்கும். அந்த நெருக்கடியில் நின்று வாங்கிக்கொள்ள வேண்டும். அதன்பிறகு சமைத்துச் சாப்பிட்டுவிட்டு வெளியில் வராமல் இருக்கவேண்டிய நிலை. எட்டு நாட்களாக வீட்டுக்குள்ளேயே நாங்கள் இருவரும் எப்போது என்ன நடக்குமோ என்ற பயத்தில் வாழ்ந்தோம். இஜராக் களைப் பொருத்தவரையில் எல்லாக் கோயில்களுக்கும் தர்காக் களுக்கும் சர்ச்சுகளுக்கும் போகின்றனர். இங்கு வேறுபாடுகள் ஒன்றும் இல்லை. வாரம் தவறாமல் நானும் கோயில்களுக்குச் செல்வேன். வியாழக்கிழமை ஆஜ்சல்லி தர்காவுக்கும் வெள்ளிக்கிழமை மகாலட்சுமி கோயிலுக்கும் செல்வேன்.

சந்தோஷம்னு பார்த்தா காலையில 11 மணிக்குத்தான் எந்திரிச்சுக் குளிச்சு மேக்கப் செய்து வெளியில வருவோம். அதேபோல எங்களுக்குள் ஷிப்ட் மாத்திக்குவோம். பகல்ல ரெண்டுபேரு தூங்கினால் ஒருவராவது வெளியில் நிக்க வேண்டும். பெரும்பாலும் எல்லாரும் பகல்ல வீட்ல ஆக்கி அரிச்சு சாப்பிட்டுவிட்டுத் தூங்கிச் சாயந்திரமா 6 மணிக்கு மேல மேக்கப் செய்து வெளியில் வருவாங்க. அதனால நான் பகல்ல தூங்காம நிப்பேன். அப்போ எந்தத் தொந்தரவும் இல்லாம கிராக்கிங்க நேரா என்னைத் தேடி வந்துடுவாங்க. கிராக்கிய இழுக்குறவங்க, என்னோட சண்டை போடுறவங்க அந்தச் சமயம் இருக்கமாட்டாங்க. எப்பவும் காலையில் ஆகட்டும், மாலையில் ஆகட்டும் பக்கத்தில் இருக்கும் டீக் கடைக்குப்போய் டீ குடித்துவிட்டு வந்துதான் தந்தாமேல நிப்போம். அந்த டீக்கடையை ஒரு கேரளாக்காரர் நடத்தி வந்தார். அங்கு ஒரு

பழைய ரேடியோ சிஸ்டம் இருந்தது. 50 காசு காய்ன் போட்டு நமக்குத் தேவையான பாட்டை செலக்ட் செய்யலாம். எனக்குமுன் யாரேனும் பாட்டை செலக்ட் செய்திருந்தால் அது முடிந்ததும் நான் செல்க்ட் செய்த பாட்டு வரும். நான் அந்த டீக்கடைக்குச் சென்றால் பிளாக் டீயில் லெமன் போட்டுக் கொடுக்கச் சொல்லி அதைத்தான் விரும்பிக் குடிப்பேன். அதற்குச் சுலைமானி டீ என்று கூறுவார்கள். பாட்டு என்றால் ரிம்ஜிம் என்று ஒரு பழைய பாட்டு வரும். அதைத்தான் விரும்பிக் கேட்பேன்.

நான் அங்கு இருந்த நாட்களில் ஒருமுறை மழை இரண்டு நாட்கள் விடாமல் பெய்தது. நாங்கள் இருக்கும் இடம் தாழ்வான பகுதியில் இருந்ததால் அங்குள்ள எல்லா வீடுகளிலும் கடைகளிலும் தண்ணீர் புகுந்துவிட்டது. எல்லாரும் கட்டில்மேல் பொருட்களைத் தூக்கி வைத்துக்கொண்டு மூன்று நாட்களுக்கு மேலாகத் தண்ணீருக்குள்ளேயே வாழ்ந்தோம். நானும் சில இஜராக்களும் தண்ணீரில் நீச்சல் அடிப்பதும் ஒருவருக்கொருவர் தண்ணீரை மேலே இறைத்துக்கொள்வதுமாக விளையாடினோம். தண்ணீரிலேயே வெகுதூரம் நடந்துசென்று வருவோம். அப்போது கீழ்வீடுகளில் உள்ளவர்கள் பெரும் அவதியில் இருந்தனர். சமையல் செய்யக்கூட முடியவில்லை. சாப்பிட முடிய வில்லை. எல்லாரும் தூங்கும்போது திடீர் என்று வீட்டுக்குள் தண்ணீர் புகுந்துவிட்டதால் உடைமைகளைப் பத்திரப்படுத்த முடியாமல் எல்லாம் தண்ணீரில் மூழ்கிப்போய் இருந்தன. வீட்டில் உள்ள கட்டிலும் மூழ்கிப்போய் அங்கிருப்பவர்கள் தங்களின் வீடுகளைத் தண்ணீருடன் பூட்டிவிட்டு தஞ்சம் என மேல் குடியிருப்புக்குச் சென்று தங்கினர்.

மழைத் தண்ணீருடன் சாக்கடைத் தண்ணீரும் சேர்ந்து வரும். அதில் நாங்கள் விளையாடும்போது மூத்தவர்கள் திட்டுவார்கள். எந்த வியாதியும் வந்தால்கூடப் பரவாயில்லை என்று மழையில் நனைந்து கொண்டு விளையாடுவோம். எத்தனையோ கார்கள் பைக்குகள் மூழ்கிய நிலையில் இருந்தன. அந்த வெள்ளத்தில் குதிரை வண்டியில் வந்து படம் பிடிப்பவர்களும் சுற்றிப் பார்ப்பவர்களும் ஓட்டல்களில் தண்ணீருக்குள் நின்றபடி டீ வாங்கிக் குடிப்பவர்களும் என எல்லாம் புதிய அனுபவம்தான். கஷ்டத்திலும் சுகம் கண்ட இந்த நினைவுகள் மறக்க முடியாதவை.

என்னுடைய நானியைப் பார்க்கப் போகும்போது மின்சார ரயிலில் செல்வேன். இஜராக்கள் ரயிலில் டிக்கட் வாங்கமாட்டார்கள். நான் கூட ஆரம்பத்தில் கடை கேட்கப் போகும்போது டிக்கட் வாங்க மாட்டேன். சீட்டிலும் உட்காரமாட்டேன். வழியில் கீழே உட்கார்ந்து தான் பயணம் செய்வேன். இங்கு வந்தபிறகு நான் என்னை இந்தச்

சமுதாயத்திற்குப் பெண் என்று அறிமுகப்படுத்தியுள்ளேன். மேலும் சில விஷயங்களைக் கற்றுக்கொண்டிருக்கிறேன். நவநாகரிக உடைகளை அணிந்து மற்ற பெண்களைப்போல எங்கோ வேலைக்குப் போவது போல, கல்லூரிக்குப் போவதுபோல நினைத்துக் கற்பனை செய்து கொண்டு ரயில் டிக்கட் வாங்கிக்கொண்டு சமமாகப் பெண்கள் கம்பார்ட்மெண்டில் சீட்டில் உட்கார்ந்துதான் பயணம் செய்வேன்.

காலை 10.30 மணிக்கு மாதுங்கா என்ற இடத்தில் அரோகரா சினிமா தியேட்டருக்குப் போய் தமிழ் சினிமா பார்த்துவிட்டுத்தான் மதியமாக நானியைப் பார்க்கப் போவேன். மாதுங்காவில் தமிழர்கள் அதிகமாக இருந்தனர். இங்குத் தமிழ்நாட்டில் கிடைக்கும் பொருள்கள் எல்லாம் கிடைக்கும். என் நானிக்காக இங்கு வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு, புகையிலை வாங்கிச் செல்வேன். மேலும் நானி வீட்டில் உள்ள என்னு டைய காலா குரு, குருபாய்களுக்குக் கோபுரம் மஞ்சள் டப்பா, ஊசி மல்லிப்பூ, கனகாம்பரம், கதம்பம் வாங்கிச் செல்வேன். மாதுங்காவில் முருகன், ஐயப்பன், பெருமாள் கோயில்களும் இருக்கின்றன. அங்கும் சென்று சாமி தரிசனம் செய்து எனக்கு நன்றாக யாவாரத்தைக் கொடுத்து மன நிம்மதியைக் கொடு கடவுளே என்று வேண்டிக் கொள்வேன்.

நானி வீட்டில் நான் கடை கேட்டுக்கொண்டு இருக்கும்போது அங்கு சமையல் செய்யும் என் காலா குரு எனக்கு மீதியான சாப்பாட்டையும் பழைய குழம்பையும் காய்ந்த ரொட்டியையும்தான் கொடுப்பார். இப்போது அப்படி இல்லை. சுடு சாப்பாடு, இன்று வைத்த மீன் குழம்பு என்று கொடுப்பார். காரணம் அன்று பணத்துக்கு அடுத்தவர் கையை எதிர்பார்த்தேன். பணம் சம்பாதித்தாலும் முழுமையாக அப்படியே நானியிடம் கொடுத்துவிட்டுக் காலையில் ஒரு ரூபாய் போனியாக வாங்கிச் செல்வேன். இன்று நான் சுதந்திரமாக இருக்கின்றேன். என் நானிக்கு என் வருமானத்தைக் கொடுத்தாலும் எனக்குத் தேவை யானதை வாங்கிக் கொண்டுதான் கொடுக்கிறேன். அன்று பிடித்த புடவை, மேச் ஜாக்கட், அதைத் தைக்க நல்ல டைலர் என்று இல்லை. எல்லாம் நானியேதான் முடிவு செய்வார். மேச் இல்லாத ஜாக்கட், கிழவிபோல லூசான ஜாக்கட் என்று இருந்தது. இன்று அப்படி இல்லை. சுடிதார் போட்டிருக்கிறேன். நாகரிகமாகப் பேசுகிறேன். பணம் கொடுக் கிறேன். அதனால் இங்கு எனக்கு நல்ல மதிப்பு.

இந்த உலகத்தில் பணம் இருந்தால் போதும். நாகரிகமும் மதிப்பும் மரியாதையும் உறவுகளும் நம்மிடத்தில் தேடி வந்துவிடுகின்றன என்று புரிந்துகொண்டேன். நானி வீட்டில் இருக்கும் அந்த எச்சில் துப்பும் பாத்திரம், குளிக்கத் தண்ணீர் பிடிக்கும் பெரிய பித்தளைப் போவணிகள், மசாலா அரைக்கும் அம்மி, பாத்திரம் விளக்கும் மோரி இதை எல்லாம்

பார்க்கும்போது எனக்குப் பழைய ஞாபகங்கள் வந்தன. தற்போது வேறு ஒரு புதிய இஜரா அதையெல்லாம் செய்துகொண்டு இருந்தாள். நான் அன்று வேலை செய்யும்போது என் மனதில் எப்படி நினைத்திருப் பேனோ அது இந்த இஜராவுக்கும் இருக்கும் என அவளை ஒரு பார்வை பார்த்துக்கொள்வேன்.

என்னுடைய மூத்த குருபாய் என் குருவுடன் பையளகள்ளி காமாட்டி புரத்தில் இருந்தாள். அங்கும் சென்று என் குருவையும் என் குரு பாயை யும் பார்ப்பேன். என்னிடம் குருபாய் நன்றாகப் பேசுவாள். என்னு டைய தந்தா, கிராக்கிகள், அங்குள்ள நிலவரங்கள், என் அழகுக்கு என்ன காரணம் இப்படி என்னிடம் கேட்கும்போது நானும் பதில் சொல்வேன். அவரிடம் ஓர் உதவி கேட்டேன். என்னவென்றால் நான் பெண் என்று போகும்போது எனக்கு மார்பகங்கள் இல்லாததால் சிலருக்குத் தெரிந்துவிடுகிறது, உன்னைப் போல் எனக்கும் மார்பகம் பெரியதாக வளர ஏதாவது வழி சொல்லு என்று கேட்டேன். யாருக்கும் சொல்லக் கூடாது என்று ப்ரமோரியன் என்ற மாத்திரைப் பாட்டிலைக் கொடுத்து 'தினமும் ஒன்றும் சாப்பிடு' என்றாள். இது சிங்கப்பூர் மாத்திரை. இங்கு கிடைக்காது என்று கூறினாள். நானும் அந்த மாத்திரையை ஒரு மாதம் சாப்பிட்டேன். அவள் அளவுக்கு இல்லா விட்டாலும் மனம் திருப்தி அளிக்கும் வகையில் என் மார்பகம் வளர்ந்தது.

இப்படி நான் பெண்ணாக வாழ்வதும் வெளியில் ஷாப்பிங் செல்வதும் தியேட்டர் சென்று சினிமா பார்ப்பதும் கோவிலுக்குச் சென்று சாமி தரிசனம் செய்வதும் உறவுகள் அன்பாக இருப்பதும் எனக்குச் சந்தோஷ மான நாட்களாக இருந்தன. இன்றும் என் மனதில் அந்த நினைவுகள் இருக்கின்றன.

ஒருநாள் ஞாயிற்றுக்கிழமை, முதலாளி அம்மா ஆட்டுக்கறி வாங்கி வந்து பாலக் கீரையுடன் ஏதோ வித்தியாசமாகக் குழம்பு வைத்தாள். அதைப் பாஜிகோஷ் என்று சொன்னார். பாஜி என்றால் கீரை. கோஷ் என்றால் கறி. ஆஹா... இது கேட்கும்போதே நாக்கில் எச்சில் ஊறுதே, அவர் சமைப்பதற்குள் எப்படியாவது யாருக்கும் தெரியாமல் ஒரு பியர் குடித்துவிட்டு வந்துவிடவேண்டும். குடித்துவிட்டுக் கறி சாப்பிடுவது எனக்குப் பிடிக்கும். அதுவும் பாஜிகோஷ் புதுமையானது என்பதால் என் மனதில் குடிக்கத் தோன்றியது. என்ன செய்வது என்று தெரிய வில்லை. பயளகள்ளியில் குரு வீட்டுக்குப் போய் வருகிறேன் என்று சொல்லிவிட்டுப்போனால் முதலாளி அம்மா விசாரித்து நான் அங்கு போகவில்லை எனத் தெரியவந்தால் குழப்பமாகிவிடும். அதனால் என்ன வழி என்று யோசனை செய்து கொண்டிருக்கையில் அழகு நிலையம்

சென்றுவருகிறேன் என்று பொய் சொல்லிவிட்டுத் தூரமாக உள்ள ஒரு பாருக்குச் சென்றுவிட்டேன்.

அங்கு என் வீட்டுக்கு மேல் மாடியில் இருக்கும் ஒரு இஜரா இருந்தாள். அவள் எனக்கு மூத்த குருபாய் முறை. அவள் சில ஆண்களோடு உட்கார்ந்து குடித்துக் கொண்டிருந்தாள். அவளும் என்னைப் பார்த்துவிட்டாள். நானும் அவளைப் பார்த்து விட்டேன். அவளும் என்னிடம் பேசவில்லை. நானும் அவளிடம் பேசவில்லை. நான் அமர்ந்த டேபிளில் இரண்டு பாகிஸ்தான் ஆண்கள் இருந்தனர். பார்ப்பதற்கு அழகாக இருந்தனர். அவர்கள் என்னிடம் பேசினர். நானும் அவர்களிடம் பேசினேன். உருது பேசியதால் நானும் எனக்குத் தெரிந்த உருது இந்தியைச் சேர்த்துப் பேசினேன். பியர் வேண்டுமா என்று கேட்டான். நானும் இன்று 50 ரூபாய் மிச்சம் என்று நினைத்து ஆம் என்றேன். அவர்களுக்கும் சேர்த்து மூன்று பியர் ஆர்டர் செய்தான். 'இந்த பியரை ஒரே மூச்சில் குடித்துவிட்டால் உனக்கு 150 ரூபாய் தருகிறேன்' என்றான். நானும் சரி என்று பியரை பாட்டலுடன் எடுத்து தலையை நிமிர்த்தித் தூக்கிக்கொண்டு வாயில் பாட்டிலை வைத்தவாறு கஷ்டப்பட்டு ஒரே மூச்சில் குடித்துவிட்டுக் காலி பாட்டிலை டேபிள்மீது வைத்தேன். அவனும் சபாஷ் என்று கூறி 150 ரூபாய் கொடுத்தான்.

அதைப் பார்த்த அந்த இஜரா என் டேபிளுக்கு வந்து அமர்ந்து கொண்டு அவர்களிடத்தில் 'நானும் இதுபோலக் குடிக்கிறேன். எனக்கும் பணம் தருவீர்களா?' என்று கேட்டாள். அவனோ என் முகத்தைப் பார்த்துவிட்டு அவளையும் பார்த்துவிட்டு இல்லை என்று மறுத்துவிட்டான். அவளோ நான்தான் தரவேண்டாம் என்று சொன்னதாக நினைத்துக்கொண்டு என்னிடம் தமிழில் சண்டை போட்டுக் கெட்ட வார்த்தையால் திட்டினாள். என் அம்மாவைத் தகாத வார்த்தையால் திட்டியதால் எனக்கும் கோபம் வந்தது. 'நான்தான் இங்குத் தேவடியாத் தொழில் செய்கிறேன். என் அம்மாவை நீ எப்படிச் சொல்லலாம்? அதையே திருப்பிச் சொன்னால் உன் மனது எப்படிக் கஷ்டப்படும்?' என்று கூறினேன். 'என் அம்மாவை நீ கூறிவிடுவாயா? எங்க சொல்லு பார்க்கலாம்' என்று கூறி என் தலை முடியை இழுத்து என்னை அடித்துவிட்டாள். அந்தப் பாரில் அத்தனை பேரும் வேடிக்கை பார்த்ததில் எனக்கு அவமானமாகப் போயிற்று. அதனால் நானும் திருப்பி அவள் தலைமுடிமீது கைவைத்தேன். 'என்னையே நீ அடிக்கிறாயா? நேத்து வந்த போடுக்க, காண்டு, ரன்டிகா பேட்டா' என்று தகாத முறையில் மீண்டும் என்னைத் திட்டி உதைத்து என் துணிகளைக் கிழித்து அவமானப்படுத்தினாள்.

பார் மானேஜர் வந்து 'நீங்கள் வெளியில் போய்ச் சண்டை போடுங்கள்; இங்கு இப்படி நடந்துகொள்ளக் கூடாது' என்று கூறி எங்களை வெளியில் அனுப்பி விட்டார். ரோட்டில் நடந்து வரவர வீடுவரை என்னைத் திட்டிக் கொண்டும் அடித்துக்கொண்டும் வந்தாள். சத்தம் கேட்டு எல்லா இஜராக்களும் என்னவென்று ஓடிவர என் வீட்டு முன் என்னைப் போட்டு மீண்டும் அடித்து என் முதலாளி அம்மாவிடம் 'பாருங்கம்மா, உங்க வீட்டுப் பொட்டை செய்த காரியம். நான் பியர் பாரில் கஸ்டமர் பிக்அப் செய்து கொண்டிருந்தேன். அவர்களும் குடித்துவிட்டு ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன் என்று கூறினார்கள். நானும் பேசி வீட்டுக்குக் கூட்டி வரலாம் என்று இருந்தேன். அதற்குள் அங்கு வந்த இவள் என்னிடம் சண்டை வளர்த்து என் கிராக்கியையும் திட்டி இவள் பெண் இல்லை இஜரா என்று கிராக்கியிடம் சொல்லிக் கொடுத்துக் கிராக்கி என்னிடம் வராமல் செய்துவிட்டாள். பற்றாக் குறைக்கு என்மீது கைவைத்து அடித்துவிட்டாள்' என்று பொய்யாகக் கூறி என்னை மாட்டிவைத்து அவள் தப்பிவிட்டாள்.

'நீ அழகு நிலையம் போவதாகத்தானே என்னிடம் சொல்லிவிட்டுச் சென்றாய். எதற்குப் பியர் பார் சென்று இவளிடம் சண்டை வளர்த்து வந்தாய்?' என்று என் முதலாளி அம்மாவும் அவள் சொல்வதை நம்பி என்னிடம் சண்டை போட்டாள். நான் நடந்ததைச் சொல்லியும் அவர் நான் சொல்வதைப் பொய் என்றே கூறினார். 'எனக்குத் தெரிந்துவிட்டது. நீங்கள் எல்லாம் ஒரே பரிவாரைச் சேர்ந்தவர்கள். உங்கள் வீட்டுச் சேலா என்பதால் விட்டுக் கொடுக்காமல் பேசுகிறீர்கள். எனக்கும் குரு, குருபாய் இருக்கின்றனர். நானும் போய்க் கூட்டி வருகிறேன்' என்று உரக்கக் கூறிவிட்டு ஒரு டாக்சி பிடித்துப் பயளகள்ளியில் இருக்கும் குருவிடம் போய் நடந்ததைக் கூறினேன். என்னுடைய குரு உட்பட ஐந்து டாக்சியில் என் பரிவார் சேலா, குருபாய், காலா குரு என எல்லாரும் என்னை அடித்தவள் வீட்டிற்குச் சென்று இறங்கினோம். அவளோ பயந்துபோய் அவளின் குரு பின்னால் போய் உட்கார்ந்து கொண்டாள். அவள் குரு விட்டிருந்தால் அன்று என் பரிவார் எல்லாம் அவளை உண்டு இல்லை என்று செய்திருப்பார்கள்.

மூத்தவர்கள் அமர்ந்து சமாதானப் பேச்சு நடத்தினர். முடிவில் இங்குள்ள பொட்டைகள் பாருக்குப் போய் குடித்துவிட்டு ஒருவருக் கொருவர் சண்டை போட்டுக் கொள்கின்றனர். சாயந்திரமாப் பார்த்தால் ஒன்றாகக் கைகோத்துத் தோழிகள் ஆகிவிடுகின்றனர். இதனால் மூத்தவர்கள் நாம் சண்டை போட்டுக்கொள்வது தவறு. அவளும் முடியைப் பிடித்து அடித்துள்ளாள்; இவளும் முடியைப் பிடித்து அடித்துள்ளாள். உங்க வீட்டுப் பொட்டை நேற்று வந்தவள். இவள்

வந்து பல வருடம் ஆகிறது. அவள்மீது கை வைத்தது தப்பு என்று கூறி இந்தப் பேச்சை இத்துடன் முடித்துக் கொள்ளலாம் என்று நியாயம் கிடைக்காமல் செய்துவிட்டனர்.

இந்த விஷயம் என் நானிக்குத் தெரியவர 'இனி ப்ளவுசில் தந்தா பண்ண வேண்டாம்' என்று கூறி என் குருவுடன் பயளகள்ளியில் தந்தா செய்யும் பெண்களைப் பார்த்துக்கொண்டு அங்கு அவர்களுக்குத் தேவையானதை வாங்கிக் கொடுத்துக்கொண்டு இருக்கட்டும். இவள அங்கு நாலு காசு சம்பாரிக்க அனுப்புனா குடிப்பழக்கமெல்லாம் கத்து கிட்டாளே. விட்டா இன்னும் என்னவெல்லாம் செய்வாளோ' என்று கூறி என் குருவிடம் விட்டுவிட்டனர். நானும் என் குருவும் என் துணிமணிகளை எடுத்துவர முதலாளி அம்மா வீட்டிற்குச் சென்றோம். அப்போது என்னிடம் முதலாளி அம்மா பேசவில்லை. நானும் எதுவும் பேசாமல் என் பெட்டியை எடுத்துக்கொண்டு குருவுடன் டாக்சியில் அமர்ந்தேன். முதலாளி அம்மா ஒரு குடம் தண்ணீர் எடுத்துவந்து வாசற் படியில் கொட்டினாள். வீதியில் பிண ஊர்வலம் சென்ற பிறகு வாசலில் தண்ணீர் ஊற்றுவது இங்குள்ள பழக்கம். இப்போது என் பிணம் போய் விட்டதாக முதலாளி அம்மா தண்ணீரை ஊற்றினாள். இந்த உலகத்தில் உண்மைக்கும் நேர்மைக்கும் காலமே இல்லை என்று மனவருத்தத் துடன் பயளகள்ளி சென்றேன். இனி இங்கு வரவே கூடாது என்ற முடிவில் சென்றேன்.

சம்பாரிச்சுக் கொடுப்பவர்கள் தப்பு செய்தாலும் சப்போட் கிடைக் கிறது. காரணம் அவள் செய்தது தப்பு என்று கூறினால் அவள் ஓடிப் போய் வேறு வீட்டில் சேலா ஆகிவிடுவாள். அதன் பிறகு நமக்கு வருமானம் இல்லையே என்று நினைப்பார்கள். மேலும் இங்கு நான் நான்கு கிராக்கி நறுக்குனு கூட்டிக்கிட்டுப் போறதப் பார்த்தால் வயிற்று எரிச்சல்பட்டு ஏதாவது சந்தர்ப்பம் கிடைக்குமா, சண்டை வளர்த்து அவள் அழகைக் கெடுத்துவிடவேண்டும் என்று நினைப்பார்கள் சிலர். மேலும் இங்கு என் வீட்டிலேயே இருப்பவர்கள் எனக்கு சப்போட் செய்ய முன்வரவில்லை. வேற ஒரு பரிவார் பொட்டை நம்ம இடத்தில் வந்து சம்பாதித்து மூட்டை கட்டறாள், நம்ம பரிவார் பொட்ட தந்தா இல்லாம இருக்குமே என்று நினைக்கிறார்கள். இஜராக்களில் போட்டி பொறாமை, உன் பரிவார் என் பரிவார் என்று உள்ளன. ஆனால் சாதி மதம் என்று பார்க்கையில் இஜரா சாதி ஒன்றுதான் இங்கு.

பயளகள்ளி காமாட்டிபுரத்தில் என் குருவீட்டிற்கும் வேறுவேறு வீடுகளுக்கும் அதிகமாக லாரி டிரைவர்கள் கிராக்கியாக வருவார்கள். அதுவும் நாமக்கல் லாரி பிசினஸ் தமிழ்நாட்டில் பெயர் போனது. அங்கு அதிக அளவில் லாரிகள் உள்ளன. மும்பை வரும்போது ஏராளமான

லாரி டிரைவர்கள் இங்கு வருவார்கள். எனக்குத் தெரிந்த சொந்தக் காரர்கள்கூட இங்கு உள்ள பெண் பாலியல் தொழில் செய்பவர்களிடம் வந்து இரவு முழுவதும் இருந்துவிட்டுச் செல்வார்கள். நான் முன் இருந்த ப்ளவுக்கு வருவது இல்லை. காமாட்டிபுரத்தில் பர்மனன்ட் கஸ்டமராக ஒவ்வொரு பெண்ணுக்கும் லாரி டிரைவர்கள் இருப்பார்கள். எனக்கோ அங்குச் சென்று அவர்கள்முன் சேவை செய்துகொண்டு இருக்கப் பிடிக்கவில்லை. இருந்தாலும் நானி கூறிவிட்டார்கள், நான் அங்குச் சென்று இருக்க வேண்டும் என்று. அவர்களும் யோசனையில்தான் என்னை இங்குக் கூட்டி வந்துள்ளார்கள் என்று தெரிந்தது. எங்கள் ஊர் கிராக்கிகள் அதிகம் வருவதால் என்னை அங்குப் பார்த்தால் என்னிடம் பேசுவார்கள். நான் என் குரு வீட்டுப் பெண்களுக்குக் கிராக்கி பிடித்துக் கொடுப்பேன் என்று நினைத்து அங்கு இருக்கச் சொல்லி இருக்கின்றனர்.

எனக்கோ பெண்கள் அங்கு படும்பாடு, அவர்களின் சுதந்திரம் இல்லாத வாழ்க்கை, ஜெயில் கைதிபோலப் பாத்ரூம் போனால்கூட காவலுக்கு ஆட்கள், ஆஸ்பிட்டலில் அவர்களின் கஷ்டங்கள், இப்படி எத்தனையோ விசயங்களில் அவர்களைப் பார்க்கும்போது கஷ்டமாக இருக்கும். மேலும் நான் கிராக்கி பிடித்துப் பெண்களுக்கு விடுவதை நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. எனக்கும் தாய், அக்கா இருக்கின்றார்கள். இதுபோன்ற வேலைகளை ஒருபோதும் என்னால் செய்ய இயலாது. என் உடலை வேண்டுமானால் விற்றுச் சாப்பிடுவேன். மற்றவர்கள் உடலை விற்றுச் சாப்பிடும்முறை எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. இதையெல்லாம் நான் யாரிடத்தில் கூறுவது? என் உணர்வுகளை யார் புரிந்துகொள்வார்கள்? வெளியில் சொல்ல முடியாத இதுபோன்ற நிலையில் நான் என்ன செய்வது? நானி குரு சொல்லிவிட்டார்களே என்று இங்கு போகிறேன். ஆனால் இருக்க மாட்டேன். சந்தர்ப்பம் பார்த்துச் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப்போய் விடுவதுதான் ஒரே வழி என்று நினைத்துக்கொண்டு மனதில் வேதனை யோடு காமாட்டிபுரம் சென்றேன்.

# 13

காமாட்டிபுரம் பயளகள்ளியில் என் நானிக்குச் சொந்தமாக இரண்டு வீடுகள் இருந்தன. ஒரு வீடு கீழே. அதில் என்னுடைய காலா குரு தொழில் நடத்தி வந்தார். மேலே உள்ள வீட்டில் என் குரு நடத்தி வந்தார். நானும் அங்குதான் இருந்தேன். குருவோட வீட்டில் பத்துப் பெண் பாலியல் தொழிலாளர்களும் இருந்தனர். அவர்கள் யாரும் வெளியில் செல்ல முடியாது. அவர்களுக்கு உடல்நிலை சரியில்லை என்றால் நான்தான் பாதுகாவலராக ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்ல வேண்டும். அவர்களின் வாடிக்கையாளர்களுக்குப் பியர், பிராந்தி, உணவு, சிகரெட் எனக் கடைகளுக்குச் சென்று வாங்கிவந்து கொடுக்க வேண்டும். எனக்குத் தினம் ஐந்து ரூபாய் என்னுடைய குரு கொடுப்பார்கள். பெரும்பாலும் காலையில் இங்கு உணவு தயாரிப்பது இல்லை. தமிழ்நாட்டைச் சேர்ந்த சிலர் இட்லி, தோசை, வடை எனச் செய்துகொண்டு வந்து வீடுவீடாக விற்பார்கள். நானும் அங்கு உள்ள பெண்களும் அதைத்தான் வாங்கிச் சாப்பிடுவோம். எனக்கு ஐந்து ரூபாய்க்கு இட்லியோ தோசையோ வாங்கினால் பற்றாது. குருவிடம் இன்னும் பணம் கேட்கவும் பயமாகவும் இருக்கும். அதனால் அரை குறை வயிற்றோடு இருப்பேன். மதிய உணவு இங்கேயே தயார் செய்வார்கள். அதையே இரவுக்கும் சேர்த்து வைப்பார்கள்.

பெண்கள் என்னைப் பிஞ்சம்மா பிஞ்சம்மா என்று அழைப்பார்கள். இங்குள்ள பெண்கள் இஜராக்களைப் பெயர் சொல்லிக் கூப்பிட மாட்டார்கள். அம்மா என்றுதான் கூப்பிடுவார்கள். நான் சிறியவளாக இருந்ததால் என்னைப் பிஞ்சு அம்மா என்று கூப்பிடுவார்கள். மாலை ஐந்து மணிக்கு எல்லாப் பெண்களும் தலைவாரிப் பூ வைத்து மேக்கப் செய்துகொள்வார்கள். சிலர் தூங்கிக்கொண்டு இருந்தால் நான்தான் எழுப்பிவிட வேண்டும்.

'ஏய் பொண்ணுங்களா எந்திரிங்க மணி ஐந்தாஞ்சு, இன்னும் என்னங்கடி தூக்கம்?' என்று எழுப்பிவிடுவேன். 'பிஞ்சம்மா! நேத்து

நைட்டு கிராக்கி ரெண்டு பேரோட மாத்திமாத்திப் படுத்திருந்தேன். கொஞ்சம்கூட என்னைத் தூங்கவிடலம்மா. இன்னும் கொஞ்ச நேரம் தூங்கிட்டு எழுந்துருக்கேம்மா. பிளீஸ் அம்மாகிட்டப் போட்டுக் குடுத்துடாதீங்க' என்று சில பெண்களிடமிருந்து விடைவரும். சில சமயங்களில் ஒரு பெண்ணையே இரண்டு ஆண்கள் விருப்பப்பட்டால் இருவரிடமும் அந்தப்பெண் படுக்கவேண்டும். அதுவும் ஒரு ஆணுடன் படுத்திருப்பது இன்னொருவனுக்குத் தெரியக் கூடாது. தெரிந்தால் 'பணம் குடுத்து உன்னை நான் புக் செய்திருக்கேன். நீ வேறு ஒருவனுடன் படுக்கிறாயா?' என்று திட்டுவார்கள்.

வாடிக்கையாளர்கள் இரவு தங்குவதுதான் அதிகம். பகலில் ஒரு முறை செக்ஸ் செய்யத்தான் வருவார்கள். அவர்களும் பெரும்பாலும் வடநாட்டைச் சேர்ந்தவர்கள். இரவு 7 மணியிலிருந்து 9 மணிக்கெல் லாம் தமிழ்நாட்டு லாரி டிரைவர்கள் இங்கு அவரவர் இஷ்டப்பட்ட மாமூல் பெண்களிடம் புக் செய்து கொள்வார்கள். ஒரு இரவு தங்கிப் போகும் பணத்தை என் குருவிடம் கொடுத்துவிடுவார்கள். பெண் களுக்கு டிப்ஸ் பணம் வாடிக்கையாளர்களிடம் வாங்கிக்கொள்வார்கள். அந்த டிப்ஸ் பணத்தைக் கொண்டுதான் அவர்கள் தங்களுக்குத் தேவை யானதை வாங்கிக்கொள்ள வேண்டும்.

'நீ மேக்கப் போட்டுக்கிட்டு கீழேபோய் நின்னுக்கோ. நம்ம வீட்டுக் கிராக்கியை வேற வீட்டுப் பொட்டைங்க கூட்டிக்கிட்டுப் போகாமப் பாத்துக்கோ' என்று என்னோட குரு சொல்வார்கள். நானும் பெண் களைப்போல மேக்கப் செய்து தலைவாரிப் பூ வைத்துக் கீழேபோய் ரோட்டில் நின்றுகொண்டிருப்பேன். அக்கம் பக்கம் வீடு உள்ளவர்கள் அவரவர் வீட்டுக் கிராக்கியைப் பார்த்துக் கூட்டிச் சென்று பெண்களிடம் விட்டுவிட்டு மீண்டும் கீழே வந்து நிற்பார்கள். எல்லா வீட்டிலும் இருக்கும் இஜராக்கள் எனக்குக் குருபாய் முறை ஆவோருடன் ஓட்டலுக்குச் சென்று டீ குடித்துவிட்டுப் பெரியவர்களுக்குப் பீடா வாங்கிக்கொண்டு வருவோம்.

ஒருநாள் இப்படித்தான் மற்ற வீட்டு இஜராக்களுடன் டீ குடித்து விட்டு வரும்போது ஒரு டாக்சியில் 7 பேர் வந்து இறங்கினார்கள். யார் என்று பார்த்தால் லாரி டிரைவர்கள். என் ஊரைச் சேர்ந்தவர்கள். அவர்கள் என்னை அடையாளம் தெரிந்துகொண்டு என்னை நோக்கி வந்து, 'என்னடா துரைசாமி இங்கதான் இருக்கியா? எப்படிடா இருக்கே?' என்று கேட்டனர். நானும் 'நன்றாக இருக்கிறேன். என் குரு வீட்டிற்குச் சில நாள் தங்கிப்போகலாம் என்று வந்தேன்' என்றேன். அவர்கள் என்னை 'டா' போட்டுக் கூப்பிட்டதும் என் சொந்தப் பெயரை அழைத்துப் பேசியதும் எனக்குக் கஷ்டமாக இருந்தது. என்னால்

சரியாகப் பதில் பேச முடியாமல் முணுமுணுத்தேன். சுற்றியுள்ள இஜராக்கள் 'என்னடி உன்பேரு துரைசாமியா? என்ன இவுங்க உன்ன டா போட்டுக் கூப்பிடுறாங்க?' என்று கேலி செய்ய எனக்கு வெட்க மாகவும் கஷ்டமாகவும் இருந்தது.

'டேய் பொட்டைங்களா, எங்கடா போய்த் தொலைஞ்சுட்டீங்க, நம்ம வீட்டுக் கிராக்கிடா. போய்க் கூட்டிக்கிட்டு வாங்கடா' என்று ஒரு வீட்டில் இருந்து குரல் கேட்டது. இந்த ஏழுபேரும் என்னிடம் 'உங்க வீடு எங்கடா இருக்கு, கூட்டிக்கிட்டுப் போ. நாங்க அங்க வருகிறோம்' என்றனர். 'சரி வாங்க' என்று நான் முன்னால் போகக் கால் அடி எடுத்து வைப்பதற்குள் மற்ற இஜராக்கள் 'என்னடி இது எங்க வீட்டுக் கிராக்கிங்க நீ எப்படிக் கூட்டிக்கிட்டுப் போகலாம்?' என்று கூறி அந்த ஏழு பேர்களுடைய சட்டையை இழுத்துப் பிடித்தனர். அவர்களே 'நாங்கள் இன்று இங்கு போகிறோம்' என்று சொல்ல எல்லா இஜராக்களும் என்னிடம் சண்டைக்கு வந்துவிட்டனர். என் வீட்டு இஜராக்களும் என்னுடன் கீழே வந்து மற்ற வீட்டு இஜராக்களுடன் சண்டை போட்டனர். முடிவில் யார் வீட்டுக் கிராக்கியோ அவர் வீட்டுக்குத்தான் போக வேண்டும் என்று முடிவு ஆனது.

'உங்க ஊருக்கார மாப்பிள்ளையா இருந்தா உங்க ஊரோடுதான் வச்சுக்கணும். பர்மனன்டா இவுங்க எங்க வீட்டுக்கு வர்றவங்க. இங்க உங்க ஊருக்காரன் எங்க ஊருக்காரன் என்று பார்க்கக் கூடாது. யார் வீட்டுக் கிராக்கி என்றுதான் பார்க்க வேண்டும். இனிமேல் எங்க ஊருக்காரன் என்று பேசிக் கூட்டிக்கிட்டுப் போன, முடியை ஆச்சுப் புடுவோம் ஜாக்கிரதை' என்று என்னைப் பார்த்துக் கூறிவிட்டு அந்த ஏழு பேரையும் அழைத்துச் சென்றுவிட்டனர்.

'என்ன பொட்டையடி நீ? அந்த ஏழுபேரில் மூன்றுபேர் புதுசா வந்திருக்காங்க. அவுங்க இதுதான் முதல் தடவையா இங்க வராங்க. அவுங்களக் கூட்டிக்கிட்டு வந்திருக்கலாமே' என்று என் குரு என்னிடம் சண்டை போட்டார். 'எனக்கு எப்படிம்மா தெரியும் அவங்க மூணுபேரும் புதுசுன்னு? நான் வந்து இங்க கொஞ்சநாள்தான் ஆகுது. இங்கு இருக்கின்ற சிஸ்டம் எனக்குத் தெரியாது. அதுவும் யார் இதுக்கு முன்னாடி வந்தாங்க, யார் யார் வீட்டுக் கிராக்கின்னுகூட எனக்குத் தெரியாது. நம்ம வீட்டுக் கிராக்கிகூட எனக்குச் சரியாத் தெரியாது. நான் என்ன செய்ய?' என்று பதில் சொல்ல, 'உனக்கு ஒன்னும் தெரியாது. ஒரு தட்டுச் சோறு திங்கத் தெரியும். நீயெல்லாம் பொட்டையாடா? ஊர்க்காரங்கள நைசாப் பேசிக் கூட்டிக்கிட்டு வரத் துப்பு இல்ல. வந்துட்ட. என் முன்னாடி நிக்காதே போ வெளியில். நம்ம வீட்டுக் கிராக்கிங்களை உன்னோட குருபாய் காட்டுவா. போயிப் பேசிக்

கூட்டிட்டு வா' என்று சொல்லி என்னை மீண்டும் கீழே போய் நிற்கச் சொன்னார் என் குரு.

இப்படிதான் சண்டைகளும் சந்தோஷங்களுமாய் அந்த ஏரியாவே களைகட்டிக் கொண்டு இருக்கும். வீட்டில் சில சமயம் கிராக்கிகள் அதிகமாக இருந்தால் படுப்பதற்குக்கூட இடம் இருக்காது. அப்போது கீழே ரோட்டில்தான் படுக்க வேண்டும். நான் மட்டுமல்ல. இஜராக் களும் கூடத்தான். கிராக்கிகளுக்குத் தேவையானவற்றை வாங்கிக் கொடுக்கக்கூட எனக்குக் கஷ்டமா இருக்கும். 'பிஞ்சம்மா பிஞ்சம்மா' என்று மேலே இருந்து குரல் வந்தால் கீழே இருந்து ஓடவேண்டும். என் குரு பணத்தைக் கொடுத்து 'ஒரு பிரியாணி வாங்கிவா' என்று கூறுவார். அதுவும் டெல்லி தர்பார் ஒட்டலில்தான் வாங்க வேண்டும். அந்த டெல்லி தர்பார் ஒட்டல் இங்கிருந்து ஒன்றரை கிலோமீட்டர் தூரம் உள்ளது. ஒரு பிரியாணி 35 ரூபாய். கிராக்கிகளிடம் வாங்குவது 50 ரூபாய். மீதி 15 ரூபாய் என் குரு வாங்கிக் கொள்வார். அதையாவது எனக்குக் கொடுக்கக் கூடாதா? போக வர மூன்று கிலோ மீட்டர் தூரம் நடந்தே சென்று வருகிறேனே. அந்தப் பணத்தில் டாக்சி பிடித்துப் போனால் என்ன? ஏன் குரு இப்படி நடக்க வைப்பதும் இல்லாமல் மீதிப் பணத்தை என் செலவுக்குக்கூடக் கொடுப்பதில்லையே என்று நினைத்துக்கொள்வேன்.

பெண்களாகட்டும் என் குருவாகட்டும் யார் யாருக்கு என்னென்ன வேணும் என்று மொத்தமாகக் கேட்டு ஒரேமுறை கடைக்கு அனுப் பினால் என்ன? அப்படி அனுப்பமாட்டார்கள். சில சமயங்களில் ஐந்து முறை, ஏழு முறை அந்த டெல்லி தர்பார் ஒட்டலுக்கு நடந்த வரணம் இருப்பேன். கண்ணீர்விட்டு அழுதுகொண்டே போவேன். என் குறை களைக்கூடச் சொல்ல முடியாத அவலநிலை அப்போது. ரோட்டில் நடந்து செல்லும்போது பற்றாக்குறைக்குத் தெருநாய்களும் என்னைப் பார்த்துச் செக்கா செக்கா என்று கேலி செய்யும். குமுறிக் கொண்டி ருக்கும் என் மனதில் ஊசியைக் குத்துவதுபோல இருக்கும் எனக்கு. சமயம் பார்த்து ஓடிவிடலாம் என்று தோணும். அப்போது நினைத்துக் கொள்வேன். இதற்கு முன்பு இருந்த இடத்திலாவது கொஞ்சம் சுதந்திர மாக இருந்தோம். இங்கு வேலையும் அதிகம், காசும் கிடைப்பது இல்லை. நல்ல துணியோ, காலுக்கு நல்ல நாகரிகமான செருப்போகூட வாங்கிக்கொள்ள முடியவில்லை. குளிக்கிற தண்ணீருக்குக்கூட கணக்குப் பார்க்கின்றனர். நான் என்ன பாவம் செய்தேனோ கடவுள் என்னை வாட்டுறான் என்று எனக்கு நானே புலம்பிக் கொள்வேன்.

எனக்கும் ஒரு சேலா செய்துவைத்தார் என் நானி. அவள் பெயர் மாயா. கீழ் வீட்டில் என் காலா குருவுடன் அந்த வீட்டுப் பெண்களைப்

போல அவளும் பாலியல் தொழில் செய்து வந்தாள். எனக்கும் ஒரு சேலா இருக்கின்றாள் என்ற பெருமை இருந்தது. அவள் எனக்கு இரவில் யாருக்கும் தெரியாமல் பிராந்தி வாங்கிக் கொடுப்பாள். என்னோட மன வேதனைக்கு அது ஒரு மருந்தாக இருந்தது. நான் குடிப்பது குருவுக்குத் தெரியாமலேயே காட்டிக் கொள்ளாமல் இருப்பேன்.

ஒருநாள் மாயா என்னிடம் தனிமையில் வந்து அழுதாள். என்ன வென்று கேட்டேன். 'அம்மா எனக்கு இங்க சுதந்திரமே இல்லை. என்னை வேறு எங்கேயாவது அனுப்பி விடுங்கள்' என்றாள். 'நீ என்னை விடச் சுதந்திரமாகத்தான் இருக்கிறாய் என்று நான் நினைக்கிறேன். அப்படி இருக்கும்போது உனக்கு என்ன கஷ்டம்' என்று கேட்டேன். 'நான் மற்ற பெண்களைப்போலக் கிராக்கிகளிடம் பணம் வாங்கிக் கொடுக்கிறேன். எனக்குப் பிடித்த உணவு உடை வாங்கிக் கொள்ளும் அளவில் வசதியும் இருக்கிறது. ஆனால் என்னை ஊருக்கு அனுப்ப முடியாது என்று நானி கூறிவிட்டாள். மூன்று வருஷம் சம்பாதிச்சுக் கொடுத்த பிறகுதான் ஊருக்கு அனுப்புவேன் என்கிறாள். எனக்கு ஆசை இருக்காதா என் சொந்த ஊரைப் பார்க்கணும்னு' என்று கேட்டாள்.

'நான் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் இருக்கிறேன். நான்கூட இங்கிருந்து சென்றுவிடலாம் என்றுதான் நினைக்கிறேன். எங்கு செல்வது, எப்படிச் செல்வது என்று தெரியவில்லை எனக்கே. இதில் உனக்கு நான் எப்படி உதவ முடியும்? நீ எங்குச் சென்றாலும் சரி, எங்கு இருந்தாலும் சரி, யார் மீது வேண்டுமானாலும் சேலா ஆகினாலும் சரி, எனக்கு நீ மகள்தான். நீதான் என் முதல் மகள். உன்னை என்றும் நான் மறக்கமாட்டேன். நீ எங்குச் செல்கிறாயோ அங்கு நானும் வர ரெடியாக இருக்கிறேன்' என்றேன். மாயாவோ, 'நான் முதலில் செல்கிறேன். பிறகு நான் எங்கிருக்கிறேனோ அதைத் தெரிந்துகொண்டு நீங்களும் வந்துவிடுங்கள்' என்று கூறிவிட்டு மாயா அந்த இடத்தை விட்டுச் சென்றுவிட்டாள். அவள் எங்குச் சென்றாள் என்று எனக்கு எந்த விவரமும் தெரியவில்லை. அவளைச் சந்தித்த அந்தக் குறுகிய காலத்தில் என் மகள் என்ற உணர்வு என் மனதில் இருந்துகொண்டே இருந்தது. அவள் எங்கு இருந்தாலும் நன்றாக இருக்கட்டும் என்று நினைத்துக் கொள்வேன்.

என் குரு என் சேலா ஓடிப்போனதைப் பற்றி என்னிடம் அடிக்கடி சொல்லுவார். 'உன் சேலா மாதிரி நீயும் ஓடிப்போகக் கூடாது. இங்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தால்தான் உன் நானி உனக்கு நகை போட்டுப் பணம் கொடுத்து ஊருக்கு அனுப்புவார். அம்மா பேச்சைக் கேட்டு நடந்துக்கணும்' என்று கூறுவார். நானோ,'உங்க நகையும்

பணமும் எனக்கு வேண்டாம். முதலில் நானும் இங்கிருந்து ஓடத்தான் போகிறேன். நீங்களே பணத்தையும் நகையையும் கட்டிக்கொண்டு அழுங்கள்' என்று மனதில் நினைத்துக்கொண்டு 'சரிம்மா சரிம்மா' என்று மட்டும் பதில் சொல்வேன்.

தொழில் செய்யும் பெண்கள்கூட அவர்களின் குறைகளை என்னிடத்தில் சொல்லமாட்டார்கள். சொன்னால் எங்கே நான் குரு விடத்தில் சொல்லிவிடுவேனோ என்ற பயம் அவர்களுக்கு இருந்தது. அங்குள்ள பெண்களைக் கைதிகள் போலத்தான் நடத்தினர். இரண்டு வருடம் மூன்று வருடம் தொழில் செய்து சம்பாதிச்சுக் கொடுத்தால்தான் ஊர்களுக்கு அனுப்பி வைப்பார்கள். அதுவும் குறைந்த ஊதியம்தான் கொடுப்பார்கள். அவர்கள் பாத்ரூம் போகக்கூட காவல் இருக்க வேண்டும். இப்படிக் கடைக்குச் செல்வது, காவலாளிபோல இருப்பது, கிராக்கிச் சண்டை, கையில் பணம் இல்லாதது, காலை டிபனுக்குக் காசு பத்தாதது இவையெல்லாம் என் மனதில் உருக்கத்தைக் கொடுத்தன. ஓடிப்போகப் பணம் எங்கு திரட்டுவது என்று தெரியாமல் முழித்தேன்.

என் குருவிற்கும் என் வீட்டு இஜராக்களுக்கும் தெரியாமல் என் மீது ஆசைப்படும் வாடிக்கையாளர்களைச் சற்று தூரம் உள்ள பெண் களால் நடத்தப்படும் விடுதியில் வாடகைக்குக் கொடுக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்று (ஐந்து ரூபாய் அப்போது வாடகை) நானும் தொழில் செய்தேன். இப்படி அடிக்கடி நான் இல்லாதபோது எங்கு சென்றாய் என்று குரு கேட்டால் கீழ்வீட்டில் இருந்தேன்; கடைக்குச் சென்றேன்; டீ குடிக்கப் போனேன் என்று பொய் சொல்லி ஒரு மாதத்தில் 500 ரூபாய் சேர்த்தேன். ஓடிப்போய் ரயிலில் ஏறினால் பிடித்துவிடுவார்கள் என்று மும்பையில் சைன் என்ற இடத்தில் இருந்து பஸ் பிடித்துப் போகலாம் என்று யாருக்கும் தெரியாமல் காலையில் வீட்டைவிட்டு சைனில் உள்ள சர்மா என்ற டிராவல் ஏஜன்சியில் சேலம் செல்வதற்குப் பஸ் இருக்கிறதா என்று கேட்டேன். இங்கு டிராவல்ஸ் இருப்பது நான் கடை கேட்கும்போது பார்த்தது.

சேலத்திற்கு டைரக்டாக பஸ் கிடையாது, பெங்களூர் சென்று அங்கிருந்து வேறு பஸ் மாறிப் போக வேண்டும் என்று கூறினார்கள். 'வேறு பஸ் என்றால் உங்கள் டிராவல்தானே?' என்று கேட்டேன். ஆம் என்று கூறினார்கள். 'சேலம் வரை எவ்வளவு பணம்' என்று கேட்டேன். அப்போது 350 ரூபாய் என்றனர். நானும் 'சரி கொடுங்க' என்றேன். வண்டி மாலை நான்கு மணிக்குத்தான் என்றனர். சரி என்று டிக்கட் வாங்கிக்கொண்டு பக்கத்தில் உள்ள மாதுங்காவில் காலைக் காட்சியும் மேட்னி ஷோவும் பார்த்துவிட்டு மேட்னி ஷோ முடியும் முன்னதாக டைம் பார்த்துக் கொண்டு சைனுக்கு வந்துவிட்டேன். பஸ்

பிடித்து உட்கார்ந்தேன். பஸ் புறப்படும்வரை என் உயிர் என்னிடம் இல்லாததுபோல் இருந்தது. முதல் வரிசையில் ஜன்னல் ஓரம் ஒரு பெண் இருந்தாள். அவள் பக்கத்தில்தான் எனக்கு டிக்கட் போட்டிருந்தனர். இந்தப் பஸ்ஸில் இரண்டு டிரைவர்கள் இருந்தனர். ஒரு டிரைவர் பஸ் ஓட்டினார். மற்றொரு டிரைவர் என் சீட்டுக்கு முன்னால், டிரைவர் சீட்டுக்குப் பின்னால் படுக்கை வசதியுள்ள இடத்தில் படுத்துக்கொண்டார். எங்கள் சீட்டில் இருந்து பார்க்க முடியாதவாறு கண்ணாடித் தடுப்புடன் திறந்து மூடும் வசதியும் இருந்தது. துணியால் ஸ்கிரீன்கூட இருந்தது.

படுத்துக் கொண்ட டிரைவர் என்னைப் பார்ப்பதும் தூங்குவது போல நடிப்பதுமாய் இருந்தார். இரவு ஒன்பது மணி சுமாருக்கு ஒரு ஓட்டலில் சாப்பிட பஸ் நின்றது. எல்லாரும் சாப்பிடச் சென்றனர். நான் போகவில்லை. எனக்குப் பசிகூட அப்போது இல்லை. இரவு சாப்பாடு முடிந்து எல்லாரும் பஸ்ஸில் வந்து உட்கார்ந்தார்கள். பஸ் போய்க் கொண்டிருந்தது. எல்லாரும் தூங்கிக் கொண்டிருந்தனர். என் பக்கத்தில் அமர்ந்திருந்த பெண்கூடத் தூங்கிவிட்டாள். எனக்கோ தூக்கம் வராமல் நடந்த சம்பவங்களை நினைத்துக்கொண்டு இருந்தேன். ஊருக்குச் சென்ற பிறகு நம்முடைய வாழ்க்கையைப் பற்றி யோசிப்போம் என்று நினைத்துக் கொண்டேன். கையில் காசு பணமோ நகையோ, துணிமணியோ எதுவும் இல்லாமல் வெறும் கையை வீசிக் கொண்டு போகிறோமே, அம்மா அப்பாவுக்கு என்ன கொடுப்பது? இவ்வளவு நாள் சம்பாதித்தாயா இல்லையா, என்ன கொண்டு வந்தே என்று அம்மா கேட்டால் என்ன பதில் சொல்வது என்று மனதுக்குள் புலம்பிக்கொண்டே பஸ் ஓட்டத்தில் நானும் சீட்மீது சாய்ந்தவாறு தூங்கிவிட்டேன்.

ஏதோ என்னைத் தொடுவது போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டது. கண் விழித்துப் பார்த்தேன். தூங்கிக் கொண்டிருந்த மற்றொரு டிரைவர் கண்ணாடியைத் திறந்து அவன் கையை என் கால்மீது போட்டுக் கொண்டிருந்தான். எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அவனுடைய முரட்டுத்தனமான உடம்பும் அவன் மீசையும் அவன் பேசினால் அவன் குரலும் என அவனைக் கண்டால் பயம் ஏற்பட்டது. கையை எடு என்று சொன்னால் ஏதாவது பொய் கூறி என்னை மாட்டிக் கொடுத்துவிடுவானோ என்ற பயம். என் குரல் கேட்டால் நான் இஜரா என்று தெரிந்துவிடுமோ என்ற பயம். என்ன செய்வது என்று புரியாமல் என் கையைக்கொண்டு அவன் கையை எடுத்துவிட்டேன். மீண்டும் மீண்டும் அவன் என் கால், தொடை எனக் கைபோட்டுக் கொண்டே இருந்தான். பக்கத்தில் அமர்ந்திருக்கும் பெண்ணோ நன்றாகத் தூங்கிக்

கொண்டிருந்தாள். அவள் முழித்துப் பார்த்தால் என்ன நினைப்பாளோ என்று பயந்துகொண்டே இருந்தேன்.

எனக்குப் பின்னால் உள்ள சீட்டில் அமர்ந்திருந்த ஒரு முப்பது வயசுள்ள ஆண் இதைப் பார்த்துக் கொண்டிருந்தான் போல. என் நிலையைக் கண்ட அவன் சீட்டைவிட்டு எழுந்து தூங்கிக் கொண்டிருந்த டிரைவரைத் திட்டினான். 'ஏன் இப்படிச் செய்கிறாய்? பாவம் அந்தப் பெண். எவ்வளவு தொந்தரவுபட்டுக் கொண்டு யாரிடமும் சொல்லாமல் வேதனைப்படுகின்றாள். உனக்கு அக்கா தங்கை இல்லையா? ஒரு ஓட்டுநர் நீ. பயணிகளுக்குப் பாதுகாப்புக் கொடுக்க வேண்டிய நீயே இப்படித் தவறாக நடந்துகொள்வது முறையல்ல' என்று சத்தம் போட்டுத் திட்டினார்.

டிரைவர் கைபோடுவதை நிறுத்திவிட்டு 'உன்னோட வேலையைப் பாருடா, வந்துட்டான் வக்காலத்து வாங்க. அவ உன்னோட அக்காவா தங்கையாடா? நான் ஒன்னுமே செய்யலை. தூக்கத்தில் கைதவறி விழுந்துவிட்டது. என்னமோ அவளைக் கற்பழிச்ச மாதிரி கத்துற. மூடிக்கிட்டு உன்னோட சீட்ல போயி உட்காருடா' என்று கடுமையான வார்த்தையால் திட்டிவிட்டான். பஸ்ஸில் உள்ளவர்கள் அனைவரும் விழித்துக் கொண்டார்கள். என் அருகில் இருந்த பெண்கூட விழித்துக் கொண்டாள். ஆனால் யாரும் என்ன ஆயிற்று என்று கேட்கவில்லை.

'ஏய் உன்மேல் கைபோட்டேனா?' என்ற அந்த அதட்டலான குரல் 'ஆம் இல்லை' என்று ஏதும் பேச முடியாமல் செய்துவிட்டது. அவனுடைய முரட்டுத்தனமான பேச்சு என்னை அதிக பயத்தில் ஆழ்த்தியது. எங்கு பெங்களூர் சென்று என்னை ஏதாவது செய்து விடுவானோ என்ற பயமும் எனக்கு இருந்தது. பெங்களூர் செல்வதும் இதுதான் முதல் தடவை. அங்குள்ள பேச்சு அனுபவம் எதுவும் எனக்கு இல்லை. வெட்கமும் தலைகுனிவுமாக இருந்தேன். எனக்கு உதவிய அந்த இளைஞனும் அவனோட சீட்டில் போய் அமர்ந்துகொண்டான். டிரைவரும் கைபோடுவதை விட்டுக் கண்ணாடியை மூடிக்கொண்டு துணி ஸ்கிரீனை இழுத்து மறைத்துக்கொண்டான்.

இரவு இரண்டு மணி இருக்கும். ஒரு ஓட்டலில் டீ குடிப்பதற்காகப் பஸ் நின்றது. ஒரு சிலர் மட்டும் இறங்கிச் சென்றனர். பலர் வண்டியிலேயே உட்கார்ந்திருந்தனர். எனக்கு உதவியவரும் இறங்கிச் செல்ல தூங்கிய டிரைவர் வண்டியில் உள்ள டயர் போல்ட் கழற்றும் இரும்புக் கம்பியை எடுத்துச் சென்று எனக்கு உதவிய அந்த ஆளைத் தாக்கினான். முதுகு, கால் என ஓங்கி ஓங்கி அடிக்கச் சிலர் விலக்க இருவரும் கட்டிப் புரண்டு சண்டை போட்டனர். எனக்கோ இன்னும் பயம் அதிகமாகிவிட்டது. எல்லாம் என்னால்தான் என்பது போல்

நினைத்தேன். என்ன நடக்கப்போகிறதோ என்ற அச்சம் ஏற்பட்டது. அவர்களின் சண்டை ஓய்ந்து அவரவர் சீட்டில் அமர்ந்தனர். வண்டியும் புறப்பட்டது. நானோ எதுவும் தெரியாததுபோல மனதை இறுக்கிக் கொண்டு உட்கார்ந்த இடத்தைவிட்டுக் கொஞ்சம்கூட நகராமல் இருந்தேன்.

காலை ஒன்பது மணிக்கு மீண்டும் ஒரு ஓட்டலில் டிபன் சாப்பிடப் பஸ் நின்றது. எனக்கோ எழுந்து செல்லப் பயம். ஆனாலும் பாத்ரூம் போக வேண்டுமே என்று துணிந்து பாத்ரூம் சென்றுவிட்டு டிபன் ஒன்றும் சாப்பிடாமலேயே ஓடிவந்து பஸ்ஸில் அமர்ந்துகொண்டேன். ஜன்னல் வழியாகப் பார்த்தபோது பாவம் எனக்கு உதவி செய்தவர் நடக்கக்கூட முடியாமல் நொண்டி நொண்டி நடந்து வந்தார். அவருக்கு ஆறுதல் சொல்லவோ சப்போட் செய்து பேசவோ என்னால் முடிய வில்லை. நான் சுயநலவாதியாக இருந்துவிட்டேன். இரவு 7 மணி இருக்கும். பெங்களூர் சர்மா டிராவல்சில் பஸ் நின்றது. சேலம் செல்பவர்கள் ஆபீஸ் போங்க என்று சொன்னார்கள். நானும் சர்மா ஆபீஸ் சென்று என் டிக்கட்டைக் காட்டினேன். 'இரவு 9 மணிக்கு மதுரை வண்டி உள்ளது. அதில்தான் உங்களுக்கு சீட்' என்றனர். 'அதுவரை நான் எங்கு இருப்பது? எனக்கு பெங்களூர் புதிது' என்றேன். 'பயணிகள் தங்குவதற்கு ஒரு அறை இருக்கிறது. அதில் போய் நீங்கள் உட்கார்ந் திருங்க. பஸ் வந்தாக் கூப்பிடுவோம்' என்றனர். நானும் அங்குச் சென்று உட்கார்ந்து கொண்டேன்.

பஸ்ஸில் ஏற்பட்ட சண்டையைப் பற்றிச் சொல்லலாமா என்று நினைத்தேன். ஆனால் என்னைச் சொல்லவிடாமல் கோழைத்தனம் கட்டிப்போட்டுவிட்டது. அடிவாங்கிய அவரோ சர்மா டிராவல்ஸ் வரை வரவில்லை. முன்னதாகவே இறங்கிப்போய்விட்டார். அவர் என்னைப் பற்றி என்ன நினைத்துக்கொள்வாரோ என்று வேதனைப் பட்டேன். இந்த நிகழ்ச்சியால் அதட்டிப் பேசும் ஆண்களையோ, கம்பீரமான உடல் கொண்ட ஆண்களையோ பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கும். தனியாகப் போகிற பெண்களுக்குப் பாதுகாப்பே இல்லை என்று அப்போது எனக்குப் புரிய வந்தது. பொண்ணா ஆன நாம் இந்த உலகத்துல எப்படி வாழப்போறமோன்னு தோணும்.

# 14

இரண்டாவது முறையாகப் புடவையோட தைரியமா நான் ஊருக்கு வந்தேன். வரும் வழியிலேயே எனக்கு அறிமுகம் இல்லா ஊருக்காரர்கள் கூட 'ரேவதி இப்பத்தான் வர்றியா? சவுக்கியமா?' என்று நலம் விசாரித்தனர். நானும் புன்னகையுடன் வாய்ப்பேச்சு பேசாமல் தலையை ஆட்டினேன். என் வீட்டு அருகே வந்தவுடன் அக்கம்பக்கம் உள்ள பெண்கள் 'அட ரேவதி வந்துருச்சு' என்று சந்தோஷமாகக் கூறிக் கொண்டனர். என் அம்மா வீட்டுக்குள் இருந்து வெளியே வந்து அவரும் 'அட ரேவதி வந்துட்டா' என்று சொன்னார். எனக்கு மனதில் இருந்த பஸ் அனுபவத்திற்கு மருந்து போட்டதுபோல இதமாக இருந்தது. வீட்டிற்கு முன்னால் வீதியில் என்னைச் சுற்றிலும் பெண்கள். என் அருகில் அம்மா. 'ரேவதி நீ போனாப்புல புடிச்சு உங்க அம்மா கண்ணு லேயே நீ இருந்த போ. எப்பப் பாத்தாலும் துரைசாமி போயிட்டான், எப்பத் திரும்பி வரப்போறானோன்னு உங்க அம்மா புலம்பிக்கிட்டு இருந்துச்சு. நேத்துக்கூட உன்னப் பத்தித்தான் நாங்க பேசினோம். இன்னிக்குப் பாத்தா நீயே வந்துட்ட. எக்கா, உன்ற மகள் வந்துட்டா. போயி நல்லா சமைச்சுப்போடுங்க' என்று வீதியில் உள்ள பக்கத்து வீட்டுப் பெண்கள் சொல்ல என் அம்மாவும், 'ஏன்டா ஒரு கடிதாசி கூடப்போடல' என்று பேசிக்கொண்டே வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். அப்பா டிவி பார்த்துக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும் 'வா கண்ணு. இப்பத்தான் வரியா' என்று புன்னகை முகத் துடன் வரவேற்றார். 'எப்படிப்பா இருக்கீங்க? எப்படிம்மா இருக்கீங்க?' என்று நானும் பதிலுக்கு நலம் விசாரித்தேன்.

'எங்களுக்கு என்னடா? எல்லாம் உன்னைப் பத்தின கவலைதான். நீயும் இப்படிப் போயிட்ட. உங்க அண்ணனுங்களும் அப்பாகிட்டச் சண்டை போட்டுக்கிட்டுத் தனியா வேற ஒரு வண்டியில பம்பாய், டெல்லின்னு லாங்காப் போற லைலாண்டுல டிரைவராகப் போயிட் டாங்க. எல்லாரும் தனித்தனியாப் போயிட்டாங்க. பத்தாக்குறைக்கு

உன் நடு அண்ணன் சொத்தப் பிரிக்கோணும்னு கலாட்டா செஞ்சுக்கிட்டு இருக்கான். உங்க அப்பா படிக்காத கழுதங்கள வண்டித் தொழிலாவது செஞ்சுப் பிழைச்சுக்குவாங்கன்னு சொந்த வண்டில டிரைவரா ஆளாக்கி விட்டாரு. லோக்கலா பால் வண்டி ஓட்டிக்கிட்டுத் தினமும் வீடு வந்து சேந்தாப் போதும்னு நல்லதுதான் காட்டினாரு. இப்போ பர்கோ லாரியில லோக்கல் ஓட்டப் புடிக்கலையாம். லாங்ரூட் லைலாண்டு ஓட்டலாம்னு வேற வேறயாப் போயிட்டாங்க. பால் வண்டிக்கு டிரைவர் இல்லாம உங்க அப்பா திண்டாடுறாரு. பத்தாக் குறைக்குச் சொத்தைப் பிரிச்சுக் கொடுங்க, எங்க பங்குல கிடைக்கிற காசை வச்சு நாங்க பெரிய வண்டி போட்டு ஓட்டறோம்னு ஒரே சண்டையாக் கிடக்குது' என்று ஒரு பெரிய கதையே அம்மா சொன்னாங்க. என்னோட கதையே பெரிய கதை. அம்மாவும் என் கதையைக் கேட்கல, நானும் என் கதையைச் சொல்ல முடியல.

வீட்ல அண்ணனுங்க யாரும் இல்லை. நான்கு லாரி, மூன்று டிரைவர்கள், நான்கு கிளினீர்கள். ஒரு லாரியை அப்பாதான் ஓட்டறார். பால் எடுத்துக் குடுக்க டென்டர் போட்டு உள்ளது. அப்பா மனதில் 'எப்படியாவது இந்த டென்டர் முடியும்வரை பால் எடுத்து ஓட்டிக் கொடுத்துவிட்டு அடுத்த டென்டர் எடுக்கப்போவதில்லை, பசங்க ஒழுங்கா இல்லை. எனக்கு வயதாகிவிட்டது. அதனால் எல்லா வண்டியையும் விற்றுவிட்டு அக்கடான்னு இருக்கப்போகிறேன்' என்கிறார். குடும்பப் பிரச்சினையில் தலையிடவோ பஞ்சாயத்துப் பேசவோ எனக்கு அருகதை இல்லை. நான் கடைசி மகன். இன்னும் 19 வயசு கூட முடியவில்லை. எனக்கு என்ன தெரியும்? எல்லாம் அம்மா அப்பா அண்ணன்கள் முடிவு எடுக்கட்டும். நானோ கெட்டு நொந்து போய் வந்துள்ளேன். என் குறையைச் சொன்னால் 'நீயே தேடிக் கொண்ட வாழ்க்கைதானே'என்று பதில்வரும் என்பதால் ஒன்றும் பேசாமல் பாத்ரூம் சென்றுவிட்டேன்.

பாத்ரூமில் இருந்தபடியே நினைத்துப் பார்த்தேன். வரும்போது ஊர்க்காரர்கள் ரேவதி என்று அழைத்தது, ஊர்க்காரர்முன் அம்மாவும் ரேவதி என்று சொன்னது, வீட்டுக்குள் டேய் போட்டுப் பேசியது, அம்மா உண்மையில் என்னை ரேவதி என்று ஏற்றுக்கொண்டாரா இல்லை பெற்ற மகனை வாடா போடா என்று அழைத்துப் பழகிப் போனதை மறக்க முடியாமல் அப்படிச் சொன்னாரா என்று புரியவில்லையே என்று நினைத்தேன். ரேவதி என்று கூப்பிட்டவர்கள் மனதளவில் கூப்பிட்டார்களா, இல்லை கேலி செய்யும் நோக்கத்தில் கூப்பிட்டார்களா என்றும் யோசனை செய்தேன்.எதுவாக இருந்தாலும் சரி ரேவதி என்று என்னை அழைத்தது எனக்குச் சந்தோஷம்தான். நான்

இனி இப்படித்தான் இருக்கப்போகிறேன். இனி கொஞ்சம் கொஞ்சமாக என் பெண் உணர்வுகளையும் புரிந்துகொள்வார்கள். அம்மா 'வாடா போடா' என்று சொல்வதில்கூட நியாயம் இருக்கிறது. அவள் மீது கோபப்படக் கூடாது என்று என்னுள் நானே முனகிக் கொண்டேன்.

எங்க ஊரைப் பொருத்தவரைக்கும் முன்மாதிரி அதிசயமா என்னைப் பாக்குறது குறைஞ்சுபோச்சு. நான் இப்படித்தான் இருக்கேன் என்று எல்லாருக்கும் தெரிஞ்சுபோச்சு. என்னோட கதையைப் பேசிப்பேசிச் சங்கிப் போயிட்டாங்க. இன்னும் என்னைப் பத்திப் பேசறதுக்கு என்ன இருக்கு? இனிமே ஊருக்குள்ள புதுசா ஏதாவது அதிசயம் நடந்தா அதப் பத்திப் பேசுவாங்க. வயசானவங்க துரைசாமின்னு கூப்பிடுவாங்க. சிலபேரு ரேவதின்னு கூப்பிடுவாங்க. எல்லாரும் தாய் புள்ள மாதிரி என்னோட அன்யோன்யமாய்ப் பழகினாங்க. எனக்குப் புடவ கட்டிக் கிட்டு எல்லார் முன்னாலும் நிக்க வெட்கம் போயிடுச்சு. ஆனா மும்பை யில் கத்துக்கிட்ட குடிப்பழக்கத்த மட்டும் என்னால மறக்க முடியல. எப்படிக் குடிக்கிறது, யார் பணம் கொடுப்பாங்க? இதெல்லாம் பெரிய விஷயமா இருந்துச்சு.

வீட்லயே முடங்கிக் கிடந்தாக் குடிக்கணும்னு தோணும். ஏதாவது வேலை வெட்டி செஞ்சா அந்த ஞாபகம் வராதுன்னு எனக்குத் தோணுச்சு. அதனால டவுனுக்குப் போயி எஸ்.டி.டி, மளிகைக் கடை, ஜவுளிக் கடை போன்ற இடங்களில் வேலை கேட்டேன். யாரும் எனக்கு வேலை கொடுக்கலை. அவுங்க சொன்ன பதில் மட்டும் என் நெஞ்சில் ஈட்டி பாய்ந்த மாதிரி இருந்துச்சு. 'உன்னைக் கடையில வேலையில் வச்சுக்கிட்டா இருக்கிற பசங்களும் கெட்டுப்போயிடு வாங்க.' 'உன்னைக் கடையில் வேலையில் வச்சா நாங்க தலையில் துண்டப் போட்டுக்கிட்டுத் தான் போகணும்.' 'உனக்கெல்லாம் எதுக்கு வேலை? இதப் பத்தி உனக்கு என்ன தெரியும்? போ போ பம்பாயில, டெல்லியில உன்னை மாதிரி ஆளுங்க இருக்காங்க. அவுங்களோட போயிக் கூத்து அடி. அதுக்குத்தான் லாயக்கு.' இப்படி ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணத்தைக் கூறி எனக்கு வேலை கொடுக்கவில்லை. மனமுடைந்து வீடு திரும்பினேன்.

வேலை கிடைக்கவில்லையே என்ற வருத்தத்துடன் வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்தேன். ஒரு டிவிஎஸ் வண்டி வேகமாக வந்து என்மீது மோதுவதைப்போல என் அருகில் சடனாக நின்றது. தலையை நிமிர்ந்து பார்த்தால் என் நடு அண்ணன். 'என்னடா பொட்டையா, எப்படா வந்த?' என்று கேட்டான். 15 நாட்கள் ஆகிறது என்றேன். 'நான் இப்பத்தான் வண்டிவிட்டு இறங்கினேன். பெரியவனும் தம்பியும் வரட்டும்னு காத்திருக்கேன். சொத்தப் பிரிக்கச் சொல்லிக் கோர்ட்ல

கேஸ் கொடுத்திருக்கேன். அவுங்களும் வந்தவாட்டி கோர்ட் மூலம் சொத்து பிரிக்கப் போறோம். மரியாதையா சொத்தும் வேண்டாம் ஒன்னும் வேண்டாம்னு கையெழுத்துப் போட்டுவிட்டு உங்க ஒம்போதுகளோட பம்பாயிக்குப் போயிக் கைதட்டிக்கிட்டுத் திரி' என்று வீட்டுக்குள் அம்மா அப்பா இருந்ததால் அவர்கள் காதுகளில் விழும் அளவிற்கு உரக்கச் சொல்லி விட்டு வண்டியை வேகமாக ஓட்டிக்கொண்டு சென்றுவிட்டான்.

மூன்று அண்ணன்மார்களும் உள்ளூரிலேயே வாடகைக்கு வீடு எடுத்துத் தனித்தனியாக இருந்தனர். சின்ன அண்ணனும் காதல் திருமணம் செய்துகொண்டிருந்தான். நடு அண்ணனும் திருமணம் செய்துகொண்டு தனியாக இருந்தார். தனித்தனி முதலாளிகளின் வண்டிகளில் டிரைவர்களாக வேலை செய்துகொண்டிருந்தனர். பெரிய அண்ணன் தமிழ்நாட்டுப் பஸ்ஸில் ஓட்டுநராகச் செல்ல வேண்டும் என்ற ஆசையில் பதிவு செய்திருந்தார். அண்ணார்கள் அம்மா அப்பாவுடன் இல்லாததால் என்னைத் திட்டவோ அடிக்கவோ தற்போது யாரும் இல்லை, அதுபோன்ற பிரச்சினை இல்லை என்றிருந்தேன். அம்மாவும் அப்பாவும் சொத்தில் நீயும் சரிபாதி வாங்கு என்று எனக்குப் புத்தி கூறினார்கள்.

பால் எடுக்கும் டெண்டர் முடியக் குறுகிய காலமே இருந்தது. அந்தச் சமயத்தில் எங்கள் ஊர் மாரியம்மன் திருவிழா வந்தது. வீட்டிற்கு 200 ரூபாய் என்று வசூல் செய்து திருவிழாச் செலவுகள் செய்யப்பட்டன. வழக்கம்போல மாவிளக்கு எடுத்துச் செல்ல எல்லார் வீட்டிலும் மாவு இடித்தனர். என் வீட்டிலும் அக்கா, மாமா, குழந்தை எல்லாரும் வந்திருந்தனர். அக்காவும் மாமாவும் என்னை அன்போடு உபசரித்தனர்.

தேங்காய், பழம், மாவு, (பச்சரிசியை இடித்து மாவு தயார்செய்து சர்க்கரைப் பாகு காய்ச்சி மாவுடன் பிசிறிக் கெட்டியாகச் சதுர வடிவில் தட்டி அதன்மீது நெய் விளக்கு வைத்து எடுத்துச் செல்வார்கள். இது மாரியம்மனுக்குப் பிடித்த பிரசாதமாகும்.) சூடம், வெற்றிலை பாக்கு, ஊதுபத்தி என்று ஒரு தாம்பாளத்தில் அக்காவும் அம்மாவும் ஜோடித்துக் கொண்டிருந்தனர். 'ரேவதி மாவிளக்கு எடுத்துச் செல்லட்டும். நான் போகவில்லை' என்று அக்கா அம்மாவைப் பார்த்துச் சொல்ல, 'வேண்டாம். நீயே எடுத்துக்கிட்டுப்போ. கோயில்ல எல்லாரும் இவனத்தான் வேடிக்கை பாப்பாங்க' என்று அம்மா சொன்னாள். 'என்னத்தப் போயிப் புதுசாப் பாக்கப் போறாங்க. ரேவதியைப் பத்தித் தெரியாதா இந்த ஊர்க்காரங்களுக்கு? அதா பொடவை கட்டி ஊரு உலகமே சுத்திப்புட்டு வந்திருக்கா. இன்னும் என்ன பாக்கி இருக்கு? ஊருக்காரங்க என்னமோ பாக்கட்டும். என்னமோ பேசட்டும். அதெல்லாம் ஒன்னு

மில்ல. சாமிக்கு மாவிளக்கு எடுத்துட்டுப்போனா ஒன்னும் தப்பு இல்லே' என்று அக்கா பதில் கூறினாள். 'என்னமோ போங்க. நீ ஆச்சு அவனாச்சு' என்று அம்மா மவுனம் ஆனார்.

'என்ன ரேவதி, நீ மாவிளக்கு எடுத்துக்கிட்டுப் போறியா?' என்று அக்கா கேட்டாள். 'எடுத்துக்கிட்டுப் போறேன். ஆனால் நீயும் என்னோட தொணைக்கு வரோனும்'னு நான் பதில் சொல்ல, 'ஆகா, கன்னிப் பொண்ணு உன்ன எவனாவது சைட் அடிப்பான்னு பயமா இருக்கா?' என்று கூறிச் சிரித்துக்கொண்டே 'சரி, நானும் உன்கூட வருகிறேன்' என்று அக்கா ஒப்புக்கொண்டாள்.

அக்கா குழந்தை எவ்வளவு பெரிதாகி இருந்தது. அக்கா குழந்தையிடம் 'சித்தியப் பாருடா' என்று சொல்லும்போதும், குழந்தை 'சித்தி' என்று என்னைக் கூப்பிடும்போதும் என் மனம் குளிர்ந்தது. அக்காவுக்கு என்மீது எவ்வளவு பாசம். அதுவும் என் உணர்வுகளைப் புரிந்து நான் இன்று இருக்கும் உடையுடனும் என்னைத் தங்கையாகவே ஏற்றுக் கொண்டாள் என்ற பூரிப்பு. இந்தச் சந்தோஷத்தில் எந்தப் புடவை கட்டிக்கிட்டு வரட்டும் என்று அக்காவைப் பார்த்து நான் கேட்க, 'பெரியண்ணன் பொண்டாட்டி கல்யாணத்துக்கு எடுத்த கூரப் புடவை நல்லா இருந்துச்சு. உன்னோட கலருக்கு எடுப்பா இருக்கும். போய் வாங்கிக்கிட்டு வா' என்று அக்கா கூறினாள். அம்மாவுக்கு விருப்பம் இல்லையோ என்னவோ எங்கள் இருவரையும் பார்த்து முகத்தைச் சுழித்துக்கொண்டாள்.

பெரியண்ணன் வீடுதேடி ஓடினேன். அண்ணி குழந்தைக்குப் பால் (ஆண் குழந்தை) கொடுத்துக் கொண்டிருந்தாள். என்னைப் பார்த்ததும் வா ரேவதி என்று கூப்பிட்டாள். நான் பால் குடிக்கவைப்பது தெரிந்து தயங்கி அருகில் செல்லக் கூச்சப்பட்டேன். மாராப்பைச் சரிசெய்து குழந்தையைத் தரையில் உட்கார வைத்துவிட்டு என்னிடம் பேசத் தொடங்கினாள்.

'ஒன்னுமில்லை. அக்கா என்னை மாவிளக்கு எடுத்துக்கிட்டுப் போகச் சொன்னாள். அதனால உங்க பட்டுப் புடவையைக் கொஞ்சம் கொடுத்தா...' என்று கூறிக்கொண்டே தலையைச் சொறிந்தேன். அண்ணி பட்டுப் புடவையை எடுக்க உள்ளே செல்ல நான் குழந்தையைத் தூக்கிக்கொண்டு 'அத்தடா இங்க பாரு, பாரு சாமி, நான் அத்தடா. எங்க அத்த அத்தன்னு கூப்பிடு' என்று குழந்தையிடம் கொஞ்சிக் கொண்டிருந்தேன். பட்டுப் புடவையுடன் வந்த அண்ணி, 'ஆமாடா, அத்த. சித்தப்பா இல்ல. இனிமேல் சித்தப்பான்னு கூப்புட்டுடப் போற. உங்க அத்தைக்குக் கோபம் வந்துட்டா உன்னத் தூக்கிக் கொஞ்ச மாட்டா' என்று சிரித்துக்கொண்டே பட்டுப் புடவையை என்னிடம்

கொடுத்தாள். 'புடவைக்கு மேச்சா ஜாக்கட் இருக்கா ரேவதி?' என்று அண்ணி கேட்க 'இல்லே. நான் வெள்ளை ஜாக்கட் போட்டுக்கிறேன்' என்று கூறிவிட்டுப் பட்டுப் புடவை கையில் கிடைத்ததோ இல்லையோ ஓடப் பார்த்தேன்.

'ஏன் ரேவதி போற? இரு. உங்க அண்ணன் குளிச்சுட்டு இருக்காரு. இப்பத்தான் வண்டிக்குப்போயிட்டு இறங்குனாங்க. அவுங்களப் பாத்துட்டுச் சாப்பிட்டுப் போ' என்று அண்ணி கூறிக்கொண்டே இருக்கையில் பெரியண்ணன் பாத்ரூமில் இருந்து வெளியே வந்தார். 'என்னடா துரைசாமி, எப்படா பம்பாயில் இருந்து வந்தே?' என்று கேட்டார். 'இருபது நாளுக்குமேல் ஆச்சுண்ணா' என்றேன். 'நீயும்தான் இருக்க. உனக்கு இவனாட்டம் புடவை கட்டத் தெரியுதா? எங்கியோ வயக் காட்டுல வேல செய்யுற பொம்பள மாதிரி தூக்கிச் செருகிக் கிட்டு..! ஆம்பளப் பையன் இவனைப் பாருடி, எப்படிப் பொடவக் கட்டிக்கிட்டு இருக்கான்' என்று அண்ணன் என் அண்ணியைப் பார்த்துக் கேட்க 'போதும் போதும். உங்க மூஞ்சிக்கு இதுவே அதிகம்' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு அண்ணி பதில் சொன்னாள். 'நான் வீட்டுக்குப் போகிறேன், நாளை திருப்பிப் புடவையைக் கொடுத்து விடுகிறேன்' என்று சொல்லிவிட்டு விடைபெற்றுக் கொண்டேன்.

எங்க ஊரைச் சுத்தியுள்ள மற்ற மூன்று கிராமங்களுக்கும் எங்க ஊருல இருக்கிற மாரியம்மன் மட்டும்தான். மூனு ஊருப் பெண்கள் மாவிளக்கு ஏந்திக் கோயில் உள்பகுதியில் இருந்து வெளியில் 200 அடி தூரத்துக்கு இரு வரிசையாக அம்மன் எல்லாருக்கும் தெரிவதைப்போல நின்றனர். நானும் அக்காவும் முன்னதாகவே கோயில் கருவறைப் பக்கமாகப் போய் நின்றுகொண்டோம். எங்கள் ஊர் வழக்கப்படி அனைத்து ஊர் மாவிளக்குகளும் வந்த பிறகுதான் தேங்காய் உடைத்து எல்லாருக்கும் ஒன்றாகப் பூஜை செய்வார்கள். மாவிளக்குத் தட்டு ஏந்தி வருபவர்கள் பெண்கள் மட்டும்தான்; ஆண்கள் தட்டு ஏந்தி வரமாட்டார்கள். எல்லாரும் என்னை வியப்புடன் பார்ப்பதும் தங்களுக்குள் பேசிக் கொள்வதுமாக இருந்தனர்.

நான் நிற்கும் வரிசையின் எதிர் வரிசையில் இருக்கும் என் ஊர்ப் பெண்கள் திருமணம் ஆனவர்கள் திருமணம் ஆகாதவர்கள் உட்பட என்னைப் பார்த்து 'சூப்பர் ரேவதி! ரொம்ப அழகா இருக்கே. பட்டுப் புடவையும் போட்டு இருக்கும் நகையும் ரொம்ப அம்சமாப் பொம்பளையாட்டம் இருக்கே. உன் முன்னாடி நாங்க எல்லாம் பிச்ச வாங்கணும்' என்று கூறினார்கள். 'அக்காவுடைய நகையா' என்றும் கேட்டனர். எல்லாருடைய மாவிளக்குகளும் வந்து பூஜை செய்வதற்குள் ஒன்றரை மணிநேரம் ஆகிவிட்டது. காற்றோட்டம்

இல்லாமல் தீபம் எரிவதால் வேர்வை என் பட்டுப் புடவையை நனைத்து உடம்பெல்லாம் தண்ணீராக ஓடியது. பூஜை முடிந்து எல்லாரும் நகர்ந்து வெளியில்வர வீட்டுக்குச் செல்லும் வழியில் ஆண்கள் கூட்டம் என்னைப் பார்க்க அலைமோதியது. தெரிந்த மாமன் மச்சான் முறை உள்ளவர்கள் 'ரேவதி மாவிளக்கு கொண்டு வந்தியா, நல்லா இருக்கே' என்று கூறினார்கள். பதிலுக்கு அக்கா கிண்டலாக, 'கல்யாணம் பண்ணிக்கிறயா?' என்று கேட்க,'எத்தனை பவுன்போட்டு, பொட்டிப் பணம் எவ்வளவு கொடுப்பீங்க?' என்று அவர்கள் கேட்க, 'இவ்வளவு அழகான பொண்ணே கொடுக்கிறோம். நீங்க சொல்லுங்க எத்தனை பவுன் போட்டுக் கட்டிக்கிறீங்கன்னு' என்று அக்கா பதில் சொன்னாள்.

இவர்கள் என்னைப் பார்த்துக் கேலி செய்கிறார்களோ, கமெண்ட் அடிக்கிறார்களோ அது எனக்குத் தெரியாது. ஒரு வகையான சந்தோஷம் என் மனதில். என் பெண்மைக்குக் கிடைத்த வெற்றியாகத் தோன்றியது. வீட்டுக்குச் சென்று சாமி பிரசாதத்தை எல்லாரும் சாப்பிட்டோம். பிறகு பக்கத்து வீட்டு அக்காவிடம் சென்று என் பட்டுப் புடவை அலங்காரத்தைக் காட்டினேன். அவரும் 'சூப்பர் ரேவதி. நெனச்சத சாதிச்சுப்புட்டே' என்று என் சந்தோஷத்தில் பங்கு கொண்டார். அவருடைய வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தினர்களிடம் என்னை அறிமுகம் செய்து வைத்தார். முதல் தடவையாகப் பெண்களுடன் பெண்ணாக மாவிளக்கு எடுத்துச் சென்றது மிக்க மகிழ்ச்சியாக இருந்தது.

'இந்த வருஷம் ரேவதியால திருவிழாவே களைகட்டிப்போச்சு. ரேவதியா பேரு? எப்படிம்மா பொம்பள மாதிரியே இருக்கா? நம்பளை மாதிரியே மார்பகம் எல்லாம் உண்மையா இருக்கா? என்னமோ பாதியில பொம்பளையா இருக்கோனும்னு அவனோட தலையெழுத்து' இப்படி என்னைப் பற்றி விமர்சித்துப் பெண்கள் மத்தியில் பேசிக் கொண்டனர்.

இந்த வருடமும் இரவு பத்தரை மணிக்கு நாடகம் நடைபெறும். நான் ஆண் உடையில் இருந்தபோது பெண் வேஷம் அணிந்து ஆடியதைப் போல இந்த வருடம் பெண்ணாகவே ஆடவேண்டும் என்ற ஆவல் இருந்தது. என்னுடைய ஆசை நாடக மேடையை நோக்கி ஓடச் செய்தது. நாடகம் நடத்தும் டைரக்டரிடம் சென்று, 'அண்ணா நாடகம் ஆரம்பிக்கும் முன் நான் ஆட வாய்ப்புக் கொடுங்கண்ணா' என்று கேட்டேன். அவரும் சரி என்று சொல்லிச் சாமிப் பாட்டுக்கு ஆடுகிறாயா? என்று கேட்டார். நானும் சரி என்றேன். அப்படியானால் பின்னால் மேக்கப் போட்டுக் கொள்கின்றனர். நீயும் வா கொஞ்சம் போட்டுக்கோ என்று

கூறி மேக்கப்மேனிடம் 'இவள் சாமிப் பாட்டுக்கு ஆடவேண்டும். இவளுக்கு மேக்கப் போட்டுவிடுங்கோ' என்று கூறினார்.

என்னுடைய பட்டுப் புடவையையே பின் கொசுவம் வைத்துக் கட்டிவிட்டு முகத்தில் கலர் பவுடர் பூசிக் கண்மை வைத்து நெற்றியில் பட்டையும் கழுத்தில் மாலையும் போட்டுக் கையில் வேப்பிலை கொடுத்து நிற்க வைத்தார் மேக்கப்மேன். மாரியம்மன் போலவே இருந்தேன்.

மாரியம்மன் திருவிழாவை முன்னிட்டு நண்பர்களால் நடத்தப் படும் வசந்தம் என்ற நாடகம் இன்னும் சிறிதுநேரத்தில் ஆரம்பிக்கப் படும். அதற்கு முன்னதாக நம் ஊர் (என் அப்பா பேரைச் சொல்லி) ரேவதியின் நடன நிகழ்ச்சி இப்போது நடைபெற இருக்கிறது. ஆங்காங்கே இருக்கும் பொதுமக்கள் மேடைக்கு முன்வருமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள் என்று ஒலிபெருக்கியில் அறிவித்தார்கள்.

ஆடுன காலு நிக்காதுன்னு சொல்லுவாங்க. நான் நடனமே கற்றுக் கொண்டதில்லை. ஆயினும் இஜரா சமுதாயத்தில வந்த பின்னாடி அடுத்தவங்க ஆடறதையும் நான் ஆடியதையும் மனசுல வச்சுக்கிட்டுப் பயிற்சி, ஒத்திகை எதுவுமே இல்லாமல் பாட்டை மட்டும் கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டு மேடைமேல வந்துட்டேன். டைரக்டர் விசில் அடித்தார். லைட் போடப்பட்டது. பாட்டும் வந்தது. நானும் ஆடினேன்.

'செல்லாத்தா செல்ல மாரியாத்தா' என்ற பாட்டுக்கு ஆடினேன். ஆட்டம் முடிந்த பிறகு எல்லாரும் கைதட்டி ஆரவாரம் செய்தனர். வெளியூரில் இருந்து வந்தவர்கள் என்னை நாடகத்தில் நடிக்க வந்த பெண் என்றே நினைத்துக்கொண்டனர். அதன் பிறகு நண்பர்கள் மூலம் அறிந்து நான் பெண் இல்லை என்பதையும் என்னைப் பற்றியும் தெரிந்து கொண்டனர். திருவிழா முடிந்த பிறகுச் சில நாட்கள் ஆனபிறகுகூட நான் ஆடியதைப் பாராட்டிச் சென்றனர். அது பாராட்டோ இல்லை என்னிடம் பேச வேண்டும் என்ற எண்ணத்தில் எப்படிப் பேசுவது என்று தெரியாமல் ஆட்டத்தைப்பற்றி வர்ணித்தார்களோ தெரியவில்லை. இருந்தாலும் என் ஊரில் கிண்டல் இல்லாமல் நல்லபடியாகப் பேசு கிறார்களே அதுவே சந்தோஷம்.

மும்பையில் இருந்து வந்து ஆறுமாதம் சென்றது. நடு அண்ணன் தோட்டத்துக் கரண்ட் ரூமைப் பூட்டுவதும் அம்மா அப்பா இருக்கும் வீட்டைப் பூட்டுவதுமாகப் பெரிதும் தொந்தரவு கொடுத்து வந்தான். 'நான் வீதியில் இருக்கேன். உங்களுக்கு வீடு வேணுமா? நீங்க மட்டும் சொகுசா வீட்டுக்குள்ளே படுக்கணுமா? சொத்தைப் பிரிச்சுக் குடுங்க. நாங்க எங்க வழியைப் பாத்துக்கிட்டுப் போறோம்' என்று கலாட்டா செய்வது வாடிக்கையாக இருந்தது. அப்பா சொல்வது என்னவென்றால்,

‘எந்தச் சொத்து இவனுங்களுக்கு இருக்கு? மொறப்படி பாத்தாப் பாட்டன் சொத்துத்தான் பேரன்களுக்குச் சொந்தம். இவன் பாட்டன் சொத்து என்று இருப்பது இந்த வீடுதான். நான் சுயமாகச் சம்பாதிச்சது தோட்டமும் இந்த லாரியும். பாட்டன் சொத்து எல்லாம் என் முதல் மனைவி பசங்க ரெண்டு பேரும் பிரித்துக்கொண்டு போய் விட்டார்கள். நான் நினைத்தால் இஷ்டப்பட்டவருக்கு வித்துட்டுப் போவேன். இவனால் என்ன செய்ய முடியும்?’ என்று கூறினார்.

அண்ணன் அப்பாவைத் திட்டுவது, அப்பா அண்ணனைத் திட்டுவது, சொத்து விஷயம் பேசுவது எல்லாம் இருவரும் நேருக்குநேர் நின்று பேசிக் கொள்வதில்லை. எல்லாம் அப்பா இல்லாதபோது அம்மாவிடம் தான். நடுவில் அம்மா பாவம் என்ன செய்வாள்? அப்பா என்ன சொன்னார் என்று அண்ணன்களிடமும் அண்ணன் என்ன சொன்னான் என்று அப்பாவிடமும் கூறி அழுவார். முதல் மனைவி பசங்க பாட்டன் சொத்தை எடுத்துக்கிட்டுப்போனப்போ நாங்க சின்னச் சின்ன பசங்க. எங்களுக்கு அப்போ ஒரு விவரமும் தெரியாது. இப்பொழுதிருந்தால் விட்டுக் கொடுத்திருக்க மாட்டோம். ‘இரண்டாவது மனைவி கட்டி எங்களை ஏன் பெத்த? பெத்த இல்ல, இருக்கற சொத்தப் பிரிச்சுக்குடு. நாங்களும் வண்டி ஓட்டிச் சம்பாதிச்சுக் கொடுத்திருக்கோம்’ என்று அண்ணன் ஆணித்தரமாச் சொல்லிவிட்டான்.

‘சொத்தை இப்பவே பிரிச்சுக் குடுத்தா ஊதாரித்தனமா எல்லாத் தையும் வித்துப்புடுவாங்க. நாம் இறந்த பின்னாடி பிரிச்சுக்கிட்டுப் போகட்டுமுன்னு நான் நினைக்கிறேன். இவன் என்னடான்னா இப்படி வீட்ல நான் இல்லாதபோது கலாட்டா செய்றான். இனிமேல எனக்கு என்ன, எப்படியோ போகட்டும். சண்டை சச்சரவு இல்லாம எல்லாரும் சரிபாதியா பிரிச்சுக்கிட்டும்’ என்று அப்பா சொல்லிவிட்டார்.

ஐந்து ஏக்கர் நிலம், நான்கு லாரி, பெரிய மச்சு வீடு இவற்றை எல்லாருக்கும் சண்டை இல்லாம ஒரு வக்கீல் மூலமாகக் கோர்ட்டுக்கு எடுத்துச் சென்று பிரிக்க ஏற்பாடு செய்தனர். என் அண்ணார்கள் மூன்று பேரும் அப்பா இல்லாத நேரம் வீட்டுக்கு வந்து ‘பொட்டத் தாயோலி, உன்னைப் புடவையில் இங்கு விட்டு வைத்ததே பெரிய காரியம். ஒம்போதுகளோடு சேந்துக்கிட்டு குஞ்ச அறுத்துக்கிட்டுச் சொத்துல சரிபாதி கேட்டே உன்னை அட்ரஸ் இல்லாம ஆக்கிடுவோம். மரியாதையா எனக்கும் சொத்துக்கும் எந்தப் பாத்தியமும் இல்லை; எனக்குச் சொத்து வேண்டாம் என்று கையெழுத்துப் போட்டுவிட்டால் உயிரோடு பம்பாய் போவாய். இல்லை தொலைத்துவிட்டு விடிவதற்குள் எரித்துச் சாம்பல் ஆக்கிவிடுவோம்’ என்று மிரட்டினர். மேலும் கோர்ட்டுக்கு வந்தால் துரைசாமி ஆம்பளப் பையன்; இப்போ நீ பொம்பள துணியில்

இருக்க. குஞ்சு கொட்ட இல்லே. நீ எங்க தம்பியே இல்லே, யாரோ ஒரு பொட்டதான் என் தம்பின்னு சொல்லிக்கிட்டு எங்களப்பத்தித் தெரிஞ்சுக்கிட்டு வந்துட்டான்னு சொல்லி உன்ன ஊரைவிட்டே ஓட வைச்சுப்புடுவோம். நல்லா யோசனை பண்ணிக்கோ' என்று கூறிச் சென்றுவிட்டனர்.

என் அப்பாவிடம் என் அண்ணன்கள் சொன்னதைக் கூறினேன். அப்பாவும் என்னை வக்கீலிடம் கூட்டிச் சென்றார். விஷயத்தை வக்கீலிடம் சொல்ல 'அதெல்லாம் ஒன்றும் செய்ய முடியாது. ஒரு வேளை அங்கு 'துரைசாமி' என்று ஜட்ஜ் கூப்பிடும்போது நீ இப்படி இருப்பதை அறிந்து நீ துரைசாமிதானா என்று புரூப் காட்டச் சொல் வார்கள். அதனால் நீ கோர்ட்டுக்கு வரும்போது ஆம்பளத் துணியில வா' என்று கூறினார்.

'பொம்பளையா ஆகணும்னு கஷ்டங்களைத் தாங்கி ஒத வாங்கி அடி வாங்கிக் கண்ட கண்டவனிடம் எல்லாம் திட்டு வாங்கி முடிய் வளத்து இன்னிக்குப் பொம்பளையா இருக்கேன். என்னோட ஆண் உறுப்பைக் கூட, பயம் இல்லாம உயிரே போனாலும் பரவாயில்லை என்று ஒருநாள் வாழ்ந்தாலும் பொம்பளையா வாழ்ந்து சாவோனும்னு அறுத்துக்கிட்டேன். இப்போ கேவலம் சொத்துக்காக நான் ஆம்பளையா மாறோனுமா? என் தலைமுடியை வெட்டோனுமா? இல்லே, என்னால அது ஆகாது' என்று கூறிவிட்டேன்.

'என்னப்பா உன்னோட பெரிய வம்பாப் போச்சு. நான் என்ன எப்பவுமே ஆம்பளத் துணியில இருன்னு சொல்லவில்லை. உன்னோட அப்பாவே இது என்னோட மகன்தான், இப்படி அலியா மாறிப் போயிட்டான்னு கோர்ட்டுல சொன்னாலும் அதுக்கு யாராவது ஆட்சேபணை தெரிவிச்சாச் சொத்தப் பிரிக்க முடியாது. வாய்தா வாய்தான்னு இழுக்கடிப்பாங்க. அதுக்குத்தான் ஏன் ரிஸ்க் எடுக்கணும்னு ஒருநாளைக்கு ஆம்பளையா வான்னு சொல்றேன்' என்று வக்கில் கூறினார்.

வக்கீல் எவ்வளவு ஈசியாக் கூறிவிட்டார். ஒருநாள் கூத்துக்கு மீசையை சிரச்சானாங்கற கதையா என்னை முடியை வெட்டி ஆம்பளைத் துணி யைப் போட்டுகிட்டு வான்னு சொல்லிவிட்டாரே. போகட்டும். ஒரு நாளைக்கு இவர் பொம்பளை உடைய அணிஞ்சுக்கிட்டுக் கோர்ட்டுக்கு வர முடியுமா என்று மனதில் நினைத்துக்கொண்டு மவுனமாகவே இருந்தேன்.

அப்பா தலைமீது கை வைத்துக்கொண்டு தலைகுனிந்தவாறு இருந்தவர் தலைநிமிர்ந்து 'இதற்கு வேற வழியே இல்லீங்களா?' என்று வக்கீலைப் பார்த்துக் கேட்டார். 'வேற வழி வேற வழி' என்று யோசித்து

விட்டு என்னைச் சிறிதுநேரம் வெளியில் நிற்க வைத்துவிட்டு அப்பாவும் வக்கீலும் பேசிக்கொண்டிருந்தனர். சற்றுநேரம் கழித்து என்னை அழைத்தனர். 'இங்க பாருப்பா, ஒரே வழிதான் இருக்கு. அதுக்கு நீ உங்க அப்பா மேல நம்பிக்கை வைக்கோணும். என்ன புரியுதா? உங்க அப்பா மேல உனக்கு நம்பிக்கை இருக்கா?' என்று வக்கீல் உரத்த குரலில் கேட்டார். 'உம் இருக்குங்க' என்று நான் பதில் சொன்னேன். 'நீ கோர்ட்டுக்கே வரவேண்டாம். என் சொந்த வேலையின் விஷயமாகத் தவிர்க்க முடியாத காரணத்தால் நான் வெளியூரில் இருப்பதால் சொத்துப் பிரச்சினை வந்தால் என் அப்பாவுக்கு என்னுடைய அனுமதியின் பெயரில் என் கையெழுத்து இன்றி என் அப்பா கையெழுத்துப் போட்டு எனக்குச்சேர வேண்டிய சொத்துக்களை அவரே வாங்கிக் கொள்ளலாம் என்று பவர் பட்டா ரெடி செய்யறோம். உனக்குச் சம்மதமா' என்று வக்கீல் என்னிடம் கேட்டார். நானும் சம்மதம் என்று கூறினேன். 'நாளைக்குப் பத்திரம் ரெடியாகும். வந்து கையெழுத்துப் போடு. ரேவதின்னு போடக் கூடாது. துரைசாமின்னு நீ பள்ளிக்கூடத்தில எப்படிக் கையெழுத்துப் போட்டியோ அப்படித்தான் போடணும்' என்று வக்கீல் சொல்லிக்கொடுத்தார். அப்பாவும் நானும் வீட்டுக்கு வந்தோம்.

'என்னோட தலையெழுத்தே மாறிப்போச்சு. இங்க கையெழுத்து எப்படிப் போடோணும்னு யாருக்குத் தெரியும்' என்று மனதில் நினைத்துக்கொண்டு பத்தாம் வகுப்பு மார்க் ஷீட்டைத் தேடினேன். அதில் துரைசாமி என்று தமிழில்தான் கையெழுத்துப் போட்டிருந்தேன். மறுநாள் அப்பாவும் நானும் சென்று வக்கீல் கொடுத்த பவர் பட்டாவில் கையெழுத்துப் போட்டேன். அப்போது நான் மேஜராகி இருந்தேன்.

அப்பா, வக்கீல், அண்ணார்கள் என்ன நினைத்தார்களோ என்ன பேசினார்களோ தெரியவில்லை. என்னிடம் திடீர் என்று 'சொத்துப் பிரித்துப் பத்திரம் எழுத நாற்பதாயிரம் ரூபாய் பணம் கொடுக்க வேண்டும்' என்று கூறினர். 'நாலு காசுகூட இல்லாத நான் நாற்பதா யிரத்துக்கு எங்கு போவேன்' என்றேன். 'சொத்து மட்டும் வேணுங்கிற. பத்திரம் எழுதக் கூலி, பத்திரம் வாங்கப் பணம், வக்கீல் பீஸ் கொடுன்னு கேட்டாப் பணம் இல்லை என்கிறாயே? அப்போ உனக்கு எதுக்கடா சொத்து பொட்டையா? மரியாதையா நாற்பதாயிரம் ரூபாய் புரட்டற வழியைப் பாரு. இல்லாட்டி நாங்க கொடுக்கற பணத்தை வாங்கிட்டுச் சொத்துக்கும் எனக்கும் எந்தப் பாத்தியமும் இல்லைன்னு கையெழுத்துப் போடு' என்று அண்ணார்கள் கூறிவிட்டனர். ஜீவனாம்சம் என்ற பெயரில் தலைக்கு முப்பத்தைந்தாயிரம் என்று மூன்று அண்ணார்களும்

சேர்ந்து லட்சத்து ஐந்தாயிரம் ரூபாய் எனக்குக் கொடுத்துக் கையெழுத்து வாங்கிக் கொண்டனர்.

எனக்கோ பெண்ணாக வாழவேண்டும். அதுவும் குடும்பம் என்று சொல்லிக் கொள்ளவோ, உறவுகள் என்று சொல்லிக் கொள்ளவோ எதுவுமில்லை. அம்மா, அப்பா, அண்ணன், அக்கா, குழந்தைகள்தான் என் குடும்பம், உறவு. அவர்களே இந்த முடிவு எடுத்தபின் நான் பின்வாங்கினால் எனக்கு ஆதரவும் பாதுகாப்பும் இல்லாமல் போய் விடும். நான் யாருக்குச் சொத்தைக் கொடுக்கிறேன். என் அண்ணன் களுக்குத்தானே என்று நினைத்தேன்.

அக்காவுக்குத் திருமணம் ஆனபோது நகை பணம் என்று வரதட்சணை யாகக் கொடுத்துவிட்டதால் அக்காவுக்குப் பங்கு இல்லை. ஆனால் சொத்துப் பிரித்துக்கொள்ளும் அண்ணன்கள், நான் உட்பட தலைக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுத்துவிட்டோம். தோட்டத்தை அண்ணார்கள் மூவரும் சரிசமமாகப் பிரித்துக்கொண்டார்கள். லாரி விற்ற பணத்தை அண்ணார்களும் அப்பாவும் பிரித்துக்கொண்டனர். அப்பா அம்மாவுக்கு எங்கள் வீட்டைக் கொடுத்துவிட்டனர். பிள்ளைகள் எல்லாரும் அப்பா அம்மாவுக்குக் கொடுத்த வீட்டில் எந்தப் பாத்தியமும் இல்லை என்று எழுதிக் கொடுத்துவிட்டோம். மேலும் சொத்துப் பிரித்துக் கொடுத்த பின்னும் எங்களுடன் சண்டைபோடவோ வீட்டுக்கு வந்து கலாட்டா செய்யவோ கூடாது என அப்பா கூறிவிட்டார். அண்ணார்கள் தனித்தனி வீடுகளில் வேறுவேறு பக்கம் (ஒரே ஊரில்) குடி சென்றுவிட்டனர். நான் அம்மா அப்பாவுடன் இருப்பது அண்ணார்களுக்குப் பிடிக்காமல் என்னையும் அம்மா அப்பாவுடன் இருக்க வேண்டாம் என்று தனியாக இருக்கச் சொல்லிவிட்டனர். அம்மா அப்பாவும் உன்னால் எங்களுக்குத் தொல்லை வரும் என்று தனியாகப் போகச் சொல்லிவிட்டனர். வேறு வழி இல்லாமல் அம்மா அப்பா வீட்டுக்குச் சற்று பக்கத்திலேயே ஒரு பாட்டி வீட்டில் ஒரு ரூம் வாடகைக்கு (200 ரூபாய் வாடகை)எடுத்து அங்குக் குடியேறினேன்.

அக்காவுக்குப் பத்தாயிரம், வீட்டுக்குத் தேவையான பொருள்கள் செலவு ஐந்தாயிரம் போக மீதியுள்ள 90 ஆயிரத்தை எங்கள் கிராமத்தில் உள்ள கூட்டுறவு வங்கியில் டெபாசிட் செய்து மாத வட்டி (அப்போது 900 ரூபாய்) வாங்கிக்கொண்டு ஊரில் இருந்தேன். துரைசாமி என்ற பெயரில்தான் டெபாசிட் செய்ய முடிந்தது.

எங்கள் ஊரிலிருந்து டவுனுக்கு மூன்று கிலோமீட்டர் தூரம் உள்ளது. வீட்டுக்குத் தேவையான பொருள்கள் வாங்கவேண்டுமாயினும், சினிமா என்று தியேட்டருக்குப் போகவேண்டுமாயினும் சகலத் துக்கும் டவுனுக்குத்தான் போகவேண்டும். ஒன்றரை ரூபாய் கொடுத்து

டவுன் பஸ்ஸில்தான்போவேன். அதிகக் கும்பலாக இருக்கும். அந்தக் கூட்டத்தில் நெருக்கி முடக்கிக்கொண்டு போகக் கஷ்டமாக இருக்கும். அந்த மூன்று கிலோ மீட்டர் டவுனுக்குப் போவதற்குள் என்னைப் பார்த்துச் சிரிக்கும் கூட்டமும் கேலி செய்யும் கூட்டமும் இடித்துக் கொண்டு செல்பவர்களும் கண்டு நெஞ்சு உடைந்துபோவேன். ஒரு முறை பஸ் காலியாக இருந்தது. நான் ஒரு பெண் அமர்ந்து இருக்கும் சீட் பக்கத்தில் போய் அமர்ந்துகொண்டேன். அந்தப் பெண்ணோ சிரித்துக்கொண்டு சீட்டைவிட்டு எழுந்து நின்றுகொண்டாள்.

எங்கள் ஊரில் பெண்கள் ஆண்களுடன் அமரமாட்டார்கள். அதனால் நான்கூட ஆண்கள் உட்கார்ந்திருக்கும் சீட்டில் காலியாக இருந்தாலும் உட்கார மாட்டேன். பஸ் பிரேக் போடும்போது பின்னால் இருக்கும் ஆண்கள் வேண்டுமென்றே முதுகில் வந்து இடிப்பார்கள். வாண்டுப் பசங்களோ மச்சான் பஸ் ஒன்பது மணிக்குப் போயிடுமாடா என்றும், மாப்பிளே மணி என்னா என்று ஒருவன் கேட்க மற்றொருவன் சிரித்துக்கொண்டே ஓம்பதுடா என்று கிண்டலாக, நக்கலாகக் கூறுவதும் எனக்கு மன உளைச்சலைக் கொடுத்தன. சில சமயம் ஆத்திரமும் கோபமும் கட்டுப் படுத்த முடியாமல் ‘என்னடா ஓம்பதுனு சொல்றதுக்கு சுத்தி வளைச்சு சொல்லுற. நான் ஓம்பதா இருந்தா உனக்கு என்னடா? உங்கிட்டப் புடவைக்கு வந்தனா, சோத்துக்கு வந்தனா? செருப்பு பிஞ்சு போகும், ஜாக்கிரதை’ என்று திட்டிவிடுவேன். பதிலுக்கு ‘அடே அப்பா என்ன குரல்டா ஆம்பள மாதிரி’ என்று சிரிப்பார்கள். கடவுள் குரலையாவது பெண் போலக் கொடுத்து இருக்கக் கூடாதா. இந்த ஜனங்க ஏன்தான் இப்படிச் சொல்றாங்களோ. அப்போ ஆம்பள துணியில் இருக்கறப்போ குரலைக் கேட்டு பொம்பளை மாதிரி பேசுறான்னு சொன்னவங்க இப்போ பொம்பளையா மாறிய பிறகு ஆம்பிள குரலுன்னு சொல்றாங் களேன்னு வேதனைப்பட்டு வெட்கப்பட்டுச் சண்டைகூடப் போட முடியாமல் இருப்பேன்.

இந்தத் தொல்லையே ஆவாதுன்னு நினைத்து என் அண்ணனிடத்தில் இரு சக்கர வாகனம் டிவிஎஸ் வண்டி கேட்டேன். டவுனுக்குப் போகணும்னா அவர்களின் வண்டிக்கு ஒரு லிட்டர் பெட்ரோல் போடணும். இல்லை ஒரு குவார்ட்டர் விஸ்கியாவது வாங்கிக் கொடுக்கனும்னு சொல்லுவாங்க. ஒருமுறை டவுனுக்குப் போய்வர ஒரு லிட்டர் பெட்ரோல் போட்டா மறுநாள் போகணும்னாலும் ஒரு லிட்டர் பெட்ரோல் போடணும்னு சொல்லுவாங்க. வேறு வழி இல்லாம வண்டி தேவைப்படும் போதெல்லாம் பெட்ரோல் அல்லது விஸ்கி வாங்கிக் கொடுப்பேன். எனக்குக் கிடைக்கின்ற வட்டிப் பணத்துல

எத்தனை நாளைக்குத்தான் இப்படிப் பெட்ரோல் போட முடியும்? குவார்ட்டர் விஸ்கி வாங்கிக் கொடுக்க முடியும்? வித்தியாசமாகப் பார்க்கின்ற இந்த ஊர் ஜனங்க மத்தியில், காசுக்காக அன்பு காட்டுகின்ற அண்ணனுங்க மத்தியில உணர்வுகளைப் புரிஞ்சுக்கிட்டு அன்பு செலுத்தறவங்க யாரும் கிடைக்கமாட்டாங்களா? இருக்க மாட்டாங் களான்னு நினைப்பேன்.

பொதுக்குழாயில்தான் தண்ணீர்பிடிக்க வரணும். அப்போது நான் இருக்கும் வீதியில் உள்ள பெண்கள் சிலர் அன்பாகப் பேசுவார்கள். சிலர் நக்கலாகப் பேசுவார்கள். 'என்ன ரேவதி சமையல் இன்னைக்கு?' 'பீக்கங்காய் கடைஞ்சு ரசம் வச்சு இருக்கேங்கா' என்று பதில் கூறுவேன். சிலர் 'தண்ணியப் பிடிச்சு எங்கதா ஊத்திக்கிற? எவ்வளவு தண்ணிதான் பிடிப்பே?' என்று இழுத்து நெளித்துக் கேட்பார்கள். நானும் 'நீங்க என்ன செய்யறீங்களோ அதுதான் நானும் செய்யறேன்' என்று பதில் கூறிக்கொண்டே குடத்தை இடுப்பில் வைத்துக் கொண்டுபோவேன். என் பின்னால் சிலர் 'ரேவதி நம்பள மாதிரியே எவ்வளவு பாங்கா அழகாக் குடத்தை இடுப்புல வச்சுக்கிட்டுப் போறா இல்லே' என்பார்கள்.

'ஏன்டா தொரசாமி இந்த மாசம் வாடகை இன்னும் கொடுக் கலையே' என்று வீட்டுக்காரப் பாட்டி கூறும்போது அக்கம் பக்கம் உள்ள வாடகைக்காரர்கள் சிரிப்பார்கள் பாட்டி கூப்பிடுவதைப் பார்த்து. நானும் 'ஆயா எத்தனை முறை சொல்றது என்னைத் தொரசாமி தொரசாமின்னு கூப்பிடாதேன்னு. ரேவதின்னு கூப்பிட்டா என்ன?' என்று கூறுவேன். 'தேவதியோ தோவதியோ அதெல்லாம் என்னோட வாயில் நுளையாது. உன்பேரு தொரசாமிதானே. அப்படித்தான் கூப்பிடுவேன்னு' பாட்டி சொல்லுவா. 'அது எல்லாம் அப்போ. இப்போ என் பேரு ரேவதி'ன்னு நான் சொன்னா 'நீ பாதியில இப்படி ஆயிட்டுப் பேர மாத்தி வச்சுக்கிட்டா நாங்க கூப்பிட்ட பெயரை எப்படி மறக் குறது? அதெக் கூப்பிட்டுக் கூப்பிட்டுத் தொரசாமின்னுதான் வாயில வருது போடா' என்று பாட்டி கூறிவிடுவார். புரிந்துகொண்டவர்கள் கொஞ்சம் படித்தவர்கள் என் முதுகுக்குப் பின்னால் கேலி செய்தாலும் நேரில் பார்க்கும்போது ரேவதி என்றுதான் அழைப்பார்கள்.

# 15

எங்களுடைய வீட்டுக் குலதெய்வக் கோயில் எங்கள் ஊரில் இருந்து 20 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. சிறு வயதில் அந்தக் கோயிலுக்குக் குடும்பத்துடன் சென்று விளையாடிய நினைவுகள் வந்தன. இப்போது பெண்ணாக அங்குப் போகவேண்டும் என்று ஆசையாக இருந்தது. அண்ணனிடம் வண்டி கேட்டேன், நம் குலதெய்வக் கோயிலுக்குச் சென்றுவர வேண்டும் என்று. 'இருபது கிலோ மீட்டர் வண்டியிலா? போடா தாயோளி. பஸ்ல போடா' என்றான். நானோ 'பஸ் கோயில் பக்கம் போகாது. உள்ளே இரண்டு கிலோமீட்டர் நடந்து போகணும்' என்று கூறிவிட்டு அவனுக்கு விஸ்கி வாங்கிக் கொடுத்தும் வண்டி டேங் நிரப்புவதாகக் கூறியும் வாங்கிக்கொண்டு சென்றேன். முதல் தடவையாக வெகுதூரம் வண்டி ஓட்டிச் செல்கிறேன். பயமாக இருந்தாலும் ஒரு சந்தோஷம். ஊரைவிட்டு அடுத்த ஊருக்குப் போகிறோம். அங்கு என்னை யாரும் இஜரா என்று அடையாளம் கண்டுகொள்ள மாட்டார்கள். நானும் ஒரு பெண்ணாக அதுவும் வண்டி ஓட்டிக்கொண்டு செல்வது சந்தோஷமாக இருந்தது.

கோயில்முன் வண்டியை நிறுத்திவிட்டு உள்ளே சென்றேன். பூசாரிக்கு என்னை அடையாளம் தெரியவில்லை. எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அதே பூசாரி, அதே கோயில் என்று. 'வாம்மா, எந்த ஊரில் இருந்து வர்றீங்க?' என்று பூசாரி கேட்க நானும் என் ஊரைப் பற்றிக் கூறிவிட்டு அம்மா அப்பா பெயரைச் சொல்லவில்லை. சொன்னால் நான் யார் என்று அடையாளம் கண்டுகொள்வார் என்று. குலதெய்வம் என்பது கன்னிசாமி ஆகும். அந்தக் கன்னிசாமி இருக்கும் இடத்திற்குப் பெண்கள் போக மாட்டார்கள். வயதான, மாதவிலக்கு நின்றுபோன பெண்கள் மட்டும் தான் போவார்கள். மற்ற தெய்வங்கள் இருக்கும் இடத்திற்குப் போகலாம். தெய்வத்தைப் பார்க்கவோ அருகில் செல்லவோ பெண்களால் முடியாது. வயசுக்கு வராத பெண்கள்

போகலாம். அன்று சுமார் 20 பேர் கொண்ட ஆண் பெண் கூட்டம் இருந்தது. எல்லாருக்குமாகப் பூசாரி ஒரே பூஜை செய்தார்.

முதலில் விநாயகர் கோயிலில்தான் பூஜை நடந்தது. அதன்பிறகு கன்னிசாமி இருக்கும் இடத்தை நோக்கிப் பூசாரி செல்ல ஆண்கள் அவரை நோக்கிச் சென்றனர். பெண்கள் அந்த விநாயகர் கோயிலில் நின்றுகொண்டனர். நானோ வீட்டுக்குத் தூரம் ஆவதில்லை. நான் போகலாம் என்று மனதில் நினைத்து நானும் சென்றேன். பூசாரி, பெண்கள், ஆண்கள் சிலர் 'எம்மா எம்மா இங்க வரக்கூடாது' என்று சத்தம் போட்டனர். 'இதுகூடத் தெரியாதாம்மா, பொம்பளைங்க இங்க வரக்கூடாதுன்னு' என்று சொல்ல நான் 'இல்லிங்க வரலாம்' என்று மட்டும் பதில் கூறினேன். எல்லாரும் முழிக்க 20 பேரில் ஒருவர் என்னைத் தெரிந்திருப்பார்போல. அவர் உடனே 'அவுங்க போகலாம், ஒன்னும் தப்பில்ல' என்று கூற அனைவருக்கும் குழப்பம் ஏற்பட்டது. உடனே அவர் என் அம்மா அப்பா பெயரையும் ஊரையும் கூறிய பிறகு பூசாரி 'ஐய்யோ துரைசாமி எங்கியோ பம்பாயில இருக்கிறதாச் சொன்னாங்க. எப்ப கண்ணு வந்த. நல்லா இருக்கியா? வா வா வந்து கும்புடு' என்று கன்னிசாமி இருக்கும் இடத்திற்குக் கூட்டிச் சென்றார். ஒரு சிலருக்குப் புரிந்தாலும் ஒரு சிலருக்குப் புரியவில்லை. புரிந்தவர்களிடம் புரியாதவர்கள் முணுமுணுத்துப் பேசி நான் யார் என்பதைத் தெரிந்துகொண்டனர். எல்லாரும் என்னையே வச்ச கண்ணு வாங்காமப் பாத்தாங்க.

பூஜை முடிந்து ஒரு சிலர் கோயிலில் பூப்போட்டுப் பார்த்தனர். அப்போது என்னை அழைத்துப் பூ எடுக்கச் சொன்னார்கள். பூசாரியோ 'நீயும் தெய்வமும் ஒன்னுப்பா, எடு பரவாயில்லை' என்றார். நான் யோசனை செய்துகொண்டே சுத்தி நிற்பவர்களைப் பார்த்தேன். ஒரு சிலர்,'எடுப்பா, ஒன்னும் தப்பில்லை. எங்களை மாதிரியா நீ? ஒரு தப்பு தண்டா செய்யாத தெய்வப் பிறப்பு. எடுக்கலாம். ஏன் யோசனை செய்கிறாய்?' என்றனர். அதன் பிறகு நான் பூ எடுத்துக் கொடுத்தேன். ஒரு பத்துப்பேர் பூப்போட்டுப் பார்த்தனர். அவர்களுக்குப் பூ எடுத்துக் கொடுத்தேன். நினைத்த காரியம் நன்றாக நடக்குமா என்று தெய்வத்தின் முன் கேட்பது சம்பிரதாயம். வெள்ளைப் பூ, சிவப்புப் பூ இரண்டும் தனித்தனியாகப் பேப்பரில் கட்டிக் குலுக்கிப் போட்டு ஒன்றுக்குப்பின் ஒன்று எடுப்பது, அதில் வரும் நிறத்தை வைத்துப் பூசாரி நடக்குமா நடக்காதா என்று கூறுவார். எல்லாரும் சிறிது நேரம் கோயிலில் அமர்ந்திருந்து சென்றுவிட்டனர். அதன்பிறகு நான் ஒவ்வொரு தெய்வம் இருக்கும் இடத்திற்கும் சென்று வழிபட்டுவிட்டுப் பூசாரி கையில் 50 ரூபாய் கொடுத்துவிட்டு வண்டியை எடுத்துக்கொண்டு மெயின் ரோட்டுக்கு வந்தேன்.

அங்கு ஒரு பெட்ரோல் பங்க்முன் வண்டியை நிறுத்திப் பெட்ரோல் போட்டேன். என் வண்டியைப் போலவே ஒருவர் அவர் வண்டிக்கும் பெட்ரோல் போட்டுக் கொண்டிருந்தார். பார்ப்பதற்குக் கறுப்பாக இருந்தாலும் ஏனோ அவரை மீண்டும் மீண்டும் பார்க்க என் கண்கள் துடித்தன. நான் அவரைப் பார்க்க அவரும் என்னைப் பார்க்க எதுவும் பேசாமலேயே வண்டியை எடுத்துக்கொண்டு எங்கள் ஊரை நோக்கிச் சென்றேன். அவரும் என் வண்டியைப் பின்தொடர்ந்தே வந்தார். சைடு கண்ணாடியில் அவர் வருவதைத் தெரிந்து வேகமாக ஓட்ட அவரும் வேகமாக ஓட்டினார். நான் மெதுவாகச் சென்று அவர் முன்னால் செல்லட்டும் என்று நினைத்தேன். அவரும் மெதுவாக என் பின்னால் வந்தார். சற்று எனக்குப் பயம் ஆனது. அதனால் வண்டியை நிறுத்தி வண்டிப் பையில் ஏதோ தேடுவதுபோல் நடித்தேன். என் அருகில் அவர் வந்து 'என்னங்க ஆச்சு?' என்று கேட்டார். 'ஒன்னுமில்லங்க. வண்டி சூடாகிவிட்டது. அதனால் நிறுத்தினேன்' என்றேன். 'உங்களை எங்கோ பார்த்த மாதிரி இருக்குது. நீங்கள் நாமக்கல்லா?' என்றார். நானும் ஆம் என்றேன். பதிலுக்கு 'நீங்க எந்த ஊரு?' என்று கேட்டேன். 'பெட்ரோல் பங்க் பக்கத்தில்தான் என் ஊர்' என்றவர், 'நீங்க எங்க இங்க?'என்றார். நான் 'குலதெய்வக் கோயிலுக்கு வந்தேன்' என்றேன்.

அவருடன் பேசிய பிறகு எனக்குப் பயம் போய்விட்டது. உங்க பேரு என்னவென்று கேட்டேன். பாபு என்று கூறிவிட்டு 'உங்க பேரு' என்று கேட்டார். 'ரேவதி'என்றேன். 'நீங்க எங்க வேலை செய்யறீங்க?' என்று கேட்டேன். 'நாமக்கல்லில் ஒரு சினிமாத் தியேட்டரில் ஆப்ரேட்டராக வேலை செய்கிறேன். அதான் சென்று கொண்டிருக்கிறேன்' என்றார். 'தினமும் வண்டியில்தான் போவீர்களா?' என்று கேட்டேன். 'ஆமாம். பஸ்ஸில் போகலாம். இரவு ஷோ முடித்துப் போக வேண்டும். பஸ் இருக்காது. அதான் வண்டியில் செல்கிறேன்' என்றவர், 'திருமணம் ஆகி விட்டதா?' என்று என்னைக் கேட்டார். 'இல்லை' என்று கூறிவிட்டு 'உங்களுக்கு?' என்று நான் கேட்டேன். அவரும் 'இல்லை' என்றார். அதன் பிறகு இருவரும் அவரவர் வண்டியை ஓட்டிக்கொண்டு பேசாமலேயே சென்றோம். நாமக்கல் டவுன் பக்கம் வந்தவுடன் 'எப்போதாவது தியேட்டருக்கு வாங்க' என்று தியேட்டர் பெயரைக் கூறி விடைபெற்றுச் சென்றுவிட்டார்.

அம்மாவுக்கும் அண்ணன்களுக்கும் சாமி திருநீறு கொடுத்துவிட்டு அண்ணனிடம் வண்டியை ஒப்படைத்தேன். 'எவ்வளவுடா பெட்ரோல் போட்டே?' என்று கேட்டார் அண்ணன். 'போகும்போது இரண்டு லிட்டர் போட்டேன்; வரும்போது இரண்டு லிட்டர் போட்டேன்' என்றேன். டேங்க் மூடியைக் கழற்றி வண்டியை ஆட்டிப் பார்த்து

விட்டு ஒன்றும் பேசாமல் இருந்தான். நான் என் ரூமுக்குச் சென்று விட்டேன். ஒரு வாரம் அவருடைய நினைப்பாகவே இருந்தது. என்னைப் பெண் என்று நினைத்துப் பேசினாரா? இல்லை, நான் யார் என்று தெரிந்து பேசினாரா? என்னைப் பற்றி என்ன நினைத்திருப்பார்? அவர் சொன்ன சினிமாத் தியேட்டருக்குப் போய்ப் பார்க்கலாமா என்று யோசித்த வண்ணம் இருந்தேன். அவர் பேசின அன்பான வார்த்தை, மரியாதையான பேச்சு, ஒழுக்கமா நடந்துகொண்ட முறைகள் ஆகியவை அவரை மீண்டும் பார்க்க என்னைத் தூண்டின.

அவர் சொன்ன அந்தச் சினிமாத் தியேட்டருக்குச் சென்றேன். இன்னும் டிக்கட் கொடுக்கவில்லை. நிறையப்பேர் கவுண்டரில் வரிசையாகவும் ஆங்காங்கே சிலரும் நின்றுகொண்டிருந்தனர். நானோ தனியாகச் சென்றுள்ளேன். பேச்சுத் துணைக்குக்கூட யாரும் இல்லை. எனக்குச் சங்கடமாகவும் கஷ்டமாகவும் இருந்தது. யாராவது என்னை அடையாளம் கண்டுகொள்வார்களோ என்ற பயம். பாபு பற்றி விசாரிக்கவும் முடியவில்லை. தியேட்டரில் வேலை செய்பவர்களிடம் பாபு பற்றி விசாரித்தால் அவரைத் தப்பாக நினைத்துவிடுவார்களோ என்று எண்ணித் தனியாக ஓர் ஓரமாகக் கையைக் கட்டிக்கொண்டு தியேட்டர் மேல்கீழ் பார்த்தவாறு இருந்தேன். பெண்கள் கவுண்டரில் தரை டிக்கட்டுக்கும் பெஞ்சு டிக்கட்டுக்கும் வரிசையாகப் பெண்கள் இருந்தனர்.

பால்கனி சென்றால்தான் அங்கு ஆப்ரேட்டர் ரூம் உள்ளது என்று பால்கனி டிக்கட் கவுண்டருக்குச் சென்றேன். அங்கு ஆண்களும் பெண்களும் கலந்து வரிசையாக இருந்தனர். நானும் வரிசையில் நின்று டிக்கட் வாங்கிக்கொண்டு மாடிமீது ஏறி பால்கனியில் அமர்ந்தேன். என் அருகில் யாரும் இல்லை. அப்போது திடீரென்று பாபு வந்து என் சீட் பக்கம் அமர்ந்து 'என்னங்க சினிமாவுக்கு வந்தீங்களா?' என்றார். ஆமாம் என்றேன். 'தனியாக வந்தீர்களா? இல்லை, உங்களுடன் யாராவது...?' என்று அவர் சொல்லி முடிப்பதற்குள் 'நான் தனியாகத் தான் வந்தேன்' என்று பதில் கூறினேன். 'சினிமா ஆரம்பிக்க வேண்டும். நான் போகிறேன். இடைவேளையின்போது மேலே ஆப்ரேட்டர் ரூமுக்கு வாங்க. கூல்டிரிங்ஸ் சாப்பிடலாம்' என்று கூறிவிட்டு அவர் சென்றுவிட்டார். தியேட்டரில் உள்ள மற்றவர்கள் எங்களைச் சந்தேகப்படாமல் இருக்கும் வகையில் குறைவாகப் பேசி இருவருமே சமாளித்தோம்.

இடைவேளை விட்டவுடன் நான் ஆப்ரேட்டர் ரூம்தேடிச் சென்றேன். அவர் தனியாகத்தான் இருந்தார். கூல்டிரிங்ஸ் ஓப்பன் செய்து கொடுத்தார். நானும் அதை வாங்கிக் குடித்தேன். எங்கள் இரண்டாவது சந்திப்பில்

அவர் முஸ்லிம் என்பதையும், இந்தத் தியேட்டரில் மூன்று வருடமாக வேலை செய்து வருகிறார் என்பதையும், தங்கை, அண்ணன், அம்மா, அப்பாவுடன் வசிப்பதையும் கேட்டுத் தெரிந்து கொண்டேன். நானும் என் குடும்ப நபர்களைச் சொல்லித் தற்போது நான் தனியாக இருப் பதைக் கூறி இதற்குமுன் டெல்லியில் ஒரு நிறுவனத்தில் பரதநாட்டிய டீச்சராக இருந்து இப்போது குடும்பப் பிரச்சினை காரணமாகத் தனியாக இருக்கிறேன் என்று கூறினேன். நான் இஜரா என்று சொல்ல வில்லை. 'உங்கள் வீட்டிற்கு வரலாமா?' என்று கேட்டார். 'ஓ வரலாமே விருந்தாளியைப் போல' என்றேன். எப்போது என்று அவர் கேட்க, 'நேரம் வரட்டும் கூறுகிறேன்' என்று பதில் சொல்லிவிட்டு, 'நான் படம் தொடர்ந்து பார்க்கவில்லை, போகிறேன்' என்றேன். 'ஏன் படம் போரா?' என்றார். 'இல்லை, நான் உங்களைப் பார்க்க வேண்டும் என்றுதான் வந்தேன். பார்த்துவிட்டேன். பிறகு எப்போதாவது வருகிறேன்' என்று கூறிவிட்டுத் தியேட்டரைவிட்டு வெளியில் வந்து ஆட்டோ பிடித்துச் சென்றுவிட்டேன்.

அவரை வீட்டிற்கு அழைப்பதற்கு மனம் இல்லாவிட்டாலும் 'ஓ வரலாமே' என்று கூறிவிட்டு வந்தேன். இருந்தாலும் மனதில் எங்கோ அவரை வீட்டுக்கு அழைக்கவேண்டும் என்று ஆசையும் இருந்தது. வீட்டு ஓனர் பாட்டி யார் என்றுகேட்டால் என்ன சொல்வது, ஊருக்குள் இவர் வந்தால் என்ன நினைப்பார்கள் என்று பயமாகத்தான் இருந்தது. அப்படியே அவர் வந்தாலும் ஓனர் பாட்டி என்னை அவர்முன் துரைசாமி என்று அழைத்துவிட்டால் அவருக்குச் சந்தேகம் வந்து தவறாக நினைத்து விடுவாரோ என்ற பயமும் இருந்தது. நான் யார் என்பதைத் தெளிவு படுத்திய பிறகு அவருக்கு விருப்பம் இருந்தால் வீட்டிற்கு வரட்டும் என்று நினைத்தேன். ஆனால் நான் இஜரா என்று கூறினால் அவர் என் மீது வைத்துள்ள பாசம் போய்விடும்; என்னைச் சந்திக்கமாட்டார் என்ற பயமும்கூட இருந்தது.

இரண்டு மாதத்தில் குறைந்தது 12 தடவை சினிமா சென்று அவருடன் பேசிக்கொண்டு இடைவேளையில் திரும்புவது வழக்கமாகப் போயிற்று. என்னால் நான் பெண் இல்லை என்று கூறவும் முடியவில்லை. அவரும் ஏன் உன் குரல் இப்படி இருக்கிறது என்று கேட்கவுமில்லை. சில சமயம் வீட்டில் ஏதாவது சமைத்து எடுத்துச் சென்று கொடுத்தும் உள்ளேன். ஒருநாள் மனதைத் திடப்படுத்திக்கொண்டு என் ஊர்ப் பெயரும் வீட்டு முகவரியும் கூறிவிட்டேன். அன்று இரவு ஷோ முடிந்து வீட்டுக்கு வருவதாகவும் சொன்னார். நானும் சரி என்று கூறிவிட்டேன். அன்று இரவு 10 மணிக்கு எல்லாரும் அவரவர் ரூம்களில் சென்று தூங்கி விட்டனர். சில காலேஜ் பையன்கள் ரூமுக்குள் லைட் போட்டுப்

படித்துக்கொண்டிருந்தனர். காம்பவுண்ட் கதவையும் தாழிட்டுவிட்டு ஓனர் பாட்டியும் அவரிடத்துக்குச் சென்றுவிட்டார். இரவு ஷோ முடிய ஒருமணியாகும் என்று அவர் வருகைக்காகப் பயந்து காத்திருந்தேன். இரவு ஒருமணிக்குக் கதவைத் திறந்து காம்பவுண்ட் கதவையும் திறந்து அவருக்காகக் காத்திருந்தேன். அவரும் அவருடைய வண்டியில் வந்துவிட்டார். மெதுவாக என்று கூறிக் கதவைத் திறந்து வண்டியை உள்ளேவிடச் சொல்லிவிட்டுக் காம்பவுண்ட் கதவைத் தாழிட்டுவிட்டு என் ரூமுக்கு அழைத்துச் சென்றேன்.

நான் பயப்படுவதுபோல் அவரிடம் எந்தப் பயமும் இல்லை என்று தான் நினைத்தேன். அவர் முகத்திலோ பேச்சிலோ இங்கு வந்தது குறித்துப் பயம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நானும் ஆரம்பத்தில் எதுவும் பேசாமல் அவரைச் சாப்பிட வைத்தேன். அவரும் சாப்பிடத் தொடங்கினார். 'நீங்க சாப்பிட்டுவிட்டீர்களா?' என்று கேட்டார். 'இன்னும் இல்லை' என்றேன். 'நீங்களும் சாப்பிடுங்கள்' என்றார். நானும் தட்டை எடுத்து எனக்கு நானே பரிமாறிக்கொண்டு அவருடன் சாப்பிட்டேன். சாப்பிட்டுக்கொண்டே 'உங்க அம்மா அப்பா வீடு எங்கே?' என்று கேட்டார். 'பக்கத்தில் உள்ளது' என்றேன். 'அண்ணா அம்மா அப்பா இங்கு வருவார்களா?' என்று கேட்டார். 'இதுவரை யாரும் வரவில்லை. நான்தான் அங்குச் செல்வேன். எப்போ தாவது' என்றேன். 'உங்க வீட்டுக்கு இன்று போகாததால் உங்களை எதிர்பார்க்கமாட்டார்களா?' என்று கேட்டேன். 'இல்லை. சில சமயங் களில் தியேட்டரிலேயே தங்கிவிடுவேன். அதனால் யாரும் எதிர்பார்க்க மாட்டார்கள்' என்றார். சாப்பாடு முடிந்து தட்டுக்களை எடுத்து ஓரம்வைத்தேன்.

பாத்திரங்களைச் சரிசெய்து அதன் அதன் இடத்தில் வைத்து விட்டு இருவரும் தூங்கலாம் என்று அவரைக் கட்டிலில் படுக்கச் சொன்னேன். நான் கீழே பாய் விரித்துப் படுக்கச் சென்றேன். 'ஏன் மேலேயே படுக்கலாமே' என்றார். 'இல்லைங்க பரவாயில்லை. நான் கீழே படுத்துக் கொள்கிறேன்' என்று கூறினேன். அவரும் அதற்குப் பதில் எதுவும் சொல்லவில்லை. இருவரும் தனித்தனியாகப் படுத்தோம். 'நீங்க ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை?' என்று கேட்டார். எனக்குச் சட்டென்று என்ன சொல்வது என்று தெரியாமல் 'நான் இன்னும் வயசுக்கே வரவில்லை. எனக்குக் கருப்பை வளர்ச்சி இல்லை என்று டாக்டர்கள் கூறிவிட்டனர். தாம்பத்தியத்திற்கு நான் லாயக் இல்லாதவள்' என்று அவரிடம் பொய் சொன்னேன். ஆணாகப் பிறந்து இன்று இப்படி இருப்பதை என்னால் சொல்ல முடியவில்லை. அவர் மனதில் என்ன நினைத்தார் என்று தெரியவில்லை. 'நீங்கள் ஏன்

திருமணம் செய்துகொள்ளவில்லை?' என்று நான் கேட்டேன். 'இப்போதுதான் 21 வயசு ஆகின்றது. தங்கையின் திருமணம் ஆன பிறகுதான் என் திருமணம்' என்று பதில் கூறினார்.

என்னுடைய மனதில் அவரை நேசிக்க ஆரம்பித்தேன். அவருடன் சேர்ந்து படுத்துக்கொண்டு கட்டிப்பிடித்துத் தூங்க வேண்டும் என்ற ஆசையும் இருந்தது. ஆனால் நான் யார் என்று தெரிந்துவிடுமோ என்ற பயமும் இருந்ததால் நான் நேசிப்பதைக்கூட அவரிடம் சொல்ல முடியவில்லை. ஒரு நட்பாக மட்டும்தான் என்னை வெளிப்படுத்திக் கொள்ள முடிந்தது. அன்று இரவு இருவரும் தூங்கிவிட்டோம்.

காலையில் எழுந்து டிபன் ரெடி செய்து தண்ணீர் பிடித்து வந்து அவரைக் குளிக்க வைத்து அனுப்பி வைத்தேன். என் செய்கையைப் பார்த்த வீட்டுக்காரப் பாட்டி அவர் யார் என்று கேட்டார். என்னுடன் படித்தவர் என்று கூறினேன். 'என்னடா புருஷனுக்குச் சேவை செய்வதைப்போலச் செய்கிறாய். உடன் படித்தவன் என்று சொல்றே' என்றார். 'அப்படியெல்லாம் ஒன்றுமில்லை பாட்டி. என்னுடன் படித்தவர். என்னைப் பார்க்கத்தான் வந்தார்' என்றேன்.

அவர் அடிக்கடி வந்தார். ஒரு கணவனுக்கு மனைவி எவ்வாறு பணி விடைகள் செய்வாளோ அதைப்போல நானும் அவருக்குச் செய்தேன். அவர் அடிக்கடி வந்துபோவதால் நான் குடி இருந்த வீதியிலும் தண்ணீர் பிடிக்கும் குழாய்களிலும் பெண்கள் சிலர் ஆச்சரியத்துடனும் கிண்டல் செய்வதுபோலவும் என்னிடமும் மற்ற பெண்களிடமும் பேசிக் கொண்டனர். 'ரேவதி யாரு அவரு? புருஷனா? வழி அனுப்பி வச்சிட்டியா? என்ன வேலை செய்யறாரு?' என்று ஒரு பெண் சிரித்துக்கொண்டே கேட்க, நானும் 'ஆமாம் என் புருஷன்தான்' என்று கூறிக்கொண்டு தண்ணீர்க்குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு சென்றேன். 'பாருடி, நாமகூட நம்ம புருஷனுக்கு இப்படிச் சேவை செய்ய மாட்டோம். ரேவதி பாரு எப்படிப் புருஷனைக் கவனிச்சு வழி அனுப்புறா' என்று குழாயடியில் பேசிக் கொண்டனர். இந்தச் செய்தி, அவர் வந்துபோவது எல்லாம் என் அண்ணன்களுக்குத் தெரிந்துவிட்டது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. காலை 11 மணி இருக்கும். நான் கறி வறுத்து ரசம் வைத்துச் சாப்பாடு பொங்கிக்கொண்டு இருந்தேன். அவரோ டவுனுக்குச் சென்றுவிட்டு வருவதாக வெளியில் சென்றிருந்தார். அந்தச் சமயம் என் மூன்று அண்ணன்களும் என் ரூமுக்குள் வந்து கட்டிலில் அமர்ந்தனர். அக்கம் பக்கம் ரூம்களில் உள்ள காலேஜ் பசங்கள் அவரவர் ரூமில் இருந்தனர். மூன்று அண்ணன்களும் என்னைப் பார்த்து, 'யாருடா ஒருத்தன் இங்கு வந்து போறானாமே. ஊருக்குள்ள அவன் உன் புருஷன்னு சொல்லிக்கிறாங்க. நீயும் ஆம்பள. அவனும் ஆம்பள.

என்னடா புருஷன் உனக்கு?' என்று சத்தம் போட்டனர். எனக்கோ மானமே போய்விட்டது. அக்கம் பக்கம் உள்ளவர்கள் என்ன நினைப் பார்கள் என்று கஷ்டமாகவும் அவர் இப்போது வந்துவிட்டால் என்ன நடக்குமோ என்று பயமாகவும் இருந்தது.

அண்ணன்கள் மூன்று பேரும் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டனர். 'ஏன்டா புருஷன் பொண்டாட்டினு சொல்றாங்களே இவுங்க எப்படிடா ஒன்னா படுத்துக்குவாங்க' என்று ஒருவர் கேட்க, இன்னொருவர் 'அடே இது தெரியாதா? இவனப்போல இருக்கிற ஒம்போதுங்களுக்கு ஆண் உறுப்பை வாயில் வாங்கித் தண்ணீரைக் குடித்தால் தொண்டையில் உள்ள மயிருக்கு இதமா இருக்குமாம். ஒம்போதுங்களுக்குத் தொண்டையில் மொடமசுரு இருக்குடா. அதாண்டா இவன் செய்வான்' என்று சொல்ல அவரும் வந்துவிட்டார். அவர் வண்டிச் சத்தம் கேட்டு வெளியில் சென்று என் பக்கத்து ரூமில் உள்ள காலேஜ் பசங்களோடு அமர வைத்துவிட்டு என் ரூமுக்கு வந்துவிட்டேன். அவர் வந்தது என் அண்ணன்களுக்குத் தெரியாது. அவரையும் அடையாளம் தெரியாது.

மீண்டும் என் அண்ணன்களின் சொற்பொழிவு ஆரம்பமானது. 'பாருடா புருஷனுக்குக் கறி வறுத்து வச்சிருக்கான்' என்று பாத்திரங் களைத் திறந்து பார்த்துக்கொண்டு ஒரு அண்ணன் சொல்ல, 'கறி காய் ஆக்கிப்போட்டாத்தானே அவன் ஊம்பக் குடுப்பான்' என்று மற்றொரு அண்ணன் பதில் சொன்னான். 'பொட்டத் தாயோலி நீயே ஆம்பள. போனாப் போவுதுன்னு புடவை கட்டிக்கிட்டு இருந்துட்டுப்போறான்னு விட்டதுக்கு இப்போப் புருஷன் வேற வேணுமா உனக்கு. அவன் இங்க வந்துபோறது தெரிஞ்சா அவனோட குடலை உருவி மாலை போட்டுக் கொள்வோம். உன்னையும் கொலை செய்துவிடுவோம்' என்று இன்னும் எழுத முடியாத அளவில் கெட்ட கெட்ட வார்த்தைகளால் என்னையும் அவரையும் திட்டிக்கொண்டே இருந்தனர்.

என்னால் கோபமும் ஆத்திரமும் தாங்க முடியாத நிலையில் 'என்னைத் தேடி ஒரு ஆம்பளை தான் வர்றான், ஆமாம் அவன்தான் என் புருஷன். நான் பலபேரோட இருக்கல. நானும் ஒரு பொம்பளை தான். ஒரு பொம்பளையா இருக்கறவ என்ன செய்வாளோ அதத் தான் நானும் செய்யறேன். எனக்கும் உணர்ச்சி இருக்கு. நீங்க என்ன சொன்னீங்க? ஆம்பள ஆம்பள என்ன செய்வாங்களா? உங்க பொண்டாட்டிகூட நீங்க என்ன செய்வீங்களோ அதத்தான் நானும் செய்யறேன். போதுமா? இப்பப் புரிஞ்சுதா உங்களுக்கு? இங்க என்ன வேலை உங்களுக்கு? உங்க வீடுதேடி வந்தனா? உங்க பொண்டாட்டி யோட எப்படி இருக்கீங்கன்னு கேட்டனா? எப்படிப் படுக்கிறீர்கள்

என்று பார்த்தனா? என்னைப் பற்றி இப்படிக் கேவலமாப் பேசுறீங் களே, உங்களுக்கு வெட்கமா இல்லையா?' என்று புயலாக எழும்பிக் கேட்டேன்.

'எங்களுக்கு எதுக்கடா வெட்கம்? நாங்க ஆம்பளடா. பொம்பளையத் தான் கல்யாணம் செஞ்சு குடும்பம் நடத்துறோம். உன்னாட்டம் குஞ்ச அறுத்துப்புட்டுப் புடவை கட்டிக்கிட்டுப் பொம்பளன்னு சொன்னா எப்படிடா? எங்களோட மானம் மரியாதையை விக்க இந்த வேலை செய்யறியாடா?' என்று என்னை அடிக்க வந்தான் ஒரு அண்ணன். வீட்டு ஓனர் பாட்டி ஓடிவந்து 'இங்க என் வீட்ல யாரும் சண்டை போட்டுக்கக் கூடாது. வெளியே போங்க' என்று அண்ணன்களிடம் வாக்குவாதம் செய்ய அண்ணன்களும் 'நாளைக்கு அவன் இங்கு வந்துபோறதப் பாத்தோம், அவனத் தொலைத்துக் கட்டிப்புடுவோம்' என்று கூறிவிட்டு வெளியில் சென்றுவிட்டனர்.

வேதனைப்பட்டு வெட்கப்பட்டுத் தலைகுனிவுடன் அவரை ரூமுக்கு அழைத்தேன். அவரும் வந்து கட்டிலில் அமர்ந்தார். சிறிதுநேரம் அவரும் நானும் பேசிக்கொள்ளவில்லை. சற்றுநேரம் கழித்து நான்தான் பேசத் தொடங்கினேன். 'இப்போது உங்களுக்குப் புரிந்திருக்கும் நான் யார் என்று. என்னை நான் பெண்ணாகத்தான் நினைக்கிறேன். அதான் உங்களிடம் சொல்ல முடியவில்லை. என்னால் நீங்கள் கஷ்டப்பட வேண்டாம். நீங்கள் இனி இங்கு வரவேண்டாம்' என்று கூறினேன். எந்தப் பதிலும் சொல்லாத அவர் சிறிதுநேரம் கழித்துப் 'போகிறேன்' என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார். என்னால் போக வேண்டாம் என்று சொல்லவோ, திரும்பி வரவேண்டாம் என்று சொல்லவோ, சாப்பிட்டுப் போங்க என்று சொல்லவோ முடியாத நிலையில் பிரமை பிடித்தவள் போல் இருந்துவிட்டேன்.

ஈட்டியை இதயத்தில் குத்தியதைப் போன்ற ஓர் உணர்வு. நெஞ்சுக்குள் உயிர்விடும் பறவை துடிப்பது போன்ற ஓர் துடிப்பு. மேற்கொண்டு நான் இந்த ஊரில் இருக்க வேண்டுமா என்ற நினைப்பு என்னை நீண்ட யோசனையில் தள்ளியது. அன்று இரவுவரை ஆக்கி வைத்த சாப்பாட்டைக்கூட மறந்துவிட்டு யோசனை செய்தேன். அண்ணன்கள் திட்டியது மீண்டும் மீண்டும் வலியைக் கொடுத்தது. அவர்கள் கூறிய தொண்டை மயிர் பற்றிய செய்தி புதுமையாக இருந்தது. எப்படித்தான் கற்பனை செய்து பேசினார்களோ. அவர்கள் கூறியதைப் போல எனக்கு அப்படி ஒன்றும் இல்லையே! ஏன் எதற்கு இப்படிக் கூறினார்கள் என்று தெரியாமல் சிக்கலாகிக் கிடந்தது என் மனசு. சமுதாயம் கேலி செய்தால் குடும்பத்தில் முறையிடலாம். குடும்பமே கேலி செய்தால் யாரிடம் சொல்வது? என்னைப்

போன்றவர்கள் சிலர் அம்மா, அப்பா, குடும்பம் என்று போகாமலேயே இருப்பது இதனால் தானா? கடவுள் என்னை ஒரு ஆணாகவோ, பெண்ணாகவோ படைத்திருக்கக்கூடாதா? என்னை இப்படிப் படைத்து வேதனைக்குள்ளாக்கி ஏன் வேடிக்கை பார்க்க வேண்டும்? நான் செய்த தவறுதான் என்ன என்று மனதில் நினைத்துக்கொண்டு ஆத்திரம் தாங்காமல் என் தலையைச் சுவரில் இடித்துக்கொண்டு அழுதேன்.

பணம் இருந்தால்தான் நம் குடும்பம் மதிக்கும். நாகரிக உடைகளும் நகைகளும் போட்டால்தான் இந்தச் சமுதாயம் மதிக்கும். நான் ஏழையாக இஜராவாக இருந்தால் இப்படித்தான் கேவலமும் தலைக் குனிவும் ஆகும். இனி நமக்குக் கௌரவம் என்று எங்கு செல்வது? டெல்லிக்கா பம்பாய்க்கா என்று யோசனை செய்தேன். பம்பாயில் காமாட்டிபுரத்தில் இருந்தபோது பெங்களூரில் இருந்து வந்த ஒருவர் சொன்னது ஞாபகம் வந்தது. பெங்களூரில் இஜராக்கள் அமாம் (குளியல் அறை) நடத்தி வருவதாக. நாம் ஏன் அங்குச் செல்லக்கூடாது என முடிவு செய்தேன். அன்று இரவு அப்படியே தூங்கிவிட்டு மறுநாள் அம்மா அப்பா வீட்டில் என் சாமான்களைப் போட்டேன். பிழைப்பு தேடிச் செல்கிறேன். இங்கு எனக்கு மரியாதை இல்லை என்று கூறிவிட்டுப் பெங்களூர் புறப்பட்டேன்.

# 16

பெங்களூர் மெஜஸ்டிக் பஸ் ஸ்டாண்டில் இறங்கி ஒரு ஆட்டோ டிரைவரிடம் 'அமாம் எங்க இருக்கு? அங்க கொண்டுவிடுவீர்களா?' என்று தமிழில் கேட்டேன். அவனும் தெரியும் என்று கூறி அழைத்துச் சென்றான். ஆட்டோவில் 50 ரூபாய் மீட்டர் ஓடியிருந்தது. குறிப்பிட்ட ஒரு இடத்தில் இறக்கிவிட்டான். ஆட்டோவுக்குள்ளேயே இருந்து பார்த்தபோது என்னைப் போன்றவர்கள் சிலர் நின்றுகொண்டும் உட்கார்ந்துகொண்டும் தலைவாரிக்கொண்டும் இருந்தனர். அவர் களைப் பார்த்தவுடன் எனக்கு நிம்மதி ஆனது. ஆட்டோ மீட்டரைக் கட் செய்துவிட்டு மெயின்ரோட்டில் இருந்து சந்துரோட்டில் சென்றேன். நான் பம்பாயில் இருக்கும்போது பார்த்த அந்த அம்மாவும் இருந்தார். அவரைப் பார்த்தவுடன் 'பாவ்படுத்தி அம்மா' என்றேன். 'ஜிய்யோ பேட்டா. எங்கிருந்தடி வர்றே?' என்று கேட்டார். 'எங்க ஊர்ல இருந்து தான் வர்றேன்' என்றேன். 'ஏன்டி நீ ரேவதிதானே? உன்னைப் பயளகள்ளி காமாட்டிப்புரத்துல பாத்தேன். என்னத் தெரியுதா' என்று கேட்டார். 'தெரியுதும்மா' என்றேன். 'அடி உன் சேலா மாயா இங்கதான் இருக்காடி' என்று என்னிடம் சொல்லி 'மாயா, மாயா' என்று அழைத்தார்.

மாயா வீட்டுக்குள் இருந்து என்னைப் பார்த்தவுடன் ஓடி வந்து 'வாங்கம்மா நல்லா இருக்கீங்களா?' என்று கேட்டாள். 'நல்லா இருக் கண்டி, நீ எப்படி இருக்கே?' என்று கேட்டேன். 'எனக்கென்னம்மா, நான் நல்லா இருக்கேன். இப்போ இங்க வந்து இந்த அம்மா பேருல மகளா ஆயிட்டேன். அந்தப் பம்பாய் வீட்ல சம்பாரிச்சுக் கொடுத்து ஒன்னுமில்லாம ஓடிவந்து இங்க அம்மா பேருல சேலா ஆனபிறகு நல்லா இருக்கேன்' என்றாள். 'கூட்டிப்போயி உள்ள உக்கார வச்சுப் பேசுடி. காபி டிபன் சாப்பிட ஏதாவது வாங்கிக் கொடு' என்று மாயாவின் குரு சொல்ல மாயாவும் என்னை வீட்டுக்குள் அழைத்துச் சென்றாள்.

மாயா தற்போது என் சேலா அல்ல. முறைப்படி பார்த்தால் இப்போது எனக்குக் குருபாய் முறை ஆகிறாள். மாயாவிடம் நான் என் நிலைமை களை எடுத்துக் கூறினேன். இங்கு இருந்துகொண்டு நாலுகாசு சம்பாதிச்சு நிம்மதியாக இருக்க வேண்டும் என்று கூறினேன். மாயாவோ 'இங்கியா வேண்டாம்மா. இங்க தினமும் பொறுக்கிப் பசங்க வருவாங்க. கத்தியக் காட்டி மிரட்டுவாங்க. தூங்கக்கூட முடியாது. கதவத் தட்டுவாங்க. பெரிய பெரிய கல்ல எடுத்துக் கதவுமேல போடுவாங்க. இந்த மாதிரி பிரச்சினைகளை உங்களால சமாளித்துக்கொண்டு இருக்க முடியாது. நீங்க உங்க ஊருக்கே திரும்பிப் போயிடுங்க. நான் வேணுமுன்னா மாதம் 2000 ரூபாய் உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன்' என்றாள். மாயா சொன்னபோது எனக்குப் பயமாகத்தான் இருந்தது. ஆனாலும் இங்கு மாயாவின் குரு, அவருடைய குருபாய் (மாயாவின் காலா குரு), மாயாவின் குருபாய்கள் என ஏழு பேர் இருக்கின்றனர். அவர்களும் தானே மாயா சொன்னதுபோலப் பல பிரச்சினைகளைச் சமாளித்துக் கொண்டு இருக்கின்றனர். நாமும் சமாளித்துக்கொண்டுதான் இருக்க வேண்டும் என்று மனதில் நினைத்துக்கொண்டேன். ஆனாலும் மாயா என்னை ஊருக்குப்போ என்று ஏன் சொன்னாள்? அவள் இங்கு பொறுக்கிப் பசங்களுடன் பிரச்சினைகளுடன் இல்லையா? நான் ஏன் இங்கு இருக்கக்கூடாது? 'இங்கு கொஞ்சநாள் இருந்து பார்க்கிறேன். பிடிக்கவில்லை என்றால் ஊருக்கே போய்விடுகிறேன்' என்று மாயா விடம் கூறி விட்டேன்.

அமாம்னா எப்படி இருக்கும் என்று பார்க்க ஆசையாக இருந்தது. அமாம்னா இதுதானே என்று கேட்டேன். இது சாமி வீடு என்று மாயா கூற நான்கு புறச் சுவர்களிலும் ஒரு புறம் இந்து சாமி போட்டோக்களும், ஒரு புறம் முஸ்லிம் தர்கா போட்டோக்களும் ஒரு புறம் கிறிஸ்டியன் சாமி போட்டோக்களும் இருந்தன. அந்த வீட்டை ஒட்டியே மறுபக்கம் தனிக் கதவுடன் அமாம் இருந்தது. மாயாவைக் கூட்டிச் சென்று காட்டச் சொன்னேன். மாயா என்னை அழைத்துச் சென்று காட்டினாள்.

பெரிய இரும்பு டேங் சுற்றிலும் சிமிட்டியால் பூசப்பட்டிருந்தது. அதன் அடியில் விறகுபோட்டுத் தண்ணீர் காய்ச்சும் வசதி செய்யப் பட்டிருந்தது. அதன் பக்கத்தில் மற்றொரு சிமிட்டி டேங். அதில் குளிர்ந்த நீர் இருந்தது. டேங்கைத் தொடர்ந்து ஆறேழு குளிக்கும் அறைகளும் கடைசியாகக் கழிப்பறைகளும் இருந்தன. மாயா இவற்றைக் காட்டி இங்கு குளிக்கும் வாடிக்கையாளர்களிடம் சுடுதண்ணீர் ஒரு பக்கட் ஐந்து ரூபாயும், குளிர்ந்த நீர் ஒரு பக்கட் இரண்டு ரூபாயும், சோப்புத் துண்டு சிறியதாக இருந்தால் அதைக் காட்டி ஒரு ரூபாயும் வசூல் செய்கிறோம் என்று கூறினாள். கழிப்பிடம் செல்ல ஒரு ரூபாய் என்று

கூறிவிட்டு விலைப் பட்டியல் எழுதப்பட்டுள்ள கரும்பலகையையும் காண்பித்தாள். அப்போதுதான் அமாம் என்றால் என்னவென்று தெரிந்தது.

'அமாமில் உள்ள ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலை செய்ய வேண்டும். அமாம் சுத்தம் செய்வது, கிராக்கிகளுக்குத் தண்ணீர் கொடுப்பது, சாமி போட்டோக்களுக்குப் பூப்போட்டுப் பூஜை செய்வது, சமையல் செய்வது என எல்லாரும் கலந்து வேலைகள் செய்வோம்' என்று மாயா கூறிவிட்டு 'வாங்கம்மா சாப்பிடலாம்' என்று சாமி ரூமுக்குக் கூட்டிச் சென்றாள். தோசை சாப்பிட்டுக்கொண்டே மாயாவைப் பார்த்து எப்போது இங்கு சேலா ஆனாய் என்று கேட்டேன். தற்போதுதான் சில மாதங்கள் ஆகின்றன என்றாள். 'சேலா முறை செய்ய (ரீத் போட) ஐதராபாத் வீடு. அங்கதான் இந்த வீட்டு நாயக் இருக்கிறார். அங்குதான் சென்று ரீத் போட வேண்டும். அங்கு சென்று தான் நானும் என் குருவும் ரீத் போட்டுக்கொண்டு வந்தோம்.' மாயாவின் குரு, காலா குரு எல்லாரும் மும்பையில் நான் இருந்த வீட்டில் உள்ள பரிவாரில் இருந்து வந்தவர்கள். தற்போது ஐதராபாத் வீட்டில் சேலா ஆகி இங்குத் தனிப் பரிவாராக இருப்பது புரிந்தது.

மாலை ஏழு மணி ஆயிற்று. மாயா குளித்து அழகாக மேக்கப் போட்டு புடவை கட்டி பேக்கைத் தோளில் மாட்டிக்கொண்டு எங்கோ புறப்பட்டாள். 'எங்க மாயா புறப்பட்டுவிட்ட?' என்று கேட்டேன். 'போய் வந்து சொல்கிறேன்' என்று கூறிச் சென்றுவிட்டாள். மாயாவின் குரு என்னிடம் மாயா வெளியில் சென்று தொழில் செய்யப் போகிறாள் என்றார். 'வெளியில்னா எப்படிம்மா?' என்று நான் கேட்க, 'பெங்களூர் மிகப் பெரியது. எங்கேயாவது ரோடுகளில் நின்று வாடிக்கையாளர்கள் கிடைத்தால் லாட்ஜ்களிலோ, கிராக்கி கூட்டிச் செல்லும் இடங்களிலோ சென்று தொழில் செய்துவிட்டுப் பணம் சம்பாதிப்பாள்' என்றார். பிறகு என்னிடம் குடும்பத்தைப் பற்றி விசாரிக்க நானும் பம்பாயில் இருந்து வந்தது, வீட்டில் நடந்த விஷயம் எல்லாம் கூறினேன்.

'வெளியில் தொழில் செய்யப் போகும்போது பிரச்னை ஏதும் இருக்காதா?' என்று மாயா குருவிடம் கேட்டேன். 'பிரச்னை நம்மைப் போன்றவர்களுக்கு எங்கதான் இல்லை? எல்லாப் பக்கமும் பிரச்னைகள் தான். வெளியில் தொழில் செய்யப் போனால் பொறுக்கிகிட்ட போராடணும். போலீசுக்கு லஞ்சம் கொடுக்கணும். இப்படிப் பயந்து பயந்துதான் மாயா போவாள். சில சமயம் பொறுக்கிப் பசங்க வந்துட்டாங்கன்னு ஓடி வந்துடுவா. சில சமயம் போலீஸ் விரட்டு றாங்கன்னு ஓடிவந்துடுவா. கிராக்கி அம்புட்டா ஆச்சு. இல்லாட்டிச்

சும்மா வீடு திரும்புவா. என்ன செய்யறது? இங்க குளிக்க வர்றவங்க தர்ற வருமானம் எல்லாரும் சாப்பிடவும் அமாம் வாடகை கட்டவும் தான் சரியா இருக்கு. மாயா பொம்பளை மாதிரி இருக்கா. வெளியில பொம்பளன்னு தொழில் செய்துக்கிட்டு வருவா. கொஞ்சம் பொம்பள மாதிரி இல்லாதவங்க வெளியில தொழில் செய்ய ஒரு பயல் சீண்ட மாட்டான். இப்போ மாயாதான் வெளியில போறாள். மத்த சேலா நாத்திங்க அமாமுல தண்ணீர் எடுத்து ஊத்திக்கிட்டுத் தண்ணீர் ஊத்திக்க வர்றவங்க கிட்ட எண்ண மசாஜ், சுளுக்கு எடுத்துவிடறது என செஞ்சா டிப்ஸ் கொடுப்பாங்க. அவுங்க அத வச்சுக்கிட்டு பவுடரோ சுனோவோ துணிமணியோ வாங்கிக் கொள்வாங்க. வருமானம் சில சமயம் சரியா இல்லாட்டிக் கடைகடையாப் பிச்சை எடுத்துக்கிட்டு வருவாங்க. என்ன பண்றது, நம்பள மாதிரி இருக்கறவங்க காலங்காலமாப் பிச்சை எடுத்துக்கிட்டுத் தொழில் பண்ணிக்கிட்டுதான இருக்க வேண்டியதா இருக்கு.'

'அமாம் இங்க எவ்வளவு நாளாம்மா இருக்கு?' என்று கேட்டேன். 'நான் இங்க வந்து பத்து வருஷம் ஆச்சு. அதற்கு முன்னாடி 20 வருஷமா வேற ஒருத்தி நம்ம வீட்டுப் பரிவார் இல்ல, வேற வீட்டுச் சேலா நாத்தி இத வச்சு நடத்திக்கிட்டு இருந்தா. நான் இங்க கிராக்கிகளுக்குத் தண்ணி ஊத்திக்கிட்டு வேலை வெட்டி செஞ்சுக்கிட்டு இருந்தேன். அந்த அம்மா இப்போ இல்லை. செத்துப்போயிட்டாங்க. இப்போ நான் இந்த அமாம நடத்திக்கிட்டுக் காலத்தைக் கடத்திட்டு இருக்கேன். உன்னோட சேலா என் பேர்ல சேலா ஆயிட்டா. நீயும் இந்த வீட்ல சேலா ஆகிறாயா?' என்று மாயா குரு கேட்க, 'இல்லீம்மா, நான் சேலா ஆகல. எத்தன குருவை மாத்திக் கொள்வது? நான் பாம்பே சேலா வாகவே இருக்கேன். இங்க ஏதாவது வேல வெட்டி செஞ்சுக்கிட்டு இருக்கேன்' என்றேன்.

'நீயும் பொம்பள மாதிரி இருக்க. மாயா கூட நீயும் வெளியில தொழில் செய்யப் போகலாமே' என்று மாயா குரு கேட்க, 'மாயா என்னைக் கூட்டிச் செல்வாளா?' என்று திருப்பிக் கேட்டேன். 'அவள் வரட்டும் நான் சொல்றேன். ஒரு ரெண்டு நாள் ரோடு காட்டித் திரும்பி இங்க வர்றதுக்கு வழிகாட்டிக் கொடுத்தால் போதும். அதுக்கப்புறம் உனக்கே தெரிஞ்சுபோகும் எப்படிக் கிராக்கி கிட்டப் பேசறது, ஆட்டோ புடுச்சு எப்படி இங்க வர்றதுன்னு' என்று கூறிவிட்டு 'ஏண்டி மாயாவை நான் சேலா பண்ணிக்கிட்டேன். இப்போ மாயா உனக்குக் குருபாயா இருக்காளேன்னு வருத்தமா இருக்கா?' என்று கேட்டார். 'அப்படி எல்லாம் ஒன்றும் இல்லீங்கம்மா. இது என்ன புதுசா? இஜராக்கள்ல நடக்குறதுதானே' என்று கூறினேன். 'எம்பேர்ல உனக்குச் சேலா ஆக

இஷ்டம் இல்லாட்டி என் குருபாய்மேல சேலா ஆகிறாயா? அவளும் என் தங்கைதான். உன் சேலா எம்மேல சேலா ஆகி இருக்காளே அவளுக்குக் கீழே நான் ஏன் சேலா ஆகணும்னு உனக்கு வருத்தமா கஷ்டமா இருந்தால் என்னோட குருபாய்மேல சேலா ஆகிக்கொள்' என்றார். 'இல்லீங்கம்மா, நான் இங்கு விருந்தாளி போலவே தங்கிக் கொள்கிறேன். சேலா ஆக இஷ்டமில்லை எனக்கு. நான் சேலா ஆகாட்டியும் நீங்களும் உங்க குருபாயும் எனக்குக் குரு தானே' என்று கூறிவிட்டேன்.

சாமிப் போட்டோக்களைத் துடைத்துச் சந்தனம் குங்குமம் வைத்துப் பூ பழம் போட்டும், மற்ற முஸ்லிம் போட்டோ, கிறிஸ்துவ சாமி போட்டோக்களுக்கும் அதன் முறைப்படி பூப் போட்டும் வேலை செய்து கொண்டு இருந்தேன். அமாம் கழுவிவிடுவதும் தண்ணீர் கொடுப்பதும் என ஒருமாத காலம் அமாமிலேயே இருந்தேன். இரவு நேரத்தில் கதவை யாராவது தட்டினாலோ கல்லைத் தூக்கிப் போட்டாலோ மாயா குரு பேச வேண்டாம் என்று கூறுவார். வாடிக்கையாகக் கதவைத் தட்டுவதும் கல் எறிவதும் இருந்தன. ஆரம்பத்தில் கதவுமீது கல் விழுந்தால் குலை நடுங்கிப் போகும் எனக்கு. பழக்கமான பிறகு பயம் இல்லாமல் போயிற்று. ஆனாலும்கூட அக்கம்பக்கம் உள்ளவர்களுக்குத் தொந்தரவானால் நம்மைத் திட்டுவாங்களோ என்ற பயமும் இந்தப் பழைய வீட்டின் ஓட்டை உடைத்துக் கல்லோ பொறுக்கியோ வந்துவிடுவார்களோ என்ற பயமும் இருந்து கொண்டுதான் இருந்தது. கல் எறிந்து ஓடு உடைந்தும் உள்ளது. ஓட்டையில் மழைத் தண்ணீர் வராமல் இருக்க ஷீட் போட்டு படுதா போட்டு தார் ஊற்றி ஒட்ட வைத்தும் இருந்தது. பழைய காலத்து வீடு. சுவர்கள் மண்ணால் கட்டப் பட்டவை. ஏதோ சத்தியத்தில்தான் நிற்கிறது என்று சொல்லலாம். அதைப் பழுதுபார்க்கும் வசதியும் இல்லை. இங்கு இருப்பவர்களின் வாழ்க்கை கம்பிமீது நடப்பதுபோல் இருந்தது.

ஒருநாள் இரவு அமாம்களைப் பூட்டிவிட்டு வீட்டுக்குள் மாயாவும் மாயா குருபாய்களும் சாப்பிட்டுக்கொண்டு இருந்தோம். இரண்டு குருக்களும் ஊருக்குச் சென்றிருந்தனர். மாயாவுக்கும் எனக்கும் ஏதோ ஒரு சிறிய விஷயத்திற்காகச் சண்டை வந்துவிட்டது. என்னை வாடா போடா என்று திட்டினாள். 'என்னை வாடா போடா என்கிறாயே, பம்பாயில் நீ என் சேலா என்பதை மறந்துவிட்டாயா' என்று கேட்டேன். 'பம்பாய் கதை பம்பாயோட போச்சு. இப்போ இது ஹைதராபாத் வீடு. நானே உனக்குமேல் பெரியவளாக இருக்கிறேன். உன் சட்டம் எல்லாம் பம்பாயில் வைத்துக் கொள். நீ இங்கு விருந்தாளி. ஓசிச்சோறு திங்க வந்து இருக்கே. பொழைக்க வழி தேடி வந்திருக்க. நீ இங்க

பொழைக்கனுமுன்னா எங்க வீட்ல சேலா ஆகிக்கிட்டு இரு. இல்லாட்டி விருந்தாளியைப்போல நாலு நாள் இருந்துவிட்டு உங்க குரு உங்க வீட்டத் தேடிப்போ' என்று சண்டை போட்டாள்.

வளர்த்த கடா மாருல முட்டும் என்பதுபோல உயிரா நினைத்த என்னோட சேலா இப்போது இங்க சேலா ஆயிட்டு என்னையே கேவலப்படுத்திப் பேசறா. அவளோட குருபாய்ங்ககூடத் தட்டிக் கேட்கல. நாம் இங்க பொழைக்கணும். என்ன பண்றது, நாலு காசு இல்லீன்னா நாய்கூட மதிக்காத இந்த உலகத்துல இஜராக்களின் வீட்டு சேலா நாத்தியா இருந்தாத்தான் மதிப்புப்போல. அவ சொல்றதும் சரிதான். என்னோட குரு என்னை நல்லாப் பாத்துக்கிட்டுக் காசு பணம் எனக்குக் கொடுத்துக்கிட்டு இருந்தா நான் ஏன் இங்க வரோணும்? இப்ப நமக்குத் தேவை சம்பாதிக்க இருக்க இடமும், பிரியமா இருக்கக் குருபாய்களும், அன்புகாட்டக் குருவும் தான் வேணும். இனிமே பம்பாய்க்குப் போற எண்ணம் இல்லே. அதனால இங்கேயே இந்த வீட்டிலேயே சேலா ஆகிடவேண்டியதுதான் என்று நினைத்துக் கொண்டு மன வருத்தத்துடன் மாயா திட்டியதை நினைத்துக்கொண்டு தூங்கினேன்.

நான் பெங்களூருக்குப் புதுசு. அதுவும் இங்க இருக்கறவங்க எனக்கு முன்னாடி வந்து அமாம்ல எல்லா வேலைகளும் செஞ்சவங்க. இப்போ நான் ஜூனியர்தான். அதனாலும் சும்மா இருக்க இஷ்டம் இல்லாததாலும் அமாம் கூட்டிச் சுத்தம் செய்வதும், தண்ணீர்க் காய்ச்சிக் கிராக்கிகளுக்கு வியாபாரம் செய்யறதும், காலை மாலை இரண்டு தடவை சாமிகளுக்குச் செய்ய வேண்டிய பூஜைகளையும், வெள்ளிக்கிழமை வந்துவிட்டால் சாமிப் போட்டோவைத் துடைத்துப் பூப்போட்டுச் சிறப்புப் பூஜை செய்வதும், தண்ணீர் வராவிட்டால் போரில் அடித்து நிரப்புவதும், பெரியவர்களுக்குத் தேவையான பொருள்கள் வாங்கக் கடைத்தெருவுக்குச் செல்வதும் என என் குடும்பமாக நினைத்து வேலைகளைச் சளைக்காமல் செய்துகொண்டு இருந்தேன்.

கடைத் தெருவுக்குத் தெரிந்தவர்கள் கூட்டிச்சென்று எந்த மளிகைக் கடையில் சமையலுக்குத் தேவையான பொருள் வாங்க வேண்டும், எந்தக் காய்கறிக் கடைக்குச் செல்ல வேண்டும் என்று சொல்லிக் கொடுத்தனர். நான் இருந்த அமாம் ஒரு சிறிய டவுன் பெங்களூர் சிட்டிக்குள். மெயின் ரோடு சந்தின் ஆரம்பத்திலேயே அமாம் உள்ளது. அந்த வழியாகச் செல்லும் வாகனம், ஊர்வலம் என்று செல்பவர்கள் அமாமைப் பார்க்கத் தவறமாட்டார்கள். சில வாண்டுப் பசங்கள் ஓ...ஓ... எனச் சத்தம் போட்டுக் கொண்டும் சினிமாப் பாட்டைப்

பாடிக் கிண்டல் செய்துகொண்டும் செல்வது வேடிக்கையாக இருக்கும். பெங்களூரில் சுற்றுலாத் தலம் எனக் கப்பன் பார்க், லால்பாக், கோயில்கள், விதான் சவ்தா, மியூசியம் எனப் பல இருக்கின்றன. எங்களைப்போல் உள்ளவர்கள் இருக்கும் இடத்தைக்கூட ஆச்சரிய மாகவும், ஆபத்தான இடம் என்றும் பார்ப்பார்கள். இப்படியும் சில ஜென்மங்கள் என்று தெரியாத நண்பர்களுக்கும் கணவன்மார் களுக்கும் மனைவிமார்களுக்கும் ரோட்டில் நடந்து செல்பவர்களுக்கும் எங்களை அறிமுகப்படுத்தி வேடிக்கைப் பொருளாகப் பார்த்துச் செல்வதும் வாடிக்கையாக இருந்தது.

காய்கறி மார்க்கட் உள்சென்றால் தக்காளி, கெட்டுப்போன காய்கறிகள் பின்னால் விழும். சில சமயம் முதுகிலும் தலையிலும்கூட விழும். திரும்பிப் பார்த்தால் எல்லாக் கடைக்காரர்களும் ஒன்றும் தெரியாதவர்கள் போல, அவரவர் வியாபாரத்தைக் கவனிப்பதுபோலக் காய்கறிகளை அடுக்கி வைப்பதுபோல இருப்பார்கள். யார் எறிந்தனர் என்றுகூடத் தெரியாது. அவர்களைத் திட்டவும் பயமாக இருக்கும். குறிப்பிட்டு யாரைத் திட்டுவது என்று நினைக்கும்போது சிலர் சிரிப்பதைப் பார்த்து அவன்தான் தக்காளியை என்மீது வீசி இருப்பான் என்று அவனை நோக்கி, 'ஏன்டா என்னப் பாத்தா உனக்குக் குப்பைத் தொட்டி மாதிரி இருக்கா? இஜராக்கள்னா அவ்வளவு கேவலமாப் போயிட்டோமா? நான் சும்மா காய்கறி வாங்க வந்தவளா? காசு கொடுக்கல? மத்தவங்க மாதிரி துணிபோட்டு மான மரியாதையா வரல? இப்ப நான் என்ன செஞ்சுபுட்டேன்னு என்மீது தக்காளியைப் போட்ட? அவுத்துப் போட்டுக்கிட்டுத் திரியறனா? இல்ல உங்கிட்ட வந்து காசு பணம் கேட்டனா? உன்னக் கூப்பிட்டனா? எதுக்காக என்மீது தக்காளியை வீசுன?' என்று கேட்டால், 'ஏய் என்ன, யாரு போட்டாங்களோ அவுங்களக் கேளு. யாருகிட்டக் கேட்கற? உங்கம்மா மார்க்கட்டுக்குள்ள வராம பண்ணிடுவேன்' என்று என்னைத் திருப்பித் திட்டுவார்கள்.

'பின்னே என்னைப் பார்த்து ஏன் சிரிச்சே?' என்று கேட்டால் 'உன்னைப் பார்த்து எவன் சிரிச்சான்? நாங்க இங்க என்னமோ பேசிக்கிட்டுச் சிரிச்சோம். வந்தமா காய் வாங்கினமா போய்கிட்டே இரு' என்று கடுமையாகக் கூறிவிடுவார்கள். 'யார் போட்டாங்களோ அவன் நாசமாப் போக, அவன் வீட்ல என்னை மாதிரி பொட்ட பொறக்க' என்று பொதுப்படையாகத் திட்டிவிட்டு, மாமூல் கடைக்குச் சென்று கடைக்காரரிடம் நடந்ததைச் சொல்வேன். மாமூல் கடைக்காரரோ,'அவுங்க கிடக்கிறாங்கம்மா பிள்ளத் தாயோலிங்க. தின்னுபுட்டுக் கொழுப்பு எடுத்து அலையுறானுக. நம்ப எல்லாம்

ரொம்ப வருஷமா உங்களமாதிரி இருக்கறவங்களப் பாக்குறோம். அன்பாப் பேசறோம். அம்மாங்கிற வார்த்தை தவர்றது இல்லை. நீங்க புதுசாம்மா?'

'ஆமாங்க.'

'எந்த ஊருமா?'

'தமிழ்நாடுங்க.'

'தமிழ்நாட்ல எங்க? சென்னையா?'

'இல்லிங்க. நாமக்கல்.'

'உங்க ஆளுங்க ரெகுலரா வர்றவங்க இன்னிக்கு வரலியா?'

'வல்லீங்க.'

'அதான். புதுசா இருக்க இல்லியா, அதனாலதான் இப்படித் தக்காளியை மேல போட்டுக் கேலி பண்றாங்க. பழைய ஆளுங்க வந்தா பயந்துக்குவானுங்க. அவுங்களும் சரியில்ல. வாய்க்கு வந்தமாதிரி பேசுவாங்க. காதுல கேட்க முடியாது. அந்த மாதிரியான வார்த்தை பேசுவாங்க. அவுங்க அப்படிப் பேசியும் இவுங்க இப்படிச் செய்யறாங்க. போவுது விடுங்க. கடவுள் ஒருத்தன் இருக்கான். என்னா வேணும் இன்னிக்கு?'

'ஒரு கிலோ வெங்காயம், கால் கிலோ தக்காளி. முருங்கக் காய் எவ்வளவு?'

'ஒரு காய் 2 ரூபாய்மா.'

'ரெண்டு ரூபாயா? எங்க ஊர்ல ஒரு கத்த ஆறு ஏழு காய்கள் இருக்கும்... ஒரு ரூபாய்க்குச் சீப்பட்டுக் கெடக்கும். நீங்க என்ன ஒரு காய் ரெண்டு ரூபாய்ங்கிறீங்க?'

'கிராமத்துல விளையற இடத்துல நீங்க சொன்ன மாதிரி இருக்கலாம். இது பெங்களூரும்மா. நானே ஒன்னே முக்கால் ரூபாய்க்கு வாங்கியாந்தேன். நாலணா லாபம் வச்சுக் குடுக்கிறேன்.'

' சரி சரி. ஒரு அஞ்சு காய் கொடுங்க' என்று வாங்கிக்கொண்டு இருக்கும்போது, 'ஏம்மா நீங்க ஆப்ரேஷன் எல்லாம் பண்ணிட்டீங்களா? உங்க (மார்பைப் பார்த்துக் கொண்டு) அதெல்லாம் ஒரிஜினலா?' என்று மாமூல் கடைக்காரர் கேட்க 'அதெல்லாம் உங்களுக்கெதுக்கு? உங்க வேலையைப் பாருங்க' என்று முகத்தைச் சுளித்தேன். இவனும் மற்றவங்களைப் போலத்தான். என்னவோ நல்லவன் மாதிரி பேசி இப்போ இப்படிக் கேக்கிறான். ச்சீ, இந்த உலகத்துல ஏன்தான் இஜராவாகப் பொறந்தோம்னு தெரியல என்று நினைத்துக்கொண்டு அமாமுக்குக் காய்கறிகளுடன் சென்றேன்.

சூரியனைப் பார்த்து நாய் குலைச்சா நாய்க்குத்தான் வாய் வலிக்கும். ஆகவே மார்க்கட்ல நடந்த விஷயத்தை அமாமில் பெரியவங்கவிட்டச் சொல்ல வேண்டாம். பிறகு அவுங்க மார்க்கட் வந்து திட்டிப் பிரச்சினை ஆனால் நான் தனியாப் போகும்போது ஏதாவது செய்துவிடுவார்கள் என்று விட்டுவிட்டேன்.

'அக்கா ஒரு மொளம் பூ வாங்கிக்குங்க. உங்க கையால போணி பண்ணுங்கக்கா' என்று சொல்லும் பூக்காரியிடம் அவள் அக்கா என்று அன்புடன் கேட்டதும் என் கையால் அவளுக்குப் போணி செய்தால் நன்மை என்று அவள் நினைப்பதும் என்னைப் புல்லரிக்க வைக்கும். பூ வைக்க இஷ்டம் இல்லாத நேரத்திலும் என்னை மதிக்கத் தெரிந்தவர் களிடம் அவர் நம்பிக்கை வீண்போகக் கூடாது என்று பூ வாங்கிக் கொள்வேன். கடைக்காரர்களில் கேலி செய்பவர்களும் உண்டு. அன்பு காட்டுபவர்களும் உண்டு. யாராக இருந்தால் என்ன, நமக்கு வியாபாரம் ஆகவேண்டும் என்று பேச்சால் மயக்குபவர்களும் உண்டு. இப்படி யார் உண்மையாக நேசிக்கிறார்கள், யார் வியாபாரத்துக்காக அன்புடன் பேசுகிறார்கள் என்று தெரியாமல் அன்புக்கும் அரவணைப்புக்கும் அடிமை ஆகிவிட்டேன் என்று சொல்வதைவிட என்னையும் பெண்ணாக நினைத்து மற்ற வாடிக்கையாளர்களிடம் பேசுவதுபோல என்னிடமும் பேசுவது என் மனதை நெகிழ வைத்தது.

அமாமில் இருக்கும் மற்ற சீனியர்கள் அவரவர் ஊர்களுக்கு அவ்வப் போது செல்வது வழக்கம். அவர்கள் செல்லும்போது அவர்களின் குடும்பத்தில் உள்ள அண்ணன், அண்ணி, குழந்தைகள், அம்மா, அப்பா, அக்கா, மாமன் என்று உறவுகளுக்குத் துணிமணி என்றும் வீட்டுக்குத் தேவையான பொருள்களையும் வாங்கி பேக் செய்து எடுத்துச் செல்வதைப் பார்த்து நானும்கூட என் குடும்பத்துக்கு இதுபோலவே வாங்கிச் செல்லவேண்டும் என்ற ஆசை இருந்தது. ஆனால் என் கையிலோ காசு பணம் அப்போது இல்லை. நானும் பாலியல் தொழில் செய்தால்தான் அதில் வரும் பணத்தை வைத்துக் குடும்பத்திற்கு ஏதாவது வாங்கிக் கொண்டு போகலாம் என்று நினைத்தேன். ஆசையும் பட்டேன்.

பம்பாயில் காமாட்டிபுரத்தில் என் குரு நடத்தும் பாலியல் விடுதி யைப் போலச் சிறைவாசம் இங்கு இல்லை. கடைக்குச் சென்று ஒரு பிரியாணி வாங்கி வந்தால்கூடச் சில்லறைப் பணமும் போகும் வண்டி சார்ஜும் கிடைக்காமல் அவர்கள் கொடுக்கும் ஐந்து ரூபாய் டிபனுக்குப் போதாமல் இருந்ததைப்போல இங்கு இல்லை. எப்போது வேண்டு மானாலும் ஊருக்குச் செல்லலாம். ஒரு வாடிக்கையாளர் சுடுதண்ணீர் ஒரு பக்கட் எடுத்துக்கொண்டு 5 ரூபாய் அமாம் ஓனருக்குக் கொடுத்து விட்டாலும் அவனுக்கு முதுகு தேய்த்துவிட்டால், மசாஜ் செய்து

விட்டால் தரும் டிப்ஸ் பணம் என் கையில் கிடைத்தது. சில நேரத்தில் சுடுதண்ணீருக்கு 5 ரூபாய் கொடுத்தாலும் எனக்கு 10 ரூபாய் கூட டிப்ஸ் ஆகக் கிடைக்கும்.

காலை டிபன் அவரவர் பணம் செலவு செய்து சாப்பிட்டாலும் பணம் இல்லாதவர்க்குப் பெரியவர் முதல் சிறியவர் வரை பணம் இருப்பவர் டிபன் வாங்கிக் கொடுத்து அன்பு செலுத்துவதைக்கூட இங்கு கண்டேன். மதிய உணவும் இரவு உணவும் அமாம் ஓனரே சமைத்துக் கொடுத்து உண்ண வைப்பதும் கண்டு வியப்பு அடைந்தேன். பக்கத்தில் இல்லாத ஒரு குருவை நினைத்து வேறு இடத்தில் இருப்பதைவிட்டு, இருக்கும் இடத்தில் அன்பு காட்டும் குருவைத் தேர்ந்தெடுத்துப் பிழைக்க வழிகாட்டியாக உள்ளவர்மீது மாறிக் கொள்வதுதான் புத்திசாலித்தனமும் பிழைக்கிற வழியும் ஆகும் என்று மாயா குருவின் குருபாய் பெயரில் சேலா ஆவதாய் உறுதியாகக் கூறிவிட்டேன். மாயா குருவும் சம்மதம் தெரிவித்தார். ஐதராபாத் கூட்டிச் சென்று சேலா முறை செய்ய நாளும் குறிப்பிட்டனர். நான் சேலாவாகப் போகும் என்னுடைய மூன்றாவது குருவும் சந்தோஷப்பட்டார்.

# 17

அன்று காலை பத்து மணி அளவில் ஐதராபாத் சென்று சேலாவாக முறைப்படி இஜரா சம்பிரதாயத்தில் அங்கீகாரம் பெறுவதற்காக என்னுடன் மாயாவின் குருவாகிய என் காலா குருவும் மாயாவின் குருபாய்கள் இருவரும் மற்ற புதிதாக வந்துள்ள இஜராக்களைச் சேலா முறை செய்வதற்குத் தயார் ஆயினர். ரயிலில் சாப்பிட உணவுகள் தயாரித்தனர். கடைக்குச் சென்று புளிசாதம் செய்யத் தேவையான பொருள்களை வாங்கிவர என் புதிய குரு பணம் கொடுக்க நானும் என்ன தேவையோ அதை வாங்கி வந்தேன். என் காலா குரு, 'அடியே பொட்டைங்களா, புளிய நல்லாக் கழுவிக் கரைங்கடி. கல்லுமண்ணு இருக்கப் போவுது, காய்ந்த மிளகாய் ஒடித்து விதையை எடுத்துடுங்கடி. காரம் ஆகப்போவுது' என்று சத்தம்போட்டார். எனக்கு மூத்த சகோதரியாய் இருக்கும் குருபாய் சமைக்க, அவர் ஒவ்வொருவருக்கும் குருபாய் நீ இந்த மிளகாயைக் கிள்ளிக் கொடு, குரு நல்லெண்ணயத் தருவிங்க, மகளே புளியை நன்றாகக் கெட்டியாகக் கரைத்து வடித்துக் கொடு, ஏ பொட்டைங்களா எங்க போயிட்டீங்க. ஸ்டவ்வுக்கு யாராவது சிமெண்ணை ஊத்துங்க என்று சொல்லத் தடபுடலாகச் சமைத்து முடித்துச் சாப்பிட்டுவிட்டு மாலை ஐந்து மணி ரயிலுக்குப் புறப்பட்டோம். ஒரு குழுவாக, ஒரு குடும்பமாக ரயிலில் பயணம் செய்வது எனக்கு இதுதான் முதல் முறை.

இஜரா ஜமாத்தில் அங்குள்ள நாயக்குகள் முன்னிலையில் என்னை இதற்குமுன் எந்த வீட்டில் சேலா ஆகி இருந்தாய், மொத்தம் எத்தனை வீடு, எந்த வீட்டில் இருக்கும்போது நீ நிர்வாணம் ஆனாய் என்று இந்தியில் கேட்டனர். நானும் மும்பையில் முதலில் இருந்த வீடு, அங்கு நிர்வாணம் ஆனது, அதன் பிறகு ஜோப்பட்பட்டியில், மாதுங்காவில் இருந்த வீடு, திரும்பியும் முதல் வீட்டுக்கே சென்றது எல்லாம் கூறினேன். 'ஆக மொத்தம் நீ மூன்றுவீடுகள் கணக்குக்கு. தற்போது நான்காவது ஐதராபாத் வீடு' என்று பெரியவர்கள் கணக்குப் பார்த்துவிட்டு,

'ஏ பேட்டா, எந்த வீட்டிலாவது கடன் கிடன் வச்சுட்டு நகை பணம் ஏதாவது எடுத்துக்கொண்டு வந்தியா?' என்று கேட்டனர். 'இல்லை அம்மா. முதல் வீட்டில் எனக்குப் போட்ட மூக்குத்தியும் கால் கொலுசும் லச்சாவும் இரண்டாவது வீடு மாறும்போது இதேபோல அங்கு ஜமாத்தில் கேட்டு வாங்கிக் கொண்டனர். இரண்டாவது வீட்டில் எனக்கு எதுவும் கொடுக்கவில்லை. நானும் எதுவும் கடன் வாங்கியும் வரவில்லை. திரும்பவும் மூன்றாவது வீடான முதல் வீட்டிற்கே சென்றபோது அவர்கள் எதுவும் கொடுக்கவில்லை. நான்தான் சம்பாதித்துக் கொடுத்து விட்டு வெறுங்கையுடன் வந்திருக்கிறேன்' என்றேன்.

'நீ சம்பாதித்துக் கொடுத்த கணக்கு இங்கு வராது. நீ ஏதாவது வாங்கி வந்த கணக்கு மட்டும் இருந்தால் பொய் சொல்லாமல் சொல்லணும். இங்கு சேலா ஆனபிறகு இதற்குமுன் இருந்த வீட்டில் ஏதாவது எடுத்து வந்திருக்கேன்னு தெரிஞ்சாலோ கேட்டாலோ நாங்கள்தான் குற்றவாளியைப்போலப் பதில் சொல்ல வேண்டிவரும். ஏதாவது இருந்தால் இங்குக் கூறிவிடு; அவர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துவிடலாம். என்ன புரிகிறதா?' என்று பெரியவர்கள் கேட்க, 'புரிகின்றது அம்மா. நான் எந்த வீட்டிலிருந்தும் எதையும் கொண்டு வரவில்லை. இது உண்மை' என்று கூறினேன்.

நான் நிர்வாணம் செய்த வீட்டிற்கு, ஜமாத்தில் கொடுக்கும் தண்டு பணம் இரண்டு மடங்கு போட்டு தற்போது சேலா முறை செய்யும் குரு கொடுக்க வேண்டும். அதனால் ஜமாத்தில் எந்த வீட்டில் நிர்வாணம் ஆனேனோ அதற்குத் தண்டும் (அபராதம்) அந்த வீட்டில் குருவாக இருந்தவர் சேலா முறை செய்யக் கட்டிய தண்டு பணமும் சேர்த்து இரண்டு மடங்காகத் தற்போது சேலா ஆகும் என் குரு ஜமாத்தில் கட்ட வேண்டும். அது யாருக்கு எந்த வீட்டிற்கு எந்தப் பரிவாருக்குக் கொடுக்க வேண்டுமோ அது அங்குச் சென்று கொடுக்கப்படும். அதன் பிறகு தற்போதுள்ள ஐதராபாத் வீட்டுப் பெயரைக் கூறி அந்த வீட்டில் நாயக் பெயரைச் சொல்லி எந்தப் பரிவார் என்று கூறி யாருக்கு யார் சேலாவாகின்றார் என்று சொல்லி, நான்கு ரூபாய் கட்டிச் சேலா முறையைச் செய்து முடிப்பார்கள். எங்கள் வீட்டுக்குச் சவுக்கன் வீட்டு நாயக் கூறிச் சேலா முறையைச் செய்தார்.

பெரியவர்கள் எல்லாரும் 'பேட்டா நல்லதோ கெட்டதோ இனி எங்கும் வேறு வீடுகளில் சேலா ஆகவேண்டாம். உன்னுடைய குருவுக்கு நல்ல சேலாவாக இருந்து நீயும் நிறைய சேலா, நாத்தி செய்து இந்த வீட்டிலேயே இருக்கவும். கடைசிவரை ஐதராபாத் வீட்டையும் கௌரவத்தையும் கருத்தில்கொண்டு பெரியவர்களுக்கு மதிப்பும் மரியாதையும் கொடுத்து நல்லபடியாக இருக்கணும்' என்று புத்தி

கூறினார்கள். மேலும் என்னுடன் வந்த என் குருபாய்களும் அதே ஜமாத்தில் என்னைப் போலவே சேலா முறை செய்தனர். பெரியவர் களுக்குப் பாவ்படுத்தி கூறிவிட்டு எல்லாரும் ஒன்றாகச் சாப்பிட்டு விட்டு எங்கள் வீட்டு நாயக்கிடம் விடைபெற்றுக் கொண்டோம். புதிதாக இங்குச் சேலா ஆனவர்களுக்கு நாயக் புதிய புடவைகளைக் கொடுத்துச் 'சென்றுவாருங்கள், அடிக்கடி இங்கு வந்துபோக வேண்டும்' என்று கூறி அனுப்பி வைத்தார்.

பெங்களூர் வந்தவுடன் என் குருவிடம் சென்று அவருடைய கால்களைத் தொட்டுப் பாவ்படுத்தி கூறினேன். 'ஜியோ பேட்டா. ஏதோ என் பேர்ல நல்லபடியா இருந்துக்கிட்டு நாலு காசு சம்பாதிச்சுப் புருஷன் கிருஷன்னு வைக்காம ஒழுங்கா என் பேரைக் காப்பாத்து' என்று அவரும் அறிவுரைகள் சொல்லி, புதுத்துணிகள் வாங்கிக் கொடுத்து, என்னையும் இனி வெளியில் தந்தாவுக்கு இஷ்டம் இருந்தால் போ என்று கூறினார். 'இப்பவே எப்படி அவ தந்தாவுக்குப் போக முடியும்? ரேவதிக்கு பெங்களூர் ரோடு, சந்து, ஆட்டோ புடிச்சுப் போறது எல்லாம் தெரியாது. ரோடு மாறிப்போய் போலீஸ்கிட்டயோ ரவுடிங்ககிட்டயோ மாட்டிக்கிட்டா என்ன செய்வா? அதனால் அவளுக்கு எல்லாம் கொஞ்சம் தெரியட்டும். அதன் பிறகு போகலாம்' என்று என் குருபாய் களும் அவர்களுக்குத் தெரிந்தவற்றைக் கூறினர். நானும் கொஞ்ச நாள் மற்றவர்கள் பேசிக்கொள்வது, மாயா வெளியில் செல்வது, வருவது என எல்லாவற்றையும் கண்காணித்து எங்கு செல்லவேண்டும், எப்படிக் கிராக்கியிடம் பேச வேண்டும் என்பதெல்லாம் கற்றுக்கொண்டேன்.

பாலியல் தொழில் செய்வதற்காக வெளியில் செல்லும்போது பயமாக இருக்கும். ரவுடியோ போலீசோ வந்தால் என்ன செய்வது என்று நினைப்பேன். போலீஸ் காக்கி உடையில் வந்தால் தூரத்தில் காணும்போதே ஓடிவிடலாம். யூனிபாம் இல்லாமல் வந்தால் எப்படிக் கண்டுபிடிப்பது, ரவுடிகள் எந்த உருவத்தில் வருவார்களோ என்று தினம் தினம் மனக்குழப்பத்தில், பயத்தில்தான் ரோடுகளில் நாயைப் போல நடந்துசெல்வேன். பைக்கில் வருபவர்களோ, காரில் வருபவர் களோ என்முன் வந்து வண்டியை நிறுத்தினால் அவர்களிடம் பேசவும் செல்லவும் பயமாக இருக்கும். ஒருவேளை ரவுடியாகவும் இருக்கலாம், போலீசாகவும் இருக்கலாம் என்று அவர்களிடம் பேசப் பயப்படுவேன். இப்படி என்னைப் பார்த்து லைக் செய்யும் ஆண்களிடம் பேசாமலும், காரிலோ பைக்கிலோ ஏறிச் செல்லாமலும் நடந்து நடந்து ஓய்ந்துபோய் அமாமுக்கே வந்துவிடுவேன்.

கிராக்கி செய்யாமல் வந்தால் அமாமில் இருப்பவர்கள் என் கதை யைக் கேட்டுச் சிரிப்பார்கள். 'அட பைத்தியமே, ரவுடி போலீஸ்னா

பாத்தா பேசுனா தெரிஞ்சுபோகுமே. இப்படி உன்னைப் பாக்கறவங்க எல்லாம் ரவுடியாக போலீசாக இருப்பாங்களோன்னு சும்மா வந்துட்டியே. இப்படிப் பயந்தா எப்படிப் பொழைக்கப் போற? உன்னாட்டம் அழகு இருந்து பொம்பளையாட்டம் நாங்க இருந் திருந்தா அப்படிப் போயி இப்படிச் சம்பாதிச்சுட்டு வந்துடுவோம். இத்தனை அழகை வச்சுக்கிட்டுப் போய்ப் போய்த் திரும்பி வர்றியே. ஆட்டோ காசுதான் செலவு. எப்படித்தான் பெங்களூரில் நீ பொழைக்கப் போறியோ' என்று கூறுவார்கள். எனக்கும் மனதில் தோன்றும். அவர்கள் கிராக்கியாகக்கூட இருக்கலாம் என்று.

என்னுடைய குரு என்னைக் கூப்பிட்டு, 'அடியே ரோட்ல நடந்து போரனா யாராவது உன் முன்னாடி வண்டிய நிறுத்தினா போயி முதல்ல பேசு. பேசறப்போ உனக்குத் தெரிஞ்சுடும். அவன் நல்லவனா கெட்ட வனான்னு. அதுக்கப்புறம் இடம் இருக்கா எவ்வளவு கொடுப்பீங் கன்னு கேளு. பயப்பட வேண்டாம். ஒருவேளை கிராக்கியே உன்னிடம் எவ்வளவுன்னு கேட்டா இரு நூறோ முந்நூறோ சொல்லு. கொடுக்கிறேன்னு சொன்னா எடம் இருக்கான்னு கேட்டு அவன் கூடப் போ. பயந்தா வேலைக்கு ஆகாது. இங்க அமாம்ல இரண்டு ரூபாய்க்கும் ஒரு ரூபாய்க்கும் கஷ்டப்பட்டுக்கிட்டு இருக்கவேண்டியது தான். நாளைக்குப் போயி மெதுவாப் பொம்பளையாட்டம் பேசிக் கிராக்கியப் புடி. உனக்குத் தெரியாதா என்ன, பம்பாயில் கோன்ஷா கல்லியில் தந்தா பண்ணுனவளே நீ. ஒன்னுந்தெரியாத பொட்டைங் கல்லாம் வெளியில் போய் சம்பாதிச் சுட்டு வருதுங்க. உனக்கென்னடி பொம்பளையாட்டம் இருக்க' என்று சில நேக்குப்போக்குகளைக் கற்றுக் கொடுத்தார்.

பாலியல் தொழிலால் பல கஷ்டங்களை அனுபவித்தேன். ஒரு வாடிக்கையாளர் கிடைத்து அவனிடம் பேசிக் கூட்டிச் சென்று பணம் வாங்கித் தொழில் செய்து முடிப்பதற்குள் பெரும்பாடு ஆகிவிடும். ஒவ்வொரு நாள் கிடைத்தால் கிடைக்கும். கிடைக்காவிட்டால் திரும்பி சும்மாவே வந்துவிடுவேன். ஆட்டோ பஸ்ஸுக்காக வெயிட் செய்வது போல நின்றுகொண்டே இருந்தால் பார்ப்பவர்களுக்குச் சந்தேகம் வரும் என்பதால் கால்போன போக்கில் நடந்து செல்வேன். ஆரம்பத்தில் நான் பாலியல் தொழிலுக்குத்தான் ரோட்டில் நடக்கிறேன் என்று ரவுடிகளுக்கோ போலீசுக்கோ தெரியாது. அதனால் போலீசோ ரவுடியோ எனக்குத் தொந்தரவு தரவில்லை. போலீஸ்காரர்களும் அவ்வளவு ஈசியாக ரோட்டில் நடந்து செல்லும் பெண்களைச் சந்தேகப்படுவதும் இல்லை. அடிக்கடி செல்வது, வாடிக்கையாளர்களிடம் பேசுவது, காரிலோ பைக்கிலோ போவது இப்படிப் பார்த்துத் தெரிந்துகொண்டு

தான் பிடிக்க வருவார்கள். அதேபோல என்னை எத்தனையோ முறை பிடித்து ரோட்டிலேயே அடித்து லஞ்சம் வாங்கிக்கொண்டு அனுப்பி இருக்கின்றனர்.

வளர்த்தியான ஒருவனுக்கு நாற்பது வயசு இருக்கும். சிவில் உடையில் வந்த அவன் என்னை மிரட்டி ஆட்டோ பிடித்து அதில் உட்காரவைத்துப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்வதாகக் கூறி இருட்டான ஜனங்கள் நடமாடாத பகுதிக்குக் கூட்டிச் சென்று என்னிடம் உறவு வைத்துக்கொள்ளத் தொந்தரவு செய்தான். 'ஐயா சாமி, நான் பொம்பளை இல்லிங்க. இஜரா. ஏதோ வயித்துப் பொழப்புக்கு வந்தேன். என்னை விட்டுடுங்க' என்று கையெடுத்துக் கும்பிட்டேன். 'லே நீ கோஜாவா? நோடுதரே அங்க காணலியே' (நீ இஜராவா? பார்க்க அப்படித் தெரியலியே) என்றான். 'உண்மை தானுங்க. நான் கோஜாதான்' என்றேன். 'சரி சரி கையெல்லி எஸ்டு அன மடுகிதியா எத்து' என்று என் பேக், பர்ஸ் எல்லாம் செக்கப் செய்து அதில் இருந்த 250 ரூபாய் பணத்தை எடுத்துக் கொண்டான். பற்றாக் குறைக்கு நான் கழுத்தில் அணிந்திருந்த பித்தளை செயினைத் 'தங்கமா கழற்றிக்கொடு' என்று அதையும் பிடுங்கிக் கொண்டான். பித்தளை வளையலைக் கழற்றச் சொன்னான். அதை என்னால் கழற்றவே முடியவில்லை. 'இதுவும் தங்கம் இல்லிங்க பித்தளை' என்று சொல்லி யும் நம்பாமல் தீப்பெட்டியை எடுத்துத் தீக்குச்சியை உரசி அந்த வெளிச்சத்தில் வளையலைப் பார்த்துவிட்டு அதன் பிறகு என்னை அந்தப் பகுதியிலேயே விட்டுவிட்டு வந்த ஆட்டோவில் போய் விட்டான்.

படுபாவி பணத்தையும் பிடுங்கிக் கொண்டு பித்தளைச் செயினை யும் பிடுங்கிக்கொண்டு இப்படி இங்கு விட்டுட்டுப் போயிட்டானே, நல்லா இருப்பானா? நாசமாப் போயிடுவான். இவன் வீட்ல என்னைப் போல ஒரு பொட்ட பொறந்திருந்தா இவன் இப்படிச் செய்வானா? நல்லவேளை தங்கச் செயின் போட்டு இருந்தா என்ன ஆகிறது? வெளியில் மதிப்பா அழகாத் தங்கமாட்டம் இருக்கேன்னு கவரிங் கடையில் 150 ரூபாய் கொடுத்து வாங்கின செயினு. அதப் புடுங்கிட்டுப் போறானே. அவன் பொண்டாட்டி கழுத்தில இருந்தாப் புடுங்கக் கூடாதா? அத உட்டுப்புட்டு இங்க எங்கிட்ட வந்துட்டானேன்னு எனக்குள்ளே புலம்பிக் கொண்டேன். இந்த இருட்டான பகுதி எங்குள்ளது, நான் எப்படி வீட்டுக்குப் போவது? ஒத்தையாக முழித்துக் கொண்டு இருக்கேனே. இங்கு எவனாவது வந்து அடிச்சு ஒதச்சா ஏன்னு கேட்கக்கூட நாதி இல்லையே. அய்யோ கடவுளே, நான் இப்ப எப்படி அமாமுக்குப் போறதுன்னு தெரியலையே என்று அதிக பயமாகிவிட்டது.

வெடுவெடுவெனக் கால் வந்த பக்கம் வேகமாக நடக்கத் தொடங்கினேன். அந்த வழியாக வந்த ஆட்டோக்களைக் கைகாட்டிக் கைகாட்டி நிறுத்த முயன்றேன். யாரும் நிறுத்தவில்லை. ஒரு மோட்டார் சைக்கிளில் வந்தவன், 'ஏனம்மா எல்லி ஒகு பேக்கு இஷ்டொத்துக்கே இல்லி ஏனு மாடுதியா' என்று கேட்டான். பதிலுக்கு அமாம் இருக்கும் ஏரியாவைக் கூறினேன். அவனும் 'அங்கு செல்ல முடியாது. வழியில் ஆட்டோ பிடித்துக் கொடுக்கிறேன். சென்றுவிடு' என்று கூறினான். புண்ணியவான் நல்லா இருக்கணும். என்னை ஆட்டோ ஏற்றி அனுப்பி வைத்துவிட்டுச் சென்றான். நானும் அமாமுக்குச் சென்று என் குருவிடம் விவரம் கூறி ஆட்டோவுக்குப் பணம் வாங்கிக் கொடுத்தேன். மாயா என்னிடம் கேட்டாள். அவன் எப்படி இருப்பான் என்று. நானும் 'உயரமா நாற்பது வயசு இருக்கும்' என்றேன். 'தலையில் முன்பகுதி சொட்டையா?' என்று கேட்டாள். ஆமாம் அவனேதான் என்றேன். 'அவனேதான். என்னையும் ஒருநாள் இப்படிச் செஞ்சான். படுபாவி இப்போ உன்கிட்டயும் இதுபோலச் செஞ்சு இருக்கான். அவன் அதுமட்டும் செய்யறது இல்ல, நாம் கிராக்கிங்ககிட்டப் பேசுனா பாத்துக்கிட்டே இருந்துக்கிட்டுக் கிராக்கியோட வண்டி சாவியை எடுத்துக்கிட்டு நம்பள ஓடிப்போன்னு சொல்லிட்டு அந்தக் கிராக்கிகளை மிரட்டிப் பணம் வேற புடுங்கறான். பாத்துக் கிராக்கிங்க கிட்டப் பேசு. இல்லாட்டிக் கிராக்கிங்க நாமதான் ஆள வச்சுப் புடுங்கறான்னு நெனச்சு மத்த நாளுக்கு ரோட்டுக்குப் போனா ஏதாவது செஞ்சுப் புடுவாங்க' என்றாள் மாயா.

'இப்படியும் ஒரு பொளப்பு. நாசமாப்போன நாயி' என்று கூறிக் கொண்டு அமாம் உள்ளே சென்று துணிகளை மாற்றிக் கொண்டேன். உள்ளே இருந்த என் மற்றொரு குருபாய் 'என்னடி இன்னிக்கு நல்ல வருமானமா' என்றாள். 'ஏன்டி நீவேற என் வயித்தெரிச்சலக் கொட்டிக்கிற. நானே போலீசுகிட்ட மாட்டிக்கிட்டுப் பணத்தையும் செயினையும் பறிகொடுத்துவிட்டு வந்து இருக்கேன்னு' கூறினேன். 'வெளியில போனா லட்டும் கிடைக்கும்; லாட்டி அடியும் கிடைக்கும். அதுக்கென்ன செய்யறது? போனாப் போகுது உடு' என்று அவள் பதில் கூறி என்னைப் பார்த்துச் சிரித்தாள்.

இரவு சாப்பிட்டுவிட்டுப் படுத்துத் தூங்கச் சென்றபோது என்னோட குரு என்னை அழைத்து, 'இங்க பாரு பேட்டா, நீ வெளியில் தந்தாவுக்குப் போற, அங்க கிடைச்சாலும் சரி, கிடைக்காட்டியும் சரி. லட்டு தின்னாலும் சரி லாட்டி தின்னாலும் சரி, வெளியிலன்னு போனா மாயா கொடுக்கற மாதிரி நீயும் தினமும் நூறு ரூபா வீட்டுக்குக் கொடுக்கணும். இங்க அமாம்ல இருக்கிற இஜராக்களுக்கு வருமானம்

இல்லே. அமாம் வாடகை, சாப்பாடு, தண்ணிச் செலவு, பூஜ செலவுன்னு இருக்கு. நீ வெளியில் எவ்வளவோ சம்பாதிச்சுக்கோ. ஆனா எனக்குத் தினமும் நூறு ரூபா கொடுக்கணும், என்ன' என்று கேட்டார். நானும் 'சரி ஆகட்டும்மா கொடுக்கறேன். குருவோட கஷ்டத்துல உதவுவதுதானே சேலாவுடைய கடமை' என்று கூறினேன். வெளியில் சரியாகக் கிராக்கி கிடைக்கா விட்டால் புதிய புடவைகள், மாடர்னாக இறக்கம் வைத்த ஜாக்கட் தைப்பது, வாசனைப் பொருள்கள் பூசிக் கொள்வது எனக் கிடைக்கும் பணத்தைச் செலவு செய்யவேண்டிய நிலையும் ஆனது.

நான் பெங்களூர் வந்து சில மாதங்கள் ஓடின. என் அம்மா அப்பா ஞாபகம் வந்தது. என் குருவிடம் 'அம்மா, நான் ஊருக்குச் சென்று ஐந்து நாட்களில் வந்துவிடுகிறேன்' என்றேன். இப்போ வேண்டாம். அமாமில் இருக்கும் சிலர் விழுப்புரம் கூத்தாண்டவர் திருவிழாவுக்குச் செல்கின்றனர். இங்கு யாரும் இல்லை. அதனால் அவர்கள் வந்தபிறகு நீ ஊருக்குச் செல் என்று கூறிவிட்டார். எனக்கும் கூத்தாண்டவர் கோயிலுக்குப் போக வேண்டுமென்ற ஆசை பல வருடங்களாக இருந்தது. மும்பையில் இருந்ததால் தமிழ்நாட்டுக்கு வரவே முடிய வில்லை. ஊருக்கு வந்தவுடன் என் ஊரில் இருக்கும்போதுகூட விழுப்புரம் கூத்தாண்டவர் திருவிழா வந்தது. அப்போதும் காசு கையில் இல்லாததால் போக முடியவில்லை. தற்போது போக ஆசை இருந்தாலும் அமாமில் யாரும் இல்லாத காரணம். மேலும் ஊருக்குப் போக வேண்டும் என்ற எண்ணம். அதனால் அடுத்த வருடம் போகலாம் என்று விட்டு விட்டேன். கூத்தாண்டவர் விழாவுக்குச் சென்று வந்தவர்கள் அமாமில் இருக்க நான் ஊருக்குப் புறப்பட்டேன். முதல் முறையாக என் குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் துணிமணிகள், குழந்தைகளுக்கு விளையாட்டுப் பொருள்கள் என்று வாங்கிச் சென்றேன். சேர்த்து வைத்திருந்த பணம் கொஞ்சமும் எடுத்துச் சென்றேன். என் அண்ணன்கள் என்னை எவ்வளவுதான் திட்டி இருந்தாலும் எனக்கு அவர்களின்மீது பாசமும் அன்பும் இருந்தது. அவர்களுக்கும் பிரியத்துடன் துணிகள் வாங்கிச் சென்றேன்.

அன்புக்குப் பஞ்சம் இல்லை என் வீட்டில். எல்லாருக்கும் நான் வாங்கிச் சென்ற துணிகள் பிடித்துவிட்டன. கொண்டு சென்ற பணத்தில் என் செலவுக்கு எடுத்துக்கொண்டு மீதியை அப்படியே அப்பாவிடம் கொடுத்தேன். மறுநாள் அப்பா முயல்கறி எடுத்து வந்து 'உனக்காக வாங்கிவந்தேன். நீயே இதை வறுத்துவிடு' என்று கூறினார். சாப்பாடு முடிந்து அம்மா அப்பா என்னிடம் 'இப்போ ஆட்டத்துக்குப் போறியா? அங்க எப்படி வசதியா இருக்கியா? உங்க ஆளுங்களோடதான் தங்கி

இருக்கியா?' என்று கேட்டனர். ஆமாம் என்றேன். 'உங்க ஆளுங் களோட சண்ட கிண்ட போட்டுக்காத. நல்லபடியாக் கருத்தா நாலு காசு சம்பாதிச்சு நல்லவிதமா இரு' என்று அறிவுரை கூறினார்கள். மேலும் தற்போது இருக்கும் பழைய வீட்டை ஆல்ட்ரேஷன் செய்யலாம். அதற்காக இனி நீ பணம் கொண்டுவந்து அப்பாவிடம் கொடு என்று அம்மா கூறினார். நானும் சரி என்றேன்.

அவ்வப்போது பணம், வீட்டுக்குத் தேவையான பொருள்கள் எனக் கொடுத்துக் கொண்டிருந்தேன். அப்பாவும் வீட்டை இடித்து வேலை செய்தார். அப்பா அம்மா இங்கு வீட்டை இடித்து வேலை செய்து கொண்டிருக்கின்றனர். கஷ்டப்பட்டு வீட்டு வேலைகளை அவர்கள் செய்ய நான் பெங்களூரில் கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தேன். என்னுடைய பாலியல் தொழிலில் பல கொடுமை களையும் மனதளவில் சித்ரவதைகளையும் அனுபவித்தேன். போலீசிடமும் ரவுடிகளிடமும் போராடி வாழவேண்டி இருந்தது. போலீஸ் லஞ்சம் வாங்கினாலும் மாதக் கடைசி என்று ஸ்டேஷனுக்குக் கூட்டிச் சென்று அடித்து உதைத்து விட்டுவிடுவார்கள். ரவுடிகள் ரோட்டில் தெரிந்தால் போதும் ஆட்டோ பிடித்து வேறு இடத்திற்குச் சென்று விடுவேன்.

ஒருமுறை பெங்களூரில் செயின்ட் மார்ஸ் ரோட்டில் இரவு 7 மணி அளவில் நடந்து சென்று கொண்டிருந்தேன். போலீஸ் வேன் என்னை மடக்கிப் பிடித்துச் சென்றது கப்பன் பார்க் போலீஸ் நிலையத்திற்கு. அங்குள்ள சிறிய பெரிய போலீஸ் அதிகாரிகள் என்னைப் பார்த்து 'கோஜா என் மகனே எந்த ஊரு' என்று கேட்டனர். நான் தமிழ்நாடு என்றேன். 'இங்கு எதற்கு வந்தாய்?' என்றனர். 'பொட்டைங்க சாமி. வேல வெட்டி யாரும் கொடுக்கல. வீட்ல என்னைச் சேத்தல. என்னோட வயித்துப் பொளப்பு அதான்' என்று கூறினேன். 'உங்க தமிழ்நாட்ல இந்த வேலையைச் செய்யறது. இங்க எதுக்கடா வந்த?' என்று வாயில் வந்தபடி திட்டி லாட்டியால் கால் கை என அடித்தனர். ஒரு போலீஸ் அடித்தபின் இன்னொரு போலீஸ் ஷூ கால்களால் உதைத்தார். 'சாமி சாமி இனிமே இந்தப் பக்கமே வரமாட்டேன். என்னை விட்டுடுங்க' என்று கத்தினேன், கதறினேன். 'எங்க உன்ன விடறது? போய் அந்த மூலையில் உட்கார். பெரிய அதிகாரி வருவாரு. அவரு வந்ததும் உன்ன மொட்ட அடிச்சு ஜெயிலுக்கு அனுப்புறோம்' என்று கூறி என்னை ஒரு மூலையில் உட்கார வைத்துவிட்டனர்.

எஸ் பி வரும்வரை ஸ்டேஷனைக் கூட்டித் தண்ணீர் தெளித்துத் துடைக்க வைத்தனர். நானும் அவர்கள் சொன்ன வேலைகளை எல்லாம் செய்தேன். 'சார், நீங்க சொன்ன வேலைகளை எல்லாம்

செய்து முடித்துவிட்டேன். என் வீட்டில் என்னைத் தேடுவார்கள். நான் போக வேண்டும்' என்றேன். 'நின் அம்மன கெய்ய எல்லே ஒகு பேக்கு இரு இரு நின்ன எல்லி களச பேக்கோ அல்லி களஸ்திவி' என்று கூற எனக்குப் பயம் ஆகிவிட்டது. ஓடிப்போவோம் என்றால் அங்கு வெளியில் துப்பாக்கி வைத்து நின்றுகொண்டு இருக்கும் இரண்டு போலீஸ்காரர்கள் என்னைச் சுட்டுவிடுவார்களோ என்று பயம். மேலும் ஓட நினைத்தால் இன்னும் அதிகமாக அடித்துச் சித்ரவதை செய்வார்களோ என்றும் பயம். என்னால் எதுவும் பேசவும் முடிய வில்லை. சுமார் இரவு பதினொரு மணி ஆகியும் பெரிய அதிகாரி வரவில்லை என்று உட்கார வைத்துவிட்டனர்.

பன்னிரெண்டு மணி அளவில் இரண்டு ஸ்டார் உள்ள ஒரு போலீஸ் காரர் என்னிடம் வந்து 'சாய்புரு இன்னைக்கு வரமாட்டார். நாளைக்குத்தான் வருவார். உன்னிடம் ஸ்டேட்மண்ட் வாங்கச் சொன்னார் வா' என்று மற்றொரு அறைக்குக் கூட்டிச் சென்றார். அங்கு ஸ்டேஷனுக்குள்ளேயே ஒரு ஜெயில் இருந்தது. அதில் ஒரு கைதியும் இருந்தான். அவன் கம்பி பொருத்தப்பட்ட அறையில் காலில் விலங்குடன் இருந்தான். அவனைக் காட்டி அவனுடன் உன்னை அந்த அறையில் போடுகிறேன். உன் இஷ்டம்போல இரு என்று போலீஸ் கூற நான் கத்த ஆரம்பித்துவிட்டேன். ஐயோ வேண்டாம். என்னை அந்த அறையில் போடவேண்டாம் என்று போலீஸ் கால்களில் விழுந்தேன். காலைப் பிடித்தபோது கால்களால் என்னை உதைத்துத் தள்ளிவிட்டு அந்தக் கைதிமுன் என் துணிகளைக் கழற்றச் சொன்னார். வேண்டாங்க. தயவுசெய்து துணிகளைக் கழற்றச் சொல்லவேண்டாம் என்று எவ்வளவோ போராடியும் பலவந்தமாக என் துணிகளை ஒன்று விடாமல் கழற்றிவிட்டு லாட்டியால் அடித்து ஆப்ரேஷன் செய்த இடத்தில் எங்கே கால அகட்டு பொம்பள மாதிரி உனக்கு உள்ளே போகுதா என்று குத்தி விலக்கிப் பார்த்தார். உள்ள போகாதா, மைதானமா? அப்போ எப்படி செக்ஸ் வச்சுக்கிற என்றுகேட்டார். நான் மனதளவில உடைந்து போய் எதுவும் பேச முடியாமல் இருந்தேன்.

அந்தக் கைதியைப் பார்த்து என்னடா பாத்தியா போறியா என்று போலீஸ் கேட்க அவன் புன்சிரிப்பால் முகத்தை மூடிக் கொண்டான். எங்கு அவனுக்கு என்னை இரையாக்கப் போகிறார்களோ என்று நெஞ்சு படபடவென அடித்துக்கொண்டது. போலீஸ் லாட்டியை எடுத்துக் கைதியின் முன் வீசினார். அது கைதியின் கம்பி கேட்மேல் விழுந்துவிட்டது. லாட்டியை எடுத்த போலீஸ் திரும்பி நில்லுடா பாக்க வேண்டாம் என்று அவனைத் திட்ட அவனும் என்னைப் பார்ப்பதை விட்டுத் திரும்பி நின்றுகொண்டான். அதன் பிறகு ஒரு பேப்பரை

எடுத்து எழுதிக்கொண்டே 'இந்த மார்பகம் எப்படி வந்துச்சு? தானாகவே வந்ததா' என்றுகேட்டார். தானாக வரவில்லை அதற்கு ஆர்மோன் டேப்ளட் எடுத்துக்கிட்டேன் என்றேன். வாயை ஆன்னு என்றான். நானும் வாயை ஆ என்றேன். சரி சரி குனி பின்னாடி பாக்கணும் என்றான். நானும் குனிந்து பின்பகுதியைக் காட்டினேன். அப்படியே இரண்டு கைகளைக் கொண்டு என் 'பாத்ரூம்' செல்லும் பகுதியை விரித்துக் காட்டு என்றான். நானும் அவர் சொன்னபடியே செய்தேன். சட்டென்று லாட்டியை அதன் மீது குத்தி இங்கதானே வாங்குற என்று சொன்னான். எனக்கு வலிபொறுக்க முடியாமல் சட்டென எழுந்து கொண்டேன். 'சரி சரி துணிகளைப் போட்டுக்கோ' என்று என் துணிகளைப் போட வைத்து மீண்டும் பழையபடி வெளியில் மூலையில் உட்கார வைத்துவிட்டான். அன்று இரவு முழுதும் கடுங் குளிரில் படுக்கப் பாயும் போர்த்திக் கொள்ளப் போர்வையும் இல்லாமல் நடுங்கிக்கொண்டு தூங்காமலேயே இருந்தேன்.

ஒரு மணிக்கு இரவு டூட்டி பார்க்கும் போலீஸ் ஒருவர் ஒரு பேப்பரில் சாப்பாடு கொண்டுவந்து கொடுத்தார். தின்னு என்றார். அதைத் தரையில் வைத்துச் சாப்பிடும்போது பேப்பர் ஊறிப்போய் நிலத்தில் சாப்பாடு பட்டது. அதைத் தின்ன வைத்து வேடிக்கை பார்த்தனர். இரவில் நடந்ததை எல்லாம் நினைத்து நினைத்துக் கண்ணீர் வடித்தேன். அங்கு ஒருவருக்குக்கூட என்மீது கருணை வரவில்லை. என் மனதிலோ அவமானம் தாங்க முடியாமல் மனம் கொந்தளித்தது. அங்கு அடுக்கி வைக்கப்பட்டிருந்த துப்பாக்கியை எடுத்துச் சுட்டுக்கொண்டு இறந்து விடலாம் என்றெல்லாம் தோன்றியது. ஆனால் எனக்குச் சுடத் தெரியாதே. அதுவும் துப்பாக்கியை எடுக்கவும் பயமாக இருக்கே என்று என் மனதில் பல நினைப்புகள்..!

மறுநாள் காலை 10 மணிக்குப் பெரிய அதிகாரி வந்தார். என்னை அவரோட ரூமுக்கு அழைத்துச் சென்றனர். 'என்னடா உனக்கு வேற வேலையே இல்லையா? எதற்கு ரோட்டுக்கு எல்லாம் வர்ற? உங்கள என்னதான் செய்யறது? அடிக்கிறோம் உதைக்கிறோம். மீண்டும் மீண்டும் நீங்க ரோட்டுக்கே வர்றீங்க. எத்தனபேரு ரோட்ல கட வச்சு இருக்கறவங்க, ஓட்டலுக்காரங்க, காலேஜ்னு புகாரு கொடுக்கறாங்க. இனிமேல ரோட்ல யாரப் பார்த்தாலும் சரி பர்மண்டா ஜெயிலுக்கு அனுப்பிடுவோம்' என்றார். மற்றொரு போலீசைக் கூப்பிட்டு ஏதோ அவரிடம் கூற என்னை வேனில் ஏற்றிச் சென்றனர்.

வேன் போகும் போது போலீஸ் அடித்தது, மானபங்கம் செய்தது எதுவும் கோர்ட்டில் கூறக்கூடாது; கூறினால் நீ பர்மண்டாக ஜெயிலில் இருக்கவேண்டும். தவறை ஒப்புக்கொண்டு ஃபைன் கட்டிச் சென்றுவிடு

என்றனர். நானும் சரி என்றேன். ஆனால் கோர்ட் வாசலில் நின்றதும் என்னைக் கீழே இறங்கச் சொல்லி 200 ரூபாய் கொடு, உன்னை இப்படியே அனுப்பி விடுகிறோம். நாங்களே பைன் கட்டிவிடுகிறோம் என்றனர். நானும் பாவாடை நாடாவில் நுழைத்து வைத்திருந்த 200 ரூபாயைக் கொடுத்து விட்டுவிட்டாப் போதுண்டா சாமி என்று அமாமுக்குச் சென்று விட்டேன்.

அமாமில் என்னைப் பார்த்தவுடன் 'எங்கு சென்றிருந்தாய்? நாங்கள் உன்னைப் பார்க்காமல் பதறிப் போயிட்டோம். என்ன நடந்ததோ எங்கு இருக்கியோன்னு' என்று கேட்டனர். நானும் நடந்ததைக் கூறினேன். பதிலுக்கு என் குரு 'இங்கதான் இருக்கேன்னு அமாம் அட்ரஸ் குடுத்தியா?' என்றார். 'இல்லை அம்மா. ஒசூரில் இருந்து வந்ததாகக் கூறினேன்' என்றேன். 'சரி சரி, போயித் தலையோட தண்ணி ஊத்து. உன்னப் புடிச்ச பீடையெல்லாம் போகட்டும். போலீஸ் ஸ்டேஷன் போய் வந்திருக்கே' என்று கூறினார். நானும் குளிக்கச் சென்றேன்.

எனக்குத் தோனுச்சு பாலியல் தொழிலே வேண்டாம்னு. ஆனா வேற வழி எதுவும் இல்லை. கஷ்டப்பட்டுத்தான் ஆகணும். இன்று என்ன ஆகுமோ நாளை என்ன ஆகுமோ என்று தினம்தினம் பயந்தே வாழ வேண்டிய நிலை. இஜராவாகப் பொறந்துட்டோம். பொம்பளையா வாழணும்னா எல்லாக் கஷ்டங்களையும் தாங்கித்தான் ஆகணும். இந்த உலகத்துக்கு நாம் அட்ஜஸ்ட் பண்ணி நடந்தாத்தான் வாழ முடியும். நாம செய்யற தொழில்கூடச் சமூக விரோதமா இருக்கு. அதனால்தான் ஒரு ரவுடி ரோட்ல முத்தம் கொடுத்தாலோ இழுத்து வண்டியில் போட்டுக்கிட்டுப் போனாலோ கேட்பார் யாரும் இல்லே. போலீசுக்கும் ரவுடிக்கும் என்ன வித்தியாசம்? இருவரும் ஒரே மாதிரிதான் நடந்துக் கிறாங்க. இவங்ககிட்டப் போராடி வாழ வேண்டிய நிலையாப் போச்சு. சரி, இன்னும் கொஞ்ச நாளைக்கு வெளித் தந்தாவுக்குப் போகாம இருப்பதுதான் சரி. அமாமுலேயே இருக்க வேண்டியதுதான்.

# 18

விநாயகர் சதுர்த்தி வந்துட்டாக் கிராமப்புறம், டவுனுகள்னு டான்ஸ் புரோகிராமுக்கு எங்களைப் புக் பண்ண வருவாங்க. அதுமட்டு மல்லாமல் திருமண விழா, கோயில் திருவிழான்னுகூட டான்ஸ் புக் பண்ணி ஆடக் கூட்டிக்கிட்டுப் போவாங்க. ஊருங்கள்ல பள்ளிக்கூடம், கிராம அதிகாரி ரூம் என்று எங்களைத் தங்க வைப்பாங்க. அங்கதான் மேக்கப் போட்டுக்கோணும். சாப்பாடு சாப்பிட்டுக்கோணும். நாங்க மேக்கப் போடுறதச் சின்னதுல இருந்து பெரிசு வரைக்கும் வேடிக்கை பார்ப்பாங்க. நாங்க எங்களைப் பொம்பளையா நினைச்சுட்டு மத்தவங் களுக்கு இஜரான்னு காட்டிக்காம இருப்போம். அப்பக்கூடச் சிலர் இவங்க ஆம்பளைங்களா பொம்பளைங்களான்னு பேசிக்குவாங்க. பெரும்பாலும் கிராமப்புறங்கள்ல டவுன்கள்ல ஆட்டத்துக்குப்போனா ராத்திரித்தான் ஆடச் சொல்லுவாங்க. விநாயகர் ஊர்வலம் கடைசியாக் குளத்துக்குள்ள போடப் போகும் நாள் அன்னைக்குத்தான் பிரம்மாண்ட மான லைட் செட்களும் பல்லக்கு (பூந்தேர்) விசேஷ பூஜைன்னு செஞ்சு ஊர்வலமா வீதிவீதியா இழுத்துக்கிட்டுப் போவாங்க. அந்த ஊர்வலத்துலதான் ஆடணும்.

ஆட்டத்துக்குப் 'புக்' பண்ண எங்க இடத்தைத் தேடித்தான் வருவாங்க. அப்போ ஊர்ப் பெரியவர்களும் அவர்களுக்குத் துணையாக இருப்பவர்களும் அமாமுக்கே வருவாங்க. அங்க வந்து எங்களைத் தேர்ந்தெடுப்பாங்க. என்னோட குரு என்னக் காட்டிப் 'பாத்தீங்களா, எப்படி அழகு! இவள் எல்லாம் உங்க ஊர்ல வந்து ஆடனும்னா அதிகப் பணம் கொடுக்கணும். மத்தவங்க மாதிரி அப்படி இப்படி இல்ல' என்று என்னை அழைத்துக் காட்டுவார். 'ஆ...என்ன ரம்பா ஊர்வசி... சரி சரி மொலகில இருக்கா இல்லே பந்து வச்சு இருக்காளா' என்று ஆட்டத் துக்குப் புக் செய்ய வந்தவர்கள் கேட்க என்னோட குரு 'இல்ல இல்ல. எல்லாம் ஒரிஜினல். வேணும்னாப் பாத்துட்டுப் புக் பண்ணுங்க' என்று சொல்லி என்னைக் காட்டச் சொல்லுவார்.

காய்கறிக் கடையில் வெண்டைக்காய்களை ஒடித்து வாங்குவதைப் போலப் பார்த்துத் தேர்வு செய்தால்தான் பணம் கிடைக்குது. அதை விட்டால் வேறு வழி இல்லை. மானத்தை விற்று வயிறு பிழைக்க வேண்டிய நிலை! அது மட்டுமல்லாது மார்பகத்தைப் பிடித்துக்கூடப் பார்ப்பார்கள் சிலர்.

எல்லாம் ஓகே ஆனபிறகு ரேட் பேசுகின்ற நேரத்தில் ஐந்து பேருக்குத் தலைக்கு 500 ரூபாய் கொடுக்க வேண்டும் என்று கேட்டால் '500 ரூபாயா?' என்று கேட்பார்கள். 'ஆமாம் 500 ரூபாய்தான். உடுக்கும் உடையில் இருந்து மேக்கப்வரை நாங்களேதான் செய்துகொள்ள வேண்டும். அதற்கான செலவே தலைக்கு 300 ரூபாய் ஆகிவிடும். மிச்சம் மிஞ்சுவது தலைக்கு 200 ரூபாய்தானே' என்று பேரம் பேசுவோம். அவர்களிடம் மார்பகத்தைக் கொடுத்து, தலைமீது கை வைத்து நல்லா இருங்க என்று வாழ்த்தி, கால்களைப் பிடித்து ஓகே சொல்ல வைப்ப தற்குள் ஐந்து முறை கூல்டிரிங்ஸ், காபி, டீ என வாங்கிக் கொடுத்து ஓய்ந்து போய்விடுவோம்.

'இங்க பாருங்கம்மா பல லட்சம் செலவு செய்து திருவிழா நடத்துறோம். டான்ஸ் சூப்பரா இருக்கணும். போடும் உடை சூப்பரா இருக்கணும். இப்பக் காட்டுன ஆளுங்களத்தான் அனுப்பணும். காட்டிப்புட்டுக் கடைசியில முன்ன மாதிரி வீணாப்போனவங்கள அனுப்பக்கூடாது' என்று கட்டளைகள் போட்டு அட்வான்ஸ் கொடுத்துச் செல்வார்கள். எனக்குப் போகவே விருப்பம் இருக்காது. ஆனாலும் குருவுக்கு மதிப்புக் கொடுத்து டான்சுக்கும் போவேன்.

எனக்கு நன்றாக நினைவு இருக்கு. ஒரு முறை கர்நாடகாவில் ஒரு பெரிய கிராமத்தில் விநாயகர் பண்டிகைக்கு ஐந்துபேர் ஆடப்போயிருந் தோம். அங்கு எங்களுக்கு ஒரு பள்ளிக்கூடத்தில் மேக்கப் போடவும் தங்கிக் கொள்ளவும் இடம் ஒதுக்கி இருந்தனர். ஊர்க்காரர்கள் சிறியவர் முதல் பெரியவர்கள்வரை ஜன்னல் பக்கம் வந்து நின்றுகொண்டு வேடிக்கை பார்த்தனர். 'இவுங்க பொம்பளைங்களா? ஆம்பளைங் களா? பார்க்க நிஜப் பொம்பளையாட்டம் இருக்காங்களே, ஆனா குரலைப் பாத்தா ஆம்பளையாட்டம் இருக்கே' என்று பேசிச் சிரித்தார்கள். எங்களைப் புக் செய்த பெரிய மனிதர்கள் அவர்களை விரட்டிவிட்டு ஜன்னல்களை மூடிவிட்டார்கள். எங்களிடம் பாலியல் சேட்டைகளையும் செய்தார்கள். எங்கு பகைத்துக் கொண்டால் ஊர் விட்டு வந்த இடத்தில் விபரீதம் ஆகிவிடுமோ என்று பயந்து அவர் களின் இச்சைகளுக்கு இணங்க வேண்டி ஆயிற்று. ஊர்ப் பெரிய மனிதர்கள் பள்ளியில் இதுபோல் நடந்து கொள்வது எனக்கு மனசுக்குக் கஷ்டமாக இருந்தது. அதன் பிறகு வேண்டிய பானங்களும் சாப்பாடும்

வாங்கிக் கொடுத்து எங்களை மேக்கப் போட்டு அழைத்துச் சென்று சாமி ஊர்வலம்முன் ஆடவைத்தார்கள்.

ஊர்க்காரர்கள் உடன் ஆட வேண்டும். ஒருவனுக்கு ஒருவன் ஆடுவதற்குச் சண்டை போட்டுக் கொள்வார்கள். அப்போது பயமாக இருக்கும், எங்கு சண்டை பெரிதாகி நமக்கு ஏதாவது தொந்தரவு வந்துவிடுமோ என்று. அதனால் ஆடப்போன நாங்கள் ஐந்துபேரும் ஒற்றுமையாக, பாதுகாப்பாக எல்லாக் கஷ்டங்களையும் சமாளித்துக் கொண்டிருப்போம். இரவு சாமி ஊர்வலம் புறப்பட்டு ஊரில் உள்ள எல்லா வீதிகளிலும் சுற்றிக் கடைசியாக ஏரியில் கரைப்பதற்கு விநாயகரை விடும்வரை இரவு பத்து மணியிலிருந்து அதிகாலை 6 மணி வரை ஆடவேண்டும். அதன்பிறகு மேக்கப் களைத்துவிட்டு மீதிப் பணத்தை வாங்கிக்கொண்டு பஸ் பிடித்துப் பெங்களூர் வருவோம்.

நான் நினைத்துக் கொள்வேன். ஆடிப் பிழைக்கலாம் என்றாலும் அங்கும் உடலைக் கொடுத்துத்தான் ஆடிப் பிழைக்க வேண்டுமா? அதற்கு அந்த வேலையை விட்டுவிட்டு உடலை வித்தாவது பிழைக்கலாம் என்று. போலீஸ், ரவுடிகளின் தொல்லை இருந்தாலும் சிறிது காலம் போகாமல் பயந்து இருந்தாலும் மனதை உறுதிப்படுத்திக் கொண்டுதான் போக வேண்டும். நல்லதோ கெட்டதோ எது நடந்தாலும் கடவுள்மீது பாரத்தைப் போட்டுவிட்டுத்தான் செல்வேன். பெங்களூரில் ஐந்து வருடப் போராட்டம். பல கஷ்டங்கள். வன்முறைகள். இவை எல்லாம் பொறுத்துக் கொண்டும் வெளியில் சொல்ல முடியாமலும் யார் யாரிடமோ அடிவாங்கி, உதை வாங்கிச் சம்பாதித்த பணத்தை அவ்வப் போது அப்பாவிடம் கொடுத்து வைப்பேன். அப்பாவோ என் பணத்தை அப்பா அம்மாவுக்குச் சொந்தமான பழைய வீட்டைப் புதிதாகவும் பெரிதாகவும் கட்டத் தொடங்கினார்.

நான் பாலியல் தொழில் செய்துதான் பணம் கொண்டுவந்து கொடுக்கிறேன் என்று தெரியாது. உண்மையாக நான் ஆடப்போவேன், சினிமாவில் சிறுசிறு காமெடியாக நடிப்பேன், பாப் மியூசிக்கில் ஹீரோவை விரட்டுவது போல, ஐஸ்கிரீம் விளம்பரத்தில் ஐஸ்கிரீம் கேட்பதுபோல், இப்படி இந்த சினி உலகில் எங்களை விளம்பரத்துக்கும் காமெடிக்கும் காட்டும் காட்சிகளில் நடிப்பேன். அதில் கிடைக்கும் பணத்தைத்தான் கொடுப்பதாகச் சொல்வேன். உண்மையில் அதில் கிடைக்கும் பணம் குருவுக்கு, எங்களை அழைக்கும் பார்ட்டிகளுக்குப் போக 500 ரூபாய் மிச்சம் இருந்தாலே அதிகம். அதை வைத்துக்கொண்டு ஒரு புடவைகூட வாங்க முடியாது. என் மகன் சம்பாதிக்கிறான் என்ற ஆவலோடு அப்பா வீட்டு வேலைகளை மும்முரமாகச் செய்தார். நான் கொடுத்த பணம் அப்பாவுக்குப் போதாது. அவரும் அவருடைய

உழைப்பையும் பணத்தையும் செலவு செய்து என விருப்பப்படி வீடு கட்டும் பணிகளைச் செய்து வந்தார்.

போலீஸ் கெடுபிடியால் சில நாட்கள் கழித்து மீண்டும் வெளியில் சென்றேன். அன்று நடந்து நடந்து கால் வலி வந்ததே தவிர ஒரு கிராக்கிகூட அகப்படவில்லை. ஏன் என்று கேட்கவும் யாரும் இல்லை. மன உளைச்சல் அதிகமானது. ஒரு 200 ரூபாய்க்கு ஒரு கிராக்கி கிடைத்தால்கூடபோதும். இன்றைய 100 ரூபாய் குருவுக்குக் கொடுக்கவும் என் செலவுக்கு 100 ரூபாயும் கிடைக்குமே என்று நினைத்தேன். மணி இரவு எட்டு மணிக்குமேல் ஆகிவிட்டது. அதிக நேரம் ரோட்டில் சுத்தினால் போலீஸ் கண்களிலும் ரவுடிகளின் கண்களிலும் விழுந்து விடுவேனோ என்ற பயத்தில் ஓர் இருட்டான பகுதியில் நின்று கொண்டேன். சில கார்கள் என்னிடம் வந்து நிற்க அதில் ஏறிச் செல்ல அவன் இறக்கிவிட என்று இருந்தது அன்று. இன்று யார் முகத்தில் முழித்தனோ தெரியவில்லை. ஒரு கிராக்கிகூட அமையவில்லை. எல்லாரும் வண்டியில் ஏற்றி ஏற்றி இறக்கி விடுகின்றனரே என்று டென்ஷன் ஆகிப் போனேன்.

மீண்டும் ரோட்டில் நின்று கொண்டிருக்கையில் ஒரு மாருதி வேன் என் முன் வந்து நின்றது. கண்ணாடி இறங்கியதும் தலையை உள்ளே விட்டு எட்டிப் பார்த்தேன் ஓட்டுநர் தவிர வேறு யாரும் இருக்கின்றனரா என்று. யாரும் இல்லை. கிராக்கியிடம் 500 ரூபாய் என்றேன். சரி என்றான். ரூம் இருக்கா என்றேன். 'இல்லை. சிட்டியை விட்டு அவுட்சைட் போகலாம். அங்கு வண்டியை நிறுத்திக் காரிலேயே' என்று அவன் கூற நானும் வண்டியில் அமர்ந்தேன். 'என்ன உங்க குரல் ரஃப்பாக இருக்கிறதே? நீங்க பெண்ணா இல்லை கோஜாவா?' என்று கேட்டான். 'நான் பெண் இல்லை' என்றேன். காரை நிறுத்தி 'இறங்குடா தாயோளி' என்று திட்டினான். 'எதற்குத் திட்டுற? நீதானே என்னை உட்கார வைத்துக் கொண்டாய். இப்போ நீயே இறக்கியும் உடுற. உன்னைப் போல பத்து பேர் இப்படி ஏத்தி இறக்கிவிட்டா நான் எப்படிப் பொழப்பு நடத்துறது? உங்களால நேரம் வீணாகுது. பப்ளிக்கா நோட்டட் ஆகிப் போகுது. ச்சீ ச்சீ, நீங்கள் எல்லாம் மனிதர்கள்தானா?' என்று கூறி இறங்கிவிட்டேன்.

அவனும் கீழே இறங்கி வந்து 'கோஜா என் மகனே, யாரைப் பாத்துச் சீ சீங்கற? யாரைப் பாத்து மனுஷனான்னு கேட்கிற?' என்று ரோட்டில் என்னை முடியை வளைத்துப்போட்டுக் கால்களால் உதைத்தான். சரமாரியாக என்னைத் தாக்கியவன் வண்டியில் உள்ள கத்தியை எடுத்துவந்து என் முகத்தில் அறுக்கப் பார்த்தான். பயந்துபோய் அந்தக் கத்தியைத் தட்டிவிடும்போது என் இடது கையில் கிழித்துவிட்டது. ஓட

முயன்ற என்னைப் புடவையை இழுத்துப் பிடிக்க முயன்றான். என் புடவையை உருவி என்னைப் பாவாடை ஜாக்கட்டுடன் ஆக்கிவிட்டான். எவ்வளவோ ஜனங்க நடமாட்டம் இருந்தும் கார், பைக் என ஓடியும், பெரிய பெரிய கடைகள், ஓட்டல்கள், நிறுவனங்கள் இருந்தும் ஏன் என்று கேட்க ஒரு நாதியும் இல்லாமல் போனேன்.

அவனிடம் இருந்து தப்பித்துக்கொள்ள ஒரு பெரிய வளாகத்தின் 'கேட்' டை நோக்கிப் பாவாடை ஜாக்கட்டுடன் ஓடினேன்.கேட்டைத் திறந்து உள்ளே ஓட முயன்ற என்னை வாட்ச்மேன் தடுத்தான். உள்ளே விட மறுத்தான். அவனைத் தள்ளிவிட்டு என் மானத்தையும் என்னையும் காப்பாற்றிக் கொள்ள உள்ளே அன்டர்கிரவுண்ட் பகுதிக்கு ஓடினேன். அங்கு கார் பார்க்கிங்கில் நிறையக் கார்கள் நின்றுகொண்டிருந்தன. அங்கு போய் ஒளிந்துகொண்டேன். என்னை அடித்தவன் என் புடவையை அந்த வளாகத்தின் கேட்மீது வீசிவிட்டுச் சென்றுவிட்டான். அந்தப் புடவையை வாட்ச்மேன் ஒரு குச்சியில் எடுத்துக்கொண்டு வந்து என் அருகில் போட்டான். அது கிழிந்த நிலையில் இருந்தது. அதை அவசர அவசரமாகக் கட்டிக்கொண்டு அங்கிருந்து வெளியில் வந்து ஆட்டோ பிடித்து அமாமுக்கு ஓடிவிட்டேன். எனக்கு மானமே போய்விட்டது. எத்தனை பேர் வேடிக்கை பார்த்தனர். உதவி செய்யக் கூட எனக்கு யாரும் முன்வரவில்லையே. என்ன உலகம் இது என்று வருத்தப்பட்டேன்.

மாதக் கடைசி என்றால் போலீஸ்களுக்குக் கேஸ் வேண்டும் என்று என்னை ஒருமுறை கருவியாகப் பயன்படுத்திக் கொண்டனர். நான் ரோட்டில் நடந்து சென்றுகொண்டிருந்தேன். திடீரென்று நாலாப் பக்கமும் இருந்து ஐந்து பேர் வாட்டசாட்டமாக என்னைக் கோழி அமுக்குவதைப்போல் அமுக்கிப் பிடித்துக்கொண்டனர். எனக்கு யாரோ தெரியவில்லையே, ரவுடிகள்போல இருக்கே, இன்னிக்குச் செத்தோம்னு நினைச்சுப் போலீஸ் போலீஸ் என்று கூச்சல் போட்டேன். 'ஏய் நாங்கதான் போலீஸ். இங்க எதுக்கு நிக்கற? எங்களுக்குப் புகார் வந்திருக்கு. உங்களால பெரிய தலைவலியாப் போச்சு. பெரிய அதிகாரிகள் எங்களை உஷார்படுத்தி இருக்கின்றனர். உன்னைப் போன்றவர்களைப் பிடித்து ஜெயிலில் போட. நீ எங்களை என்ன நினைத்துக்கொண்டாய்? ரொம்ப நாளாகவே உன்னைக் கண்காணித்து வருகின்றோம். எங்கள் கண்களில் மிளகாய்ப் பொடி தூவிவிட்டு ஓடிப் போகிறாயா? இன்று வசமாக மாட்டிக் கொண்டாய். நட ஸ்டேஷனுக்கு. கேஸ் புக் பண்ணி ஒரு ஆறுமாதத்துக்கு உள்ளே தள்ளுனாத்தான் சரியா இருக்கும்' என்று என்னைக் கை, முடி, இடுப்பு என ஐந்துபேரும் பிடித்துக்கொண்டனர்.

'ஐயோ சாமி தெரியாம இந்தப் பக்கம் வந்துட்டேன். வயிற்றுப் பொழப்பு. என்ன ஒன்றும் பண்ணிடாதீங்க. என்னை விட்டுடுங்க. உங்களுக்குக் கோடி புண்ணியம்' என்று அழுதேன். 'ஏய் வாயை மூடு. இதே டயலாக்க எத்தனை முறை எத்தனை பேரு சொல்லுவீங்க. எங்கியாவது வீட்லவேலை செஞ்சோ, கூலிவேலை செஞ்சோ பிழைக்கக்கூடாதா? இங்க ரோட்டுக்கெல்லாம் வந்து எங்களுக்குத் தலைவலியை ஏன் கொடுக்கிறீங்க? இந்த ரோடெல்லாம் விஜபிங்க வர்ற போற இடம். இங்க உங்கள மாதிரி ஆளுங்க வரலாமா? எத்தனை வி ஐ பிங்களுக்கு உங்களால தொந்தரவு. போன்மேல போன் ஸ்டேஷனுக்கு வருது. பெரிய அதிகாரிங்க எங்கள இதையெல்லாம் பாக்காம மயிரைப் புடுங்கிக்கிட்டு இருக்கீங்களான்னு கேட்கிறாங்க. உங்களால எவ்வளவு தொந்தரவு தெரியுமா? மரியாதையா நட ஸ்டேஷனுக்குப் போகலாம்' என்று என்னை ஐந்துபேரும் இழுத்தனர். உண்மையாக இவர்கள் போலீஸ்தானா என்ற சந்தேகம் ஒரு புறம் இருக்கத் தப்பித்து ஓட முடியாமல் வலைபோட்டதுபோல் என்னைப் பிடித்திருந்தனர். இன்று என்ன நடக்கப் போகிறதோ என்று பயம் ஒருபுறம் இருந்தது.

'மரியாதையா எங்களுக்கு ஒரு பத்துக் கிராக்கிகளப் புடிக்கச் சப்போட் பண்ணு, உன்னை நாங்க விட்டுடறோம்' என்றார்கள். பத்துக் கிராக்கியைப் புடிக்க நான் சப்போட் பண்ணணுமா? அது எப்படி என்று கேட்டேன். நீ எப்பவும்போல ரோட்ல நின்னுட்டு இரு. உங்கிட்ட வந்து யாராவது பேசினாப் பேச்சுக் கொடு. ரேட் எவ்வளவுன்னு கேட்டா உன்னோட பாணில பேசு. நாங்க வந்து அவனப் புடிச்சுக்குவோம். நாங்க உன்னச் சுத்தித் தலைமறைவா நின்னுக்கிட்டு இருப்போம். கிராக்கிக்குச் சிக்னல் கொடுத்துப் போக வச்சாலோ தப்பி ஓட நினைச்சாலோ உன்னைத் தலைகீழாக் கட்டிச் சூத்துமேல லாட்டில அடிச்சுத் தோல உரிச்சுப்புடுவோம் என்று சொல்லி மரச் சந்துகளிலும் பில்டிங் ஓரமாகவும் போய் ஒளிந்துகொண்டார்கள்.

காரில் செல்பவர்கள், மோட்டார் பைக்கில் செல்பவர்கள், நடந்து செல்பவர்கள் என்று என் அருகில் வந்து நின்றாலே போதும் அவர்களின் வண்டிகளைப் பக்கத்தில் உள்ள பில்விங் அன்டர்கிரவுண்ட் பார்க்கிங்கில் நிறுத்தச் சொல்லி அவர்களைப் பிடித்துப் போலீஸ் வேனில் ஏற்றினார்கள். என்னிடம் வந்து பேச வாயைத் திறப்பதற்குள் மறைந்து இருக்கும் போலீஸ்கள் சுற்றி வளைத்துக்கொண்டு முதலில் அவர்களின் வண்டிச் சாவிகளை எடுத்துக்கொண்டு அதன்பிறகு கிராக்கிகளைச் சட்டையைப் பிடித்து இழுத்துச் சென்றனர். என் அருகில் வந்து பேசத் தொடங்கியவர்கள் எதற்காக வந்து நின்றனர் என்றுகூட எனக்குத்

தெரியாது. மற்றவர்களுக்கும் தெரியாது. அது என்னை அழைத்துச் செல்லவோ, செக்ஸ் வைத்துக்கொள்ளவோ, அட்ரஸ் கேட்கவோ, எங்கு போகணும் என்று கேட்கவோகூட இருக்கலாம். ஆனால் போலீஸ்காரர்களோ அதை எல்லாம் பொருட்படுத்தாமல் பிடித்துப் பிடித்துச் சென்றனர். போலீஸ் சட்டென்று சுற்றிவளைத்து வண்டிச் சாவியை எடுத்துக்கொண்டு அவர்களைப் பிடித்துக் கொள்ளும்போது கிராக்கிகள் ஷாக் ஆகிவிடுகின்றனர். ஒரு சிலர் நான்தான் ரவுடிகளை விட்டுப் பணம் பறிக்க இதுபோன்ற வேலை செய்வதாக நினைத்தனர். போலீஸ் வேனில் ஏற்றும்போதுதான் அவர்களுக்கே விஷயம் தெரிய வந்தது. அன்று சுமார் இரண்டு மணி நேரம் என்னை அப்படியே நிற்க வைத்து பதினைந்து பேர்களைப் பிடித்தனர்.

என்னைப் பார்ப்பவர்களையும் என் அருகில் வந்து பேசுபவர்களை யும் பேச வேண்டாம் பார்க்க வேண்டாம் என்று கண்ஜாடை காட்டிச் சொல்லவும் முடியவில்லை.மேலும் யாராவது என் அருகில் வந்து விடக்கூடாதே சாமி என்று நினைத்தாலும் அன்றைக்குப் பார்த்து டக் டக்கென்று நிறையப் பேர் வந்து பேச நினைத்தனர். என்ன நேரமோ தெரியவில்லை, சிலநேரங்களில் ஏன் நிற்கிறேன் என்று கேட்கக்கூட நாதி இருக்காது. இன்று பார்த்து இப்படி ஆகிவிட்டதே என்று மனதில் புலம்பிக்கொண்டேன். பாவம் யார் யார் எப்படிப்பட்டவர்களோ, எதற்காக நின்றார்களோ இப்படி அநியாயமாக அவர்களைப் பிடித்துப் போகின்றார்களே என்ன ஆகப்போகிறதோ என்று பயமாக இருந்தது.

மூத்த அதிகாரியின் ஜீப் ஒன்று வந்தது. அதன் பிறகு என்னையும் பிடித்தவர்களோடு வண்டியில் ஏறச் சொன்னார்கள். 'ஐயா சாமி நீங்க சொன்னமாதிரி நின்னுக்கிட்டு இருந்தேன். நீங்களும் கிராக்கிகளைப் பிடித்துக் கொண்டீர்கள். தயவு செய்து என்னை விட்டுவிடுங்கள்' என்று கத்திக் கதறிக் காலில் விழுந்தேன். என் பின்பகுதியில் குச்சியால் ஓங்கி ஒரு அடி கொடுத்து 'ஓடு. இனி இந்தப் பக்கம் உன்னைப் பார்க்கவே கூடாது' என்று சொல்லி விரட்டிவிட்டார்கள்.

பிடித்தவர்களை எங்கு கொண்டு சென்றனர், என்ன செய்தனர் என்று எனக்குத் தெரியாது. நினைத்துக்கொண்டேன். அவர்களிடம் காசு பணம் பிடுங்கிக்கொண்டு அனுப்பி இருப்பார்கள். எதுவாக இருந்தாலும் பிடிபட்ட அனைவரும் என்னைத்தான் தவறாக நினைத் திருப்பார்கள். போலீசுக்கு ஆள்காட்டி என்று நினைத்திருப்பார்கள். எப்போதாவது ரோட்டில் வைத்து ஆசிட் ஊற்றுவார்கள் என்று அஞ்சினேன். அதனால் அந்த ரோட்டுக்கோ வெளியிலோ இனித் தொழில் செய்யப் போகக்கூடாது என்று முடிவு செய்தேன். நான் அன்றுபட்ட வேதனையும் பயமும் துடிப்பும் இன்று நினைத்தாலும்

வேதனையாக இருக்கிறது. அமாமில் கிடைக்கும் வருமானமோ சாப்பிடவும் துணிமணிக்கும் பற்றாது. என்ன செய்வது, எப்படியாவது வாழ்க்கை நடத்தித்தானே ஆகவேண்டும். சிறிது நாட்கள் ஊருக்குச் சென்று வரலாம் என்று சென்றுவிட்டேன்.

---

# 19

ஊரில் இருக்கும் வெயில், பஸ்ஸில் இருக்கும் கூட்டம் இவை எல்லாம் எனக்கு ஒத்துவரவில்லை. உச்சந் தலையில் இருந்து பாதம் வரை வேர்த்துத் தண்ணீராக ஓடும். ஜாக்கட் நனைந்துவிடும். மேலும் அந்தப் பஸ்ஸில் நான்தான் மிகப் பெரிய பொம்பளையா இருப்பேன். என் உடல் பருமன், வளர்த்தி ஆகையால் பஸ்ஸில் உள்ளவர்கள் என்னையே பார்ப்பார்கள். என்னைப் பற்றித் தெரிந்தவர்கள் அடுத்தவர்களிடம் கூறிச் சிரிப்பார்கள். பள்ளிக்குச் செல்லும் மாணவ மாணவிகள், கல்லூரி செல்பவர்கள் முதற்கொண்டு பலரும் என்னை விமர்சித்துக்கொண்டும் சிரித்துக்கொண்டும் வருவார்கள். பஸ்ஸின் நெருக்கடியில் வேண்டுமென்றே சிலர் என் பின்பகுதியில் இடித்து உரசிக்கொண்டு வருவார்கள். முதுகுப் பக்கம் வாயால் காற்றையும் ஊதிவிடுவார்கள். எனக்கோ இந்தச் செயல்களும் அடுத்தவர் சிரிப்பதும் நரகத்தில் இருப்பதைப்போல இருக்கும்.

அடிக்கடி ஊருக்குச் செல்வதால் ஏதாவது வேண்டுமானால் டவுனுக்குத்தான் போக வேண்டும். அப்படி டவுனுக்குப் போனால்கூட டவுன் பஸ்ஸில், ரோட்டில் எல்லாரும் விசித்திரமாகப் பார்ப்பது எனக்குப் பிடிக்கவில்லை. இனி டவுன் பஸ்ஸில் போகக்கூடாது என்று மனதில் நினைத்துக்கொண்டு அந்தச் சமயம் புதிதாக அறிமுகம் ஆன கெனட்டிக் ஹோண்டா வண்டியை வாங்க ஆசைப்பட்டேன். எனக்கு டவுனுக்குப் போய்வர வண்டி வேண்டும் என்று அப்பாவிடம் கூறினேன். 'உனக்கு எதற்கு வண்டி? நீ பெங்களூரில் இருக்கிறாய். இங்கு வாங்கிச் சும்மாதானே நிறுத்திவைக்கப் போகிறாய்? இரண்டு நாளைக்கு ஓட்டுவதற்கு எதற்கு வண்டி வாங்குகிறாய்? என்னோட மோட்டார் பைக் எடுத்துக்கொண்டு போய்வா' என்றார்.

அப்பாவோட மோட்டார் பைக் பெரியது. அதன் சத்தமோ ஊரே கேட்கும் அளவில் இருக்கும். அதுவும் பெண்கள் யார் அதுபோல வண்டியை ஓட்டுகின்றனர்? அப்படியும் நான் அதை ஓட்டிக்கொண்டு

போனால் என்னைப் பார்க்காதவர்கள்கூடப் பார்த்துச் சிரிப்பார்கள். எனக்குப் பெண்கள் ஓட்டும் வசதி உடைய அந்த கைனடிக் ஹோண்டா தான் வேண்டும் என்று உறுதியாகக் கூறி அப்பாவைக் கடைக்குக் கூட்டிச் சென்றேன். கடைக்குச் சென்றபிறகும்கூட அப்பாவுக்கு நான் கைனட்டிக் ஹோண்டா வாங்குவதில் விருப்பம் இல்லை. காரணம் கைனட்டிக் ஒரு லிட்டருக்கு 30 கிலோமீட்டர்தான் போகும். மேலும் நான் பெங்களூரிலிருந்து ஊருக்கு வந்தால்தான் அந்த வண்டியை ஓட்டுவேன். மற்ற நாட்களில் கைனட்டிக் சும்மாவே நின்றால் பேட்டரி, வண்டி பழுதாகி விடும் என்று அப்பா நினைத்தார்.

என்னை டிவிஎஸ் 50 வண்டியை எடுத்துக்கச் சொல்லி வற்புறுத் தினார். இது 80 கிலோமீட்டர் கொடுக்கும். இதை வாங்கிக் கொண்டால் உனக்கு நன்றாக இருக்கும் என்றார். எனக்கு டி வி எஸ் பிடிக்கவில்லை. என் உருவத்திற்கு இந்தக் கைனட்டிக் ஹோண்டாதான் பொருத்தமாக இருக்கும். ஆட்டோ மேட்டிக் கிர், கையில் ஸ்டார்ட், நான் ஓட்டிக் கொண்டு போனால் அதுக்கு மதிப்பே வேறு என்று கைனட்டிக் ஹோண்டாவே வாங்கிக்கொள்ள அடம் பிடித்தேன். என் அப்பா வுடன் பேசும்போது கடைக்காரர்கள் எங்கே என்னை அடையாளம் கண்டு கொள்வார்களோ என்று மெதுவாகப் பேசினேன். ஒரு வழியாகக் கருஞ்சாம்பல் நிறம் கொண்ட கைனடிக் ஹோண்டாவைத் தேர்ந்தெடுத்தேன். 34 ஆயிரம் ரூபாய். மேலும் எக்ஸ்ட்ரா பிட்டிங்ஸ் என்றும், இன்சூரன்ஸ் என்றும் 40 ஆயிரம் ஆயிற்று.

நான் கொண்டுசென்ற பணத்தைக் கொடுத்துவிட்டு வண்டியை என் பெயருக்கு ரிஜிஸ்ட்ரேஷன் செய்துகொள்ளக் கேட்டேன். என் பெயரில் எழுதவேண்டும் என்றால் அட்ரஸ் புரூப் வேண்டும் என்று வீட்டு ரேஷன் கார்டு கேட்டனர். வீட்டு ரேஷன் கார்டிலோ துரைசாமி என்று ஆண் பெயரில் இருக்கிறது. என்ன செய்வது என்று புரியவில்லை. இவ்வளவு நேரம் கடைக்காரர்கள் என்னைப் பெண்ணாக நினைத்துக் கொண்டு இருக்கின்றனர். இப்போது ரேஷன் கார்டில் உள்ள பெயர் நான்தான் என்றால் என்ன நினைப்பார்கள் என்று எனக்கு வெட்கமாக இருந்தது. அப்பா என்னைக் கடையிலேயே இருக்கச் சொல்லிவிட்டு ரேஷன் கார்டு எடுத்துவர வீட்டுக்குச் சென்றுவிட்டார்.

அப்பா ரேஷன் கார்டைக் கொண்டுவந்து என் கையில் கொடுக்க கடைக்காரரிடம் வெட்கப்பட்டுக் கொண்டு மெதுவாக நான் பெண்ணாக மாறி இருக்கும் விஷயத்தைக் கூறி ரேஷன் கார்டில் உள்ள என் பெயரைச் சொல்லி ரேவதி என்ற பெயருக்கு ஆர் சி புக் கொடுக்க முடியுமா என்று கேட்டேன். அந்தக் கடைக்காரர் திகைத்துப் போனார். என்னைக் கீழ் இருந்து மேல் நோக்கி ஒரு பார்வை

பார்த்தார். எனக்குக் கஷ்டமாக இருந்தாலும் வேலை ஆக வேண்டுமே என்று அடக்கத்துடன் இருந்தேன். ரேவதி என்ற பெயருக்கு மாற்ற இயலாது. உங்கள் பெயர் ரேஷன் கார்டில் என்ன இருக்கிறதோ அந்தப் பெயரில்தான் ஆர் சி புக் கொடுக்க முடியும் என்றார். நானும் வேறு வழி இல்லாமல் துரைசாமி என்ற பெயரில் ஆர் சி புக் வாங்கிக் கொண்டேன். நான் முதன்முறையாகக் கெனடிக் ஓட்டுவதால் பயமாக இருந்தது. இருந்தாலும் இதற்குமுன் அண்ணன்களின் வண்டிகள் டி வி எஸ் ஓட்டி இருக்கேன். அந்தத் தைரியத்தில் ஓட்டினேன். பயம் போயிற்று. என்னுடைய குலதெய்வக் கோயிலுக்கு வண்டியிலேயே சென்று பூஜை போட்டுக்கொண்டு வந்தேன்.

எல்லாரையும் போல நானும் சட்டத்தை மதிக்க வேண்டும் என்று என் வண்டியை ஓட்ட லைசென்ஸ் எடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒரு தனியார் ஓட்டுநர் பயிற்சிப் பள்ளியை நாடினேன். அங்கு ரேவதி என்ற பெயரில் லைசென்ஸ் பெற்றுத்தர முடியுமா என்று கேட்டேன். அவர்களும் என் ரேஷன் கார்டில் உள்ள பெயரை ரேவதி என்று மாற்றிக் கொண்டு எல் ஐ சி பாலிசி எடுத்து (ரேவதி என்ற பெயரில்) அந்தக் காப்பியும் கொடுக்கச் சொன்னார்கள். அப்பா ரேஷன் கார்டில் உள்ள என் பெயரை மாற்றித் தருவதாகக் கூறித் தாசில்தார் ஆபீஸ் சென்று எழுதிக் கொடுத்தார். என் பெயர்மீது பேனாவால் அடித்துவிட்டு ரேவதி என்று எழுதி தாசில்தாரின் கையெழுத்தும் அலுவலக சீலும் வைத்துக் கொடுத்தனர். மேலும் நான் ரேவதி எனும் பெயரில் 150 ரூபாய் கட்டி எல் ஐ சி பாலிசி செய்த காப்பியும் இணைத்து ஓட்டுநர் பயிற்சிப் பள்ளியில் கொடுத்தேன். அவர்கள் லைசென்ஸ் விதிமுறைகள் கொண்ட படிவங்களை நிரப்பி என்னைக் காலை 10 மணிக்குப் பிரேக் இன்ஸ்பெக்டர் அலுவலகத்துக்கு வரச் சொன்னார்கள். நானும் மறுநாள் அங்குச் சென்றேன்.

பிரேக் இன்ஸ்பெக்டரின் ஆபீசுக்கு வெளியில் சற்று தூரம் ரோட்டில் ஒரு வரிசையாக நிறையப் பேர் நின்று கொண்டிருந்தனர். என்னையும் அந்த வரிசையில் நிற்கச் சொல்லி என்னிடம் லைசென்ஸ் எடுப்பதற்குத் தேவையான காப்பிகளை ஓட்டுநர் பயிற்சியாளர் கொடுத்துவிட்டு 2000 ரூபாய் வாங்கிக் கொண்டார். ‘நீங்கள் வரிசையில் நின்று கொண்டிருங்கள். இன்ஸ்பெக்டர் அருகில் வரும்போது நான் வருகிறேன்’ என்று கூறிச் சென்றுவிட்டார். நான் காலை பத்து மணியி லிருந்து மதியம் பன்னிரெண்டு மணிவரை நின்றேன். வரிசை மெது வாகச் சென்றது. ஒரு ஜீப்பில் பிரேக் இன்ஸ்பெக்டர் ஒவ்வொருவராகப் பார்த்துக்கொண்டிருந்தார். என்னுடைய காப்பிகளைக் கையில் பிடித்துக்கொண்டு இன்ஸ்பெக்டர் அருகில் சென்றேன். காப்பிகளைக்

கொடுத்தேன். இன்ஸ்பெக்டர் அதை வாங்கிப் பார்த்தார். என்னையும் பார்த்தார். அப்போது ஓட்டுநர் பயிற்சியாளரும் அங்கு வந்தார். அவர் இன்ஸ்பெக்டரிடம் பணம் கொடுத்து என்னைப் பற்றிக் கூறினார். அவருக்குப் பணம் போதவில்லையோ என்னவோ எனக்குத் தெரியாது. 'இதுபோன்ற கேஸ் இங்கு வந்தது இல்லை; லைசென்ஸ் கொடுக்க முடியாது' என்று கூறி அந்தக் காப்பிகளை விட்டெறிந்தார்.

அதைப் பார்த்து எனக்குக் கடுமையாகக் கோபம் வந்தது. 'என்ன சார் இப்படித் தூக்கி எறிகின்றீர்கள்? நான் செய்த தவறு என்ன? நியாயமாகச் சட்டத்தை மதித்து லைசென்ஸ் எடுத்து வண்டியை ஓட்ட வேண்டும் என்றுதானே லைசென்ஸ் எடுக்க வந்தேன். மரியாதை இல்லாமல் இப்படித் தூக்கிப் போடுகின்றீர்கள். ஏன் என்னைப் போன்றவர்களுக்கு லைசென்ஸ் கொடுக்கச் சட்டத்தில் இடம் இல்லையா? நான் என்ன ஊரை ஏமாத்தவா லைசென்ஸ் கேட்கிறேன்? உங்களுக்குத் தேவையான காப்பிகளைக் கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் லைசென்ஸ் கொடுக்க மறுப்பது ஏன்?' என்று கோபமாகக் கேட்டேன். இன்ஸ்பெக்டர் பதிலுக்கு 'இங்க பாரும்மா, இங்க இதுபோலக் கேஸ் வந்தது இல்லை. உனக்கு லைசென்ஸ் கொடுக்க எனக்கு உரிமை இல்லை. மேலிடத்தில் இதைப் பற்றிக் கூறுகிறேன். அதன் பிறகு பார்க்கலாம்' என்றார்.

'லைசென்ஸ் கொடுக்க உங்களைவிட மேலதிகாரி யார்? நீங்கள் தானே? எனக்கு லைசென்ஸ் கொடுப்பதில் என்ன குறை கண்டீர்கள்? இதுபோன்ற கேஸ் என்கிறீர்களே? நான் ஆணாகப் பிறந்து பெண்ணாக மாறியுள்ளேன். என் பெயரில் ரேவதி என்று எல்ஐசி பாலிசி செய்துள்ளேன். ரேஷன் அட்டையில் என் பெயரை ரேவதி என்று மாற்றி உள்ளேன். இன்னும் உங்களுக்கு என்ன லைசென்ஸ் கொடுக்க? நான் இந்த லைசென்சைப் பெற்றுத் தீவிரவாதம் செய்யப் போகின்றேனா? அல்லது வன்முறையில் ஈடுபட வேண்டி லைசென்ஸ் கேட்கிறேனா? எல்லாரையும் போல சட்டத்தை மதிக்க வேண்டும் என்றுதானே லைசென்ஸ் எடுக்க வந்தேன். எனக்கு லைசென்ஸ் கொடுக்கவில்லையென்றால் நான் லைசென்ஸ் எடுக்காமலேயே வண்டியை ஓட்டுவேன். நாளை லைசென்ஸ் எங்கே என்று யாராவது கேட்டால் உங்களைத்தான் கூறுவேன். லைசென்ஸ் ஆண்களுக்கும் பெண்களுக்கும் மட்டும்தானாம், என்னைப் போன்றவர்களுக்கு இல்லையாம் என்று டிவி முதல் நியூஸ் பேப்பர் வரை பேட்டி கொடுப்பேன்' என்று பிரேக் இன்ஸ்பெக்டரைப் பார்த்துக் கூறினேன்.

ஓட்டுநர் பயிற்சியாளர் 'அம்மா சத்தம் போடாதீர்கள். உங்களுக்கு லைசென்ஸ் கிடைக்கும்' என்று என்னைச் சமாதானப்படுத்தப்

பார்த்தார். மேலும் 500 ரூபாய்த் தாளை எடுத்து என் காப்பிகளை இணைத்துக் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்ட இன்ஸ்பெக்டர் 'நாளை கிராம நிர்வாக அதிகாரியிடம் நீதான் துரைசாமி என்றும் இப்போது ரேவதியாக இருக்கிறார் என்றும் ஒரு கடிதம் வாங்கி வா' என்று கூறி என்னை அனுப்பிவைத்தார்.

மறுநாள் கிராம அதிகாரி எழுதிக் கொடுத்த கடிதத்துடன் பிரேக் இன்ஸ்பெக்டர் அலுவலகம் சென்றேன். என்னை வண்டியை ஓட்டிக் காட்டக் கூறினார். நானும் ஓட்டினேன். அதன் பிறகு என்னைப் போட்டோ எடுத்துக்கொண்டு ஒருவாரம் கழித்து வரச் சொன்னார். நானும் ஒருவாரம் கழித்துச் சென்று என்னுடைய லைசென்சை வாங்கினேன். அதில் ஆண் பெண் என்று குறிப்பிடவில்லை. ரேவதி என்கிற துரைசாமி என்றுதான் கொடுத்தனர். என்ன செய்வது, ரேவதி என்று பெண் பெயரில் லைசென்ஸ் எடுக்க எத்தனை அலைச்சல். வெறும் 150 ரூபாயில் முடியும் வேலைக்கு 2000 ரூபாய் செலவு செய்ய வேண்டியதாயிற்று. இந்த உலகத்தில் என்னைப் போன்றவர்கள் நியாயமாக நடந்துகொள்ள, சட்டத்தை மதிக்கக்கூட வழிகாட்ட யாரும் இல்லையா? எது எப்படியானால் என்ன? லைசென்ஸ் கிடைத்து விட்டது. அதுபோதும் எனக்கு.

என்னைத் தெரியாதவர்கள்கூட நான் வண்டி வாங்கி ஓட்டிய பிறகு என்னைத் தெரிந்து வைத்திருந்தனர். டவுனில் ஏதாவது கடைகளில் காய்கறி வாங்கினாலோ, மளிகைப் பொருள்கள் வாங்கினாலோ, மருந்துக் கடையில் அழகு சாதனமோ மாத்திரைகளோ வாங்கினாலோ என்னிடம் சிலபேர் வந்து தெரிந்தவர்போல் பேசுவார்கள். 'ரேவதி தானே உங்க பெயர்? நான் உங்களைப் பம்பாயில் பார்த்தேன். என்னை நீங்கள் பார்த்திருப்பீர்களே' என்றும், சிலர் நெருங்கிய சொந்தக்காரர் போலவும் ரொம்ப நாள் பழகியவர் போலவும் 'என்னங்க ரேவதி, எப்ப வெளிநாட்ல இருந்து வந்திங்க?' என்றும் கேட்கும்போது நான் 'நீங்க... யார் என்று எனக்குத் தெரியலையே' என்று இழுப்பேன். 'என்னங்க ரேவதி, உங்க பேரெல்லாம் சரியாச் சொல்றேன். உங்க பேரு ரேவதி தானே? உங்க ஊர்...' என்று என் கிராமத்தின் பெயரையும் கூறுவார். 'எனக்கு ஞாபகம் இல்லீங்களே, நீங்க...?' என்று திருப்பிக் கேட்பேன். 'என்னங்க, உங்க அண்ணனின் பிரண்ட்டுங்க. நான் உங்க வீட்டிற்கு எல்லாம் வந்திருக்கேன்' என்று என் வீட்டு அடையாளமெல்லாம் சரியாகச் சொல்வார். ஆனாலும் எனக்குத் தெரிந்தவர் இல்லை. எப்படி என்னை, என் வீட்டை, என் ஊரை, என் அண்ணன் பெயரை எல்லாம் சரியாகச் சொல்கிறாரே என்று குழப்பம் அடைவேன். சிலர் 'என்னடா துரைசாமி, வண்டி புதுசா வாங்கினியா? எவ்வளவுக்கு வாங்கின? உங்க

வீட்ல அம்மா அப்பா சவுக்கியமா?' என்று கேட்கும்போது எனக்கு யார் என்று தெரியாமல் முழித்ததும் உண்டு.

சுடிதார் அணிந்துகொண்டு மணக்க மணக்கச் சென்ட் போட்டுக் கொண்டு கெனடிக் ஹோண்டாவில் கடைகளுக்குச் செல்லும்போது என்னைப் பற்றி விவரம் தெரிந்துகொண்டு வலுக்கட்டாயமாகச் சிலர் என்னிடம் வந்து விசாரிப்பார்கள். நான் நடந்தோ, பஸ்ஸிலோ சென்ற போது யாரும் இப்படித் தெரிந்தவர்போல் பேசியதில்லை. இப்போது மட்டும் தெரிந்தவர் போலச் சிலர் வந்து தங்களை அறிமுகப்படுத்திக் கொள்வதும் என்னைப் பற்றிக் கூறுவதும் எனக்குத் திகைப்பாக இருக்கும். நானோ எங்கு அடுத்தவர்கள் பார்த்தால் தப்பாக நினைத்து விடுவார்களோ என்றும் என்னைத் தவறான வழிகளுக்குப் பயன்படுத்திக் கொள்வார்களோ என்றும் அவர்களிடம் நீண்ட பேச்சுக் கொடுக்காமல் சுருக்கமாகப் பேசி இடத்தை விட்டுப்போக நினைப்பேன்.

ஒரு சில ஆண்கள் நான் வண்டியில் போகும்போது என்னை ஆச்சரிய மாகப் பார்ப்பார்கள். அவர்கள் ஓட்டிக்கொண்டு வரும் வண்டியை என்முன் சைடு வாங்கி அதன்பின் மெதுவாகச் செல்வார்கள். எனக்குத் தெரியும் என்னைப் பார்ப்பதற்குத்தான் இப்படிச் செய்கிறார்கள் என்று. சில சமயங்களில் நான் டவுனுக்குச் சென்று வீட்டுக்கு வரும் போது என் வண்டியைத் தொடர்ந்து வந்து நான் எங்கு செல்கிறேன் என்று பாலோ அப் செய்வார்கள். என்வீட்டையும் கூடத் தெரிந்து கொள்வார்கள். ஒரு சிலர்மீது எனக்கு விருப்பம் இருந்தாலும் என் விருப்பத்தை மறைத்து இந்த உலகத்தில் பெண்கள் எப்படி இருக் கின்றார்களோ அவர்களைப் போல நானும் நடந்துகொள்வேன். பிடி கொடுக்காமல் ஆண்களிடம் பேசுவேன். ஏறெடுத்து ஆண்களைப் பார்த்துச் சிரிக்கக்கூட மாட்டேன். நம்முடைய கலாச்சார முறைப்படி ஒரு பெண் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருப்பேன்.

கடைத்தெரு முதல் சினிமாத் தியேட்டர் வரை நான் தனியாகப் போகும்போது எத்தனையோ பேர் என்னிடம் பேசுவார்கள். எத்தனையோ பேர் என்னை வர்ணிப்பார்கள். எத்தனையோ பேர் என் பின்னால் வருவார்கள். நான் ஆண் உடையில் பெண் உணர்வுடன் இருந்தபோது அவர்கள் எல்லாம் ஏன் இப்படி நடந்துகொள்ளவில்லை என்று யோசிப்பேன்.

பஸ்ஸ்டாண்ட் முன் ஆட்டோ ஸ்டேண்ட். ஒருமுறை அங்குள்ள ஆட்டோ டிரைவர்கள் சிலர் என்னைப் பார்த்து பெட் கட்டிக் கொண்டது என் காதில் விழுந்தது. பஸ் ஸ்டாண்ட் அருகே பஸ்கள் உள்ளிருந்து வரிசையாக வந்துகொண்டிருந்ததால் வெளியே பல

வாகனங்கள் நின்று கொண்டிருந்தன. நானும் வண்டியுடன் நின்று கொண்டிருந்தேன். அப்போதுதான் ஆட்டோ டிரைவர்கள் என்னை வைத்துப் பெட் கட்டிக் கொண்டனர். சிலர் என்னை ஆண் என்றும், சிலர் பெண் என்றும் 500 ரூபாய் பெட் கட்டிக் கொண்டனர். அவர் களில் ஆண் என்று கூறியவர்கள் 'பொம்பளையா இருந்தா இவ்வளவு வளர்த்தியா இருப்பாளா, இந்த மாதிரி சுடிதார் போடுவாளா, முடி வெட்டிக்கிட்டு இருப்பாளா' என்று கூறினார்கள். எனக்குக் கடுமை யாகக் கோபம் வந்தது.

என் வண்டியை ஓரமாக நிறுத்திவிட்டு அவர்களை நோக்கிச் சென்றேன். 'உங்களுக்கு நான் ஆம்பளையா பொம்பளையான்னு தெரியணும். அதானே பெட்டு. சொல்லட்டுமா, காட்டட்டுமா நான் பொம்பளையா இல்லே ஆம்பளையான்னு. உங்களுக்கு வேற வேலை இல்லையா? எவ எப்படிப் போறா, எவ எப்படி இருக்கான்னு பேசறதே ஒரு பொழப்பா இருக்கீங்க' என்று கோபத்துடன் பேசினேன். அதற்குச் சிலர், 'உன்னை யார் சொன்னா? நாங்க இங்க பேசிக்கிட்டு இருந்தா உங்களுக்கு என்ன வந்துச்சு? உங்க வேலையைப் பாத்துக்கிட்டுப் போங்க' என்று கூறினார்கள்.

சும்மா இப்படி விட்டுட்டுப்போனாத் திருப்பி இப்படித்தான் நம்பளப் பாத்தாச் சொல்லுவாங்கன்னு நான் நடுரோட்ல போயி நின்னுக்கிட்டு, 'ஏன்டா எவ ஒல்லியா இருக்கா, எவ குண்டா இருக்கா? ஆம்பளையா பொம்பளையான்னு பெட் கட்டிக்கிட்டுப் பேசுறீங்க. இப்படிப் பேசுறதால என்னடா உங்களுக்குக் கிடைக்குது? டேய், நான் பொட்ட தாண்டா. ஆம்பளையா இருந்து பொம்பளையா மாறுனவ தாண்டா. உங்கள்ல ஒருத்தனோட குடும்பத்தில் என்னை மாதிரி பொறந்து இருந்தா இப்படித்தான் பெட் கட்டிக்கிட்டு இருப்பீங் களாடா?' என்றுகேட்டேன். நான் நடுரோட்டில் சத்தம் போடுவதைப் பார்த்து ஆட்டோ டிரைவர்கள் ஓடிப் போய்விட்டார்கள். என்னைச் சுற்றி மற்றவர்கள் ஆண் பெண் உள்பட ஒரு கூட்டமே கூடிவிட்டது.

'போலீசுல புடுச்சுக் குடுங்க. இவுங்களுக்கு இதுவே பொளப்பாப் போச்சு. பொம்பளப் புள்ளைங்க ரோட்ல நடமாடவே முடியல. செருப்பக் கழட்டி நாலுபோடு போடுங்க' என்று அந்தக் கும்பலில் இருந்து எனக்கு சப்போட் கிடைத்தது. இந்தச் சமுதாயத்தில் கேவலமாப் பாக்குற நம்பளைப் பாவமுன்னு நினைக்கிற சிலரும் இருக்கத்தான் செய்றாங்க. மனுசனாப் பாக்குறவங்க இருக்கத்தான் செய்றாங்க. ஒரு பொண்ணுக்கு எப்படி எல்லாம் கஷ்டம் வருகின்றதோ அப்படி யெல்லாம் எனக்கு நடக்குது. நானாவது இன்னிக்கு எதிர்த்துப் பேசுறேன். பொம்பளையாப் பொறந்தவ இப்படி நடுரோட்ல நின்னு

பேசுவாளா? பேசத்தான் முடியுமா? எங்கோ என்னுள் ஒரு சக்தி இருக்கு. தட்டிக் கேட்கணும்னு துடிப்பு இருக்கு. அது ஆம்பளையாப் பொறந்து பொம்பளையா வந்ததாலா என்று புரியவில்லை. நான் நிஜப் பொம்பளையாப் பொறந்து இருந்தா இதுபோலத் தட்டிக்கேட்டு இருப்பேனான்னு சந்தேகம்தான்.

# 20

என்னைப் போலவே மூன்றுபேர் என்னைத் தேடி வந்தார்கள். மூன்று பேரும் கண்மை வைத்துப் பொட்டு வைத்து ஆண் உடையில் இருந் தனர். பார்த்தவுடனே தெரிந்து கொண்டேன், புரிந்துகொண்டேன். இவர்கள் மூன்றுபேரும் என்னைப் போன்றவர்கள் என்று. அமாமுக்கு வெளியில் வாசல்படியில் இருந்த கல்மீது அமர்ந்தபடி பார்த்தேன். அவர்கள் மூன்றுபேரும் என் அருகில் வந்து 'மம்மி பாவ்படுத்தி' என்றனர். மம்மி என்று சொன்னவுடன் நான் புரிந்துகொண்டேன் இவர்கள் படித்தவர்கள் என்று. 'வாங்கடி எங்கிருந்து வந்தீங்க? எந்த ஊரு உங்களுக்கு?' என்று கேட்டேன். அவர்களில் ஒருத்தி, 'மம்மி நாங்க மூன்றுபேரும் இதே பெங்களூர்தான்' என்று சொல்லி ஒருத்தி எந்த ஏரியா என்று சொன்னாள். மூன்றுபேரும் பெங்களூரில் இருந்தாலும் வேறு வேறு ஏரியாவைச் சேர்ந்தவர்கள். மூன்றுபேரும் ஒருவருக்கொருவர் ஆங்கிலத்தில் பேசிக்கொண்டனர்.

'மம்மி நாங்க மூன்றுபேரும் பிரண்ட்ஸ். நாங்க உங்கள அடிக்கடி இந்த ரோட்ல போகும்போதும் வரும்போதும் பார்ப்போம். உங்களோடு பேச வேண்டும் என்று ஆசையாக இருக்கும். ஆனால் உங்களிடம் எப்படி வந்து பேசுவது என்று பயமாக இருந்தது. இன்னிக்கு உங்ககிட்டப் பேசியே ஆகணும்னு வந்துட்டோம். நீங்க ரொம்ப அழகா இருக்கிறீர்கள். உங்களைப் பாத்துட்டே இருக்கணும்போல இருக்கு' என்று கூறினார்கள். 'அது சரி, இப்படிக் கண்மை போட்டுக்கிட்டு வந்து இருக்கீங்களே, உங்களை யாராவது தெரிஞ்சவங்க பாத்தா உங்க வீட்ல சொல்லிட மாட்டாங்களா?' என்று கேட்டேன்.

'அதான் மம்மி பயமா இருக்கு. நாங்க பார்க், பாத்ரூம் போன்ற இடங்களில் கண்மை, பொட்டு வச்சுக்கிட்டு யாருக்கும் தெரியாத இடத்துக்குப் போய் எங்கள் உணர்வுகளைத் தீர்த்துக்கிட்டு வீட்டுக்குப் போறப்போ அதைத் துடைச்சுட்டுப் போயிடுவோம். இப்படி ரெண்டுங் கெட்டான் வாழ்க்கை வாழறத விட்டுப்புட்டு நாங்க மூனுபேரும்

உங்களை மாதிரி ஆப்ரேஷன் செஞ்சுக்கிட்டுப் பொம்பளையா வாழணும்னு முடிவு செஞ்சிருக்கோம். எங்களை ஏத்துக்குவீங்களா மம்மி?' என்று கேட்டனர். எனக்கு என் பழைய நினைவுதான் வந்தது. அன்று நான் வீட்டைவிட்டு டெல்லி சென்றது, அங்கிருந்து மும்பை வந்தது இப்படி என் அனுபவங்களுக்கு ஒரே மூச்சில் பின்நோக்கிச் சென்று வந்தேன்.

'உங்கள மாதிரிதான் நானும் பொம்பளையா ஆகணும்னு பல கஷ்டங்களைத் தாண்டி இன்னிக்கும் பல கஷ்டங்களோட வாழ்ந்துக் கிட்டு இருக்கேன். ஏன்தான் இந்த வாழ்க்கை என்று நினைக்கவேண்டி இருக்கு. உங்களைப் பார்த்தால் படித்தவர்கள் மாதிரி இருக்கு. நீங்க இன்னும் நல்லாப் படிக்கணும். நல்ல வேலைக்குப் போகணும். உங்களோட உணர்வுகளை நான் புரிஞ்சுக்கிட்டேன். நீங்க என்னை மாதிரி இருக்கிறவங்களோட வந்து ஆடிப்பாடிச் சந்தோஷமா இருங்க. வேண்டாம்னு சொல்லல. ஆனால் ஆப்ரேஷன் செஞ்சுக்கிட்டு நீங்க படித்த படிப்பை எல்லாம் தூக்கி எறிஞ்சுட்டு எங்களை மாதிரி ஏன் கஷ்டப்படணும்னு நினைக்கிறீங்க? வேண்டாம். என்னை மாதிரி உள்ளவங்களோட வாழ்க்கை எவ்வளவு வேதனையானது தெரியுமா? உங்களுக்கு ஆசை இருந்தால் எங்களோட வந்து புடவை கட்டிக்கிட்டு உங்க ஆசையைத் தீத்துட்டு அதுக்கப்புறம் ஆம்பள துணி போட்டுக் கிட்டு உங்க வீட்டுக்குப் போயிடுங்க. முழுசா என்னை மாதிரி ஆயிட்டா ரொம்பக் கஷ்டம்தான் வாழ்க்கையிலே' என்று புத்தி கூறினேன்.

'மம்மி உங்களுக்கும் இப்படித்தான் சொல்லி இருப்பாங்க பெரிய வங்க. ஆனால் அந்த வயசுல உங்க உணர்வுகள் எப்படி இருந்துச்சோ அப்படித்தான் எங்களுக்கு இருக்கு. நீங்க வேண்டாம்னு சொன்னாலும் நாங்க ஆப்ரேஷன் செஞ்சுக்கத்தான் போறோம். ஆப்ரேஷன் எங்க செய்யறாங்கன்னு சொன்னா நல்லா இருக்கும்' என்று கேட்டனர்.

எனக்கோ அந்த மூனுபேரையும் பார்த்தவுடன் என்னைப் போலக் கஷ்டங்களை இவர்களும் ஏன் தேடி அனுபவிக்க வேண்டும் என்று இருந்தது. அதனால் ஆப்ரேஷன் செய்துகொண்ட இடத்தை அவர் களுக்குக் கூறாமல் புத்தி சொல்லி அனுப்பி வைத்தேன். அந்த மூன்று பேரும் சிறிது நாட்கள் கழித்து அவர்களின் வீட்டிலிருந்து எடுத்து வந்த பணத்தைக் கொண்டு, வேறு ஒரு இஜரா வீட்டிற்குச் சென்று அவர் மூலம் ஆப்ரேஷன் செய்துகொண்டு 15 நாட்கள் ஆனபிறகு என்னிடம் மீண்டும் வந்தார்கள். 'அம்மா மாத்தா' என்று மூன்றுபேரும் மெல்ல மெல்ல அடியெடுத்து வர எனக்குத் தெரிந்துவிட்டது, இவர்கள் ஆப்ரேஷன் செய்துகொண்டு வந்துவிட்டனர் என்று. 'ஆப்ரேஷன் செய்துகொண்டு யார் வீட்டில் இருந்தீர்கள்?' என்று கேட்டேன்.

அவர்கள் அந்த இஜராவின் ஏரியாவையும், அவளுடைய பெயரையும் கூறினார்கள். 'ஏன் அங்கேயே இருக்க வேண்டியதுதானே?' என்று கேட்டேன். 'நாங்க கொடுத்த பணம் அந்த அம்மாவுக்குப் போதவில்லையாம். ஆப்ரேஷன் செலவுக்கு மட்டும்தான் பத்துச்சாம். எங்களை வைத்துப் பார்க்க இன்னும் பணம் கேட்டாங்க. எங்களிடம் இல்லை. சரியாக எங்களைப் பார்க்காமல் விட்டுவிட்டனர். அதனால் தான் உங்களைத் தேடி வந்தோம். நீங்களும் எங்களை அனுப்பி விடாதீர்கள்' என்று கூறினார்கள்.

அமாமில் இருக்கும் என் குருபாய்கள், 'இந்த மூனுபேரையும் சேத்துக்காதே. இவுங்க இதே ஊரைச் சேந்தவங்க. இவங்க அம்மா அப்பாவுக்கு விஷயம் தெரிஞ்சா உன்னைத்தான் பிடிப்பாங்க. அதுவும் இல்லாம இவங்க நம்பளை மாதிரி இருக்கறவங்களோட இருந்து நல்லது கெட்டது தெரிஞ்சுக்காம அவுங்க இஷ்டத்துக்குப் போயி ஆப்ரேஷன் செஞ்சுக்கிட்டு வந்திருக்காங்க. இவுங்களுக்கு நம்ம கலாச்சாரம், பண்பாடு எங்க தெரியப்போகுது. பொட்டையாப் பொறந்தாப் பொட்டைங்களோட விஷயங்களை முழுமையாகத் தெரிஞ்சு குரு, குருபாய்கள, நானியை மதிச்சு அவுங்களுக்குச் சம்பாதிச்சுக் கொடுத்து குருவா இருக்கறவ பாத்துச் சேலாவை நிர்வாணத்துக்கு அனுப்புவாங்க. இவுங்களுக்குக் குருவும் இல்லை; சேலாவும் இல்லே. இவுங்களாப் போயி ஆப்ரேஷன் செஞ்சுக்கிட்டு வந்தவங்களச் சேத்துனா நாளைக்கு இவுங்க வீட்டுக்குத் தெரியவந்தா இவுங்களக் காப்பாத்திக்க உன்மேல பழி போட்டுட்டுப் போயிடுவாங்க' என்று கூறினார்கள்.

'என்னாங்கடி இப்படிப் பண்ணிகிட்டு வந்து நிக்கிறீங்களே. உங்களுக்குக் கிளிப்பிள்ளைக்குச் சொல்றமாதிரி புத்தி சொன்னேன். கேட்காம அவசர அவசரமா இப்படிப் பண்ணிக்கிட்டு வந்துட்டீங்களே. எனக்கு என்ன செய்யறதுன்னு தெரியலையேன்னு' முழித்தேன். 'அம்மா எங்களுக்கு வலி பொறுக்க முடியலம்மா. எங்கள ஏத்துக்கிட்டு உங்க மகளா ஆக்கிக்கிட்டு நல்லது பாத்து விடுங்கம்மா. நீங்க எங்களை ஏத்துக்காட்டி நாங்க மூனுபேரும் சாவுறத விட்டா வேற வழியே இல்லேம்மா. எங்க வீடுங்கள்ல இருந்து வந்து கேட்டா எங்க இஷ்டத்துக்கு நாங்களாவேதான் ஆப்ரேஷன் செஞ்சுக்கிட்டோம்னு சொல்றோம்மா' என்று அழுதனர்.

அவர்களின் துடிப்பு, வலிகள், என் வாழ்க்கையில் ஆப்ரேஷன் செய்துகொண்டு வந்த நிலை ஆகியவற்றை நினைத்துப் பார்த்தேன். நாமும் எப்படிக் கஷ்டப்பட்டோம். அப்படித் தானே இவர்களுக்கும் வலி இருக்கும். ஏதோ ஆனது ஆகிப்போச்சு. ஆப்ரேஷன் செய்து கொண்டு வந்துவிட்டனர். என்ன நடந்தாலும் சரி என்று அவர்களை

ஏற்றுக்கொண்டேன். மூன்றுபேரும் தோழிகளாக இருப்பதால் மூன்று பேரும் என் பெயரிலேயே சேலா ஆக விரும்பினர். என் குருபாய்கள் சிலருக்கு அது பிடிக்கவில்லை. நானும் மூன்று பேருக்கும் என் குருபாய்கள் பெயரில் ஒவ்வொருவரும் என் பெயரில் ஒருவரும் சேலா ஆக வலியுறுத்தினேன். மூன்றுபேரும் என்னை அம்மாவாக ஏற்றுக் கொண்டு உங்களுக்குத்தான் நாங்கள் மகளாக இருப்போம் என்று உறுதியாகக் கூறிவிட்டனர். ஒரு பார்மாலிட்டிக்கு 'உன் பேரில்தானே மூனுபேரும் சேலா ஆகணும்னு விரும்புறாங்க. நீயே மூனுபேரையும் சேலா பண்ணிக்கோ' என்று என் குருபாய்கள் கூறினர்.

அமாமில் அவர்களுக்குத் தங்க இடம் கொடுத்து 40 நாட்கள் வரை காத்திருந்தேன். அவர்களுக்குச் சடங்கு செய்து அதன் பிறகு முறைப்படி ஐதராபாத் சென்று எங்கள் வீட்டு நாயக்முன் சேலா செய்து கூட்டிவரக் காத்து இருந்தேன். மூத்த மகள் மயூரி. அவள் என்னுடன் இருக்கும் போதே கொஞ்சம் புண் நன்றாக ஆறிய பிறகு ஆப்ரேஷன் செய்து கொள்ளாதவள் போல ஆண் உடையில் அம்மா அப்பா வீட்டிற்குச் சென்றாள். இரண்டாவது மகள் பாமிளா. அவளோ அம்மா அப்பா வுக்குப் போன்மூலம் தெரியப்படுத்தி ஆப்ரேஷன் செய்து கொண்டதைச் சொல்லி ஆண் உடையில் அவளுடைய வீட்டிற்குச் சென்றாள். மூன்றாவது மகள் ரீத்து. அவள் தன் காதலனுடன் சென்றாள்.

இஜரா சம்பிரதாயப்படி ஆப்ரேஷன் செய்து கொண்டவர்கள் வெளியில் செல்லக்கூடாது. ஆண் முகத்தைப் பார்க்கக்கூடாது. நாற்பது நாட்கள் கழித்து மாத்தா பூஜை செய்து சடங்கு செய்த பிறகுதான் எல்லாரையும் போல இருக்கவேண்டும். ஆனால் மூன்றுபேரும் என்னிடம் விடை பெற்று 'எங்களுடைய வீட்டில் தேட ஆரம்பித்தால் உங்களுக்குக் கஷ்டம் வரும். அதனால் எங்கள் குடும்பங்களில் தெரிந்தோ தெரியாமலோ, காட்டிக்கொண்டோ காட்டிக்கொள்ளா மலோ எங்கள் அம்மா அப்பாக்களுக்கு மகனாகச் சென்றுவிட்டுச் சடங்கு செய்ய அந்த நாட்களுக்கு முன்னாடியே வந்துவிடுகின்றோம்' என்று கூறிச் சென்றுவிட்டனர்.

என்னுடைய குருபாய்கள் அந்த மூன்று சேலாக்களுக்கு நான் நடத்தப் போகும் சடங்கு நிகழ்ச்சி குறித்தும், நான் அவர்களுக்குச் செய்ய இருக்கும் செலவுகள் குறித்தும் சில விஷயங்களைக் கூறினார்கள். 'ஏண்டி நாம் நம் குருக்களுக்கு அடிபணிந்து, அடி வாங்கி, நல்லது கெட்டது பாத்துச் சம்பாதிச்சுக் கொடுத்துத்தான் நிர்வாணம் செய்துக் கிட்டோம். போகுது விடு. அந்த மூனுபேரும் அவுங்க காசு செலவு செய்து நிர்வாணம் பண்ணிக்கிட்டு வந்தாலும் சடங்குச் செலவு நீ செய்து, நாளைக்கு ஐதராபாத் போய் சேலா முறை செய்யும்வரை

உன்னோட செலவு என்ன ஆகும்? நாளைக்கே அவுங்க சடங்கை முடிச்சுக்கிட்டு ஓடிப்போயிட்டா நீ என்ன பண்ணுவே? அவுங்க உனக்குச் சம்பாதிச்சுக் கொடுப்பாங்கன்னு என்ன கேரண்டி இருக்கு?' என்று கேட்டனர். 'அவுங்க என்னை ஏமாத்தினாலும் ஏமாத்தட்டும். அது வேற பிரச்னை. என்னை அம்மாவாக அவுங்க ஏத்துக்கிட்டது உண்மையின்னாக் கண்டிப்பாக என்னைவிட்டுப் போக மாட்டாங்க. அவுங்க நான் செய்த செலவுகளை நாளைக்குச் சம்பாதிச்சுக் கொடுக்கணும்ன்னு எதிர்பார்த்துச் செய்யல. என்னோட சொந்த மகளா இருந்தா ஒரு தாய் என்ன செய்வாளோ அப்படி நெனச்சுத்தான் செய்யறேன்' என்றேன்.

'நீ ஒரு பைத்தியக்காரிடி. நீ பம்பாயில் சம்பாதிச்சுக் கொடுத்த பிறகுதானே உனக்கு நிர்வாணம் பண்ணுனாங்க. சடங்கு செய்தாங்க. உன்னைப் பத்தி முழுமையாத் தெரிஞ்சுக்கிட்டு உன்னோட சம்பாத்தியத்தை வாங்கிக்கிட்டு வேலை வெட்டி செய்ய வச்சுக்கிட்டுத்தானே நிர்வாணம் பண்ணுனாங்க. அப்படித்தானே நம்ம இனத்துல நடைமுறையில் செய்துக்கிட்டு வராங்க' என்றனர் என் குருபாய்கள்.

'பாருடீ பொட்டைங்க நிர்வாணம் செஞ்சுக்கிட்டு வந்துடுச்சுங்க. என் மேல மகளா ஆகணும்ன்னு காலைப் புடிச்சாங்க. இப்ப அதப்பத்திப் பேசவும் முடியாது. ஒரு குருவா என்னோட கடமையையும் என்னோட பாசத்தையும் மனசாரச் செய்றேன், என்னோட வசதிக்குத் தகுந்தாற் போல. நாளைக்கு அவுங்க அம்மா வேணும், குரு வேணும்ன்னு என்னோட இருந்தாலும் சரி. வேறயாப் போய் இருந்தாலும் சரி. எனக்கு மூன்று மகள்கள் இருக்காங்கற திருப்தி போதும்' என்று அவர்களுடைய சந்தேகங்களுக்கும் சங்கடங்களுக்கும் பதில் கூறிச் சமாளித்தேன்.

மூன்று சேலாக்களுக்கும் மூக்குத்தி, கொலுசு, புடவைங்க என்று மாத்தா பூஜைக்குத் தேவையானவற்றை வாங்கிக்கொண்டேன். மூன்று பேரும் அவரவர் வீடுகளில் இருந்து அமாமுக்கு ஒருநாள் முன்னதாக வந்துவிட்டனர். என்னால் மண்டபம் பிடித்து ஊரை அழைத்து விழா எடுக்க முடியாவிட்டாலும் என் குருபாய், குருக்களுடன் அமாமிலேயே என் மூன்று மகள்களுக்கும் சடங்கு செய்து பால் ஊற்றித் தீட்டைக் கழித்துவிட்டேன். மூன்றுபேரில் இருவருக்கு அமாமில் இருக்கப் பிடிக்காமல் வேறுவீடு எடுத்துத் தனியாகப் போய்விட்டனர். என் இரண்டாவது மகள் பாமிளா என்னுடன் சிறிது நாட்கள் அமாமில் இருந்தாள். அவள் காலையில் ஆங்கிலப் பேப்பர் படிக்கும் பழக்கம் உள்ளவள்.மேலும் சிகரெட் பிடிப்பாள். அமாமின் கட்டுப்பாடும் இஜரா சம்பிரதாயக் கட்டுப்பாடுகளும் அவளுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவளும் அவள் குருபாய்களுடன் சென்றுவிட்டாள்.

என் சேலா மூன்றுபேரையும் ஐதராபாத் கூட்டிச் சென்று முறைப்படி சேலா செய்து அவர்கள் இஷ்டப்படி சுதந்திரம் கொடுத்து அனுப்பி வைத்தேன்.

என்னைப் பார்க்க அவர்களும் அவர்களைப் பார்க்க நானும் சென்று வருவதும் வழக்கமாக இருந்தது. மூன்றுபேரும் நாளடைவில் வீட்டுக்கு அம்மா அப்பாக்களை வரவழைத்துப் பேசுவார்கள். பாமிளாவின் அப்பா அவளை ஏற்றுக்கொள்ளவில்லை. அவளுடைய அம்மாவும் தம்பியும் மட்டும் பாமிளா இருக்கும் இடம்வந்து பார்த்துவிட்டுச் செல்வார்கள். அவள் அப்பா அம்மா வீட்டுக்கு ஆண் உடையில் கூப்பிட்டனர். அவளுக்கு விருப்பம் இல்லை. மூன்றுபேரும் என்னைப் போல வெளியில் பாலியல் தொழில் செய்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் எங்கிருந்தாலும் என்னோட மகள்கள் என்று நான் அமாமியிலேயே இருந்தேன்.

டெல்லியிலும் பம்பாயிலும் நான் பட்ட கஷ்டங்கள் என் சேலாக் களுக்கு ஏற்படக்கூடாது. அவர்கள் சுதந்திரத்துக்குக் குரு என்னும் வகையில் நான் தடையாக இருக்கக் கூடாது. அவர்கள் விருப்பப்படி எங்கு வேண்டுமானாலும் இருக்கட்டும். இந்தக் குரு நினைப்பு வந்தால் என்னைப் பார்க்க வரட்டும். சேலாக்கள் நமக்குச் சம்பாதித்துக் கொடுப்பார்கள் என்று எதிர்பார்க்கக் கூடாது என்றும், அவர்களிடம் குரு என்ற அதிகாரத்தைப் பயன்படுத்திப் பணம் கேட்கக் கூடாது என்றும் நினைத்தேன். என்னைத் தேடி வரும்போது என்னால் என் சேலாக்களுக்கு எப்போது என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்வேன். பம்பாயிலும் டெல்லியிலும் இஜரா சமுதாயத்தின் கட்டுப்பாடுகள், கலாச்சாரம் ஆகியவற்றை ஒட்டியே வாழ்ந்துவந்தேன். தற்போது பெங்களூரிலும் என் சமுதாயத்தோடு ஒட்டியே வாழ்கிறேன்.

ஆசைப் பட்டவர்களை என்னால் புருஷனாகவும் வைத்துக்கொள்ள முடிய வில்லை. ஆசைப்பட்ட இடங்களுக்குச் செல்ல முடியவில்லை. ஒரு தனி உலகத்தில் கிடைக்கும் சுகதுக்கங்களை அனுபவித்து வாழ்ந்து விட்டேன். என் சேலாக்களாவது வெளி சமுதாயத்தோடு எப்படி வாழ நினைக்கிறார்களோ அப்படி வாழட்டும். அதேபோல் அவர்களும் இஷ்டப்பட்ட பார்ட்னர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு தனி வீடுகள் எடுத்து ஒரு பெண் என்று இந்த உலகத்திற்குக் காட்டிக்கொண்டு வாழ்ந்தனர். நான் அவர்களின் வீடுகளுக்குச் சென்றாலும் பயத்தோடு தான் செல்வேன். எங்கு அவர்களின் அக்கம் பக்கத்து வீடுகளுக்கு நான் இஜரா என்று தெரிய வந்துவிடுமோ, அதனால் என் சேலாக்களையும் இஜராக்கள் என்று இனம் கண்டுகொள்வார்களோ என்று பயந்தேன். அவர்களும் என்னைப் போலவே பயப்படுவார்கள்.

பெண் என்றும் அவர்களின் பார்ட்னர்களைக் கணவன்மார்கள் என்றும் கூறிக்கொண்டு தான் அவர்கள் வீடு பிடித்திருந்தார்கள். நான் இருக்கும் அமாமில் உலகத்திற்கே தெரியும் நாங்கள் இஜராக்கள் என்று. எனக்கு என் சேலாக்களின் வாழ்க்கையும் பிடித்திருந்தது. அதே சமயம் என் இனத்தாரோடு வாழ்வதும் பிடித்திருந்தது. ஆனாலும் நான் என் குரு, குருபாய்கள், காலா குரு, குருபாய்களின் சேலா, நாத்திகளுடன் கூட்டுக் குடும்பமாக என் காலத்தை ஓட்டினேன். என் ஊருக்குச் செல்வதும் அங்கு நடக்கும் திருவிழாவில் சந்தோஷம் காண்பதும் இஜரா சமுதாயத்தோடு இருப்பதும் என் சேலா வீடுகளுக்குச் சென்று வருவதும்தான் என் அப்போதைய உலகம்.

பெங்களூரிலேயே பிறந்து வளர்ந்து படித்த என் மூன்று சேலாக் களுக்கும் நிறையப் படித்த நபர்கள் நண்பர்களாக இருந்தனர். கோத்திகள் சந்தித்துக்கொள்ளும் இடங்களில் அவர்களைப் போல படித்த ஓரினச் சேர்க்கையாளர்கள் நண்பர்களாக இருந்தனர். பெரும்பாலும் இரவு நேர பார்கள், நடனம் ஆடும் பப்புகள் ஆகியவற்றிற்குக் கல்லூரி மாணவிகள் போல ஜீன்ஸ், சுடிதார், மிடி, ஸ்கர்ட் என அணிந்து செல்வார்கள். இஜராக்களும் இப்படி உடை அணிந்து இதுபோன்ற இடங்களுக்குச் செல்வதை நான் கேட்டதுகூட இல்லை. என் சேலாக்கள் செல்வதை அந்த உடையில் பார்த்தும் இருக்கிறேன். இதுபோன்ற உடைகள் இஜரா சமுதாயத்தில், இஜராக்கள் வாழும் இடங்களில் போட்டுக்கொள்ள முடியாது. புடவைதான் கட்டி இருப்பார்கள். வட நாடுகளில் சிலர் பஞ்சாபி உடை அணிந்து இருப்பார்கள்.

எப்போதாவது அவர்களின் வீடுகளுக்குச் செல்லும்போதும், அவர்களுடன் வெளியில் செல்லும்போதும் என்னால் இதுபோன்ற உடைகளை அணிய முடிய வில்லையே என்று நினைப்பேன். அவர்கள் என்னை மம்மி என்று அழைக்கும்போதும் அவர்களுடன் வெளியில் செல்லும்போதும் அவர்களுக்குத் தாயாகத் தான் நினைப்பேன். பிள்ளை பெற்றுக்கொள்ள முடியாதவள் என்ற நினைப்போ வருத்தமோ எனக்கு இருக்காது. இஜரா சமுதாயத்தில் சேலாக்களாக இருந்தாலும் வெளிச் சமுதாயத்தில் அம்மா மகள் உறவு எப்படி இருக்குமோ அதைப் போலத்தான் இருந்தது. மனதுக்கும் இதமாக இருந்தது. அவர்கள் மூன்று பேரோட நட்பைக் கண்டு வியந்து போவேன்.

ஒருமுறை என்னை ஒரு ஆபீசுக்கு அழைத்துச் சென்றனர். என்னிடம் 'ஒரு விழா இருக்கு; போகலாம். அங்கு நம்மைப் போன்றவர்களுக்காக வேலை செய்கின்றனர். அந்த ஆபீஸ் செயல்படத் தொடங்கி ஒருவருடம் ஆகிய நிலையில் சிறிய விழா நடத்துகின்றனர். அங்கு கோத்திகள் நிறையப்பேர் வருவார்கள். நாங்கள் அங்கு செல்கின்றோம். நீங்களும்

வாங்க. கொஞ்சம் வெளி உலகத்தையும் பாருங்க' என்று அழைத்துச் சென்றனர். என் சேலாக்கள் ஆப்ரேஷன் செய்துகொள்ளாமல் படித்துக் கொண்டு இருந்தபோது அந்த ஆபீஸ் பற்றித் தெரிந்திருந்தனர். அங்குச் சென்றும் உள்ளனர். பெண் உணர்வுகளுடன் வாழும் ஆண்கள், ஓரினச் சேர்க்கையினர், படித்தவர்கள் ஆகியோருக்கு மட்டுமே தெரிந்த ஆபீஸ் அது. சங்கமா என்ற பெயரில் செய்தி சேகரித்துக்கொண்டு நடந்து வருகிறது. என் சேலாக்கள் படித்திருந்ததால் அதுபோன்ற ஆபீஸ் இருப்பதை அறிந்துள்ளனர். தொடர்பு வைத்தும் உள்ளனர். எனக்கு நாள் மாதம் நினைவு இல்லை. 1999 என்று நினைக்கிறேன். அப்போது என் சேலாக்களுடன் அங்குச் சென்றேன்.

அன்பான உபசரிப்பு, பாசத்துடன் பேசுபவர்கள், கட்டிப்பிடித்து நட்பை வெளிப்படுத்துபவர்கள், அருமையாக ஆங்கிலத்தில் பேசு பவர்கள் ஆகியோரை அங்குக் கண்டேன். முதலில் எனக்குக் கூச்சமாகவும் பயமாகவும் இருந்தது. எனக்கு ஆங்கிலம் பேசத் தெரியாது. ஆகவே எப்படிப் பேசுவது என்ற தாழ்வு மனப்பான்மை இருந்தது. என் சேலாக் களோ அங்கிருந்தவர்களிடம் சரளமாக ஆங்கிலத்தில் பேசிச் சிரிப்பதும் கை குலுக்குவதும் என்னை ஆச்சரியப்பட வைத்தன. என்னுடைய சேலா பாமிளாவை அழைத்து யார் காதிலும் விழாதபடி மிகவும் மெதுவாக, 'என்னடி இவுங்க எல்லாம் நம்பள மாதிரியா?' என்று கேட்டேன். 'இல்லை மம்மி. இவுங்க சிலபேர் கே, என்றாள். 'கே வா? அப்படின்னா?' 'அப்படின்னா ஓரினச் சேர்க்கையாளர்கள்' என்று கூறினாள். அங்கு வந்திருந்தவர்களிடம் என்னை அறிமுகம் செய்து வைத்தாள். பதிலுக்கு மற்றவர்களும் ஹாய் ஹாய் என்றனர். நான் வணக்கங்க என்றேன்.

காபி, கேக், மிக்சர் என்று கொடுத்தனர். அங்கு வந்தவர்கள் விருந்தாளிகள்போல் இல்லாமல் ஆளுக்கு ஒரு வேலை செய்தனர். காபி கொடுப்பதும் கேக் மிக்சர் எடுத்து வந்து கொடுப்பதும் அதன்பிறகு காபி போட்ட பாத்திரத்தைக் கழுவி வைப்பதும் பேப்பர் தட்டுகளைக் குப்பை டப்பாவில் போடுவதும் அவரவர் குடித்த கப்புகளை அவரவரே கழுவி வைப்பதும் கண்டு இஜரா சமுதாயத்தில் பெரியவர்களுக்குச் சிறியவர்கள் செய்யும் வேலைகளை நினைத்துக்கொண்டேன்.

'பாமிளா, இந்த ஆபீசுல இவுங்க எல்லாம் வேலை பாக்குறாங்களா?'

'இல்லை மம்மி. இந்த ஆபீசை ஒருத்தர்தான் தொடங்கினார். அவருக்குக் கிடைத்த பெல்லோசிப் பணத்தைக் கொண்டு இந்த ஆபீசைத் தொடங்கிக்கூட இரண்டுபேரை வச்சு வேலை செஞ்சுக்கிட்டு இருக்காரு. வாங்க, அவரை உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன்' என்று அவரிடம் என்னை அழைத்துச் சென்று அறிமுகம் செய்து

வைத்தாள். 'இங்க என்ன வேலை செய்யறீங்க?' என்று கேட்டேன். 'ஓரினச் சேர்க்கையாளர்கள் பற்றிய தகவல்களைத் திரட்டி டாகுமெண்ட் செய்து வருகின்றோம். நியூஸ்பேப்பர், இன்டர்நெட், வார இதழ்கள், மாத இதழ்கள் போன்றவற்றில் ஓரினச் சேர்க்கையாளர்கள் பற்றிய செய்தி வந்தால் அதைச் சேகரித்து இதுபோன்ற தனித்தனி பைல் களில் வைக்கிறோம். இந்த டாக்குமெண்ட் பிற்காலத்தில் மிக முக்கியமானதாக இருக்கும். இதுவரை ஓரினச் சேர்க்கையாளர் பற்றிய டாக்குமெண்ட் இல்லை. அவர்கள் பற்றி ஆய்வு செய்ய வருபவர் களுக்கு இந்த டாக்குமெண்ட் உதவும். இதை யார் வேண்டுமானாலும் இங்கு வந்து எடுத்துப் படிக்கலாம். அவர்களைப் பற்றிப் புரிந்து கொள்ளலாம்' என்றார்.

'எப்படிப்பட்ட செய்திகளைச் சேகரித்துள்ளீர்கள்?' என்று கேட்டேன்.

'ஓரினச் சேர்கையாளர்மீது நிகழ்த்தப்படும் வன்முறைகள், வீடு களில் தெரிந்துவிட்டால் ஏற்படும் விளைவுகள். இப்படி உரிமைகள் கிடைக்காமல், ஒப்புக்கொள்ளாமல், புரிந்து கொள்ளாத சமுதாயத்தில் அவர்கள் மறைந்து வாழ்ந்து கொண்டும், சிலர் நாம் ஏன் இப்படி இருக்கிறோம் என்ற குற்ற உணர்வால் தற்கொலை செய்து கொண்டும் இருக்கின்றனர்.'

'இதன் மூலம் நீங்கள் என்ன செய்ய முடியும்?'

'ஓரினச்சேர்க்கை என்பது இயற்கையானது. ஆனால் இந்தியச் சட்டத்தால் அவர்கள் பாதிக்கப்படுகின்றனர். இந்தியக் கலாச்சாரமும் இதைக் குற்றமாகக் கருதுகிறது. இதனால் ஓரினச்சேர்க்கையினர் வெளிப்படையாக அவர்களின் உணர்வுகளை வெளிப்படுத்த முடியாமல் மனதளவில் நொந்துகொண்டு வாழ்கின்றனர். சங்கமா அவர்களின் உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுத்து அவர்கள் தங்கள் உணர்வுகளை வெளிப்படையாகப் பேசிப் புரிந்துகொள்ள இடமும் கொடுத்து அவர்களின் சந்தேகங்களைத் தெளிவுபடுத்தி ஓரினச் சேர்க்கை தவறு இல்லை என்று அவர்களுக்குத் தைரியத்தையும் கொடுத்து வருகிறது.'

'எங்களைப் போன்ற இஜரா சமுதாயத்தவர்கள் இங்கு வருகின்றார் களா?'

'பாமிளா போன்ற நண்பர்கள் ஆண் உடையில் இருக்கும்போது இங்கு வந்து செல்வார்கள். தற்போது அவர்களும் நீங்களும்தான் வந்திருக்கிறீர்கள். இஜராக்களைப் பற்றிய செய்திகளையும் சேகரித்து வருகிறோம். பாலின மாற்றத்தால் அவர்களுக்கு ஏற்படும் வன்முறைகள், போலீஸ் அவர்கள்மீது செய்யும் அடக்குமுறைகள் பற்றியும் தகவல் களைத் திரட்டுகிறோம்.'

'எனக்கு நீங்கள் ஆரம்பித்திருக்கும் இந்த ஆபீஸ் பற்றிப் புரிகிறது. நானும் உங்களுடன் சேர்ந்து பணியாற்ற ஆசைப்படுகின்றேன். பாலியல் தொழிலை விட்டால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை. செய்யப் படிப்பும் இல்லை. வேலை கொடுப்பவரும் யாரும் இல்லை. இந்தப் பாலியல் தொழிலால் போலீஸ், ரவுடிகள் மூலம் பல தொந்தரவு கள் ஏற்படுகின்றன. வீட்டில் எங்களைப் போன்றவர்களை ஏற்றுக் கொள்வதில்லை. ஆரம்பத்தில் என் வீட்டில்கூட ஏற்றுக்கொள்ள வில்லை. தற்போது புடவையுடன் வீட்டுக்குச் செல்கிறேன். என்னைப் போல் இன்னும் எத்தனையோ பேரின் ஆசைக் கனவுகள் மண்ணோடு மண்ணாகப் புதைந்து கொண்டிருக்கின்றன. பாமிளா போல என் சேலாக்கள் படித்திருப்பதால் இவற்றை எல்லாம் புரிந்துகொள்ள முடிகிறது. தற்போது என்னாலும் புரிந்துகொள்ள முடிகிறது. என்னுடைய இனத்தாருக்கும் வேலை செய்ய ஆசைப்படுகிறேன். எனக்கு இங்கு வேலை போட்டுக் கொடுப்பீர்களா?' என்றுஅவரிடம் கேட்டேன்.

'நானும் சில நண்பர்களும் இதைப் பற்றி நீண்ட நாட்களாகப் பேசிக் கொண்டுதான் இருக்கிறோம். இதற்கான வேலைகள் செய்யப் பணம் கேட்டுக்கொண்டு இருக்கிறோம். அது நிறைவேறிவிட்டால் இன்னும் அதிகப் பேர்களை வேலைக்கு எடுத்து உரிமைகள் பற்றிய பணிகளைத் தொடங்க உள்ளோம். அது சரியாக அமைந்துவிட்டால் உங்களுக்குக் கண்டிப்பாக வேலை கொடுக்கிறேன். உங்களைப் போன்று புரிந்து கொள்பவர்கள், உற்சாகமானவர்கள், தோள் கொடுப்பவர்கள் வேலை செய்வது மிக முக்கியம். வாய்ப்பு வரும்போது கண்டிப்பாக உங்களைக் கூப்பிடுவோம். உங்கள் விலாசம் கொடுத்துச் செல்லுங்கள்' என்று அவர் கூறினார்.'பாமிளாவைத் தொடர்பு கொண்டால் அவள் எனக்குச் செய்தியைக் கூறுவாள்' என்றேன். என் சேலாக்கள் என்னை அமாமில் விட்டுவிட்டு அவர்கள் வீட்டுக்குச் சென்றுவிட்டனர். எனக்குச் சில நாட்கள் சங்கமா பற்றிய நினைப்பு இருந்துகொண்டே இருந்தது. எனக்கு அங்கு வேலை கிடைத்துவிட்டால் என் சமுதாயத்தவருக்காகப் போராட முடியும். கடவுள்தான் வழிகாட்டவேண்டும். கண்டிப்பாக அங்கு வேலை கிடைக்கும்.

# 21

சங்கமா ஆபீஸ் சென்று வந்து மூன்று மாதம் இருக்கும். அதன் பிறகு எனக்குச் சங்கமாவில் இருந்து அழைப்பு வந்தது. 2500 ரூபாயில் எனக்கு ஆபீஸ் அசிஸ்டென்ட் வேலை கிடைத்தது. என் அம்மா அப்பாவிடம் எனக்கு வேலை கிடைத்த விவரம் கூறினேன். அவர்களுக்குச் சந்தோஷம் இல்லை. காரணம் பெங்களூரில் என் வாழ்க்கையை ஓட்டவே 2500 ரூபாய் பத்தாது. அதில் நமக்கு என்ன கொண்டுவந்து கொடுப்பான் என்று நினைத்தனர். 'ஏன் ஆட்டத்துக்குப் போறது இல்லியா?' என்று கேட்டனர். எனக்கோ சம்பளம் முக்கியமில்லை. எனக்கு மற்றவர்கள் போல ஒரு பெண்ணாக ஆபீஸ் செல்லவும் அத்தோடு ஒரு சமுதாயத்தினர் பற்றிய வேலை செய்யவும் ஆர்வமாக இருந்தது. தற்போது சங்கமாவுக்குப் பணம் கிடைக்காததால் சங்கமாவைத் தொடங்கியவர் அவருடைய சில நண்பர்களின் உதவியால் சம்பளம் 2500தான் கொடுக்க முடிந்தது. சங்கமாவுக்குப் பணம் வந்தால் வேலைகள் அதிகமாகச் செய்யவும் அதிகச் சம்பளமும் கிடைக்கும். அதுவரை குறைந்த சம்பளத்தில் வேலை செய்ய வேண்டும்.

என் பாலியல் தொழிலுக்கு முழுக்குப் போட்டுவிட்டு அமாமில் இருந்தே சங்கமா ஆபீஸ் சென்றேன். என்னுடைய குருவோ 'பொட்டைகளுக்கு எதுக்கடி வேலை? யாரு வேலை செய்யறா? ஆபீஸ் போயி 2500ரூபாய்க்கு வேல செய்யற? நீ எம் ஜி ரோடு, பிரிகேட் ரோடு போயித் தந்தா பண்ணுனா நல்ல பணம் கிடைக்குமே. அதை உட்டுப் புட்டு வேலையாம் வேலை' என்று கூறினார். 'அம்மா எத்தனை நாளுக்குத்தான் இப்படிப் பிச்சை எடுக்கறதும் பாலியல் தொழில் செய்யறதுமா இருக்கப் போறோம்? காலம்காலமா நாம இதத்தான் செஞ்சுக்கிட்டு வர்றோம். பெரியவங்க யாரேனும் இதுக்கு முன்னாடி வெளி உலகத்துக்கு வந்து வேலை செய்யப் போராடி இருந்தா எங்க தலைமுறையிலாவது மற்றவர்களைப் போல நாங்களும் வேலைக்குப் போயிருக்கலாம். எங்களுக்கு நீங்க வாழ்ந்த வாழ்க்கையைக் கற்றுக்

கொடுத்திங்க. எங்க தலைமுறையிலாவது வெளி உலகத்துக்கு நம்மைப் பற்றிப் புரிய வைத்து நாமளும் மனுசங்க மாதிரி வாழணும்னு நான் வேலைக்குப் போறேன்' என்றேன். 'எப்படியோ போடி. உன்னோட இஷ்டம்' என்று குரு கூறிவிட்டார்.

சங்கமாவில் சேர்ந்த ஆரம்பத்தில் சரியான நேரத்தைக் கடைப் பிடிப்பதும், கொடுத்த வேலைகளைச் சரியாகச் செய்வதும் சங்கமாவைத் தொடங்கியவருக்குப் பிடித்திருந்தது. எனக்கு ஒரு வாட்ச் அன்பளிப்பாக அளித்தனர். ஆபீஸ் டைமுக்கு ஆபீஸ் திறந்து வைப்பேன். டீ போட்டுக் கொடுப்பேன். கடைகளுக்குச் சென்று ஆபீசுக்குத் தேவையான பொருள் களை வாங்கி வருவேன். நியூஸ் பேப்பர்களிலும் மாக்சின்களிலும் மார்க் செய்து கொடுத்த செய்திகளைக் கட் செய்து வெள்ளைப் பேப்பரில் கோந்து போட்டு ஒட்டி வைப்பேன். ஒட்டிய செய்தி வந்த நாள், பேப்பர் பெயர் ஆகியவற்றை அந்த வெள்ளைப் பேப்பர்மீது சீல் போட்டு அச்சுக் குத்துவேன்.

சங்கமாவில் மூத்தவர்கள் சொல்லிக் கொடுக்கும் பயிற்சிகள், சினிமா திரையிட்டு அதைப் பற்றிப் பேசிக் கொள்ளுதல், பாலினச் சிறுபான்மையினர் யார் யார்? சிறுபான்மையின மக்கள் யார்? என்பதைப் பற்றிய பயிற்சிகள், தலித் மக்கள் பற்றிய உரிமை மீறல், ஆதிவாசிகள் பற்றியவை, இந்து முஸ்லிம் வேற்றுமை, சண்டைகள், உலக நாடுகள் நடத்தும் யுத்தத்தால் பொதுமக்களின் இன்னல்கள் பற்றி அறிவு ஊட்டினார்கள். இவற்றை மனதளவில் உணர்வுப்பூர்வமாகப் புரிந்துகொள்ளும் அளவில் பயிற்சி கொடுக்கப்பட்டது. அப்போது ஓரளவுக்குச் சங்கமா பணிகள் எனக்குப் புரிந்தன. என்னுடன் இன்னும் ஐந்து பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். பாமிளா சங்கமாவில் ஊழியராக வேலை செய்யாவிட்டாலும் சங்கமாப் பணிகளுக்கு உதவிபுரிந்து வந்தாள். சங்கமாவுக்குப் பாலினச் சிறுபான்மையினர் உரிமைகள் பற்றி வேலை செய்யப் பணம் கிடைத்தது. ஆபீஸ் வேறு இடத்திற்கு மாற்றப்பட்டது. ஊழியர்கள் அதிகமாயினர். பாமிளாவும் இஜரா அவுட்ரீச் புராஜக்ட் ஒருங்கிணைப்பாளர் பணிக்கு அமர்த்தப் பட்டாள். எல்லா ஊழியர்களுக்கும் அதிகச் சம்பளமும் கிடைத்தது.

நானும் அமாமின் அருகில் பழக்கப்பட்ட ஒருவரின் வீட்டை வாடகைக்கு எடுத்துத் தங்கினேன். வீட்டுக்குத் தேவையான பொருள் களை என் குரு வாங்கிக் கொடுத்தார். நான் பாலியல் தொழில் செய்வதில்லை; ஆபீசில் வேலை செய்கிறேன்; நல்ல ஒழுக்கம் உடையவள் என்பதால் அமாம் இருக்கும் ஏரியாவிலேயே அந்த வீட்டு ஓனர் எனக்கு வீடு கொடுத்தார். ஆனால் என்னைப் போன்ற இதர இஜராக்கள் வீட்டுக்கு வரக்கூடாது என்று சொல்லிவிட்டார். காரணம் அடிக்கடி

இஜராக்கள் வீட்டுக்கு வந்துபோனால் ஆண்கள் வீட்டுக்குள் வந்து விடுவார்கள். அக்கம்பக்கம் குடும்பத்தினர் இதைப் பொறுத்துக் கொள்ளமாட்டார்கள். வயசுக்கு வந்த பெண்கள் இருக்கிறார்கள். அதனால் எந்த ஆணோ இஜராவோ என்னைப் பார்க்க வீட்டுக்கு வரக்கூடாது. நான் இஜராக்களைப் பார்க்க வேண்டுமானால் அமாம் சென்று பார்த்துக் கொள்ளலாம் என்பதில் ஓனர் கண்டிப்பாக இருந்தார். எனக்கு வீடு தனியாக இருந்தால்தான் வேலைக்குச் சென்றுவர வசதியாக இருக்கும். அதுவும் நாம் பழகின ஏரியாவாக இருந்தால்தான் பாதுகாப்பு. அமாம் அருகில் இருப்பதால் குரு, குருபாய்களை விட்டுப் பிரிய வாய்ப்பு இல்லை என்று எண்ணி ஓனர் சொன்ன மாதிரியே அந்த வீட்டில் இருந்தேன்.

வெளிச் சமுதாயத்தோடு ஒரு அடுக்குமாடிக் குடியிருப்பில் பெண்களுடன் நானும் அங்கு நட்பு வளர்த்துக்கொண்டு மற்றவர்கள் போல இயல்பு வாழ்க்கையில் ஈடுபட்டுக் கொண்டு இருந்தேன். நானாகச் சமைத்துக் கொள்வதும் ஆபீசுக்கு மதிய உணவு எடுத்துச் செல்வதும் ஆபீஸ் பணிகள் செய்வதும் என அந்த வாழ்க்கை எனக்கு மிகவும் பிடித்து இருந்தது. நான் குடியிருந்த வீட்டு ஓனர், மனைவி மக்கள், அக்கம்பக்கம் குடித்தனம் இருப்பவர்கள் அனைவரும் என்னை யும் ஒரு பெண்ணாகத்தான் நினைத்தனர். வேறுபாடு காட்டவில்லை. ஒதுக்கிப் பார்க்கவில்லை. விசேஷ நாட்களில் வீடுகளுக்கு என்னை அழைத்து மஞ்சள் குங்குமம் கொடுப்பதும் உணவுகளைப் பரிமாறிக் கொள்வதும் என அன்பாக இருந்தனர். என்னை மற்ற இஜராக்கள் போல் இல்லை எனவும் கருதினர்.

சங்கமா பாலினச் சிறுபான்மையினர் உரிமைகளுக்காகப் போராடத் தொடங்கியது. பாலினச் சிறுபான்மையினரில் அதிகம்பேர் ஏழைகளாக உள்ள ஆங்கிலம் தெரியாத கோத்திகள், இஜராக்கள், ஓரினச் சேர்க்கை யாளர்கள் ஆகியோர் அடங்குவர். ஆண் பெண்களின்மீதான அடக்கு முறைகள் பற்றிய கருத்தரங்குகள், பயிற்சிப் பட்டறைகள், சினிமா திரையிடுதல், பொதுக் கூட்டங்களில் உரையாற்றுதல் எனப் பல வழிகளில் சங்கமா பாலினச் சிறுபான்மையினர் உரிமைகளுக்காகப் பணியாற்றியது. பாலினச் சிறுபான்மையினர்மீதான பொதுமக்களின் தவறான கருத்துகளை நீக்கிச் சம அந்தஸ்துடன் வாழ வைப்பது சங்கமாவின் நோக்கம். நான் சங்கமா மூலம் இஜராக்களின் கலாச்சாரம், பண்பாடு, என் வாழ்க்கையில் ஏற்பட்ட, ஏற்பட்டுக் கொண்டுள்ள போலீஸ் அடக்குமுறை, சொத்துரிமை, ரவுடிகளினால் ஏற்படும் வன்முறைகள், பாலியல் தொழில்மூலம் ஏற்படும் பிரச்சினைகள், சமுதாயத்தில் ஏற்படும் ஏற்றத்தாழ்வு, கேலி, கிண்டல், பாலினத்தை

மாற்றிக் கொண்ட விவரங்கள் ஆகியவற்றைப் பொது இடங்களிலும், பத்திரிகைகளிலும் கொண்டு சென்று இஜராக்களின் நிலை பற்றி எடுத்துரைத்தேன்.

பெங்களூரில் இஜராக்களின் உரிமைகளுக்காகவும், ஓரினச் சேர்க்கையினர் உரிமைகளுக்காகவும், தலித் பெண்களின் உரிமைகளுக் காகவும், வரதட்சணைக் கொடுமைகளை எதிர்த்தும் இந்து முஸ்லிம் வன்முறைகளை எதிர்த்தும் குழந்தைத் தொழிலாளர் நலனுக்காகவும் குரல் கொடுத்து இதர தொண்டு நிறுவனங்களுடன் இணைந்து போராடினேன். என்னுடைய போராட்டத்தின் தொடர்ச்சிக்கும் என்னுள் இருந்த சமூக சேவைக்கான ஆற்றலை வெளிப்படுத்திக் கொள்ளவும் சங்கமா தோள் கொடுத்து விழிப்புணர்வுக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுத்தது. ஆரம்பத்தில் சங்கமா போராட்டங் களில் ஈடுபடாதபோது பாலினச் சிறுபான்மையினர் பற்றிய புகைப் படங்கள், நியூஸ் பேப்பர் கிளிப்பிங்ஸ் ஆகியவற்றைத் தனித்தனிப் பிரிவுகளாக டாக்குமெண்ட் செய்ய உதவியாக இருந்தேன். அந்தச் சமயத்தில் பாலினச் சமுதாயத்தவர் அல்லாத ஆண், பெண், குழந்தைகள் ஆகியோரின் உரிமைகள் சம்பந்தப்பட்ட விஷயங்களையும் தெரிந்து கொள்ள, தொடர்புகொள்ள சங்கமா பெரிதும் உதவியாக இருந்தது.

வேறுவேறு தொண்டு நிறுவனங்களிடமும் கல்லூரி மாணவ மாணவி களிடமும் சமுதாயப் பார்வை எந்த விதத்தில் பாலினச் சிறுபான்மை யினர்மீது உள்ளது எனத் தெரிந்து கொண்டேன். பாலியல் தொழில் செய்பவர்கள் முரட்டுத்தனம் கொண்டவர்கள், அசிங்கமானவர்கள், குடிப்பதற்காகவே பிறந்தவர்கள், விரோதிகள், சோம்பேறிகள் – இப்படித் தவறான கருத்துகளே பலரிடம் இருந்தன. பாலினச் சிறுபான்மை யினரின் உணர்வுகளும், கலாச்சாரங்களும் தெரியாத சூழ்நிலையே இதற்குக் காரணம். விழிப்புணர்வு மூலம் புரிந்து கொண்டவர்கள் பலர் இருந்தாலும், ஏற்றுக்கொள்ள முடியாத நிலையிலும் சிலர் இருந்தனர்.

பாலினச் சிறுபான்மையினரின் உரிமை மீறல் மட்டுமின்றி இதர எல்லாப் பாலின உரிமை மீறல்களையும் தட்டிக் கேட்க வேண்டும் என்ற மனப்பான்மை என்னுள் உருவாகி அதையே நடைமுறையில் கொண்டுவர ஆவல் உண்டாயிற்று. இதுதான் சரி, இது தப்பு என்று நினைத்திருந்த எனக்கு எது சரி, எது தப்பு எனப் புரிந்துகொள்ளும் மனப்பக்குவமும் மனித நேயமும் இருப்பதைக் கண்டு இந்தக் குறுகிய காலத்தில் என் மாற்றங்களையும் கருத்துகளையும் வரவேற்றனர்; பாராட்டினர். நான் சங்கமாவில் சேருவதற்குமுன் பாலியல் தொழில் செய்கின்றேன், நான் ஒரு இஜரா என்று சொல்லிக் கொள்ளக்கூடப்

பயப்படுவேன். யாராவது உங்களைப் பற்றிக் கட்டுரை எழுத வேண்டும்; உங்கள் குறைகளை வெளிப்படையாகத் தெரிவிக்க வேண்டும் என்று கேட்டால்கூட ஒப்புக்கொள்ள மாட்டேன். என்னை இஜரா என்று இந்த உலகம் அறிந்தால் என்னை வேறுபடுத்தி விலக்கி விடுவார்கள் என்ற பயம் இருந்தது. நான் பாலியல் தொழில் செய்கிறேன் என்று தெரிந்தால் என் வீட்டில், நாட்டில் என்னை அசிங்கமாகப் பார்ப்பார்கள் என்ற பயம்.

எல்லாவற்றுக்கும் மேலாக நான் இஜராவாக இருப்பது, பாலியல் தொழில் செய்வது தவறு என நினைத்தேன். ஆனால் தற்போது என் தவறு எதுவும் இல்லை. என்னைப் பார்க்கும் விதம், என்னை ஒப்புக்கொள்ளாத விதம், என் உரிமைகளைப் பறித்துக்கொண்டு வாழ வழி இன்றிக் கடைகடையாய்ப் பிச்சை எடுத்தும் பாலியல் தொழில் செய்தும் என்னை வன்முறைக்கு ஆளாக்கி, உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுக்கத் தெரியாமல் என்னை கேலியாகவும், கேவலமாகவும் பார்க்கும் உங்களின் இந்தப் பார்வை, இந்தச் சமுதாயப் பார்வைதான் தவறு எனப் புரிந்துகொண்டேன். ஒவ்வொரு மனிதனுக்கும் சுதந்திர மாக வாழ உரிமை இருந்தும் இதுவரை மனிதனாகக்கூட மதிக்காத இந்தச் சமுதாயத்தின் தவறு எனப் புரிந்துகொண்டேன். என்னைப் போல் இன்னும் பலமடங்குக் கஷ்டங்களையும் வன்முறைகளையும் எதிர்கொண்டு இருக்கும் என் சமுதாயத்தவர்களின் உரிமைக்காக இன்னும் அதிகமாக வேலைகளைச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் என்னுள் அதிகரித்தது.

சங்கமா வளரவளர இன்னும் அதிகப்படியாகப் பாலினச் சிறு பான்மையினரே வேலைகளில் சேருவதற்கு முன்வந்தனர். ஆரம்பத்தில் இஜராவாக வெளிப்படையாக உணர்வுகளையும் பாலின உரிமை களையும் வெளிப்படுத்திக் கொண்டவர்கள் நானும் என் சேலா பாமிளாவும்தான். சங்கமாவில் வேலை செய்பவர்கள் அதிகமும் பாலினச் சிறுபான்மையினர்தான். அவர்களின் உரிமைகள் சம்பந்தப் பட்ட விஷயங்களில் எங்களுக்குப் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. பாமிளா என்னுடைய சேலாவாக இருந்தாலும் அவளுக்கு இருக்கும் பேச்சு, உடை அலங்காரம், கருத்துகள் எல்லாம் எனக்கு வித்தியாச மாக இருந்தன. அவளைப் பார்த்து நான் சில விஷயங்கள் கற்றுக் கொண்டேன். புடவையே கட்டிக்கொண்டிருந்த நான் சுடிதார் அணிய ஆரம்பித்தேன். பம்பாயில் இருந்தபோது மாடர்ன் உடை அணிந்து இருந்தாலும் பெங்களூரில் அப்போது இஜராக்கள் புடவையில்தான் இருப்பார்கள். பாமிளாதான் மாடர்ன் உடைகளை அறிமுகப்படுத்திய வள் என்றால் அது மிகை ஆகாது.

நாங்கள் இரண்டு வருடம் வேலை செய்தோம். சமுதாயத்தவர் களின் மனதில் சங்கமா பற்றிப் புரிந்துகொள்ள அவகாசம் தேவைப் பட்டது. முதலில் எங்களைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. சங்கமா மூலம் உரிமைகளைத் தெரிந்து கொள்ளவோ புரிந்துகொள்ளவோ யாரும் முன்வரவில்லை. பயம், நம்பிக்கையின்மை ஆகியவற்றையே சமுதாயத்தவரிடம் கண்டோம். பாலினச் சிறுபான்மையினர் மீதான அடக்குமுறை, பொய்வழக்குப் போடுதல் முதலியவற்றுக்கு எதிராக அவர்களுக்கு உதவி செய்யும் போது சங்கமா பற்றிப் புரிந்துகொண்டு ஒவ்வொருவராக உதவ முன்வரத் தொடங்கினர்.

சங்கமா பணிகளின் மூலம் பல மாற்றங்களைக் கண்டேன். நான் பாலியல் தொழில் புரிந்தபோது ஏற்பட்ட வன்முறைகள் இப்போது குறைந்தன. பொதுமக்களிடம் கிண்டல், கேலிகள் குறையத் தொடங்கின. போலீஸ் லஞ்சம் வாங்குவது, சித்ரவதை செய்வது குறையக் கண்டேன். ஆரம்பத்தில் 'உனக்கு எதற்கு இதுபோன்ற வேலை? நம்முடைய இஜரா சமுதாயத்தில் யார் இப்படி வேலை செய்கின்றார்கள்? நீ மட்டும் ஏன் இப்படி நியூஸ் பேப்பர்களிலும் பொது இடங்களிலும் இஜராக்கள் மீதான வன்முறைகள் பற்றியும், பாலியல் தொழில் செய்வது பற்றியும் கூறுகின்றாய்? உனக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடும். வேலை செய்யாதே. விட்டுவிடு' என்று சிலர் கூறினர். 'எத்தனை நாளுக்கு நாம் பயந்தே வாழவேண்டும்? நமக்குச் சுதந்திரம் வேண்டாமா? வன்முறைகள் குறைய வேண்டாமா? எல்லாரும் எனக்கு என்ன வந்தது உனக்கென்ன வந்தது என்று இருந்துவிட்டால் இஜரா சமுதாயம் பற்றியும், உரிமைகள் பற்றியும் எப்படி மக்களுக்குப் புரிய வைப்பது?' எனக் கூறினேன்.

சில ஆண் நண்பர்கள், என் ஊரில் உள்ள சிலர்கூட என்னுடைய விழிப் புணர்வு மூலம் வந்த செய்திகளைப் பார்த்துவிட்டு 'ஏன் இப்படிப் பேட்டி குடுத்தே? அவமானமாக இருக்கிறது' என்று கூறினர். 'நான் என்னை அசிங்கப்படுத்திக்கொள்ளவோ, அவமானப்படவோ பேட்டி கொடுக்கவில்லை. இஜராக்களைப் பற்றித் தவறாக நினைக்கும் உங்கள் கருத்துகளை நீக்கவே உண்மையைப் பேசுகிறேன். அதில் உள்ள கருத்து களைப் புரிந்துகொள்வதைத் தவிர அவமானத்திற்கு என்ன இருககிறது? நான் திருடினேனா, பொய் சொன்னேனா, ஏமாத்தினேனா, கொலை செய்தேனா? இஜராக்களின் வாழ்க்கையில் எந்த அளவுக்கு உரிமை மீறல் இருக்கிறது என்பதைப் புரிய வைக்கத்தான் வேலை செய்கிறேன்; வேலை செய்வேன்' என்று கூறினேன். பதிலுக்கு 'உனக்கு மட்டும் என்ன வந்தது? யாரோ பிழைக்க நீ ஏன் உன்னை இப்படி அசிங்கப்படுத்திக் கொள்கிறாய்? நீ என்ன பெரிய சமூக சேவகி என்ற நினைப்பா? எவனுக்கோ எங்கேயோ வன்முறை நிகழ்கிறது என்றால் உனக்கு

மட்டும் ஏன் துடிக்கின்றது? உன்னைப்போல் மற்றவர்கள் இருக்கிறார்களா? மற்றவர்களுக்காக நீ ஏன் முன்வர வேண்டும்?' என்ற கருத்துகள் வெளிவந்தன.

நான் நீ என்று எல்லாரும் நினைத்திருந்தால் நம் சமுதாயத்தைப் பற்றி யார் வேலை செய்வார்கள்? நாம் ஒன்றுசேர்ந்து போராடத்தானே என்னுடைய முயற்சி? இந்த முயற்சி நீ மட்டும் என்று இன்று நினைக்கலாம். ஆனால் அந்த நீ என்பது நாம் என்று ஒருநாள் வந்தே தீரும். அந்த நாம் என்ற சொல்லுக்கு நான் எவ்வளவு முக்கியம் என்பது போகப் போகத் தெரியும். எல்லாருக்கும் தெரியும் எங்கள்மீது வன்முறைகள் தலைவிரித்தாடுகின்றன என்பது. ஆனால் பொதுமக்கள்முன் பேசப் பயமே காரணம். உலகத்தில் எத்தனையோ வேற்றுமைகள் வித்தியாசங்களுக்கு அவரவர் சங்கம் கட்டிக்கொண்டு போராடி உரிமைகளைப் பெறுகின்றனர். ஆனால் இஜராக்களுக்குச் சங்கம் ஒன்று இருக்கிறதா? இஜராக்கள் பற்றி எத்தனை பேருக்குத் தெரியும்? தெரியாமல் இருப்பதனாலேயே தவறான கருத்துகள் நம்மீது உள்ளன. அந்தத் தவறான கருத்தை நீக்குவது யாருடைய கடமை? இப்போது தலித் சமுதாயத்தினர் மீதான வன்முறைகளை எதிர்த்து அவர்களே குரல் கொடுத்து அவர்களின் உரிமைகளைப் பெற்றுக்கொண்டு இருப்பதைப் போல இஜராக்களாகிய நாம் ஏன் நம் உரிமைகளைப் பெறுவதற்காகப் போராடக் கூடாது? நம்முடைய பாலினத்தை மாற்றிக்கொள்ள நமக்கு உரிமை இல்லையா? நாமும் மனிதர்கள்தானே? நம்மையும் ஒரு தாய் தானே பெற்று எடுத்தாள்? நாம் என்ன ஆகாயத்தில் இருந்து குதித்து வந்துவிட்டோமா?

நமக்கென்று உரிமைகள் இருக்கின்றன. நாமும் இந்த நாட்டுக் குடிமக்கள்தான். நமக்கும் வேலைவாய்ப்பு, ரேஷன் அட்டை, சொத்துரிமை, பாஸ்போர்ட், தத்து எடுத்துக் குழந்தையை வளர்த்தல், திருமணம் செய்துகொள்ளுதல் இப்படி ஒரு குடிமகனுக்குத் தேவையான உரிமைகள் எல்லாம் கிடைக்க வேண்டாமா? இன்னும் எத்தனை நாளுக்கு நாம் அடிமைகளாக வாழ வேண்டும்? இன்னும் எத்தனை நாளுக்கு நாம் பயந்தே வாழ வேண்டும்? உரிமைகள் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் மட்டும்தானா? பாலினச் சிறுபான்மையினர்க்கு இல்லையா? எல்லா மனிதர்களுக்கும் இருக்கும் பசி, தூக்கம், பாசம், நேசம், இப்படி எல்லாம் நமக்கு இல்லையா? எந்த விதத்தில் நாம் குறைந்து போய்விட்டோம்? ஆணாகப் பிறந்து பெண் உணர்வு கொண்ட நாம் செய்த தவறு என்ன? இயற்கையாக வந்த இந்த உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுக்க முடியாத இந்த உலகில் நாம் வாழ வேண்டும். சக மனிதனைப்போல் தைரியமாகத் தலைநிமிர்ந்து வாழ

வேண்டும். எனக்கென்ற ஆசைகள், எனக்கென்ற நம்பிக்கைகள், எனக்கென்ற உறவுமுறை, எனக்கென்ற கலாச்சாரம் வேண்டாமா? இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நிமிடமும் கேட்பவர்களுக்கும் என்னைப் பார்ப்பவர்களுக்கும் பதில் கூறிப் புரிய வைப்பேன்.

நான் நேரம் காலம் சரியாகக் கடைப்பிடிப்பேன். இருக்கும் இடத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்ள நினைப்பேன். ஒரு வேலையைச் செய்தால் அதைத் திருத்தமாகச் செய்து முடிக்க வேண்டும் என நினைப்பேன். பத்துப்பேரு இருந்தாச் சரியா எல்லாரும் பகிர்ந்துகொண்டு வேலை செய்ய வேண்டும். என்னுடைய வீக்னஸ் என்னான்னு பார்த்தால் பொய் எந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லலாம் என்று தெரியாமல் உண்மையை உளறிவிடுவேன். சரியாக வேலை செய்யாதவர்களைக் கண்டால் முடிந்தால் கண்டிப்பேன். தப்பு என்று ஒன்று நடந்தால் அதைச் சமாளிக்கப் பொய்யோ உதாரணமோ கொடுத்தால் சட்டென்று கோபம் கொள்வேன். என் வேலை சம்பந்தப்பட்ட சொந்த விஷயங்களில் சரியாக நடந்துகொள்வதைப் புரிய வைப்பது, நான் தப்புசெய்து விட்டால் தவறுக்கு வருத்தம் தெரிவிப்பது இப்படிப் பல விஷயங்கள் உண்டு. இதைப் பார்ப்பவர்கள் கேட்பவர்கள் ஒரு சிலர் என்னைக் கிண்டல் கேலி செய்வதும் உண்டு. அந்தச் சமயத்தில் நான் கதறி அழுவதும் உண்டு. ஒருவேளை நான் செய்வது எல்லாமே தப்பா என்று நினைத்து மற்றவர்களைப்போல் நம்மால் ஏன் இருக்க முடியவில்லை என்ற தாழ்வு மனப்பான்மைகூட வரும். பின்பு அது விலகிச் சென்று விடும். ஒவ்வொரு சமயம் என்னுடைய வாழ்க்கை பற்றிக் கூறும்போது ஆத்திரமும் அழுகையும் வந்து செல்லும்.

சில நண்பர்கள், சில இஜராக்கள் என் உணர்வுகளுக்கு மிக்க மதிப்பு கொடுப்பார்கள். 'நீ செய்வது சரி என்று எங்களுக்குத் தெரிகிறது. மற்றவர்களுக்கு அது விதிவிலக்காக இருந்தால் உன்னை நீ ஏன் தாழ்த்திப் பார்க்கின்றாய்? அது அவர்களின் தவறு. அவர்கள் உன்னைப் போல இருக்க முடியாததால் அப்படிக் கேலி செய்கின்றனர். இதைப் பெரிதாக நினைத்து மனதைப் போட்டுக் குழப்பிக்கொள்ள வேண்டாம். நீ செய்வது உனக்குச் சரி என்று பட்டால் அதையே நீ செய்' என்று தைரியம் சொல்வார்கள்.

என்னுடைய பேச்சு,வேலைகள், சமுதாயத்தின்மீது கொண்ட அக்கறை, ஐடியா, வாழும் முறைகள், எவ்வளவோ விஷயங்கள் என்னுள் மாறுபட்டுக்கொண்டு வளர்ந்தன. அடுத்தவர்கள் மனதைத் தொடும் அளவுக்கு என்னுடைய கவிதைகள், டெஸ்டிமோனிங், பிரசன்டேஷன், பயிற்சிகள், பொதுக்கூட்டங்களில் பேசுவது, குறைகளைத் தீர்க்கப் பாடுபடுவது ஆகியன இருந்தன. சில சமயம் என்னுள்

நானே பெருமைப்பட்டுக் கொண்டது உண்டு. பள்ளிக்குச் சென்று படித்துப் பட்டம் பெற்றுச் சக மனிதனைப்போல் நானும் வேலைக்குப் போக வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஆனால் அது முடியாமல் போய்விட்டது. ஆனால் இன்று யுனிவர்சிடி காலேஜ் உட்பட இன்னும் பல இடங்களில் மாணவர்களுக்குப் பாலினச் சிறுபான்மை பற்றி வகுப்பு எடுக்கிறேன். காவல் அதிகாரிகளிடம் அடக்குமுறைகளைத் தட்டிக் கேட்கிறேன். சமுதாய மக்கள்முன் குரல் கொடுக்கிறேன். சட்டத்தில் உள்ள நுணுக்கங்களைப் பேசுகிறேன். என்னுடைய சமுதாயத்தவர்கள் வளர்ச்சிக்கு அவர்களுக்கே பயிற்சி கொடுக்கிறேன். டாக்டர்களுக்கு அறிவுரை சொல்கிறேன். சிலரின் சந்தேகங்களைத் தீர்த்து வைக்கிறேன்.

இப்படிப் பெருமைக்குரிய பல விஷயங்கள் இருந்தாலும் அது எனக்கு மட்டும் பெருமையில்லை. என் இஜரா இனத்திற்கே பெருமை என நினைத்தது உண்டு. ஒவ்வொரு இஜராவிடமும் ஒவ்வொரு திறமை இருக்கிறது. ஆனால் சரியான நேரத்தில் சரியானவர்கள்முன் கொண்டு வரத் தவறுவதால் இயலாமைக்குக் காரணமாகி விடுகிறது. என்னுள் இருந்த ஆற்றல்களை வெளிக்கொணர எனக்கு உறுதுணை யாக இருந்த சங்கமாவைப் போல மற்றவர்களின் திறமைகளை வெளிக்கொணர நான் உறுதுணையாக இருக்கவேண்டும் என்ற எண்ணமும் என்னுள் அதிகரித்தது. அது என் கடமை என்றும் உணர்ந்தேன்.

'உனக்கென்னம்மா வேலை கிடைத்துள்ளது. சம்பளம் கிடைக் கின்றது. உனக்குத் தைரியம். எங்களுக்கு அப்படியா? வேலை எதுவும் இல்லை. பாலியல் தொழில் செய்தால்தான் இன்றைய வயிற்றுப்பசி தீரும். வந்துவிட்டாய், ஈசியாகக் கூறிவிட்டாய். ஆபீசுக்கு வாங்க, மீட்டிங்கிற்கு வாங்க, புரோகிராமுக்கு வாங்கன்னு. அங்க வந்தா என்ன கிடைக்கும்? காசு பணம் கொடுப்பாங்களா? சாப்பாடு போடுவாங் களா? ஒரு நாளைக்கு அங்க வந்து உட்கார்ந்துட்டா அன்னிக்குப் பொழப்பே போச்சு. நாலு கடை ஏறி இறங்கினா நாலு காசு கிடைக்கும். ஏதோ வந்துட்டீங்க, பாக்குறோம். முடிஞ்சா வர்றோம்' என்ற பதில் கிடைத்தது ஆரம்பத்தில். ஒரு வகையில் அவர்கள் கூறுவதும் உண்மை தான். எனக்கு வேலை கிடைத்துச் சம்பளம் பெற்றுக் கொள்கிறேன். அதனால் இவர்களைத் தேடி வந்து அழைக்கிறேன். மற்றவர்கள் அங்கு வந்தால் அன்றைய பொழப்பு போய்விடும் என்று கூறுவதிலும் நியாயம் இருக்கிறது.

எல்லாருக்கும் வேலை கொடுப்பது கஷ்டம். ஆனாலும் நம் உரிமைகள் பற்றித் தெரிந்துகொள்ளவும் ஒன்றாகச் சேர்ந்து

போராடி உரிமைகள் பெறுவதும் கூட வேண்டும். இது என் ஒருத்தியின் மூலம் ஆகப்போவது இல்லை. எல்லாரும் ஒன்றாக ஒற்றுமையாகப் போராடினால்தான் மாற்றங்களை ஏற்படுத்த முடியும் என்பதை மனதில் பதியும் வகையில் கூறுவேன்.

# 22

அப்பாவுக்கு நான் இதுவரை கொடுத்த பணத்தில் வீட்டை ஆல்ட்ரேசன் செய்து என் பெயரில் உயில் எழுதி வைத்தார். அந்த உயில் கண் துடைப்புக்குத்தான் என்பதை நான் புரிஞ்சுக்கிட்டேன். அப்பா கூட உயிலை உடைக்கப் போறதாச் சிலபேர்கிட்டச் சொல்லிக்கிட்டிருந்தாரு. எனக்கு வாரிசு இல்ல. ஆனா, பரம்பரை பரம்பரையா நம்ம குடும்பத்துல வாரிசு உள்ளவங்கதான் இந்த வீட்ட வெச்சிருக்கோணும் என்பது அப்பாவோட ஆழமான கருத்து.

'அடிக்கடி நீங்க பலபேரிடம் உயிலை ஒடைக்கப் போறேன்; மாத்தி எழுதப்போறேன்னு சொல்றீங்க. அதனால எனக்கு உயில் மட்டும் போதாது. இந்த வீட்டை என்பேர்ல ரிஜிஸ்ட்ரேஷன் செஞ்சு வைக்கணும்' என்று கேட்டேன். 'உங்க அம்மாவும் நானும் உயிரோடு இருக்கிற வரைக்கும் உன் பேர்ல எழுதிக் கொடுக்க முடியாது. உயில் தான் எழுத முடியும். நீ எங்க வேணும்னாலும், எந்தக் கோர்ட்டில் வேண்டுமானாலும், எந்த வக்கீல்கிட்ட வேண்டுமானாலும் கேட்டுப் பாரு. அம்மா அப்பா இருக்கற வரைக்கும் உன்பேர்ல ரிஜிஸ்ட்ரேஷன் செய்து வைக்க முடியாது. உயில்தான் எழுதி வைக்க முடியும். எங்க காலத்துக்குப் பிறகு நீ ஆண்டு அனுபவித்துக்கொள்ளலாம்' என்று அப்பா கூறினார்.

'உங்களுக்குதான் உயில் ஒடைத்து வேறு உயில் எழுத அதிகாரம் இருக்கே. நீங்களும் அப்படித்தானே சொல்லிக்கிட்டு இருக்கீங்க' என்றேன். நான் யாரு பேர்லயும் உயில மாத்தி எழுதல. வேணுமுன்னாப் போய் நகல் எடுத்துப் பாரு. சும்மா சண்டை சச்சரவு வேண்டாம். மரியாதையா கலாட்டா செய்யாம போயிரு. அவ்வளவுதான்' என்றார் அப்பா. நான் 'நியாயத்தை நியாயமாகக் கேட்டாக் கலாட்டா செய்யறேன்னு சொல்றீங்க. ஒரு வேளை உயிலை மாத்தி எழுதிட்டா

என்னோட நிலை என்ன ஆவது? வீடு உனக்குத்தான் உனக்குத்தான் என்று சொல்லிட்டு என்னை மோசம் பண்ணப் பாக்குறீங்களா? நீங்க எனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யுறீங்க' என்றேன்.

'உனக்கு என்ன நம்பிக்கை துரோகம் செஞ்சுப்புட்டேன்? உனக்கு என்மேல நம்பிக்கை இல்ல. அதான் இப்படிக் கத்துற. உனக்கு என்மேல நம்பிக்கை இல்லாத போது உன்மேல நான் எப்படி நம்பிக்கை வைக்கிறது? அப்படியே உன்பேர்ல வீட்டை எழுதி வச்சுட்டா இப்பக் கலாட்டா செய்யற மாதிரி நாளைக்குக் குடிச்சுட்டு வந்து வீடு என்னோட வீடு, என்னோட வீட்டைவிட்டு வெளியே போங்கன்னு சொன்னா நாங்க வயசான காலத்துல எங்க போறது? உன்னை எப்படி நம்பி எழுத முடியும்? இப்படி நீ கலாட்டா செஞ்சுட்டு இருந்தே, உண்மையாகவே உயிலை எனக்குப் புடிச்சவங்களுக்கு மாத்தி எழுதித் தான் வைப்பேன்' என்றார் அப்பா.

அண்ணன் என்னைப் பார்த்து, 'நீ நாளைக்கு உங்க பொட்டையன் களுக்கு எழுதி வைப்பே. ரோட்ல போறவங்களுக்கு எழுதி வைப்பே. எவனாவது ஆம்பளை சிரிச்சுப் பேசிட்டா அவனுக்கு எழுதி வைப்பே. பரம்பரை வீடு முப்பாட்டன் காலத்துச் சொத்துன்னு இந்த வீடு தான் இருக்கு. உன்ன நம்பி எழுதிட்டா நீ அதை அவிச்சுட்டுப் போயிடுவேன்னுதான் எழுதமாட்டேங்கிறாங்க. உனக்கே இவ்வளவு ஆசை இருந்தா பொண்டாட்டி புள்ளைங்களை வச்சுக்கிட்டு இருக் கறவங்களுக்கு எவ்வளவு ஆசை இருக்கும்?' என்றார்.

உடனே நான்,'உங்களுக்குப் பிரிச்சுக் கொடுத்த சொத்துல வந்து பங்கு கொடுங்கன்னு கேட்டனா? இல்ல, உங்க சொத்த நீங்க ஏன் விக்கிறீங்க, ஏன் அழிக்கிறீங்கன்னு கேட்டனா? அவனவன் சொத்தை அவனவன் எப்படி விக்கிறானோ பாதுகாக்குறானோ அதுபோல என்னோட சொத்தை நாளைக்கு விப்பேன், அழிப்பேன்டா. அதைக் கேட்க உனக்கு என்ன உரிமை இருக்கு?' என்று கேட்டேன்.

அண்ணன்: எதுடா உன்னோட சொத்து? உனக்குத்தான் நாங்க பணத்தைக் கொடுத்து ஒதுக்கிட்டோம்ல. இது அம்மா அப்பாவுக்குக் கிடச்சது. இதுல நாளைக்கு எங்களுக்குத்தான் பங்கு இருக்கு. உனக்கு மட்டும் ஊம்பக் கொடுப்பாங்களா பொட்டத் தாயோலி?

மற்ற அண்ணன்களும் 'அதானே. நாங்களும்தான் இருக்கோம். எங்களுக்கும்தான் பங்கு இருக்கு' என்றனர். எல்லாரும் ஒன்றுசேர்ந்து கொண்டனர் இந்த விஷயத்தில்.

நான்: உங்களுக்காவது குடும்பம் இருக்கு. தோட்டத்தையும் மூணாப் பிரிச்சுக்கிட்டீங்க. எனக்கு ஒரு லட்சம் கொடுத்துக் கையெழுத்து வாங்கிட்டீங்க. நாளைக்கு எனக்குன்னு வீடாவது இருந்தாத்தான்

நீங்ககூட என்னைப் பாப்பீங்க. எனக்கு ஒன்னுமில்லேன்னா என்னை ஒரு நாய்கூட மதிக்காது.

அண்ணன்: உன்னை யாருடா சொத்தைப் பிரிக்கும்போது வாங்க வேண்டாம்னு சொன்னாங்க? பத்திரம் எழுத வக்கீலுக்குக் கொடுக்கப் பணம் கேட்டா இல்லேன்னு சொன்னே. அதனால நாங்க உனக்குக் கடன உடன வாங்கிப் பணத்தைக் கொடுத்துட்டுத் தோட்டத்தைப் பிரிச்சுட்டோம். அதுக்கென்ன பண்றது?

அம்மா: இங்க பாருங்கடா. அவனவனுக்குச் சொத்தைப் பிரிச்சுக் கொடுத்துட்டோம். மேலும் இங்க வந்து சத்தம் போடுறதை வச்சுக்காதீங்க. எங்க ஆயுசுக்குப் பின்னாடி எங்க இஷ்டப்படி நாங்க எங்க சொத்தை யாருக்கு வேணுமானாலும் எழுதி வைப்போம். இல்லாட்டி வித்துத் திம்போம். உங்களுக்குப் பிரிச்சுக் கொடுத்த சொத்துல கேட்டு வந்து நிக்கமாட்டோம். இங்க வந்து கலாட்டா செய்யாதீங்க. எனக்கு சுகர், இரத்த அழுத்தம் இருக்கு. எங்களை வயசான காலத்துல நிம்மதியா இருக்க விடுங்க.

அப்பா: சும்மா இங்க எங்களோட கலாட்டா செய்யறது நல்லா இல்லே. இப்படி நீ பேசிக்கிட்டு இருந்தா நான் போலீசுக்குப் போக வேண்டி வரும். நீ சண்டை போடுறதாலதான் உயிலை மாத்தி எழுது வேன்னு சொன்னேன். இப்படி அடிக்கடி நீ அவன் பேச்சைக் கேட்டுக் கிட்டு, இவன் பேச்சைக் கேட்டுக்கிட்டு எங்களை நம்பாம சண்டை போட்டுக்கிட்டு இருந்தா உயிலை மாத்தித்தான் எழுதுவேன். உன்னாலே என்ன செய்ய முடியுமோ அதைச் செய்.

நான்: அப்போ நான் கொடுத்த பணத்துக்கு என்ன வழி?

அப்பா: எந்தப் பணம்? எப்பக் குடுத்தே? நீ எனக்குப் பணம் கொடுத்ததற்கு என்ன புரூப் இருக்கு? பணம் இல்லேன்னு சொன்னா என்ன செய்வே? பொறுத்துப் பொறுத்துப் பாத்தாக்கூட வாயாடிட்டு இருக்கே. நீ பணமும் கொடுக்கல, ஒன்னும் கொடுக்கல. மூடிக்கிட்டுப் போடா. உன்னால முடிஞ்சதைச் செய்.

கொடுத்த பணத்துக்கு புரூப் என்ன இருக்குன்னு அப்பா கேட்டதும் என்னால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அந்தப் பணத்தைச் சம்பாதிக்க நான் பட்ட கஷ்டம் அப்போது என் கண்முன் நின்றது. கோபமும் ஆத்திரமும் என்னைப் பொங்க வைத்தது.

'சாட்சியா கேக்குறீங்க? அந்தக் கடவுள்தான் சாட்சி. ராத்திரி எத்தனை மணிக்கு இறங்கினாலும் அப்போதே உங்க கையில் கட்டுக் கட்டாக் கொடுத்தனே, கை நீட்டி வாங்கிட்டு சாட்சி என்னான்னு கேட்டுட்டீங்க. அந்தக் கடவுள்தான் சாட்சி. உங்க மனசுதான் சாட்சி.

இந்த வீட்டோட ஒவ்வொரு செங்கல்லையும் கேட்டுப் பாருங்க. அது சொல்லும் நான் எப்படி எல்லாம் கஷ்டப்பட்டுச் சம்பாதிச்சுக் கொண்டுவந்து கொடுத்தேன்னு. கண்டவங்ககிட்ட எல்லாம் அடி வாங்கி, உத வாங்கி, போலீஸ் ஸ்டேஷன் ஏறி இறங்கி, என்னோட உடம்ப வித்துச் சம்பாதிச்சது. தேவிடியாளாப் போய் சம்பாதிச்சது. காட்டிலும் மேட்டிலும் கல்லுக்குத்தி ரத்தம் சொட்டச் சொட்டத் தெருத் தெருவா ஆடிச் சம்பாதித்தது. வீட்டைவிட்டு வெளியில் போனாத் திரும்பி வீடு வந்து சேருவோம்ங்ற நிலை தெரியாம ரவுடி கிட்டயும் போலீஸ் கிட்டயும் அடிவாங்கி உத வாங்கி சம்பாதிச்சது. ஊரு உலகத்துல தேவிடியா, விபச்சாரி, ஒம்போது, பொட்டையன்னு பேரு வாங்கி சம்பாதிச்சது. அப்படிச் சம்பாதிச்ச பணத்தைக் கை நீட்டி வாங்கிட்டு சாட்சி கேட்கிறாயே உனக்கு எத்தனை பட்டம் கொடுக்கிறது? மலை போல உங்களை நம்புனதுக்கு நல்லா வேலை காட்டிட்டீங்க. நீங்க நல்லா இருக்கமாட்டீங்க. என்னோட பணத்தை இல்லேன்னு சொன்னா நீங்க நாசமாப் போயிடுவீங்க' என்று ஆத்திரம் தீர நான் என் வாழ்க்கையில் பட்ட துன்பங்களை, அன்று மனதில் உள்ளதை உடைத்துக் கத்திக் கூறினேன்.

வீட்டில் உள்ள சீமெண்ணையை எடுத்து வந்து தலையோடு ஊற்றிக் கொண்டு, வேடிக்கை பார்ப்பவர்களிடம் தீப்பெட்டி கேட்டேன். எல்லாரும் பயந்து ஒதுங்கி என்னை வேடிக்கை பார்த்தனர். என் அம்மா, அப்பா, அண்ணன்கள் வீட்டுக்குள்ளேயே இருந்தனர். பற்றிக் கொண்டு சாகட்டும் என்று நினைத்தனர் போல. எல்லாரும் நான் என்ன செய்துகொள்ளப் போகிறேன் என்று ஒன்றும் தெரியாதது போல இருந்தனர். சுமார் 15 நிமிடம் எண்ணெய்யை ஊற்றிக்கொண்டு ரோட்டிலேயே புலம்பிக்கொண்டு இருந்தேன்.

இதுவரை நான் பட்ட கஷ்டங்களையும் நான் எல்லாருக்கும் செலவு செய்ததையும் சொல்லி அம்மா அப்பா அண்ணன் குழந்தைகள் எனக் குடும்பமாக நான் நினைத்து இருந்தும் இன்று எனக்கு சப்போட்டாகப் பேச யாரும் இல்லையே என்று கண்ணீர்விட்டு நெஞ்சு நெஞ்சாக அடித்துக்கொண்டு புலம்பினேன். என்னோட கண்ணீரையும் புலம்ப லையும் கண்டும் யாருக்கும் பரிதாபமோ உதவி செய்யணும் என்றோ தோன்றவில்லை. அன்று நிச்சயமாகக் கையில் தீப்பெட்டி இருந்திருந்தால் என்னையே நான் எரித்துக்கொண்டு இருப்பேன். நான் இருந்தால் என்ன, செத்தால் என்ன என்று நினைத்து என் குடும்பத்தார் அவர்களின் பங்குக்கு மீண்டும் சுடுகாட்டில் எரித்திருப்பார்கள். என்ன நேரமோ தீப்பெட்டி கையில் இல்லாததால், பதினைந்து நிமிடம் புலம்பி அழுததால் மனம் இலேசாகித் தற்கொலை எண்ணம் மறைந்தது.

நாம் இறந்தாலும் கவலைப்படாத இவர்கள்முன் வாழ்ந்து காட்ட வேண்டும்; நாம் இறப்பதனால் நமக்குத்தான் இழப்பு எனப் புரிந்து கொண்டு வீட்டின் பின்புறம் உள்ள தண்ணீர் பைப்பைத் திருகிவிட்டுத் தலையோடு குளித்து என் ஆத்திரத்தையும் கோபத்தையும் குறைத்துக் கொண்டேன். என்னைப் பொருத்தவரை பணம் போனது பற்றிக்கூடக் கவலை இல்லை. அதைச் சம்பாதிக்கப்பட்ட கஷ்டம்தான் என்னை இப்படி ஒரு சூழ்நிலைக்குத் தள்ளியது. ஊருக்குள் என் விஷயமாகச் செய்திகள் பரவின. என் குடும்பத்தில் என்னைப் பற்றிப் பேசப்பட்டது. நான் பெங்களூர் சென்றுவிட்டேன். இந்தச் சம்பவத்தை மறக்கவே முடியாததால் இரவில் அதிகம் குடிக்க ஆரம்பித்தேன். இதைப் பற்றிய நினைவில் இருப்பதை என் இஜரா சமுதாயத்திடம் சொல்லி அழுவேன். என்னுடைய ஆபீஸ் ஸ்டாஃப் (ஊழியர்) சிலரிடமும் சொல்லி அழுவேன். ஆபீஸ் மூலமாக லாயரை வைத்துப் போராடவும் எனக்கு மனம் இல்லை. போராடினாலும் என் பக்கம் சாட்சியம் இல்லை. அப்பா அம்மா நினைத்தால் மட்டும்தான் சொத்து கிடைக்கும் என விட்டுவிட்டேன். ஆனால் மனம் தளர்ந்துவிட்டது. உலகத்தை நம்ப முடியவில்லையே என்ற ஏமாற்ற உணர்வு என்னுள்..!

ஒரு மாதம் கழித்து என் வீட்டில் இருந்து போன். அப்பா என் பணத்தைத் திருப்பிக் கொடுப்பதாக அம்மா கூறினாள். என் அக்கா விடம் இருந்து அப்பா பணத்தை வாங்கியுள்ளார். அக்கா பெயரில் வீட்டை ரிஜிஸ்ட்ரேஷன் செய்து வைக்கப் போவதாகவும் கூறினார். நானும் ஊருக்குச் சென்றேன். அக்காவையும் வரவழைத்து இருந்தனர். அண்ணன்களும் அப்பா அம்மா எல்லாரும் இருந்தனர். நான் கொடுத்த மொத்தப் பணத்தையும் அப்பா எடுத்து நீட்டினார். பணத்தைப் பெற்றுக்கொள்ள எனக்கு மனம் இல்லை. பணத்தை வாங்கிக் கொண்டால் எங்கு குடும்பத்தை இழக்க நேரிடுமோ என்ற பயம் ஏற்பட்டது. என்னை என் குடும்பத்தார் ஒதுக்கி விட்டால் எனக்கென்று யாரும் இல்லாத அநாதை ஆகிவிடுவேனோ என்ற அச்சம் ஏற்பட்டது. குடும்பத்தோட பாசம் இல்லாமல் போய் விடுமோ என்ற பயம் ஏற்பட்டது. அவர்களைப் பிரிந்து செல்ல முடியாத நிலை ஆனது.

நான் சொன்னேன்.'இந்தப் பணத்தைத் திருப்பி வாங்கிக்கொள்ள உங்களுக்குக் கொடுக்கவில்லை. வீட்டை என் பெயரில் எழுதுவீர்கள் என்றுதான் கொடுத்தேன். எனக்குப் பணத்தைப் பேங்கில் போட்டுக் கொள்ளத் தெரியாமலா உங்களிடம் கொடுத்தேன்? நான் ஒரு பொட்டை, எனக்குன்னு குடும்பம் இல்லே, குழந்தைகள் இல்லேன்னு தானே இப்போ அக்காவுக்கு ரிஜிஸ்ட்ரேஷன் செய்துகொடுக்க முடிவு செஞ்சீங்க. அக்கா பேர்ல ரிஜிஸ்ட்ரேஷன் செய்ய மட்டும் சட்டம்

இருக்கு. இந்தப் பொட்டையன் பேர்ல ரிஜிஸ்ட்ரேஷன் செய்துவைக்கச் சட்டம் இல்லை. என்னை நல்லா நாடகம் ஆடி ஏமாத்திட்டீங்க. அக்காவை நம்புற அளவுகூட என்மீது உங்களுக்கு நம்பிக்கை இல்லாமப் போயிடுச்சு. காலம்பூரா உங்களை நம்பித்தான் இருக்கேன். உங்க காலத்துக்குப் பிறகு அண்ணனுங்க மோசம் பண்ணிவிடக் கூடாதுன்னு தானே எம்பேர்ல ரிஜிஸ்ட்ரேஷன் செய்துவைக்கச் சொன்னேன். நான் பொட்டைங்கற ஒரே காரணத்தால எனக்குக் குடும்பம் வாரிசுன்னு இல்லாததால்தானே இப்படிச் செய்யறீங்க. இவுங்களுக்காவது குடும்பம் இருக்கு. பசங்க பாத்துக்குவாங்க. எனக்குன்னு குடும்பம் குழந்தைகள்னு எதுவுமில்ல. உங்களை விட்டா யார் இருக்காங்க? இந்தப் பணத்தைக் குடுத்து என்னை அநாதையா ஆக்குறீங்க. ஏம்மா, ஏக்கா உங்களுக்குக் கூட மனசாட்சி இல்லாம போயிடுச்சே. போகட்டும். எனக்கு இந்தப் பணம் வேண்டாம். நான் அப்பா அம்மாவுக்குக் கொடுத்ததாகவே நினைச்சுக்கிறேன். எங்கியோ ஒரு அநாதையாப் போய் இருந்துக்கிறேன். நீங்க குடும்பத்தோட சந்தோஷமா இருங்க' என்று கண்ணீர்விட்டு அழுதேன்.

அக்காவும் அம்மாவும் 'அவன் பேர்லதான் வீட்ட எழுதி வச்சுப் புடுங்க. அவனும் மனுஷன்தானே. அப்படியா வீட்ட அவிச்சுப் புடுவான்?' என்றனர். 'நம்பள வீட்டைவிட்டு விரட்டிப்புடுவான்' என்று அப்பா கூறினார். அம்மாவோ, 'இங்க பாருங்க. மகள் பேர்ல வீட்ட எழுதுனா நாளைக்கு இது கொண்டா கொடுத்தா வீடுதான். நாம செத்தா நம்ம பொணத்தைப் போடக்கூட நம்ம வீடா இருக்காது. பேசாம துரைசாமி பேருலேயே வீட்ட எழுதுங்க. நாம் இருக்கற வரைக்கும் வீட்டைவிட்டு வெளியே போகச் சொல்ல முடியாத அளவுக்கு எழுதிக் கொடுத்துடலாம்ங்க' என்று அப்பாவிடம் கூறினார். அப்பாவும் ஒப்புக்கொண்டு 'அவனையே பத்திரம் செலவு செய்து எழுதிக்கச் சொல்லு. ஆனால் நாம் ரெண்டுபேரும் செத்த பிறகுதான் அவன் இந்த வீட்டை விக்கவோ எழுதவோ அனுபவிக்கவோ முடியும். அப்படித்தான் எழுத வேண்டும்' என்று கூறிவிட்டார்.

பத்திரம் எழுதுபவரைச் சந்தித்தேன். அவர் கூறுகையில் கிரயம் செய்ய அறுபதாயிரம் செலவு ஆகும். 'தான செட்டில்மெண்ட்' செய்து கொண்டால் முப்பதாயிரம் ஆகும். தான செட்டில்மெண்ட் கிரயம் செய்வதுபோலத்தான் என்றார். தான செட்டில்மெண்ட் என்றால் அப்பா எனக்கு அந்த வீட்டைத் தானமாக எழுதிக் கொடுத்து விடுவது என்று பொருள். இது பற்றிச் சில வக்கீல்களைச் சந்தித்து விவரம் கேட்டேன். தான செட்டில்மெண்ட் செய்துகொண்டால் நாளைக்கு ஏதேனும் தொந்தரவு வருமா என்று. தான செட்டில்மெண்ட் கிரயம்

செய்துகொள்வது போலத்தான். வீட்டுக் கந்தாயம், டெலிபோன், கரண்ட் பில்கள் உன் பெயரில் வரும்படி மாற்றிக்கொண்டால் பின்னால் எந்தப் பிரச்சினையும் வராது. அப்படிக் குறிப்பிட்ட பில்கள் உன் அப்பா பெயரிலேயே வந்தால் நாளை அப்பா அம்மா காலத்துக்குப் பிறகு உங்கள் அண்ணன்கள் அப்பா தானமாகக் கொடுத்தார்; ஆனால் நீ அதை ஏற்றுக்கொள்ளவில்லை என்றும், அப்பாதான் வீட்டைப் பராமரித்து வந்தார் என்றும் குறிப்பிட்ட பில்களைக் கோர்ட்டில் காட்டினால் ரத்து ஆக வாய்ப்பு இருக்கிறது. அதனால் தான செட்டில் மெண்ட் செய்த பிறகு குறிப்பிட்ட பில்கள் தனி பட்டா என்று உன் பெயரில் மாற்றிக்கொண்டால் எந்த வில்லங்கமும் வராது என்று விவரம் சொன்னார்கள்.

பத்திரச் செலவுகள் நான் கொடுத்தாலும் அப்பாதான் செலவு செய்ததுபோல எழுதவேண்டும். அதனால் பத்திரம் அப்பா பெயரில் தான் வாங்கினேன். வயதானதாலும் என் மகன் ஆணாக இருந்து பெண்ணாக மாறியதாலும் அவனுக்குச் செய்ய வேண்டிய பாதுகாப்புக் கருதியும் என்னை இதுவரை பார்த்துக் கொள்வதன் பேரில் இனியும் என்னையும் என் மனைவியையும் பார்த்துக் கொள்வான் என்ற நிலை யில் இந்த வீட்டை அவனுக்குத் தானமாகக் கொடுக்கிறேன். மேற் கொண்டு இந்தத் தான செட்டில்மெண்டை ஒருபோதும் உடைக்கவோ, வீட்டின் பெயரில் கடன் வாங்கவோ எனக்கும் என் மனைவிக்கும் மற்ற என் வாரிசுதாரர்களுக்கும் உரிமை இல்லை. நாங்கள் இறக்கும்வரை துரைசாமியும் இந்த வீட்டை விற்கவோ, கடன் வாங்கவோ, என்னையும் என் மனைவியையும் வீட்டைவிட்டுப் போகச் சொல்லவோ முடியாது. எங்கள் இருவரின் காலத்துக்குப் பிறகு துரைசாமி ஆண்டு அனுபவித்துக் கொள்ளலாம். அதுவரை எனக்கும் என் மனைவிக்கும் குடியிருந்து கொள்ள மட்டும் உரிமை உள்ளது. இதற்குமுன் எந்த ஒரு பவர் பட்டாவோ எழுதிக் கொடுத்து இருந்தால் இன்று முதல் ரத்து செய்யப் படும். என் மகன் துரைசாமி என்றாலும் அவன் ரேவதி என்றுதான் கையெழுத்துப் போடுவான் என்று என் அப்பா எனக்கு எழுதிக் கொடுப்பதுபோல நான் எனக்கும் என் பெற்றோர்களுக்கும் பிரச்சினை இல்லாமல் எழுதிக்கொண்டேன்.

அதன் பிறகு அந்தப் பத்திரத்தை வைத்துக் குறிப்பிட்ட பில்களை ரேவதி என்ற பெயரில் வரும்படி செய்துகொண்டேன். இந்த வேலை களை முடிக்க அரசு அதிகாரிகள் உட்பட உரிய செலவைவிட அதிகம் லஞ்சம் கொடுக்க வேண்டிவந்தது. அதற்காக மூன்று மாதங்கள் இழுபறி செய்தனர். என் பெயரில் பட்டா வாங்கக் கிராம அதிகாரிக்கு லஞ்சம் கொடுத்தும் என்னை நீண்ட நாட்கள் அலைய வைத்து

விட்டார். பணம் வாங்கிய கிராம அதிகாரி மாற்றல் ஆகிச் சென்றுவிட புதிய கிராம அதிகாரி எனக்கு ஒரு பைசா செலவு இல்லாமல் பட்டா போட்டுக் கொடுத்தார். என் அப்பாவோ இவன் பார், என்மீது நம்பிக்கை இல்லாமல் வீட்டின் குறிப்பிட்ட பில்களை எல்லாம் அவன்பேரில் மாற்றிக் கொண்டான். மூத்தவன் தோட்டத்தில் உள்ள கரண்ட் சர்வீஸ் இன்னும் என் பெயரில்தான் இருக்கிறது. அவன் மாற்றவில்லை. இவன் பார் நம்பிக்கை இல்லாமல் செய்கிறான் என்று தூற்றிக்கொண்டு இருந்தார். அவர் என்னவோ சொல்லிக்கொண்டு போகட்டும். அவருக்குத் தெரிந்தது அவ்வளவுதான். இப்போதும் நான் அம்மா அப்பா இருக்கும்வரை வீட்டை ஏதும் செய்யமுடியாது. அப்படி அம்மா அப்பாவுக்குமுன் நானே இறந்து விட்டால் இந்த வீடு யாருக்குப் போகுமோ என்று தெரியாது.

பத்து வயசு ஆயிட்டா பங்காளிங்கற மாதிரி என்னோட அண்ணங்க கிட்ட இருந்தும் என் அப்பாகிட்ட இருந்தும் என் பணத்துக்கு வில்லங்கம் இல்லாம வீட்டை எழுதிக்கொள்ள வேண்டி ஆயிற்று. நாளை என் அண்ணன் குழந்தைகளுக்குத்தானே கொடுக்கப் போகிறேன். எனக்குச் சொத்து கிடைக்கக் கூடாது என்றும் வீட்டில் சேத்தக் கூடாது என்றும் நின்றார்கள். இப்போது நான் நினைப்பது, செய்வது, செய்து கொண்டிருப்பது ஆகியவை எல்லாம் எந்தச் சட்டத்தில் இருக்கிறது, இப்படியெல்லாம் கொடுக்கவேண்டும் என்று?

சட்டத்துக்குமுன் என் பாசம் ஜெயித்துவிடும் என்ற நம்பிக்கையில் வாழ்கிறேன். பாசத்துக்கும் அரவணைப்புக்கும் ஏங்கித் தவிக்கிறேன். குடும்பத்தாருக்கு ஏதாவது என்றால் துடித்துப்போய்விடுகிறேன். எனக்கும் அம்மா, அப்பா, அண்ணன், அக்கா என்று குடும்பம் வேண்டும். அவர்களும் என்னை வெறுத்து ஒதுக்கக்கூடாது. அதற்காகத்தான் இவ்வளவு போராட்டம். இன்றும் என் அம்மா அப்பா என் வீட்டில்தான் இருக்கிறார்கள். அவர்களுக்கு இடையிடையே உடல்நிலை மோசமானால் ஆபீசுக்கு லீவு போட்டுவிட்டு ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்து பார்த்து வருகிறேன்.

# 23

தமிழ்நாட்டில் விழுப்புரம் மாவட்டத்தில் கூவாகம் என்ற கிராமத்தில் கூத்தாண்டவர் ஆலயம் உள்ளது. ஆண்டுதோறும் சித்ரா பௌர்ணமி யன்று பல்லாயிரக்கணக்கானவர்கள் கலந்துகொண்டு கூத்தாண்டவர் திருவிழாவைச் சிறப்பாக நடத்துவார்கள். இந்தியா மட்டுமின்றி அயல் நாட்டினரும் இஜராக்களும் இந்தத் திருவிழாவில் பங்கு கொள்வது மிகச் சிறப்பு அம்சமாகும்.

மகாபாரதப் பெருங்காப்பியத்தில் அர்ஜுனனுக்கும் நாகக் கன்னிக்கும் பிறந்தவர் அரவான். குருச்சேத்திர யுத்தத்தில் பாண்டவர்கள் பக்கம் வெற்றி கிடைக்க எந்தக் குற்றமும் இல்லாத சகல லட்சணமும் பொருந்திய ஒரு மனிதப் பிறவி அவர்கள் தரப்பில் பலி கொடுக்க வேண்டும் என முடிவெடுக்கப்பட்டது. பாண்டவர்கள் தரப்பில் சாமுத்திரிகா லட்சணம் பொருந்தியவர்களாகக் காட்டப்படுபவர்கள் மூவர். அர்ஜுனன், அரவான், கிருஷ்ணர். அர்ஜுனனும் கிருஷ்ணரும் இந்தப் போருக்கான முகாந்திரம் உடையவர்கள் என்பதால் அரவானைப் பலியிட முடிவு செய்கின்றனர். அரவானும் பலிக்குச் சம்மதித்தாலும் தனக்கான இறுதி ஆசையாக ஒரு பெண்ணுடன் திருமணம் செய்து இல்லற வாழ்வைத் துய்த்த பின்பே தான் பலிக்களம் புகுவேன் என உரைக்கிறான். அரவானை மணக்க எந்தப் பெண்ணும் முன்வராததால் கிருஷ்ணரே மோகினி அவதாரம் எடுத்து அரவானை மணக்கிறார். ஒருநாள் இல்லற வாழ்வுக்குப்பின் அரவான் பலிக்களம் புகுகிறான். பலி இட்டபிறகு அரவானின் மனைவியாக இருந்த (கிருஷ்ணர்) மோகினி தன் கணவனின் இறப்பு கேட்டு அழுது புரண்டு விதவைக் கோலம் பூணுகிறாள்.

இந்தச் சாராம்சத்தின் அடிப்படையில் கூவாகம் கூத்தாண்டவர் திருவிழா இங்கு மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. வேண்டுதலை வைத்துள்ளவர்கள் அரவானுக்குத் தாலி (கோயில்

பூசாரியால்) கட்டிக்கொண்டு மறுநாள் கூத்தாண்டவர் தேர் பவனி வந்து பலி இடும் சம்பிரதாயம் நடக்கும்போது தாலியை அறுத்து வளையல் உடைத்து ஒப்பாரி வைத்து வேண்டுதலை நிறைவேற்று வார்கள். ஆண்கள் மட்டும்தான் இந்த வேண்டுதலைச் செய்கிறார்கள். பெண்கள் செய்ய மாட்டார்கள். இஜரா சமுதாயத்தினரும் தங்களைக் கிருஷ்ணரின் அவதாரமாகக் கருதி அரவானுக்குத் தாலி கட்டிக் கொண்டு மறுநாள் விதவைக்கோலம் ஆவார்கள். இந்தத் திருவிழாவை முன்னிட்டு இஜரா சமுதாயத்தினர் ஒரு வாரம் முன்னதாகவே விழுப்புர விடுதிகளில் வந்து நிரம்பிவிடுவார்கள்.

சங்கமாவில் இருந்து சில ஊழியர்கள் ஒருமுறை சென்று விழுப்புரத் தில் தங்கினோம். எத்தனையோ கஷ்டங்களை, துன்பங்களை, துயரங் களைத் தாங்கிக்கொண்டு வாழும் என் சமுதாயத்தினர் தமிழ்நாடு, கேரளா, ஆந்திரா, குஜராத், டெல்லி, மும்பை எனப் பல இடங்களில் இருந்து வந்திருந்தனர். ஒருவருக்கொருவர் சந்தித்துக் கொள்ளவும் அன்பைப் பரிமாறிக் கொள்ளவும் எனப் புத்தாடை அணிந்து புத்துணர்ச்சி யுடன் ஒய்யார நடை போட்டு வீதி உலா வரும் அழகைப் பார்க்க ஆயிரம் கண் வேண்டும். தாலி கட்டிக்கொள்ளும் முதல்நாள் ஒருசில தொண்டு நிறுவனங்கள் ஏற்பாடு செய்திருக்கும் அழகுப் போட்டியும் பாட்டுப்போட்டியும் பேச்சுப் போட்டியும் நடனப் போட்டியும் நடை பெறும். இவற்றில் ஆர்வமுடன் பங்கேற்க வருடக்கணக்கில் தவமிருந்து சிறிதுசிறிதாகச் சேர்த்து வைத்த பணத்தில் நவநாகரிக உடைகள் அணிந்து மேடையில் உலா வரும்போது அவரவர் தோழிகளும் குரு, குருபாய் களும் கைதட்டி ஆரவாரம் செய்யும் காட்சியைப் பார்க்கும்போது அந்த ஒருநாள் சந்தோஷமே காட்டிக் கொடுக்கும் அவர்களின் மனதில் உள்ள வலிகளை. இவை எல்லாவற்றையும் படம் பிடிக்க, டாக்குமெண்ட் செய்ய, பேட்டி எடுக்க எனப் பத்திரிகையாளர்களும் தொலைக்காட்சிச் சேனல்களும் வெள்ளைக்காரர்களும் அலை மோதினர். திரைநட்சத்திரங் களைப் படம் பிடிப்பதுபோல் பிடித்துக்கொண்டு இருந்தனர்.

நான் சென்ற தினமும் கலை அரங்கு நிரம்பிக் கூட்டம் வழிந் தோடியது. நானும் பேச்சுப் போட்டியில் கலந்துகொண்டு பேசினேன். பேசிய விஷயம்:

அன்பு எனும் தோட்டத்தில்
அருள் என்னும் விதைவிதைத்து
பண்பு என்னும் நீர் பாய்ச்சி
பாசம் என்னும் பூப் பூத்து
புண்ணிய ஸ்தலங்களிலும் பூஜை அறைகளிலும்
சூடாத மலர்

என்று ஒரு கவிதையைக் கூறிப் பேச ஆரம்பித்தேன்.

வருடந்தோறும் நாம் எல்லாரும் ஒன்றாகச் சேருகின்றோம். திருவிழாக் களில் கலந்து கொள்கிறோம். ஆட்டம் பாட்டம் கொண்டாட்டம் என ஆடிப்பாடிச் சந்தோஷமாக இருக்கிறோம். இதுமட்டும் போதுமா? நம்முடைய கோரிக்கைகளை அரசுக்கு வலியுறுத்த வேண்டாமா?

நான் காசு கொடுத்தோ கடன் வாங்கியோ என் உணர்வுகளை வைத்துக்கொள்ளவில்லை. இயற்கையாக வந்த உணர்வுகளுக்கு அங்கி காரம் கொடுங்கள் என்று கேட்கிறேன். ஆணாகப் பிறந்தாலும் பெண் உணர்வுகளோடு பெண்ணாக வாழ நினைக்கத் துடிக்கும் என்னைப் போன்றவர்களுக்குப் பாலின மாற்று அறுவை சிகிச்சைக்கு அங்கீகாரம் கொடுங்கள் என்று கேட்கிறேன். என்னுடைய பாலினத்தை மாற்றிக் கொள்ள எனக்கு உரிமை இல்லையா? சட்ட விரோதமானது, இயற் கைக்குப் புறம்பானது என்று நினைக்கும் இந்தச் சமுதாயத்தில் இயற்கை யாக வந்த உணர்வுகளுக்கு மதிப்பு கொடுங்கள் என்று கேட்கிறேன்.

ஒரு விரல் அதிகமாக இருக்கிறது என்று அதை வெட்டி எடுக்கிறீர்கள். முடி வளர்ந்தால் உங்கள் விருப்பப்படி வெட்டிக் கொள்கிறீர்கள். பெண் களுக்குக் கர்ப்பப்பையில் கோளாறுன்னு சொன்னால் அதை எடுத்துட றீங்க. பெண் குழந்தைன்னு தெரிஞ்சாக் கருவிலேயே அழிச்சிடுறீங்க. இப்படி ஒவ்வொரு விஷயத்துலயும் இயற்கைக்குப் புறம்பாகவும், சட்டத்துக்கு விரோதமாகவும் செய்யறீங்க. ஒரு சிலவற்றுக்குச் சட்டமும் இயற்கையும் பொருந்திப் போவுது. இப்ப எனக்கு ஒருநோயும் இல்லீங்க. நான் என்னை ஒரு பெண்ணாகத்தான் நினைக்கிறேன். பெண்ணாக வாழவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். ஆனா என் உருவம் ஆணாக இருக்கே. அதை அகற்றிவிட்டு முழுப் பெண்ணாக வாழவேண்டும். இதில் என்னுடைய தவறு என்ன இருக்கு?

ஒருசில அயல் நாடுகளில் எங்களைப் போலவே உள்ளவங்களுக்கு அரசு மருத்துவமனையிலேயே கவுன்சிலிங் கொடுத்து ஹார்மோன்ஸ் கொடுத்து அதன் பிறகு பாலின மாற்று அறுவை சிகிச்சையும் செய்து பெண்ணாக அங்கீகாரம் கொடுக்கறாங்க. அவுங்களும் மற்ற பெண் களைப் போலவே வேலைக்குப் போறாங்க. திருமணம் செஞ்சுக் கிறாங்க. அதே போல் நம்ம நாட்டிலும் எங்களைப்போல இருக்கறவங் களுக்கு முறைப்படி கவுன்சிலிங் கொடுத்து ஹார்மோன்ஸ் கொடுத்து பாலின மாற்று அறுவை சிகிச்சை செய்ய அரசு மருத்துவமனைகளில் அங்கீகாரம் கொடுங்க. சட்டமும் சமுதாயமும் ஏற்றுக்கொள்ளாததால், ஒப்புக் கொள்ளாததால் இன்றைக்குப் பிச்சை கேட்டு, பாலியல் தொழில் செய்து பல துன்பங்களுக்கு ஆளாகிறோம். சில பிரைவேட் ஆஸ்பத்திரியில் சரியான முறையான டிரீட்மெண்ட் இல்லாமலும் சரியான ஆப்ரேஷன் தியேட்டர் வசதி இல்லாமலும் ஆப்ரேஷன்

செய்யறாங்க. அதனால் இன்ஃபெக்ஷன் ஆகி ரொம்பவே கஷ்டப் படுறோம்.

பெண்ணாக வாழ்ந்தாக வேண்டும் என்கிற எங்க உணர்வு களைப் புரிஞ்சுக்கிட்டு ஒரு பெண்ணாக வாழவேண்டிய சௌகர்யம் செஞ்சாக்கா நாங்களும் மத்த பெண்களைப்போல இயல்பா வாழ முடியும். நாங்க பிச்சை கேட்கவும் பாலியல் தொழில் செய்யவுமே பொறந்தவங்க இல்லே. சந்தர்ப்பச் சூழ்நிலை, சட்டத்தின் கவனக் குறைவு, சமுதாயத்தின் வெறுப்பு காரணமாக இன்னைக்கு வாழ வழி இன்றிப் பிச்சை கேட்டுக்கிட்டு, பாலியல் தொழில் செய்துக்கிட்டு வாழ்றோம். நாங்களும் தாய் தந்தைக்குப் பொறந்தவங்கதான். நாங்களும் மனிதர்கள்தாம். எங்களுக்கு வேலைவாய்ப்பு, ரேஷன் அட்டை, வீட்டு வசதி, மருத்துவ வசதின்னு செஞ்சு கொடுக்கவேண்டும் என்று உங்க எல்லார் சார்பிலும் கேட்டுக்கிறேன். நாம் காலங்காலமாகப் பயந்து ஒதுங்கின காலம் மலையேறிப் போச்சு. நம்முடைய உரிமைகளைப் பெறும் காலம் மிக அருகில்தான் இருக்கு. ஒன்றாகப் போராடினால் உரிமைகளைப் பெறலாம்னு சொல்லி விடை பெறுகிறேன். வணக்கம்.

கொடுத்த அந்த இரண்டு நிமிடத்தில் சுருக்கமாகத் தெளிவாகப் பேசியதால் எனக்குப் பரிசு கிடைத்தது.

விழுப்புரம் மாவட்ட உயர்போலீஸ் அதிகாரி கலை அரங்கில் பேசும்போது அலி, ஒம்போது எனக் கூப்பிடுபவர்கள்மீது நடவடிக்கை எடுக்கப்படும். அதேபோல் பத்திரிகைகளில் அலிகள் என்று எழுதினால் அவர்கள்மீதும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று உறுதி கூறினார். மேலும் அரவானுக்குத் தாலிகட்டி அறுக்கும் நீங்கள், அரவானுக்கு மனைவியாவதால் இனி நீங்கள் அரவானிகள் என்று அழைக்கப் படுவீர்கள் என்று அறிவித்தார். பத்திரிகைகளிலும் அவ்வாறே எழுத வைத்தார். அரவானிகளும் மகிழ்ச்சியோடு அவரைப் பாராட்டினர்.

எல்லாரையும் போல நானும் புதுமணப் பெண்ணைப் போலப் பட்டுப் புடவை அணிந்து அந்தக் கூத்தாண்டவர் கோயில் அருகில் உள்ள வளையல் கடையில் வளையல் போட்டுக்கொண்டு பூஜைப் பொருள்கள் வாங்கிக்கொண்டு அதில் மஞ்சள் கயிறு தாலியும் எடுத்துக் கொண்டு நீண்ட வரிசையில் எல்லாருடனும் சென்றேன். கோயிலின் உள் முரட்டு மீசையுடன் காணப்பட்ட அரவான் தெய்வத்தைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்டு மனம் உருக வேண்டிக்கொண்டு பூசாரியிடம் தாலி கட்டிக்கொண்டேன். அரவானைத் திருமணம் செய்து கொண்டதுபோல் ஓர் உணர்வு. எனக்கும் ஓர் ஆணுடன் திருமணம் நடந்துவிட்டது என்ற சந்தோஷம். அதிக நெரிசல். உள்ளே காற்றோட்டம் இல்லை. கட்டிக்கொண்டு சென்ற பட்டுப்புடவை நனைந்துபோய்

விட்டது. வியர்வை சொட்டச் சொட்டக் கோயில் உள்ளே இருந்து வெளியில் வந்தால் நனைந்த ஈரத்துக்கும் வெளியில் உள்ள காற்றுக்கும் இதமாக இருந்தது.

அன்று இரவு அங்கு விழாக்கோலம் பூண்டிருந்தது. அரவானிகள் சந்தோஷ வெள்ளத்தில் மிதந்தனர். அரவானிகளைப் பார்க்கவே வெளியூர்களில் இருந்து வந்தவர்களும், அக்கம்பக்கம் உள்ள கிராமத்த வர்களும் எனப் பெருங்கூட்டம். மாட்டு வண்டி, சைக்கிள், கார், வேன், பஸ் என நிறுத்த இடம் இல்லாத அளவு வாகனங்கள். அரசின் சிறப்பு பஸ்கள் விழுப்புரத்தில் இருந்து விடப் பட்டிருந்தன. கோயிலைச் சுற்றி உள்ள விவசாய நிலம் அறுவடை முடிந்து திருவிழாவுக்கு வருபவர்கள் உட்காரப் பாயாக இருந்தது. எந்தக் கவலையும் தெரிய வில்லை. மனதில் பட்ட காயங்களுக்கு மருந்து போட்டதுபோல் இருந்தது.

தாலி கட்டிக்கொண்டவர்கள் சிலர் விடியவிடியக் கோயில் உள்ள கூவாகம் கிராமத்திலேயே இருந்தனர். சிலர் விழுப்புரத்தில் உள்ள அவரவர் விடுதிகளுக்குச் சென்றுவிட்டனர். நானும் என்னுடன் வந்தவர்களும் எங்கள் விடுதிகளுக்குச் சென்றுவிட்டோம். மறுநாள் அரவான் தேர் பவனி. அதனால் சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும் என்று சொல்லித் தூங்கிவிட்டோம்.

காலை அரவான் தேர் பவனி வரும்போது அரவான்மீது பூமாலை களும் காய்கறிகளும் வீசினர். அரவானிகள் மலைபோல் சூடம் ஏற்றி அதைச் சுற்றி வட்டமிட்டுக் கும்மி அடித்துக்கொண்டு அரவானை வாழ்த்திப் பாடினர். நேற்றுப்போலவே மஞ்சள் கயிறு பளபளக்கப் பட்டுப் புடவை மினுமினுக்க ஆடிப்பாடி அனைவரையும் மகிழ்ச்சி யில் ஆழ்த்தினர். அரவான் ஊர்வலமாக ஊரை வலம்வந்து பலிகாடு சென்றவுடன் அரவானிகள் தலையில் உள்ள பூவை எடுத்து எறிந்து விட்டு, நெற்றியில் உள்ள பொட்டை அழித்துவிட்டு, ஒப்பாரி வைத்துக் கொண்டே தாலி அறுக்கும் இடம் நோக்கிச் சென்றனர். நானும் அவ்வாறே சென்றேன். அரவானிகளின் புலம்பல் பார்த்து எனக்கும் அழுகை வந்தது. கணவன் இறந்துவிட்டால் எப்படி அழுவோமோ அதைப் போன்று ஓர் உணர்வு இருந்தது.

தாலி அறுக்கும் இடத்தில் பூசாரிகள் இருந்தனர். பூசாரிகளே அரவானி களின் வளையல்களை உடைத்துத் தாலியை அறுத்து அங்குள்ள மரத்தின்மீது எறிந்தனர். சில அரவானிகள் தங்கள் இரண்டு கை வளையல்களையும் ஒன்றாக மோதவிட்டு உடைத்துக் கொண்டிருந் தனர். அந்த வளையல் ஒடித்த இடத்தைச் சுற்றியும் ஒப்பாரி வைத்துப் பாட்டுப்பாடி அறுத்துவிட்டு அங்குள்ள கிணற்றில் குளித்துவிட்டு

வெள்ளை உடை அணிந்துகொண்டு சந்தோஷத்துடன் ஆடிப் பாடி மகிழ்ந்தவர்கள் துக்கத்துடன் கூவாகம் விட்டு அவரவர் ஊர்களுக்குச் சென்றனர். நானும் வெள்ளைப் புடவையில் விடுதிக்குச் சென்று அன்று மாலை அங்குள்ள மாரியம்மன் கோயிலுக்குச் சென்று குங்குமம் வாங்கி வைத்துக்கொண்டு இரவு பெங்களூர் புறப்பட்டேன். பொதுவாக வெள்ளைப் புடவையில் மூன்று நாட்கள் இருந்து ஒரு பத்துப் பேருக்கு அன்னதானம் கொடுத்துத் தானும் சாப்பிட்டுவிட்டுக் கலர் புடவை கட்டுவார்கள் என்றும், அந்த வெள்ளைப் புடவையை விதவைப் பெண்களுக்குக் கொடுத்து விடுவார்கள் என்றும் அரவானி களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டேன்.

# 24

ஆபீஸ் வேலைகளில் ஒரு சில ஊழியர்களுடன் இன்வால்வ்மெண்ட் கொடுத்து ஒவ்வொரு விஷயத்திலும் நேரம் பார்க்காமல் வேலை செய்வோம். இப்படிச் சங்கமாவின் வேலைகளில் ஆக்டிவாக இருந்தவர் களில் ஒருவர்மீது அதிக பக்தியைக் கொண்டிருந்தேன். அவருக்கும் என்மீது நல்ல அபிப்ராயமும் மரியாதையும் இருந்தன. எத்தனையோ நாட்கள் வெளியூர்களுக்குச் சென்று தங்கியும் உள்ளோம். ஒருமுறை பெங்களூருக்கு அருகில் உள்ள மைசூருக்குச் சென்றிருந்தோம். அங்கு நடந்த ஒரு நிகழ்ச்சியில் கலந்துகொள்ள சில ஊழியர்களுடன் சென்றோம். அங்கு அறைகள் எடுத்து ஓர் அறைக்கு இருவர் வீதம் தங்கினோம். நானும் அவரும் ஓர் அறைக்குச் சென்றோம். அன்று இரவு ஓட்டலில் சாப்பிட்டு விட்டு அவரவர் அறைக்குச் சென்று தூங்கினோம். அன்று இரவு எதிர்பாராத விதமாக எனக்கும் அவருக்கும் நெருக்கம் ஆயிற்று.

எங்களுக்குள் ஏற்பட்ட இந்த நெருக்கமான உறவை நினைத்து நான் மிகவும் பயந்தேன். நான் மிகவும் பக்தியாகவும் பண்பாகவும் பயந்து பழகியவருடன் இதுபோல உறவு ஆனதை நினைத்து அஞ்சினேன். மேலும் இந்த விஷயம் மற்ற ஊழியர்களுக்குத் தெரிந்தால் என்ன நினைப்பார்களோ என்ற அச்சமும் இருந்தது. எங்களோட அந்த உறவு என் வாழ்நாளில் நான் மறக்க முடியாத ஒரு நிறைவான, சுகமான நாளாக இருந்தது. இதுவரை நெருக்கமான உடல் உறவு என்பது தெரியாததாக, புரியாததாக இருந்த எனக்கு நம் உடலில் ஒவ்வொரு நரம்பிலும் உணர்வு இருக்கிறது என்று தெரிந்துகொண்ட, புரிந்து கொண்ட நாள் அது. கடவுளாகப் பக்தி கொண்ட ஒருவருடன் அவர் மூலம் கண்ட அந்த உணர்வுகளை மறக்க முடியாமல், அவர் மீதுள்ள பக்தி, நட்பு, இன்வால்மெண்ட் எல்லாம் என்னை அறியாமல் காதல் வலையில் சிக்க வைத்துவிட்டன.

அவரிடம் நான் காதலிப்பதாகக் கூறமுடியாமலும் ஆக்கிவிட்டது. என்னுடைய மேல் அதிகாரி அவர். அவரிடம் காதல் விஷயத்தை எப்படிச் சொல்வது? முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவதாக நினைத்தேன். அவருடைய எண்ணம், வேலை, சமுதாயத்தவர் பற்றிய அக்கறை, விடாமுயற்சி, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று பார்க்காத அந்தப் பண்பு உள்ளம், என்னைப் பற்றி முழுமையாகத் தெரிந்தவர்- இப்படி அவருடைய ஒவ்வொரு அசைவும் என்னை அவருக்கு அர்ப்பணிப்பதான ஓர் ஏக்கம் பிறந்தது. அவரிடம் என் விருப்பத்தைக் கூறமுடியாமல் குழப்பத்தில் பைத்தியக்காரியைப் போல ஆகிவிட்டேன். ஒருநாள் தைரியமாக அவரிடம் சென்று, 'சார், உங்களிடம் தனியாகப் பேச வேண்டும். நேரம் ஒதுக்க முடியுமா?' என்று கேட்டேன். 'எந்த விஷயமாக' என்று கேட்டார். என் விஷயமாக என்றேன். இன்று ஆபீஸ் நேரம் முடிந்து வெளியில் சென்று பேசலாம் என்றார்.

அதே போல் அமைதியான ஓர் ஓட்டலுக்குச் சென்று சாப்பாடு ஆர்டர் செய்துவிட்டு இருவரும் எதிர்எதிரே உட்கார்ந்து இருந்தோம். எனக்கு என்ன சொல்வது, எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் அமைதியாக உட்கார்ந்து இருந்தேன். அவரோ 'என்ன ரேவதி, ஏதோ பேச வேண்டும் என்று கூறினாயே சொல்லு' என்றார். என்னால் வெளிப்படையாக உங்களைக் காதலிக்கிறேன் என்று சொல்ல முடிய வில்லை. ஆனாலும் மனதை தைரியப்படுத்திக்கொண்டு 'நம்முள் ஏற்பட்ட அந்த நெருக்கத்தை மறக்க முடியாமல் இருக்கிறேன். அதன் பிறகு உங்களிடம் நேரில் வந்து நிற்கவோ பேசவோ எனக்குப் பயமாக இருக்கிறது. இப்போதுகூட என் மனதில் உள்ளதை வெளிப்படை யாகக் கூற முடியாமல் இருக்கிறேன்' என்று தயங்கிப் பேசினேன்.

'எதுவாக இருந்தாலும் தைரியமாகச் சொல்லு. நான்கூட அன்றைய நெருக்கம் ஆனபிறகு உன்னிடம் பேச வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் வேலைகள் அதிகமானதால் உன்னைச் சந்திக்கவோ பேசவோ முடியாமல் போயிற்று' என்று கூறினார்.

'என்னால் உங்களை மறக்க முடியவில்லை. என்னால் நிம்மதியாகத் தூங்க முடியவில்லை. சதா உங்கள் நினைவாகவே இருக்கிறது. ஒரு பைத்தியக்காரியைப் போல இருக்கிறேன். உங்களிடம் பேச வேண்டும், உங்களுடன் இருக்கவேண்டும், உங்களுடன் தைரியமாகப் பேச வேண்டும் என்ற ஆசை உள்ளது' என்றேன். 'அதனால் என்ன, எப்போது வேண்டுமானாலும் நீ என் வீட்டிற்கு வரலாம். நானும் எனக்கு நேரம் கிடைக்கும்போது உன் வீட்டிற்கு வருகிறேன்' என்றார். 'நான் உங்களை மனதாரக் காதலிக்கிறேன்' என்று கூறினேன். 'காதல் என்ற வார்த்தை எனக்கு இஷ்டம் இல்லை. அதை நான் நம்புவதும் இல்லை. நான்

உன்னை அதிகமாக இஷ்டப்படுகிறேன். நான் உன்னை விரும்புகிறேன்' என்றார். மேலும் அவர் கூறும்போது, 'நம்முள் ஏற்பட்ட இந்த நெருக்கம் நம் இருவர் சம்மதத்தில் ஏற்பட்டது. இது இயற்கையானது. இதைப்பற்றி நீ பயப்படவோ குழப்பம் கொள்ளவோ அவசியம் இல்லை' என்றார்.

நான் அவரிடம் பர்மிஷன் கேட்டேன். 'தற்போது நான் தங்கியிருக்கும் வீடு என் குரு குருபாய்கள் இருக்கும் அமாம் பக்கத்தில் உள்ளது. வீட்டு ஓனர் யாரும் வீட்டுக்கு வரக்கூடாது எனக் கூறியுள்ளார். நான் அவரிடம் நம்மைப் பற்றிக் கூறினால்தான் நீங்கள் வந்துபோக முடியும். ஓனருக்குத் தெரிந்த விஷயம் என் குரு, குருபாய்களுக்கும் தெரிந்துவிடும். அதனால் நான் உங்களை என் வீட்டுக்கு வரவழைத்தால் நான் உங்களை விரும்புவதை அட்லீஸ்ட் என் வீட்டு ஓனரிடமும் என் குருவிடமும் கூறவேண்டும்' என்று கேட்டேன். 'நோ ப்ராப்ளம். நீ யாரிடம் வேண்டுமானாலும் சொல்லு. நம் ஸ்டாஃப்களிடம் வேண்டுமானாலும் சொல்லு. அதனால் உனக்குப் பிரச்னை வராமல் பார்த்துக் கொள்' என்றார்.

'எனக்கு நம் ஆபீசில் வேலை செய்யும் இன்னொரு ஸ்டாஃபுடன் நெருங்கிய தொடர்பு இருந்தது. தற்போது இல்லை. அது யார் என்று கேட்கவேண்டாம்' என்றார். எனக்குக் குழப்பமாக இருந்தது. யாராக இருக்கும் என்று நினைக்கத் தோன்றியது. மேலும் பயமாகவும் இருந்தது. 'சரி, யார் என்று கூற வேண்டாம். ஆனால் அவருடன் தொடர்பு இல்லை என்று கூறுகிறீர்களே, ஏதாவது பிரச்னையா?' என்று கேட்டேன். அவர் என் கையை இறுகப் பிடித்துக்கொண்டு கண் கலங்கினார். அப்போது நான் நினைத்தது, அவரோட அன்பைப் புரிந்துகொள்ளாமல் இருந்திருப்பார்களோ என்று. இவருக்கு நம்மால் ஆன உதவிகளையும் அன்பையும் தர வேண்டும் என்று முடிவு செய்தேன்.

என் வீட்டு ஓனர் என்னைப் பற்றியும் அமாம் பற்றியும் எங்கள் கலாச்சாரம் பற்றியும் தெரிந்தவர். அதனால் அவரிடம் மட்டும் மனம் விட்டு எனக்கும் அவருக்கும் உள்ள நெருக்கத்தைக் கூறினேன். அவர் அவ்வப்போது வந்துசெல்வார் என்றும் கூறிவிட்டேன். அவரும் 'அவர் வந்துபோவது பற்றி ஒன்றும் பிரச்சினை இல்லை. இந்த விஷயத்தை என் மனைவி மக்கள் அக்கம் பக்கம் உள்ளவர்களிடம் சொல்ல வேண்டாம். ஆபீஸ் ஸ்டாஃப் வந்து செல்கிறார் என்று தெரிந்தால் போதும்' என்றார்.

அவரும் நேரம் கிடைக்கும்போது என் வீட்டுக்கு வந்துசெல்வார். சினிமாவுக்குக் கூட்டிச் செல்வார். அவர் மனதில் என்ன நினைத்துப்

பழகி வருகின்றாரோ என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் என்னைப் பொருத்தவரை நான் அவரைக் காதலிக்கிறேன். அவருடன் வாழ்வதை நினைத்துச் சந்தோஷப்படுகிறேன். இப்படி நேரிலும் போனிலும் எஸ்எம்எஸ்ஸிலும் நான் இஷ்டப்படுவதை அவ்வப்போது அவருக்குச் சொல்லிக்கொண்டு இருப்பேன். ஐ லவ் யூ என்று எஸ்எம்எஸ் அனுப்பினால் அவரும் ஐ லவ் யூ டு என்று அனுப்புவார். சில சமயத்தில் ஆபீஸ் விஷயமாக வெளியூர் சென்றுவிட்டால் அவருக்குப் போன் செய்வேன். அவர் வேலை விஷயமாக இருந்தால் போன் பேச முடியாமல் இருப்பார். அதனால் ஐ மிஸ் யு என்று எஸ்எம்எஸ் அனுப்புவார். இப்படி அவரோட பதில், செயல் ஆகியவற்றால் அவரும் என்னைக் காதலிக்கிறார் என்று நினைத்தேன்.

என்னுடைய ஆபீசில் என்னுடன் வேலை செய்யும் நெருங்கிய தோழியிடம் எனக்கும் அவருக்கும் இருக்கும் உறவு பற்றி ஒருநாள் கூறினேன். அவர் அனுப்பும் எஸ்எம்எஸ்ஸைப் படித்துச் சொல்லும் படியும் கேட்டேன். அந்த நெருங்கிய தோழி அதிலிருந்து என்னிடம் பேசுவதைத் தவிர்த்தாள். கடுப்பாக என்னிடம் நடந்துகொண்டாள். அவளுடைய உடைகள் எப்போதாவது நன்றாக இருக்கிறது என்று தொட்டால் அவள் சடாரென்று என் கையைத் தட்டிவிட்டுச் செல்வாள். 'ஏன் இப்படி நடந்துக்குற? நான் ஏதாவது தப்பு செய்தேனா' என்று கேட்டால் 'ப்ளீஸ் ரேவதி என்னைத் தனிமையில் விடு' என்று மட்டும் சொல்வாள்.

ஆபீஸ் ஸ்டாஃப் மீட்டிங்கில் அவளுக்கும் அவருக்கும் சண்டை வர ஆரம்பித்தது. ஸ்டாஃப் மீட்டிங்கை விட்டு எழுந்து சென்றுவிடுவாள். ஆபீசில் மற்ற ஸ்டாஃப்கள் மத்தியில் குழப்பங்கள் நிலவின. அவர் எனக்குச் சாதகமாக சப்போட் செய்யும்போது சிலருக்கு மன வருத்தம் ஆயிற்று. இது ஆபீஸ் சம்பந்தப்பட்ட வேலையின் குழப்பம் அல்ல. பர்சனல் காரணமாகக் குழப்பம் ஏற்படுகிறது; ஒருவருக்கொருவர் மத்தியில் கோபம் வருகிறது என்று தெரிந்துகொண்டேன். மற்றொரு சீனியர் ஸ்டாஃப் ஒருநாள் என்னை அழைத்துத் தனியாகப் பேசினார். அப்போது என் தோழிக்கும் அவருக்கும் ரிலேஷன்சிப் இருந்தது. தற்போது பிரிந்துள்ளனர் என்ற விஷயம் தெரிந்து ஷாக் ஆகிவிட்டேன். அதிக மன அழுத்தம் ஏற்பட்டது. எங்கோ யாருக்கோ நான் துரோகம் நினைத்துவிட்டதுபோல் என் மனம் உருகியது.

அதன் பிறகு என் தோழியிடம் தனிமையில் பேசினேன். அவள் வெளிப்படையாக என்னிடம் அதிகம் பேசவில்லை. நான் என் காதலைப் பற்றியும் ரிலேஷன் பற்றியும் கூறும்போது 'உனக்கும் அவருக்கும் இருந்த ரிலேஷன் தெரியாது. உன்னிடம் நான் அவரைப் பற்றிக் கூறும்

போதும் அவர் அனுப்பிய எஸ்எம்எஸ் படித்துச் சொல் என்றும் கேட்ட போதும் உனக்கு எவ்வளவு கஷ்டம் ஆகியிருக்கும். தயவு செய்து என்னை மன்னித்துவிடு. நான் உனக்குத் துரோகம் செய்துவிட்டேனா என்று வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நான் விட்டுக்கொடுத்து அவரைப் பிரிந்து செல்ல முடிவு செய்துவிட்டேன்' என்று அவளிடம் அழுதுகொண்டே கூறினேன். அவளோ 'அவர் பேச்சை என்னிடம் பேச வேண்டாம். எனக்குச் சுத்தமாக அவரைப் பிடிக்கவில்லை. எனக்கு இஷ்டம் இல்லை. உன் விருப்பத்தை எனக்காக விட்டுக் கொடுத்துச் செல்வதாக இருக்க வேண்டாம். நான் அவரை வெறுக்கிறேன். நீ அவர் மீது விருப்பம் கொள்வதோ விடுவதோ உன்னோட சொந்த விஷயம். அது உன் உரிமை' என்று கூறினாள்.

என் தோழிக்கும் அவருக்கும் எனக்கும் ஏற்பட்ட ரிலேஷன்சிப் பற்றி ஒரு சில ஸ்டாஃப்களுக்கு மறைமுகமாகத் தெரியவந்தது. வெளிப்படையாகப் பேசிக்கொள்ள முடியாவிட்டாலும் உள்ளுக்குள் பேசிக்கொண்டனர். அவரை மறக்கவும் முடியாமல் நினைக்காமல் இருக்கவும் முடியாமல் உள்ளுக்குள்ளேயே புழுங்கினேன். அதே சமயம் எனக்குள் குற்ற உணர்வு. என் தோழிக்கு நான் துரோகம் செய்துவிட்டதாக ஒரு உணர்வு என்னைக் குத்திக் கொண்டிருந்தது. என் சேலா பாமிளா எனக்கு அவ்வப்போது ஆறுதலும் அறிவுரையும் கூறினாள். என் தோழிக்கும் எனக்கும் நல்லுறவும் நட்பும் மீண்டும் ஏற்பட உதவி செய்தாள்.

என் தோழியும் என்னிடம் அன்பாகப் பேச ஆரம்பித்தாள். நான் அவரைவிட்டு விலகி விடவும் அவரை மறக்கவும் வேலையை விட்டு விடலாம் என்று நினைத்தேன். ஆனால் என் தோழியோ 'எனக்காக நீ அவரை மறக்கவோ விட்டு விலகிப் போகவோ வேண்டாம். எனக்கும் அவருக்கும் எந்த ஒரு தொடர்பும் இல்லை. நீ அவருடன் நெருங்கிப் பழகுவதில், காதலிப்பதில் எனக்கு எந்த வருத்தமும் இல்லை. அது உன்னுடைய விருப்பம், உன் உரிமை. அதே போல் அவரை மறப்பதும், அவரை விட்டு விலகிச் செல்வதும் உன் விருப்பம், உன் உரிமை' என்று கூறினாள்.

அவர் என்னைப் பிரியவோ மறக்கவோ இல்லை. எங்கள் இருவர் இடையே ஏற்பட்ட பிரச்சினை பற்றியும் எதுவும் கூறவில்லை. ஆபீசில் இந்தப் பிரச்சினையால் மனம் உடைந்துபோனார். என் தோழிக்கும் அவருக்கும் இடையே என்ன ஆயிற்று, ஏன் பிரிந்தனர் என்று எனக்கு அப்போது தெரியவில்லை. ரிலேஷன்சிப் பிரேக் ஆனது மட்டும்தான் தெரிந்தது. யார்மீது தப்பு எனத் தெரியவில்லை. மனக் குழப்பத்தில் இருந்த எனக்கு அன்பாக ஆதரவாக அவர் இருந்து வந்தார்.

ஒருநாள் அவர் என் வீட்டுக்கு வந்து தங்கியபோது 'நம்மில் யாராவது ஒருவர் வேலையை விட்டுவிடவேண்டும். ஏனென்றால் நம்முடை ரிலேஷன்சிப் ஆபீசில் சிறுசிறு சங்கடங்களை ஏற்படுத்து கிறது. ஆபீஸ் விஷயமாக உனக்குச் சாதகமாகப் பேசினால் நம்முடைய ரிலேஷன் காரணமாக ரேவதிக்கு சப்போட் செய்கிறார் என்று கூறுவார்கள். உன்னைப் போன்றவர்களுக்கு ஈசியா வேலை கிடைப்ப தில்லை. நான் படித்தவன். எனக்கு எங்கு சென்றாலும் வேலை கிடைக்கும். நான் வேலையை விட்டுவிடுகிறேன்' என்றார்.

'நீங்கள் சங்கமாவுக்கு மிகவும் முக்கியமானவர். வேண்டியவர். நீங்கள் வேலையை விடுவதில் எனக்கு விருப்பம் இல்லை. நான் வேலையை விட்டுவிடுகிறேன்' என்று கூறினேன்.

'அதுவும் சரிதான். எனக்குக் கிடைக்கும் சம்பளம் நம் இருவருக்கும் போதும். அதனால் நீயே வேலையை விட்டுவிடு' என்றார்.

'நாளையே ரிசைன் லட்டர் கொடுக்கட்டுமா?'

'கொஞ்ச நாள் வெயிட் செய். சங்கமா போர்டில் இதுபற்றிப் பேச உள்ளனர்' என்றார்.

என் மனதிலோ சங்கமாவை விட்டு அவருடைய உழைப்பில் நாம் வாழ்ந்தால் அது அவருக்குத் தொந்தரவு அளிக்கும் வகையில் இருக்கும். அதனால் இந்த வீட்டை மாற்றிவிட்டு வேறு ஒரு வீடு லீசுக்கு எடுத்து விட்டால் வாடகை கட்டாமல் இருக்கலாம். ஊரில் உள்ள டெபாசிட் பணத்துக்கு வட்டி குறைவாகத்தான் கிடைக்கிறது என நினைத்து வீடு தேடினேன். சிவாஜி நகரில் மூன்றாவது மாடியில் ஒரு தனி வீடு லீசுக்குக் கிடைத்தது. ஊரில் உள்ள என் டெபாசிட் பணத்தை வட்டியுடன் ஒன்றரை லட்சம் எடுத்துவந்து அந்த வீட்டுக்கு லீஸ் அக்ரிமெண்ட் செய்தேன். நான் அரவானி என்று தெரிந்தால் வீடு கொடுக்கமாட்டார்கள் என அக்கா மாமியாரை ஊரில் இருந்து வரவழைத்து என் மாமியாராகச் சொல்லி, அவரை என் கணவராகச் சொல்லித்தான் அந்த வீட்டைப் பிடிக்க வேண்டியதாயிற்று.

அவரும் என் கணவர் என்று கூறிக்கொள்ளச் சம்மதம் தெரிவித்ததால் ஒரு பிரச்சினையும் இல்லாமல் அந்த வீட்டை இரண்டு வருடத்துக்கு லீசு அக்ரிமெண்ட் செய்தேன். என் அக்கா மாமியாரும் அப்போது எனக்கு உதவி செய்தார். நானும் என் அக்கா மாமியாரும் அந்த வீட்டில் குடியேறினோம். அக்கா மாமியாரை ஒரு 15 நாட்கள் தங்கி அதன் பிறகு ஊருக்குப் போகச் சொன்னேன். என் அக்கா மாமியாரிடம் அவருடன் இருக்கும் நெருக்கத்தையும் ரிலேஷனையும் கூறினேன். அவரும் அதற்கு மதிப்புக் கொடுத்தார். என் அம்மா அப்பாவிடமும் அக்காவிடமும் அவருடன் இருக்கும் நெருக்கம் பற்றியும் ரிலேஷன்

பற்றியும் கூறவேண்டாம் என்று சொன்னேன். அவரும் அவ்வாறே நடந்துகொண்டார். நான் அந்த வீட்டிற்குக் குடிபோய் 14 நாட்கள் ஆயிற்று. அவரும் வரவில்லை. அக்கா மாமியாரோ அவரைப் பார்க்க வேண்டும் என்று கூறினார். பிறகு வீடு எடுக்க உதவியாக இருந்த என் அக்கா மாமியாரை வந்து சந்தித்தார். அக்கா மாமியார் தமிழில் நலம் விசாரிக்க அவர் கன்னடம் கலந்த தமிழில் பேசிச் சமாளித்தார்.

நான் வேலைக்குச் சென்றுவிட்டால் அக்கா மாமியார் வீட்டில் தனியாக இருப்பார். அக்கம் பக்கம் உள்ளவர்களிடத்தில் நான் அரவாணி என்று கூறிவிடவேண்டாம் என்று சொல்லி இருந்தேன். அவரும் என் மாமியார் போலவும் அவருக்கு அம்மா போலவும் பேசிச் சமாளித்து உள்ளார். இரண்டாவது மாடியில் உள்ள வீட்டு அம்மா அக்கா மாமியாரிடம் பேசும்போது 'உங்க மகனுக்குத் திருமணம் ஆகி எத்தனை வருடம் ஆகிறது?' என்று கேட்டுள்ளார். 'இரண்டு வருடம் ஆச்சு'ன்னு அக்கா மாமியார் பதில் சொல்லியிருக்கிறார். 'குழந்தை இல்லியா?' என்று அந்த அம்மா கேட்க, 'கடவுள் இன்னும் அந்தப் பாக்கியத்தை என் மருமகளுக்குக் கொடுக்கலன்னு' அக்கா மாமியார் சொல்லியிருக்காங்க. 'டாக்டர்கிட்டக் காட்டலியா?'ன்னு அந்த அம்மா மேலும் கேட்க, 'காட்டினோம். காலம் நேரம் வந்தா அந்த பாக்கியம் கிடைக்கும்' என்று அக்கா மாமியார் சொல்லிச் சமாளித்திருக்கிறார்.

அவர் சமாளித்த விதம் எனக்குச் சந்தோஷம் அளித்தது. 'இந்த உலகம் பெண் தனியாக இருந்தால் என்னென்னவோ நினைக்கும். ஒரு மாதிரியாப் பார்க்கும். ஆம்பளை துணையோட இருந்தாத்தான் ஒரு பொண்ணுக்கு மதிப்பு பாத்தியா' என்று அக்கா மாமியார் அறிவுரை கூறினார். அதன் பிறகு அவர் ஊருக்குச் சென்றுவிட்டார். கொஞ்ச நாட்கள் கழித்து அவரும் அவர் வீட்டைக் காலி செய்துவிட்டு என் வீட்டிலேயே குடியேறினார். அவர் இப்போது என்னுடனேயே இருப்பது சந்தோஷமாக இருந்தது.

இருவரும் ஒன்றாக ஆபீஸ் செல்வது, அவருடன் மற்ற குடும்பப் பெண்களைப் போல வாழ்ந்து வந்தது, அவ்வப்போது என் குருவையும் குருபாய்களையும் சென்று பார்த்து வருவது என இருந்தேன். அவரோ இரவு ஆபீஸ் வேலை அதிகநேரம் செய்துவிட்டு வருவார். நானோ ஆபீஸ் நேரம் முடிந்ததும் வீட்டிற்கு வந்துவிடுவேன். இரவு உணவு தயாரித்து அவர் வரும்வரை காத்திருப்பேன். எனக்குப் பசி எடுத்தாலும் அவருடன் சாப்பிடுவதையே விரும்புவேன். அவர் ஆபீசில் வேலை செய்துகொண்டிருக்கும்போது நேரமாகிவிட்டால் போன் செய்வேன். 'இதோ அரை மணிநேரத்தில் வந்துவிடுவேன்' என்று கூறுவார். ஒரு மணிநேரம் ஆகியும் வரவில்லை என்றால் திரும்பப் போன் செய்வேன்.

'சாரிமா, இதோ புறப்பட்டுவிட்டேன்' என்று பதில் கூறிப் புறப்பட்டு வருவார்.

'நான் என்ன சின்னக் கொழந்தையா? வீட்டுக்கு வரத் தெரியாதா? ஏன் அடிக்கடி போன் செய்ற?' என்று கேட்பார்.

'இல்ல, அரைமணி நேரத்தில் வருகிறேன் என்றீர்கள். காண வில்லையே என்றுதான் போன் செய்தேன்.'

'பைத்தியம்' என்று செல்லமாய் என் தலையை நீவிவிடுவார். அவருக்காக நான் சாப்பிடாமல் இருந்தால் அட்வைஸ் செய்வார். 'உனக்குப் பசி எடுத்தால் நீ சாப்பிட்டுவிட்டுத் தூங்கவேண்டும். எனக்காக இப்படிக் காத்திருப்பது பிடிக்காது' என்பார். நானோ 'உங்களுடன் சாப்பிடுவது எனக்குப் பிடித்திருக்கிறது' என்பேன்.

விடுமுறை நாட்களில் சமையல் செய்யும்போது பின்புறமாக முதுகில் முத்தம் கொடுப்பது, அவர் கைகளை என் தலைக்குத் தலையணையாகக் கொடுப்பது, அவருக்குக் கை வலிக்குமே என்று அவர் கையை எடுத்து விட்டால் ஏன் இஷ்டம் இல்லையா என்று கேட்டவுடன் அப்படியில்லை என்று அவர் கையிலேயே தலை வைத்துத் தூங்குவது இப்படி அவர் நடந்துகொள்ளும் முறைகள், சொல்லும் அறிவுரைகள் என அவரை எனக்கு அதிக அளவில் பிடித் திருந்தது. ஒருவர்மீது டிபன்டாக இருக்கக் கூடாது, அவருடைய துணிகளை நான் துவைக்கக்கூடாது என்று கூறுவார். அவருக்கு நேரம் கிடைக்காது. அவர் துணிகள் ஆங்காங்கு கிடந்தால் எடுத்து லாண்டரி யில் போட்டு விடுவேன். நான் துவைத்துப் போட ஆசைப்படுவேன். ஆனால் அதை அவர் விரும்பாததால் என் துணியையும் அவர் துணியையும் லாண்டரியில் போட்டுவிடுவேன். என்னுடைய சமையல் அவருக்குப் பிடித்திருந்தது.

நான் ஏன் அவரைத் திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்று நினைப்பேன். அவ்வப்போது அவரிடம் கேட்டும் இருக்கிறேன். அவருக்கோ திருமண வாடையே ஆகாமல் இருந்தது. அதில் விருப்பமும் இல்லை அவருக்கு. திருமண பந்தத்தை ஒரு ஜெயிலாகக் கருதினார். அதே போல் 'உன்னை நான் என் பார்ட்னராகத்தான் நினைக்கிறேன்' என்பார். அதனால் நான் திருமணப் பேச்சை எடுப்பது இல்லை. ஆபீசிலும் 'ஸ்டாஃப் ஒருவருக் கொருவர் ரிலேஷன் இருப்பது அவரவர் களின் சொந்த விஷயம். அப்படி இருந்து ஆபீஸ் வேலைகளுக்குத் தொந்தரவு ஆகக்கூடாது. அதனால் ரேவதி வேலையைவிட வேண்டிய அவசியம் இல்லை' என முடிவு ஆனது. இருந்தாலும் நான் வேலையை விடுவதாக அவரிடம் கூறினேன். 'வேண்டாம். நீ உன் சமுதாயத்திற்கு வேலை செய்ய வேண்டும்' என்றார். 'என் சமுதாயத்திற்கு நான்

வாலன்டரியாக வேலை செய்கிறேன். சங்கமாவுக்கு சப்போட்டாகவும் இருக்கிறேன்' என்றேன். அவரோ 'உன்மீது நானும் என்மீது நீயும் டிபன்டாக இருக்கக் கூடாது' என்று என்னை வேலையைத் தொடர்ந்து செய்யச் சொல்லிவிட்டார்.

நான் அவரைத் திருமணம் செய்து கொண்டால் குடியிருக்கும் இடத்திலோ வெளியில் சென்றாலோ யாரும் எங்களைத் தவறாக நினைக்க மாட்டார்கள். மேலும் நானும் ஒரு முழுப் பெண்ணாக வாழ்கிறேன் என்று நினைத்துக் கொள்வேன். நாங்கள் கணவன் மனைவி என்று அந்த வீட்டில் இருப்பதால் பக்கத்துக் குடித்தனக்காரர்கள் என் கழுத்தையே உற்று உற்றுப் பார்ப்பார்கள், தாலி இருக்கிறதா இல்லையா என்று. திருமணம், தாலி எல்லாம் நாமே உருவாக்கிக் கொண்ட ஒரு சம்பிரதாய மாக இருந்தாலும் நம் இந்தியக் கலாச்சாரத்தின் முறைப்படி எல்லாரும் தொன்றுதொட்டு வாழ்ந்து வருகின்றனர். இது வெறும் திருமணச் சடங்கு மட்டும் அல்ல. பெண்ணாகப் பிறந்தால் எப்படி இருக்க வேண்டுமோ அப்படித்தான் இருக்க வேண்டும். இதை மாற்றச் சில தொண்டு நிறுவனங்கள் வேலை செய்தாலும் ஏன் நான்கூட இதை மாற்ற நினைத்தாலும் அன்றாட வாழ்க்கையில் பல சிறுசிறு பிரச்சினை களையும் சந்திக்க நேரிடுகின்றது. அதனால் நான் தாலி ஒன்று செய்து போட்டுக்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்து அம்மனுக்கு அணிவிக்கப்படும் பொட்டுத் தாலி செய்து அதை நான் போட்டிருந்த செயினில் கோர்த்து அவரிடம் 'என் கழுத்தில் போடுங்கள். இங்கு உங்களையும் என்னையும் தவிர வேறு யாரும் இல்லை' என்று சொன்னேன். அவருக்கு விருப்பம் இல்லை. அதனால் அந்தத் தாலியை அவர் கட்டுவதாகக் கருதி நானே என் கழுத்தில் அவர்முன் போட்டுக் கொண்டேன்.

அடிக்கடி அவர் இரவில் பேய் பூதம் கதைகளைச் சொல்லி என்னைத் தமாசாகப் பயமுறுத்துவார். அவர் இல்லாத நாட்களில் எனக்கு அவர் சொன்ன பேய்க் கதைகள் நினைவுக்கு வந்துவிடும். அதனால் நான் பயந்து போய்விடுவேன். பேய்க்கதை சொல்லும்போது பிரியமாகச் சண்டை போடுவேன். தள்ளிப் படுத்துக்கொள்வேன். சரிசரி இனிச் சொல்லமாட்டேன்; திரும்பிப் படு என்று கூறிக் கட்டிக்கொள்வார். தொலைக்காட்சி பார்க்கும்போது, சமையல் செய்யும்போது இப்படி அவருடன் வாழ்ந்த வாழ்க்கையில் என் உள்ளம் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கியது. இதுவரை காணாத சுகத்தைக் கண்டு என் மனம் நெகிழ்ந்தது. இப்படிப்பட்டவரைத் திருமணம் செய்துகொண்டால் இன்னும் சந்தோஷம்தான். ஆனால் அவர் என்னைத் திருமணம் செய்துகொள்வார் என்ற நம்பிக்கை போய்விட்டது எனக்கு. அவர் பலமுறை பல இடங்

களில் சொல்லக் கேட்டிருக்கிறேன், நான் திருமணம் செய்துகொண்டால் பாலினச் சிறுபான்மையினரில் ஒருவரைத்தான் மணம் முடிப்பேன் என்று. அது இப்போது நானாக இருக்கக்கூடாதா என்று நினைத்துக் கொள்வேன். அவருக்கும் மனதில் என்மீது ஆசை உள்ளது. இருந்தாலும் திருமணம் செய்துகொள்ள மட்டும் விருப்பம் இல்லாது இருந்தார்.

அவர் சங்கமாவில் மிகப் பெரிய பொறுப்பில் இருப்பதால் எல்லாரையும்விட அதிகமாக வேலை செய்ய வேண்டியிருக்கும். அவருடைய சொந்த வாழ்க்கையில், அன்றாட வாழ்க்கையில் அவர் அவ்வளவாக ஈடுபாடு காட்ட நேரம் இல்லையோ என்னவோ. சரியாக அவரைக் கவனித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. காலையில் டிபன் செய்து மதிய உணவுக்காகச் சமைத்து டிபன் பாக்சில் எடுத்துக்கொண்டு போவேன். வீட்டைச் சுத்தம் செய்வதும் லாண்டரியில் இருந்து துணிகளை வாங்கிவந்து அவரவர் பெட்டியில் வைப்பதும் சுடுதண்ணீர் வைத்து அவருக்காகக் கொடுப்பதும் இப்படி ஒரு சராசரி மனைவி தன் கணவனுக்கு எப்படிப் பணிவிடைகளைச் செய்வாளோ அப்படி நானும் செய்தேன். நான் அதைப் பணிவிடையாகக் கருதிச் செய்யவில்லை. சங்கமா வேலையைப் பொறுப்பாகக் கவனித்துக்கொள்ளும் அவருக்கு அவருடைய பர்சனல் வேலைகளைச் செய்ய முடியாததால் நான் செய்கிறேன். இதுவும் சங்கமாவுக்குச் செய்யும் வேலைதான் என்று நினைத்துக்கொள்வேன். நான் செய்வதைப் பார்த்து மனதுக்குள் சந்தோஷப்பட்டுக் கொள்வார்.

அவர் டெல்லி, மும்பை என மீட்டிங் விஷயமாக வெளியூர் சென்றால் ஆபீசிலிருந்தே கிளம்ப நேரிட்டால் எனக்குப் போன் செய்து துணிமணிகளை எடுத்துவரச் சொல்லுவார். நான் எடுத்துக் கொண்டுபோய்க் கொடுப்பேன். ஒருவகையில் அவருக்குத் தாயாகவும் தோழியாகவும் ஆபீஸ் ஸ்டாஃபாகவும் காதலியாகவும் நல்ல மனைவியாகவும் இருந்தேன். சங்கமாவை மேன்மைக்குக் கொண்டு வரவும் பாலினச் சிறுபான்மை உரிமைக்குப் போராடத் தேவையான வசதிகள் கொண்டுவரவும் பாடுபடும் அவருடன் எல்லா ஆபீஸ் வேலைகளிலும் அவருக்கு ஈடுகொடுத்துத் தோள் கொடுத்து, அவருடைய பர்சனல் வாழ்க்கைக்கும் ஈடுகொடுத்துத் தோள் கொடுத்து வந்தேன். சிலசமயம் இரவு மூன்று மணிகூட ஆகிவிடும். ஆபீசிலேயே வேலை செய்வோம். அதன்பிறகு காலைதான் வீட்டுக்குச் செல்வோம். திரும்பிப் பத்துமணிக்கு ஆபீஸ் வந்துவிடுவோம். அதாவது ஒரு இரண்டு மணி நேரம் தூங்குவார். நானோ சமைக்கச் சென்றுவிடுவேன்.



17

# 25

மூன்று மாதங்கள் ஓடின. ஒருநாள் இரவு பத்து மணி இருக்கும். இருவரும் சாப்பிட்டுவிட்டுப் படுக்கச் சென்றோம். அவர் திடீரென்று என்னைப் பார்த்து 'உன்னைத் திருமணம் செய்துகொள்கிறேன்' என்றார். என்னால் நம்ப முடியவில்லை. 'அவராவது என்னைத் திருமணம் செய்துகொள்வதாவது' என நினைத்துக்கொண்டு 'நிஜமாவா சொல்றீங்க?' என்று கேட்டேன். நிஜமாகத்தான் என்றார். கனவா நனவா என்று என்னை நானே கிள்ளிப் பார்த்துக்கொண்டேன். நிஜம்தான். மனதில் எவ்வளவு சந்தோஷம் எனக்கு. அந்தச் சந்தோஷத்தோடு அவரைக் கட்டிக்கொண்டு எப்போது எங்கு எப்படி என்று கேட்டேன். அவரோ 'நாளையே திருமணம் செய்துகொள்ளலாம்' என்றார். 'நாளைக்கேவா?' என்று திகைப்போடு அவரைப் பார்த்தேன். அதற்குமுன் உன்னிடம் பேச வேண்டும் என்றார். 'ஓ பேசலாமே' என்றேன்.

'நான் பைசெக்சுவல். என்னைத் திருமணம் செய்துகொண்டால் உனக்கோ உன்னுடைய அரவானி சமுதாயத்துக்கோ எந்த மன வருத்தமும் இல்லியா?' என்று கேட்டார்.

'இதில் என்ன மன வருத்தம்? உங்களை எனக்குப் பிடித்துள்ளது. என்னை உங்களுக்குப் பிடித்துள்ளது. இதில் என் சமுதாயமோ நானோ வருத்தப்பட என்ன இருக்கு? நீங்கள் பைசெக்சுவலாக இருந்தால் என்ன? இஷ்டப்படும் இருவர் ஒன்றாக வாழவோ, திருமணம் செய்து கொள்ளவோ அவரவருக்கு உரிமை உள்ளது என்பது சங்கமா மூலம் எனக்குத் தெரிந்த விஷயம்தானே?' என்றேன்.

'இன்று என்னிடம் எப்படி நடந்துகொள்கிறாயோ அப்படி எப்பவும் நடந்துகொள்வியா?' என்று கேட்டார் அவர்.

'அதில் என்ன சந்தேகம்? உங்கள்மீது உயிரையே வைத்திருக்கிறேன்.'

'தாம்பத்தியத்தில் நாளை எனக்கு உன்மீது இஷ்டம் இல்லாமல் போகலாம். உனக்கு வருத்தம் ஆகாதா?'

'பிடித்த ஒருவர் எந்த நிலையில் இருந்தாலும் அவரை வெறுக்க முடியுமா? அதுபோலத்தான். திருமண பந்தம் நம்மைப் பொருத்தவரை வெறும் தாம்பத்திய வாழ்க்கை மட்டுமே இல்லை. ஒருவருக்கொருவர் புரிந்துகொண்டு கேரிங், ஷேரிங், அன்பு இப்படி எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. அதுபோதும் எனக்கு.'

'நமக்குள் சண்டை வந்தால் என்ன செய்வது? அப்படிச் சண்டை வருமா?'

'குடும்பம், உறவு என்று இருந்தால் சிறுசிறு சண்டைகள் ஏதேனும் காரணங்களால் வரத்தான் செய்யும். அதை அமர்ந்து பேசி ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்துப் புரிந்துகொண்டால் சண்டையைப் போக்கி விடலாம். ஒருவருக்கொருவர் சமாதானம் செய்துகொண்டு ஆறுதல் கூறிக்கொண்டுதான் இருக்க வேண்டும்.'

'பாலியல் தொழில் செய்வது அவரவர் உரிமை என்று நான் கருதுகிறேன். நாளை நீ சங்கமாவை விட்டுவிட்டால் பாலியல் தொழில் செய்யலாம். ஆனால் எனக்குப் பார்ட்னராக இருப்பவர் பாலியல் தொழில் செய்வதில் எனக்கு விருப்பம் இல்லை' என்றார்.

'எனக்குப் பாலியல் தொழில் செய்ய விருப்பமே இல்லை. அதில் உடன்பாடும் இல்லை. வேறு வழியே இல்லாத நிலை வரும்போது பார்த்துக் கொள்ளலாம்' என்றேன்.

'என்னைத் திருமணம் செய்துகொண்ட பிறகு உன் அரவானிகள் சமுதாயத்தைவிட்டு விலகிவிடக் கூடாது' என்றார்.

'அது எப்படி விட முடியும்? இன்று நான் இருக்கும் நிலை அவர்கள் காட்டிய வழிதானே?'

'கணவன் மனைவி என்ற ஏற்றத்தாழ்வு இருக்கக் கூடாது' என்றார்.

'கண்டிப்பாக இருக்கக் கூடாது' என்றேன்.

'என்னால் வீட்டுவேலைகளில் அதிக நேரம் ஒதுக்க முடியாது.'

'அதனால் என்ன? நீங்கள் கற்றவர். சங்கமா வேலையில் அனுபவம் அதிகம் உள்ளவர். நீங்கள் அதைக் கவனிக்கும்போது உங்களுக்காக-நமக்காக வீட்டுவேலைகளை இழுத்துப் போட்டுச் செய்வதில் எனக்கு ஒரு பிரச்சினையும் இல்லை.'

'என்னைக் கணவன் என்று சொல்லக்கூடாது. பார்ட்னர் என்றுதான் சொல்லவேண்டும்.'

'பார்ட்னர் என்ற ஆங்கில வார்த்தைக்கு எனக்குத் தெரிந்த அர்த்தம், ஒரு பிஸினஸ் செய்வதில் ஒருவருக்கொருவர் பணத்தைப்போட்டு பிசினஸ் செய்வார்கள். அவர்களைத்தான் பார்ட்னர் என்பார்கள்.

நாமோ அன்பை, காதலை, உணர்வுகளை ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டு ஒன்றாக வாழப்போகின்றோம். அதற்குப் பார்ட்னர் என்று கூறுவதில் எனக்கு விருப்பம் இல்லை. உங்களை என் கணவர் என்றுதான் கூறிக்கொள்வேன். வேண்டுமானால் என் அரவானி சமுதாயத்தில் உங்களை என் கணவர் என்றும், உங்களைப் போலப் படித்தவர்கள், தொண்டு நிறுவனங்களில் இருப்பவர்கள் ஆகியோரிடம் பார்ட்னர் என்றும் அறிமுகப்படுத்துகிறேன்' என்றேன். அதற்குச் சரி என்று கூறித் தலையில் தட்டிப் பைத்தியம் என்று சிரித்தார்.

'எல்லாம் ஓகே. நான் தாலி கட்டமாட்டேன். அப்படி நான் தாலி கட்டினால் இரண்டு தாலி வாங்க வேண்டும். அதில் ஒன்றை நீ எனக்குக் கட்டவேண்டும்' என்றார்.

'அதற்கு யாரும் ஒப்புக்கொள்ளாவிட்டால்? தாலி இல்லாத திருமணம் எப்படி?' என்று கேட்டேன்.

'நீயும் எனக்கு மாலை போடுகிறாய். நானும் உனக்கு மாலை போடுகிறேன். அதுபோதும்' என்றார்.

'அப்படியே ஆகட்டும். நான்தான் ஏற்கனவே தாலி போட்டுக் கொண்டேனே உங்கள் பெயரில்' என்றேன்.

'எனக்கு எல்லாம் ஓகே. எப்படித் திருமணம் செய்து கொள்வது?' என்று கேட்டார்.

'நீங்களும் இந்து. நானும் இந்து. ஏதாவது ஒரு கோயிலில் இருவரும் சென்று மாலை மாற்றிக்கொள்ளலாம்' என்றேன்.

'நாளை திருமணம். நம்முடைய திருமணத்திற்கு உன் சார்பில் நான்கு பேரும் என் சார்பில் நான்கு பேருமாவது வேண்டும். அதனால் என் நண்பர்களுக்குப் போன் செய்கிறேன்' என்றார்.

'இப்போது நேரம் இரவு 11 மணி ஆகிறது. காலை சீக்கிரம் எழுந்து போன் செய்யலாம்' என்றேன். நான் இருந்த அமாமில் என் குரு, குருபாய்கள் முன்னிலையில் பக்கத்தில் உள்ள எல்லம்மன் ஆலயத்தில் திருமணம் செய்துகொள்ளலாம் என முடிவு செய்து தூங்கச் சென்றோம்.

எனக்கு இன்ப அதிர்ச்சி. என் வாழ்க்கைக் கனவு நிறைவேறப் போகிறது. அதிலும் என்னை முழுமையாகப் புரிந்துகொண்டவர் வாழ்க்கைத் துணைவராக வருகிறார். நான் மிகவும் கொடுத்து வைத்தவள் என்று மனதில் நினைத்துக்கொண்டு அதிகாலை ஐந்து மணிக்கு அலாரம் வைத்துவிட்டு அவர் கைகளை எனக்குத் தலையணையாக வைத்து அவர் மார்போடு சாய்ந்து தூங்கப் போனால் தூக்கமே வரவில்லை. என்னை அறியாமல் என் கண்களில் கண்ணீர் வடிந்து அவர் மார்பில் பட்டது.

'ஏம்மா அழுவுற?' என்று என் கண்ணைத் துடைத்துவிட்டுப் புன் சிரிப்போடு 'பைத்தியம்' என்று செல்லமாக என் தலையைக் கோதி விட்டார். சற்றுநேரத்தில் அவருடைய குறட்டைச் சத்தம். அவர் தூங்கி விட்டார். எனக்குத் தூக்கமே வரவில்லை. என்னுடைய நினைப் பெல்லாம் திருமணத்தைப் பற்றியே இருந்தது.

புரண்டுப் புரண்டு படுத்துப் பார்க்கிறேன். தூக்கம் வரவில்லை. நாளை அவரை அழைத்துக்கொண்டு குருவிடம் சென்று நாங்கள் திருமணம் செய்துகொள்ள வந்திருக்கிறோம் என்றால் அவர் என்ன சொல்வாரோ தெரியவில்லை. அவர் சம்மதிப்பாரா? திருமணம் செய்து வைப்பாரா? அலுவலகத்தில் எங்கள் திருமணத்திற்கு ஏதாவது தொந்தரவு வந்துவிடுமோ? அவருக்குக் கஷ்டம் ஆகிவிடுமோ? நாளை எந்தப் புடவை கட்டிக்கொண்டு செல்வது? எப்படி அலங்காரம் செய்து கொள்வது? என்னுடைய அரவானி குடும்பத்திற்கும், அவரின் சில நண்பர்களுக்கும், வேலை செய்யும் ஆபீசர்களுக்கும் மட்டும்தானே தெரியும் இந்தத் திருமணம் பற்றி? அதனால் நமக்கு எந்தத் தொந்தரவும் வராது.

இப்படித் தூங்காமலேயே என்னென்னவோ நினைத்துக்கொண்டும் யோசனை செய்துகொண்டும் எப்போது அலாரம் அடிக்கும் என்று கடிகாரத்தையே பார்த்துக்கொண்டிருந்தேன்.

அலாரம் அடித்ததும் தூங்கிக்கொண்டு இருப்பவள்போல இருந்த நான் எழுந்து சென்று முதலில் கடவுள் போட்டோவைப் பார்த்துவிட்டுக் காலண்டர் தேதியைக் கிழித்தேன். இந்த நாள் என் வாழ்க்கையின் முக்கியமான நாள். இனிமையான சந்தோஷமான நாள். என்னையே நம்ப முடியாத நாள். என்னுடைய 16 வயதில் தோன்றிய ஆசைக் கனவு 33 வயதில் நிறைவேறும் நாள் என்று முகத்தில் சந்தோஷம் பொங்கத் தூங்கிக் கொண்டிருந்த அவரிடம் நாணத்தோடு, வெட்கத்தோடு, பக்தியோடு 16 வயது குமரிப்பெண் போலச் சென்று அவரைச் செல்லமாகப் பெயரிட்டுக் கூப்பிட்டுத் தட்டி எழுப்பினேன். என்னை ரெடியாகச் சொல்லிவிட்டு மீண்டும் அவர் தூக்கத்திலேயே இருந்தார். நான் குளித்துவிட்டு வந்தேன். அவரும் எழுந்து நண்பர்களுக்கு போன் செய்து என் குரு இருக்கும் இடத்திற்கு அழைத்துக்கொண்டிருந்தார். அப்படியே என்னைப் பார்த்து 'நீயும் உன் நண்பர்களைக் கூப்பிடு' என்றார். நானோ 'அமாமில் குருவோடு எல்லாரும் அங்கேயே இருப்பார்கள்' என்று கூறி 'எந்தப் புடவை கட்டிக்கொள்ளட்டும்?' என்று அவரிடம் கேட்டேன்.

'திருமணப் பெண்கள் போல அலங்காரம் எதுவும் செய்துகொள்ள வேண்டாம். கிராண்டான புடவையைக் கட்டிக்க வேண்டாம்.

சாதாரணமாக நீ எப்படி ஆபீசுக்கு வருவாயோ அதுபோல் உடுத்திக் கொண்டால் போதும்' என்றார். அவர் சார்பில் திருமண சாட்சியத் திற்கு நான்கு பேர்களை அமாமுக்கு வரச் சொல்லிவிட்டார். நாங்கள் அமாமுக்குக் காலை ஒன்பது மணிக்குப் போக வேண்டும். அதனால் சீக்கிரமாக அவரையும் குளிக்கப் போங்க என்று சொல்லிவிட்டு நான் சிம்பிளாக ஆபீசுக்குப் போகும்போது எப்படிச் செல்வேனோ அதுபோல என்னை அமைத்துக்கொண்டு வீட்டில் உள்ள கடவுள் போட்டோக்களுக்கு விளக்கு ஏற்றிப் பூஜை செய்தேன். அவரும் குளித்து வந்து ரெடியாகி இருவரும் ஆட்டோ பிடித்து குரு இருக்கும் அமாமுக்குச் சென்றோம்.

'வாங்க வாங்க நமஸ்காரம்' என்று அவரை என் குரு அழைத்து உள்ளே எங்களை உட்கார வைத்தார். காபி டீ வாங்கிவர மற்ற அரவாணி களுக்குச் சொன்னார். 'என்ன விஷயம் இவ்வளவு காலையில் இருவரும் வந்திருக்கிறீர்கள்?' என்று கேட்டார்.

அவரோ என் முகத்தைப் பார்த்துச் சொல்லவில்லையா என்று கேட்டார். அவர்முன் திருமணம் செய்துகொள்ள வந்திருக்கிறோம் என்று என் குருவிடம் சொல்ல வெட்கப்பட்டுக்கொண்டு பயத்தோடு என் குருவை வெளியில் அழைத்துச் சென்று, 'நாங்கள் திருமணம் செய்துகொள்ளப் போகிறோம். நீங்கள்தான் எங்கள் திருமணத்தை நடத்தி வைக்கவேண்டும்' என்று கூறினேன்.

ஷாக் ஆகிப் பிரமித்து நின்றார் என் குரு. 'என்னடி சொல்ற? என்னடி திடீர் முடிவு?' என்று ஆச்சரியத்தோடு கேட்டார். 'அம்மா, நாங்க இரண்டுபேரும் நன்றாக யோசனை செய்துதான் இந்த முடிவு எடுத்து உள்ளோம். திருமணம் என்றால் மற்றவர்கள் போலத் தாலிகட்டி, மேளம் கொட்டி, ஊரை அழைத்துச் செய்வது இல்லை எங்கள் திருமணம். இருவரும் மாலை மாற்றிக்கொண்டு கைப்பிடிப்பது என்று முடிவு செய்திருக்கிறோம். அவர் சார்பில் நான்கு பேருக்குப் போன் செய்திருக்கிறார். என் சார்பில் யார் இருக்கிறார்கள்? என் அம்மா அப்பா திருமணத்திற்குச் சம்மதிப்பார்களா? இந்த ஊரும் உலகமும்தான் சம்மதிக்குமா? உணர்வுகளைப் புரிந்துகொண்ட நாம்தானே திருமணத் திற்குச் சாட்சியமும் செய்து வைக்கவேண்டும்? உங்களை நம்பித்தான் வந்திருக்கிறோம். நீங்கள்தான் கோயிலில் எங்களுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும். அவருக்கும் இதுபோன்ற எளிமையான திருமணத்தில்தான் விருப்பம்' என்றேன்.

'அதெல்லாம் சரிடி. ஐயர் வேணும். தாலி வேணும். அக்கினி குண்டம் வேணும். இதெல்லாம் எதுவும் இல்லாமல் திடீர் என்று எப்படித் திருமணம் செய்வது?' என்று கேட்டார்.

'அவருக்கு அக்கினி சுற்றுவது, தாலி கட்டுவது என்பதில் எல்லாம் நம்பிக்கையும் இல்லை; விருப்பமும் இல்லை.கோயிலில் தேங்காய் பழம் வைத்து, பூஜை செய்து மாலையை எடுத்துக் கொடுங்கள். நாங்கள் மாலை மாற்றிக்கொள்கிறோம். அது போதும்' என்றேன்.

'தாலி கட்டாத திருமணம் ஒரு திருமணமா?' என்று குரு கேட்க, 'தாலி கட்ட வேண்டுமானால் இரண்டு தாலி வாங்க வேண்டுமாம். அவர் எனக்கும் நான் அவருக்கும் தாலி கட்ட வேண்டுமாம். அதனால் தாலி வேண்டாம்மா. மாலையையே மாற்றிக்கொள்கிறோம். ஐயர் வேண்டாம் என்று அவரும் கூறியுள்ளார். அதனால் நீங்கள் என் குருவாக இந்தத் திருமணத்தை நடத்தி வைத்தால் போதும்மா' என்று கூறினேன். குரு சம்மதம் தெரிவித்துவிட்டார். என்னோட குருபாய்கள் ஆச்சரியமாக எங்களைப் பார்த்தனர். 'ரேவதிக்கு அதிர்ஷ்டம் பார்; ஆபீசில் வேலை கிடைத்தது, நல்ல புருஷனும் கிடைத்துவிட்டார்' என்று பேசிக் கொண்டனர்.

திருமணத்திற்காகப் பூஜை சாமான்கள் என் குருபாய் வாங்கி வந்தார். நான் மாலைகள் வாங்கி வந்தேன். அவர் தம் நண்பர்களுடன் சென்று இனிப்பு வாங்கிக்கொண்டு கேமிரா எடுத்துக்கொண்டு வந்தார். எல்லாரும் எல்லம்மன் கோயிலுக்குச் சென்றோம். என் குரு பூஜை செய்து எங்களிடம் மாலை எடுத்துக் கொடுத்தார். நாங்கள் இருவரும் மாலை மாற்றிக்கொண்டோம். எங்கள் திருமணத்தைக் காண அந்த ஏரியாவில் அக்கம்பக்கம் உள்ளவர்கள் கோயிலுக்கு வந்துவிட்டனர். 'அரவானிக்குத் திருமணமா' என்று ஆச்சரியத்தோடும் பிரமிப்போடும் பார்த்தனர்.

திருமணம் முடிந்து கோயிலைச் சுற்றியும் கோயில் முன்னும் எல்லாரும் போட்டோ பிடித்துக்கொண்டோம். இனிப்புகள் எல்லாருக்கும் கொடுத்தோம். எங்களைப் பார்த்துச் சில அரவானிகளும் பெண்களும் 'வெறும் இனிப்பு மட்டும்தானா, பார்ட்டி இல்லையா?' என்று கேட்டனர். 'கண்டிப்பாகக் கொடுக்கிறோம்' என்று கூறினோம்.

அவர் எனக்கு மாலை போட்டுக் கோயிலுக்கு உள்ளே இருந்து வெளியே வரும்போது என் கையை இறுக்கமாக அவர் கையுடன் கோத்துப் பிடித்து அழைத்து வந்தார். அவர் அப்படிக் கையைப் பிடித்ததும் நான் ஆனந்தக் கண்ணீர் வடித்தேன். கைப்பிடித்த அவர் இனிக் கைவிடமாட்டார் என்ற சந்தோஷம். ஊர் அறியத் திருமணம் நடக்கவில்லை என்றாலும் அழைப்பு இல்லாமல் வந்தவர்களைப் பார்த்த சந்தோஷம். அந்தச் சந்தோஷத்தோடு கைகோத்துக் கோயிலைவிட்டு அமாமுக்கு வந்தோம். என் குருபாய் வாசல்படியில் ஆரத்தித் தட்டு வைத்துக்கொண்டு எங்களை வெளியிலேயே நிற்க வைத்து ஆரத்தி

எடுத்தாள். ஆரத்தி எடுத்துவிட்டுத் 'தட்டில் பணம் போடுங்க' என்று அவரைப் பார்த்துக் கேட்டாள். அவர் என் முகத்தைப் பார்த்துச் சிரித்த படி 'காசு போடணுமா? எவ்வளவு போடட்டும்?' என்று என்னிடம் கேட்டார். 'ஐம்பதோ நூறோ போடுங்கள்' என்று முணுமுணுத்தேன். பாக்கெட்டில் இருந்து 100 ரூபாய் எடுத்துப் போட்டார். உள்ளே அழைத்துப் பாலும் பழமும் இருவரையும் பகிர்ந்துகொள்ளச் சொன்னார்கள். நாங்கள் பகிர்ந்து சாப்பிட்டோம்.

திருமணத்திற்கு வந்தவர்கள் வாழ்த்திச் சென்றனர். நாங்கள் இருவரும் எங்கள் வீட்டுக்குச் சென்றோம். வீட்டில் மாலைகளை வைத்துவிட்டு உடனடியாகப் போட்டோவைக் கழுவ அனுப்பிவிட்டு ஆபீஸ் சென்று அங்கிருந்து அவருடைய நண்பர்களுக்குப் போன் செய்து ரேவதியை நான் திருமணம் செய்துகொண்டேன் என்று சொன்னார். என்னையும் அவர் நண்பர்களுடன் போனில் பேசும்படி சொன்னார். திருமண வாழ்த்துக்கள் ஆங்கிலத்தில் ஒலித்தன. தேங்ஸ் என்ற வார்த்தையைக் கூறிச் சமாளித்தேன். அவருடைய நண்பர்கள் டெல்லி, பம்பாய், ஆந்திரா, தமிழ்நாடு, பெங்களூர் என்று இருந்தனர். எல்லாருக்கும் போன் செய்து திருமண விஷயத்தைக் கூறினார். என்னையும் என் நண்பர்களுக்கும் தோழிகளுக்கும் போன் செய்து சொல்லச் சொன்னார்.

எனக்குத் தெரிந்தவர்கள் என் குருபாய்கள்தான். அங்குதான் திருமணம் நடந்தது. அதைவிட்டால் ஆபீஸ் ஸ்டாஃபுகள். அவர் களுக்குத் தெரியத்தான் போகிறது. அப்புறம் என் அம்மா அப்பா. அவர்களுக்குச் சொன்னால் ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் இல்லை. அண்ணார்களுக்குச் சொன்னால் 'ஏன்டா ஆம்பளைக்கு ஆம்பளை கல்யாணமா' என்று கூறுவார்கள். அதனால் யாரிடமும் சொல்லத் தேவையில்லை. என்னை அவர் திருமணம் செய்துகொண்டார் என எனக்குத் தெரியும். அது போதும். எப்போது அம்மா, அப்பா, அக்கா, அண்ணார்கள் புரிந்து ஏற்றுக்கொள்வார்களோ அப்போது கூறினால் போதும் எனச் சொல்லவில்லை. எனக்குத் தெரிந்த பெண்கள் அமைப்புகளைச் சேர்ந்த தோழிகளுக்குப் போன் செய்தேன். நான் அவரைத் திருமணம் செய்து கொண்டேன் என்று சொன்னதும் சிலர் நம்பாமல் சந்தேகப்பட்டனர். போனை அவரிடம் கொடுத்துப் பேசச் சொன்ன பிறகு நம்பினர். என் கணவர் என்னைத் திருமணம் செய்து கொண்டதைப் பலர் நம்பவில்லை. ஆபீசுக்கே வந்து எங்களைப் பார்த்துப் பேசிய பிறகு நம்பினர். பலர் திகைத்துப்போயினர். 'ரேவதியைத் திருமணம் செய்து கொண்டாரா? நம்பவே முடிய வில்லையே' என்று ஆச்சரியப்பட்டனர்.

ஆபீஸ் ஸ்டாஃபுகள், ஆபீசுக்கு வரும் பாலினச் சிறுபான்மைச் சமுதாயத்தினர், வேறுவேறு அமைப்புகளில் பணிபுரியும் ஆண்கள் பெண்கள் எல்லாரும் ஆபீசுக்கு வந்து மலர்கள் கொடுத்து வாழ்த்திச் சென்றனர். அவர்களுக்காக அவர் வாங்கி வைத்திருந்த இனிப்புகளைக் கொடுத்தார். வந்தவர்கள் அனைவரும் 'இனிப்பு மட்டும்தானா? பார்ட்டி எதுவும் இல்லையா?' எனக் கேட்டனர்.

அவர் எல்லாருக்கும் வெளிப்படையாகப் போன் செய்து சொல்லும் போது நானும் திகைத்துப் போனேன். அதிர்ச்சியும் அடைந்தேன். அவர் என்னைத் திருமணம் செய்துகொண்டது என் சமுதாயத்தினருக்கு மட்டும்தான் தெரியும் என்று நினைத்தேன். இப்போது எல்லாருக்கும் தெரிய அவர் கூறியது என் மனதை நெகிழ வைத்தது. மிகவும் சந்தோஷத் தைக் கொடுத்தது.

அன்று இரவு அவர் என்னிடம் தனிமையில் கூறும்போது சந்தோஷ மாக இருப்பதாகக் கூறினார். இருவரும் விரைவில் பதிவுத் திருமணம் செய்துகொள்ள வேண்டும்; ரேஷன் அட்டை பெற வேண்டும் என்று கூறினார். நம்முடைய நண்பர்களுக்கும் சமுதாயத்தினருக்கும் கண்டிப்பாகப் பார்ட்டி கொடுக்க வேண்டும் என்று கூறி, என் அம்மா அப்பாவுக்கு என் திருமண விஷயத்தைச் சொல்ல முடியவில்லை, அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளவும் மாட்டார்கள், அதனால் மெதுவாகச் சமுதாயத்தவர் பற்றிப் புரிய வைத்து அதன் பிறகு கூறுகிறேன் என்றார். அன்று அவர் சொன்னது எனக்கு மேலும் மன மகிழ்ச்சியானது. நான் மிகவும் கொடுத்து வைத்தவள். எனக்குக் கிடைத்த கணவன்போல் வேறு யாருக்கும் கிடைத்திருக்கமாட்டார் என மகிழ்ச்சியாக எங்கள் இல்லற வாழ்வைத் தொடர்ந்தோம்.

என்னுடைய திருமண விஷயத்தை என் குடும்பத்தினரில் யாருக்கா வது தெரிவிக்க வேண்டும் என்று நினைத்து அக்காவுக்குப் போன் செய்து திருமண விஷயத்தைக் கூறினேன். அவளும் வாழ்த்தினாள். இந்த விஷயம் உனக்கு மட்டும்தான் தெரிந்திருக்கவேண்டும்.வேறு யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று சத்தியம் வாங்கிக்கொண்டேன். அவளும் அந்தச் சத்தியத்தைக் கடைப்பிடித்தாள். ஒருமுறை நான் என் ஊருக்குத் திருமணப் போட்டோவை எடுத்துச் சென்றேன் என் அக்கா விடம் காட்ட. அப்போது என் வீட்டில் என் அம்மா என்னுடைய பையைச் செக் செய்து ஆல்பத்தைப் பார்த்துவிட்டார். அவர் பார்த்ததாக என்னிடம் காட்டிக்கொள்ளவில்லை. அம்மா போட்டோவைப் பார்த்த விஷயம் எனக்குத் தெரியாது.

என் அம்மா என்னிடம் சில நாட்கள் கழித்து பெங்களூர் வந்தபோது திருமண விஷயத்தைச் சொல்லி அழுதார். அவருக்கு எங்கே என்

கணவர் என்னை மோசம் செய்து பணத்தைப் பறித்துவிடுவாரோ, ஏமாற்றி விடுவாரோ என்ற பயம் இருந்தது. அம்மாவுடன் சண்டை போட்டேன். உங்களுக்குத் தேவை சொத்து; அவ்வளவு தானே. நாளையே ஊருக்கு வருகிறேன். நான் எழுதிக்கொண்ட சொத்தை உன் பெயரில் எழுதிக் கொடுத்து விடுகிறேன் என்று கூறிவிட்டேன். அதன்பிறகு அவர் 'எப்படியோ போ' என்று சமாதானம் ஆனார். நான் என் வாழ்க்கையை எப்படி அமைத்துக்கொள்ள வேண்டும், நான் திருமணம் செய்துகொண்டவர் எப்படிப்பட்டவர், என்மீது எவ்வளவு ஆசையும் அன்பும் வைத்திருக்கிறார் என்று எனக்கு நன்றாகத் தெரியும். அவர் ஒருபோதும் என் சொத்துக்கு .ஆசைப்பட்டு என்னைத் திருமணம் செய்துகொள்ளவில்லை. நீங்கள் அப்படி நினைத்தால் என் சொத்தைக் கூட அவருக்காக இழக்கத் தயாராக இருக்கிறேன். எனக்கு அவர்தான் முக்கியம். அவர் இல்லாமல் என்னால் வாழமுடியாது என்று அடித்துக் கூறிவிட்டேன். அதன்பிறகு என் குடும்பத்தில் எல்லாருக்கும் தெரிந்து சமாதானம் ஆயினர். பலமுறை பண்டிகைகளுக்கும் என் கணவரை என் குடும்பத்தார் அழைத்தனர். அவரோ ஒருநாளும் என் ஊருக்கு வந்ததில்லை. பாவம் அவருக்கு நேரமும் இல்லை.

சமுதாயமும் என் வீடும் ஒப்புக்கொண்ட என் திருமணத்தை நினைத்துச் சந்தோஷப்பட்டேன். ஒருமுறை அவருடைய பெற்றோர் எங்கள் வீட்டுக்கு வந்தனர். அவருடைய பெற்றோர்களுக்கு நாங்கள் ஆபீஸ் ஸ்டாஃப், ரூம்மேட் அவ்வளவுதான். அவர்கள் வீட்டுக்கு வந்தால் நாங்கள் இருவரும் தனித் தனியாகப் படுத்துக்கொள்வோம். அவரோட அம்மாவுக்கு மகனோடு துணையாக யாரேனும் இருப்பது சந்தோஷம்தான். ஆனாலும் அவரைத் திருமணம் செய்துகொள்ளும் படி வற்புறுத்தி வந்தனர். என்னிடம்கூடத் திருமணம் செய்துகொள்ள நீங்களாவது அட்வைஸ் செய்யக்கூடாதா என்று சொல்லுவார். அவர் என்னைத் திருமணம் செய்துகொண்டார் என்று சொல்ல முடியாமல் தவிப்பேன். அவர்கள் பெங்களூரில் இருக்கும் போதே எங்களுக்குச் சாக்கார் நகரில் வீடு கிடைத்துவிட்டது. அந்த வீட்டில் பெயிண்ட் அடிக்கும் வேலைகளும் தொடர்ந்தன.

நானும் அவரும் அவர் பெற்றோரும் அந்தப் புதிய வீட்டைப் பார்க்கச் சென்றிருந்தோம். அவருடைய அம்மா அந்தப் புதிய வீட்டைப் பார்த்து விட்டு 'இவ்வளவு பெரிய வீடு எதுக்கு உங்க ரெண்டு பேருக்கும்? அந்த வீடே போதுமே. அதுவும் சிட்டியைவிட்டு இவ்வளவு தூரம் வேற. எதற்கு?' என்று என்னிடம் கேட்டார். 'நீங்களும் அவரோடு வந்து இருப்பதாக அவர் கூறினார். அதனால்தான் பெரிய வீடு எடுத்து உள்ளோம்' என்றேன். 'நாங்களா இங்கு வந்து

இருக்கப் போகிறோம்? இல்லை. நாங்கள் ஊரில் உள்ள வீட்டைவிட்டு இங்கு வரமாட்டோம். என் மகன் திருமணம் செய்துகொண்டால்தான் இங்கு தங்குவோம். அதுவும் பர்மெனண்டாக இங்கு இருக்கமாட்டோம்' என்று கூறினார். அவருடைய பெற்றோர்கள் ஊருக்குச் சென்றபிறகு அவரிடம் 'உங்க அம்மா இதுபோல் கூறுகிறார்களே, அப்போ எதற்கு இவ்வளவு தூரம் வரவேண்டும்?' என்று கேட்டேன். அவர் என் கேள்விக்கு விடை கொடுக்காமல் ஏதோ பேசிச் சமாளித்தார். என்ன செய்வது, கணவன் இருக்கும் இடம்தான் நமக்கும் என்று என் வீட்டைக் காலி செய்துவிட்டு புதிய வீட்டில் குடியேறினோம்.

இந்தப் புதிய வீடு உள்ள ஏரியா லேஅவுட். எல்லாம் தனித்தனி பிளாட்டுகள். ஒரு வீட்டுக்கு ஒரு வீடு தனித்தனியாக இருக்கும். யாரும் யாருடனும் பேசவோ வீட்டுக்கு வந்துபோகவோ மாட்டார்கள். வீடு பெரியதாக இருந்தாலும், சௌகரியமாக இருந்தாலும் அங்கு சென்ற பிறகு தனிமை என்னைப் பல நாட்கள் வாட்டியது. அவரோ இரவு 10 மணி, 12 மணி என்றுதான் வருவார். வீடு தூரம் ஆனதால் குரு, குருபாய்களுடன் தொடர்பு இல்லாமல் போனது. ஆபீசில் சேலா பாமிளாவைப் பார்க்கலாம் என்றால் அவளும் வேலையை விட்டுச் சென்றுவிட்டாள். அவளைப் பார்ப்பதும் முடியாமல் போயிற்று. எனக்கு விடுமுறை திங்கட்கிழமை மட்டும்தான். மேலும் அப்போது ஆபீஸ் நேரம் 9.30 மணியாக இருந்தது. ஆபீஸ் அசிஸ்டெண்ட் என்பதால் நான்தான் ஆபீசை ஒப்பன் செய்யவேண்டும். ஒருசில நாட்கள் அவரோடு பைக்கில் சென்றாலும் பல நாட்கள் நான் பஸ்ஸில்தான் போக வேண்டும். அவர் ஆபீஸ் வேலைகளை வீட்டில் உள்ள கம்ப்யூட்டரில் செய்துகொண்டிருப்பார். எனக்குத் தாமதம் ஆகிவிடக் கூடாது என்று 9.30 மணிக்கு ஆபீஸ் போக 8.30க்குக் கிளம்ப வேண்டியதாயிற்று. ஆபீஸ் முடிந்து வீட்டுக்குப் பஸ் பிடித்துவர ஏழு மணி ஆகிவிடும். அதன் பிறகு இரவு உணவு தயாரித்து, வீட்டு வேலைகளைச் செய்து முடிக்க இரவு 9 மணி ஆகிவிடும். இப்படி நேரம் கிடைக்காததால் மற்ற பொழுதுபோக்கு இடங்களுக்குச் செல்லவோ சினிமாவுக்குப் போகவோ, குரு, குருபாய், சேலாக்களைப் பார்க்கவோ நேரம் இல்லாமல் போனது.

வீட்டுக்கு வாடகை 4000 ரூபாய். நான் 1500ரூபாய் கொடுப்பேன். அவர் 2500 ரூபாய் போட்டுச் செக் எழுதிக் கொடுப்பார். வீட்டுக்குத் தேவையானது வாங்க ஆளுக்கு 1000 ரூபாய் டப்பாவில் போட்டு விடுவோம். அதிலிருந்து வீட்டுப் பொருள்கள் வாங்குவோம். கரண்ட் பில், கேபிள் பில், தண்ணீர் பில் எனக் கட்டிக்கொள்வோம். இரவு அவர் சீக்கிரமாக வந்தாலும் கம்ப்யூட்டரில் வேலை செய்துகொண்டும் கேம்

ஆடிக்கொண்டும் இருப்பார். கரண்ட்பில் கட்டுவது, தண்ணீர் பில் கட்டுவது, வேலைக்காரிக்குச் சம்பளம் கொடுப்பது இப்படி எல்லாவற்றையும் நானே இழுத்துப்போட்டுச் செய்ய வேண்டியதாயிற்று. அதைப்பற்றிக் கவலைப்பட அவருக்கு நேரம் இல்லாமல் போனது. போகட்டும். இரவிலாவது படுக்கும்போது அன்பாகப் பேசுவது, ரொமான்டிக்காக இருப்பதுகூடக் குறைந்தது. எல்லா மனைவிகளும் எதிர்பார்ப்பதை நானும் அவரிடம் எதிர்பார்த்தேன். வாய்விட்டுச் சொன்னால் அவரிடம் கேட்க முடியாமல் தவித்தேன். நூறு சதவீதம் அவரிடம் நான் அன்பு காட்டினால் முப்பது சதவீதம் அன்பை எதிர்பார்ப்பேன். கம்ப்யூட்டரில் உட்கார்ந்துவிட்டால் போதும். உலகத்தையே மறந்து போய்விடுவார். நானும் பல நாட்கள் ஆபீஸ் டென்ஷன், வேலையாக இருப்பார் என்று ஆசைகளை மனதில் போட்டு உருகிக்கொண்டு இருப்பேன்.

எத்தனை நாட்கள் வெந்த சோற்றைத் தின்றுவிட்டு நான்கு சுவர்களுக்கு மத்தியில் தனிமையாக இருக்க முடியும்? ஒருநாள் மனம் விட்டுப் பேசிவிட வேண்டியதுதான் என்று அவரிடம் என் நிலை பற்றிக் கூறினேன். என் கணவனிடத்தில் இருந்து அன்பை, ரொமாண்டிக்கைக் கேட்டு வாங்க வேண்டியதாயிற்று. அப்படி நான் கேட்டால் என்மீது கோபம் கொள்வார். ‘எனக்கு இஷ்டம் இருக்கும்போதுதான் ரொமாண்டிக்காக இருக்க முடியும். நீ கேட்பது எனக்கு ஃப்ரீடம் இல்லாதது போல் இருக்கு’ என்று கூறுவார். அவர் அப்படி நடந்துகொள்ளும்போது நான் மனக்குழப்பத்திற்கு ஆளாகிவிடுவேன். அதனால் டிப்ரஷன் ஆகிவிட்டேன். அவரோ என்னைக் கவுன்சிலிங் போ, என் நண்பருடன் பேசு என்று கூறுவார். பலமுறை அவருடைய நண்பர் ஒருவருடன் பேசியும் உள்ளேன். அவர் எங்கள் இருவரையும் மேரேஜ் கவுன்சிலரிடம் போகச் சொன்னார். சம்மதித்து அவர் வரமாட்டார். வீட்டுக்கு வந்து எனக்கு ஒன்றும் இல்லை. உனக்குத்தான் ப்ராபளம். நீ கவுன்சிலரிடம் போ என்பார். படித்தவர் எப்படி வேண்டுமானாலும் பேசுவார். பதிலுக்குப் பதில் என்னைப் பேச முடியாதவாறு சமாளித்துவிடுவார். படிக்காத கிராமத்துப் பெண் போல இருந்துவிடுவேன்.

அவருடைய நண்பரின் அறிவுரையின் பேரில் ஒருசில நாட்கள் என்னைப் பற்றி விசாரிப்பது, அன்பாகப் பேசுவது, ரொமாண்டிக்காக இருப்பது என இருந்தாலும் அது காலப்போக்கில் மாறிவிட்டது.

உறவு கொள்வதை நிறுத்தினார். அதன் பிறகு அரவணைத்துத் தூங்குவதை நிறுத்தினார். இப்படிப் படிப்படியாக ஒவ்வொன்றாகக் கட் செய்தார். சில சமயம் என்னை அரவணைத்துக் கொள்ளுமாறு கேட்டால் கோபத்தோடு பெட்ஷீட்டைக் கொண்டு என் முகத்தை

மூடி என்னை அரவணைத்துக் கொள்வார். அப்போது எனக்கு மிகக் கடுமையான கோபமும் குழப்பமும் அதிர்ச்சியும் ஆகிவிடும். தூங்கு பவர்களை எழுப்பிவிடலாம். ஆனால் தூங்குவதுபோல் நடிப்பவர் களை எழுப்ப முடியாது என நினைத்துக் கொண்டு நிம்மதியற்ற வாழ்க்கை வாழ்ந்து வந்தேன்.

என் கணவரின் மனதில் என்ன நினைத்தாரோ எனக்குப் புரிய வில்லை. என்மீது அவருக்குக் கொஞ்சமும் இஷ்டம் இல்லை. வீடு மாறியது, தனிமை, தூரம், நேரம் கிடைக்காதது, சதா அவரின் நினைவு என்னைத் தனிமைப்படுத்திவிட்டது. ஆபீசிலும் வெளியிலும் யாருடனும் முகம் கொடுத்துச் சந்தோஷமாகப் பேச முடியாத நிலை. எதைக் கண்டாலும் வெறுப்பு. எதைப் பற்றியும் கவலைப்படாமல் அவர் அவருடைய போக்கில் இருப்பார். வீட்டு வாடகையைப் பகிர்ந்து கொண்டோம். உணவைப் பகிர்ந்துகொண்டோம். வீட்டுக்குத் தேவை யானவற்றை வாங்கப் பகிர்ந்துகொண்டோம். ஆனால் அன்பைப் பகிர்ந்துகொள்ளத் தவறிவிட்டார். அவருக்கு அவருடைய நண்பர்கள் அட்வைஸ் கூறினால் பிடிக்காது. ரேவதிமீது அளவு கடந்த அன்பு வைத்திருக்கிறேன் என்றுதான் கூறுவார். ரேவதியை அரவணைப்பது, ரொமாண்டிக்காகப் பேசுவது இப்படி நடந்துகொண்டால்தான் அவள் மீது அன்பு வைத்திருக்கிறேன் என்று அர்த்தமா என்று கேட்பார். இப்படி ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒவ்வொரு உதாரணம் கொடுத்துப் பேசும் போது அது சங்கடமாக இருக்கும் எனக்கு.

அவருக்கு இஷ்டம் இருக்கும்போது ரொமாண்டிக்காக இருப்பார். அவருக்கு வேண்டும்போது அரவணைத்துக் கொள்வார். அவருக்குத் தேவைப்படும்போது ஒட்டலுக்குச் சாப்பிடப் போகலாம் என்று அழைப்பார். அவருக்கு விருப்பம் இருக்கும்போது சினிமாவுக்குப் போகலாம் என்பார். இப்படி அவர் இஷ்டப்படியே வாழ்ந்த எனக்கு என் இஷ்டம், என் தேவைகள், என் விருப்பம் என்பது இல்லாமல் போய்விட்டது. வாய் விட்டுக் கேட்டால் எனக்கு விருப்பம் இல்லை, எனக்கு இஷ்டம் இல்லை, எனக்கு நேரம் இல்லை என்று தட்டிக் கழிப்பார். எப்போதுதான் உங்களுக்கு இஷ்டம் வரும், நேரம் வரும் என்று வாய்விட்டுக் கேட்ட பாவம்தான் என்னை முன்பு மாதிரி இல்லை என்றார்.

‘நீங்கள் கூப்பிடும்போது சினிமாவுக்கு நான் வருகிறேன். நேரம் ஒதுக்குகிறேன். அதேபோல் நான் அழைக்கும்போது மட்டும் ஏன் வரமாட்டீங்கிறீங்க?’ என்று கேட்டால் ‘நான் கூப்பிடும்போது நீயும் வரமுடியாது,தேவை இல்லை என்று சொல்லுவதுதானே?’ என்பார். இது எப்படிப் பதில்? இருவரும் ஒரே வீட்டில் இருக்கின்றோம். வீட்டை,

சாப்பாட்டைப் பகிர்ந்துகொள்கிறோம். நல்ல கணவன் மனைவியாக நண்பர்களாக, ஸ்டாஃபாக இருக்கிறோம். ஒருவருக்கொருவர் நேரம் ஒதுக்குவது, விட்டுக்கொடுப்பது வேண்டாமா என்று கேட்டால் 'உன்னால் எனக்கு ஃபிரீடமே போய்விட்டது. நான் ஒரு சுதந்திரப் பறவை. என் இஷ்டம் போலத்தான் நடந்துகொள்வேன். உன்னால் தற்போது எனக்கு நிம்மதியே போய்விட்டது' என்பார். மேலும் என்னைத் திருமணம் செய்துகொண்டதே தப்பாகப் போய்விட்டது. அதுதான் நான் செய்த மிகப்பெரிய தவறு என்று கூறுவார்.

அவர் தனியாகப் போகிறேன் என்று சொன்னால் போதும், எனக்கு இடியே விழுந்தது போல் இருக்கும். நானும் எத்தனையோ நாட்கள், மாதங்கள், அவர் எங்கேயாவது என்னைக் கூட்டிச் செல்வார், அன்பாகப் பேசுவார் என்று காத்துக் காத்து மனம் உடைந்துபோய் விட்டேன். அவர் என்னை விட்டுப் பிரிவது என்ற உறுதியில் இருந்தார். ஆபீஸ் விஷயமாக எங்காவது வெளியூர் செல்லும்போது அவருடன் பஸ்ஸிலாவது உட்கார்ந்து செல்ல ஆசைப்படுவேன். அந்த ஆசைகூடக் கிடைக்காமல் செய்வார்.

ஒருமுறை மும்பையில் நடந்த உலகச் சமூக மாமன்றத்தில் என்னை உரையாற்ற அழைத்தார்கள். எங்களுக்கு ஒதுக்கப்பட்ட செமினார் ஹாலில் மூவாயிரம் மக்கள் என் பேச்சைக் கேட்டனர். அப்போது என் அப்பா அம்மா வீட்டில் நடந்தது, போலீஸ் கொடுமைகள், ரவுடிகளின் துன்புறுத்தல், சட்டத்தால் கிடைக்காத சப்போர்ட்டுகள், என் திருமண விஷயத்தில் தற்போது படும் துன்பங்கள் என்று 10 நிமிடம் பேசினேன். அன்று இரவு நான் அவரைப் பற்றிப் பேசி விட்டேன் என்று மறுநாள் காலை என்னை அழைத்து 'என்னைக் கொன்றுவிட்டாய். எதற்காக அப்படிப் பேசினாய்?' என்று கேட்டார். 'என்னுடைய அப்பா, அம்மா, உலகம் எப்படி என்னிடம் நடந்துகொண்டதோ அதைத்தான் கூறினேன். மற்ற விஷயங்களை மக்களிடம் தைரியமாகப் பேச ஊக்கம் கொடுக்கும் நீங்கள் உங்கள் விஷயம் என்றால் தப்பாக நினைப்பது ஏன்? நான் உங்களைக் கொன்றுவிட்டேன் என்கிறீர்களே, என்னை எத்தனை நாட்கள் கொன்று இருக்கிறீர்கள் தெரியுமா? நான் எத்தனையோ பொது இடங்களில் நியூஸ் பேப்பரில் டிவி நிகழ்ச்சிகளில் என் கஷ்டங்களையும் குடும்பத்தைப் பற்றியும் போலீசைப் பற்றியும் சமுதாயத்தவர்கள் செய்யும் கேலி கிண்டல்களையும் கூறியுள்ளேன். அதனால் அம்மா அப்பாமீது பாசம் இல்லாமல் இருக்கிறேனா? உங்கள்மீது பாசம், அன்பு இல்லாமல் இருக்கின்றேனா? என் அன்பைப் புரிந்துகொள்ள வேண்டும். அதற்கான போராட்டம்தான் இது. இது என் உரை அவ்வளவுதான்' என்றேன்.

'இன்று முதல் உனக்கும் எனக்கும் எந்த ரிலேஷன்ஷிப்பும் இல்லை' என்று கூறிச் சட்டென்று எழுந்தார். 'பேசத்தானே அழைத்தீர்கள். பேசுங்கள். பாதியில் ஏன் எழுந்துபோக நினைக்கிறீர்கள்?' என அவரைப் பிடித்தேன். அவர் கையில் வைத்திருந்த பேக்கால் ஓங்கி என்மீது அடித்து விட்டுக் கோபமாகச் சென்றுவிட்டார். அவர் எழுந்த முறை, பேக்கை வீசிய முறை, அவர் முகத்தில் கண்ட கோபவெறி எல்லாம் என்னை மிகவும் பாதிப்புக்குள்ளாக்கின. இனி உயிரோடு இருக்க வேண்டாம் என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். மனமுடைந்து கத்திக் கதறி அழுதேன். அவர் என்னைவிட்டுப் பிரிந்துவிடுவாரோ, என்னை வெறுத்து ஒதுக்கி விடுவாரோ என்று புலம்பினேன். நான் ஏதாவது இங்கு செய்து கொள்வேன் என்று ஸ்டாஃப்புகள் இரண்டு பேர் பெங்களூர் வரும்வரை என் கூடவே இருந்தார்கள். என்னைத் தனிமையிலேயே விடவில்லை.

யார் கண்ணுப்பட்டதோ, யார் என்ன சொன்னார்களோ, ஒருவருடம் கூட அவருடன் சந்தோஷமாக வாழமுடியாமல் எங்கள் உறவு பிரிந்து விட்டது. இந்தப் பிரிவை நினைத்து அழுத எனக்குச் சில நண்பர்களால் அவருடன் ஒரு மீட்டிங் ஏற்பாடும் செய்யப்பட்டது. 'இஷ்டம் இல்லாத வருடன் வாழ முடியாது. கோர்ட்டு, கேஸ் என்று சென்றாலும் அங்கும் உனக்கு மெயின்டனன்ஸ்தான் வாங்கிக் கொடுத்துப் பிரிப்பார்கள். அதனால் உனக்கு அவரிடம் இருந்து பணம் மாதம்தோறும் வாங்கித் தருகிறோம்' என்றனர்.

'நான் அவரைத்தான் காதலித்தேன். அவரைத்தான் விரும்பினேன். அவரோட பணத்தை இல்லை. எனக்கு அவரோட பணம் தேவை இல்லை. என்றாவது ஒருநாள் என்னைப் புரிந்துகொண்டு வருவார் என்ற நம்பிக்கையில் அவர் நினைவோடு வாழ்ந்து விடுகிறேன். அவர் இஷ்டம்போல் செய்யட்டும். ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். என்னைத் திருமணம் செய்துகொண்ட அவர் கடமை தவறிவிட்டார். சராசரி ஆணுக்கும் இவருக்கும் வித்தியாசம் என்ன இருக்கிறது? என்னைச் சராசரி ஆண் ஏமாற்றிவிட்டுச் சென்றிருந்தாலோ, என் பணம் நகைகளைப் பறித்துச் சென்றிருந்தாலோகூட நான் இப்படி வருத்தப்பட்டிருக்க மாட்டேன். பிரிந்து விடுவது என்று முடிவு செய்தவர் என்னை அப்படியே விட்டுவிட்டுச் சென்றது முறையல்ல. என்னைப் போன்றவர்களுக்கு வீடு கிடைப்பது கஷ்டம். அதுவும் மூன்று மாதம் அந்த வீட்டில் தனியாக இருந்தேன். வீட்டைக் காலி செய்ய ஓனரிடம் அட்வான்ஸ் வாங்குவது முதல்கொண்டு வீட்டைக் காலி செய்து எனக்கு வீடு கிடைக்கும்வரைகூட அவர் இருக்கவில்லை. வார்த்தைக்கு வார்த்தை உலகத்தில் பெண்களுக்கு மிகக் கஷ்டம்,

கணவன் வீட்டு வேலை செய்வதில்லை, ரெஸ்பான்ஸ் இல்லை, சம உரிமை பெண்களுக்குக் கொடுப்பது இல்லை என்று மேடைக்கு மேடை பேசுபவரே (அரவானிகளும் பெண்களாக மதிக்கப்பட வேண்டும் என்று குரல் கொடுப்பவரே) ஒரு பெண்ணை ரெஸ்பான்ஸ் இல்லாமல் விட்டுச் செல்வதுதான் எனக்கு மன அழுத்தத்தைக் கொடுக்கிறது. சராசரி ஆணுக்கும் இவருக்கும் என்ன வித்தியாசம்? இனியும் என்னால் அவரோடு அந்த ஆபீசில் வேலை செய்ய முடியாது' என்று கூறி வேலையை விட்டுவிட்டேன்.

பல கஷ்டங்களுக்கு இடையே என் வீட்டுப் பொருள்களைப் பிரித்து அவர் பொருள்களைப் பிரித்து நானே பார்சல் செய்து அனுப்பி விட்டு அந்தச் சாக்கார் நகரிலேயே ஒரே ஓர் அறையை வாடகைக்கு எடுத்துத் தங்கினேன்.

அந்த ஒரு ரூம் கொண்ட வீட்டு ஓனர் 'அந்தப் பெரிய வீட்டில் இருந்துவிட்டு இந்த ரூமில் தங்கினால் உங்கள் இருவருக்கும் போதுமா?' என்று கேட்டார். என் கணவர் வெளிநாடு செல்கிறார். அதனால் வீட்டுப் பொருள்களை ஊருக்கே அனுப்பிவிட்டோம். எனக்குத் தேவையான பொருள்களை மட்டும்தான் வைத்துக் கொண்டேன். எனக்கு இங்கேயே வேலை இருப்பதால் நான் தனியாக இருப்பதால் எனக்கு மட்டும்தான் என்று கூறிச் சமாளித்து அந்த வீட்டைப் பிடித்துக் குடியேறினேன். என்னோட நிலைமை என் குருவுக்கும் குருபாய் களுக்கும் தெரியவர அவர்கள் வேதனைப்பட்டார்கள். யாரைக் கண்டாலும் பேச மனம் இல்லை. தனிமை என்னை விரும்பியது. தனித்து வாழ முயன்றேன்.

அந்தத் தனிஅறைக்குள் புலம்புவேன். கத்தி அழுவேன். சரியான தூக்கம், சரியான சாப்பாடு இல்லாமல் இருந்தேன். எந்த நேரமும் அவர் நினைவாகவே இருந்தேன். அவர் நினைவு கொஞ்சம் கொஞ்சமாக உடல்நலத்தைக் கெடுத்துக் கொண்டிருந்தது. குடிப்பழக்கம் அதிகம் ஆனது. என் நிலையைக் கண்டு சில சங்கமா நண்பர்களும் போர்ட் மெம்பர்களும் என்னை அழைத்து 'நீ வேலையை விடவேண்டாம். அதே சமயம் ஆபீசுக்கு வராமலேயே உன் சமுதாயத்தவர்களைச் சந்தித்து இன்டர்வியூ செய்து ஒரு புத்தகம் எழுது' என்று ஒரு வருட புராஜக்ட் கொடுத்தார்கள். நானும் யோசித்தேன். இங்கு இருந்தால் அவர் நினைவே என்னைக் கொன்றுவிடும். என் சமுதாயமும் இந்த உலகமும் நான் அவருக்காகவே இறந்துவிட்டேன் என்று சொல்லும். எனக்கு மனமாற்றம், புதிய வாழ்க்கை தேவைப்படுகிறது. அவர் நினைவுகளை மறக்கவும், மனதில் உள்ள வேதனைகளைப் போக்கிக் கொள்ளவும் ஒப்புக்கொண்டேன்.

என்னுடைய வேலைகளைத் தொடங்கத் தமிழ் நாட்டைத் தேர்ந்தெடுத்தேன். அந்தச் சமயத்தில் என் தலையில் இடி விழுந்ததுபோல் ஒரு செய்தி – என்னால் தாங்கிக்கொள்ள முடியாத, நம்பமுடியாத ஒரு செய்தியைக் கேட்டுக் குழப்பமும் மனவேதனையும் அடைந்தேன். என் சேலா பாமிளா இறந்துவிட்ட செய்திதான் அது. நான் தற்கொலை செய்துகொள்ளலாம் என்றிருக்கும் போதெல்லாம் எனக்கு அறிவுரை கூறியவள் பாமிளாதான். அவளே இப்படிச் செய்து கொண்டாளே என்று நினைக்கையில் கஷ்டமாக இருந்தது.

குரு-சேலா என்ற ஏற்றத்தாழ்வு இல்லாமல் என் சேலா மூன்று பேரையும் அவரவர் இஷ்டப்படி இருக்க அனுமதி கொடுத்ததோடு அவர்களுக்கு நல்ல தோழியாகவும் இருந்தேன். எனக்கு நன்றாக நினவிருக்கிறது. ஒருமுறை முள்ளங்கிச் சட்னி எப்படி அரைப்பது என்று போன் செய்து கேட்டாள். நானும் வீட்டில் இருந்தபடி கூறினேன். அது அவள் இறப்பதற்குச் சில நாட்கள் முன்புதான். அதுதான் அவளோடு நான் பேசிய கடைசி நாள். ஒரு குருவுக்கு ஈமச் சடங்கைச் சேலா செய்வதுபோய் என் சேலாவுக்கு இறுதிச் சடங்கைச் செய்ய வேண்டியதாயிற்று. அவள் இறப்பு என் மனதை மேலும் ஆழமாகப் பாதித்துவிட்டது.

சாவுக்கு வந்த அரவானிகள் கதறும்போதும் அவர்கள் மாரடித்து ஒப்பாரி வைக்கும்போதும் 'அடியே ரேவதி, உன் சேலாவை நீ தனியா விட்டதே தப்புடி. உன்னோட அரவானிகளோட இருக்கும்படி சொல்லி இருக்கக் கூடாதா? சேலாங்களைக் கண்டிஷன் பண்ணி வளர்த்து இருந்தால் இந்த நெலம வருமா?' என்று கதறினர்.

பாமிளாவும் நானும் எடுத்துக்கொண்ட மிகப்பெரிய போராட்டமே அரவானிகள் வாழ்க்கையிலும் பாலினச் சிறுபான்மையினர் வாழ்க்கையிலும் மாற்றங்கள் கொண்டுவந்து எந்த ஒரு ஏற்றத்தாழ்வும் ஏற்படாமல் இருக்க அரும்பாடு படுவதுதான். சில குருக்களைப் போலச் சேலாக்களை அடிமைப்படுத்துவது, துன்புறுத்துவது ஆகியவற்றை எதிர்த்தோம். சேலா-குரு ரிலேஷன்சிப் ஒரு பிசினசாக இருக்கக்கூடாது என்று நினைத்தோம். கலாச்சாரம் என்ற பெயரில் அரவானி சமுதாயத்திலேயே வன்முறை ஏற்பட்டால் தட்டிக்கேட்கும் மனம் கொண்டிருந்தோம். எல்லாரையும் மாற்றுவதைக் காட்டிலும் நாம் முதலில் மாறவேண்டும் என்ற எண்ணத்தில் செயலில் காட்டினோம். இது என் அரவானிகளுக்கு எங்கே புரியப்போகிறது?

பாமிளாவுடன் தொடர்பு கொள்ளாமல் போனது, அவளுடன் நானும் என்னுடன் அவளும் நேரம் ஒதுக்காமல்போனது, அவள் மனதில் என்ன உள்ளது எனத் தெரிந்துகொள்ளாமல் போனது என் தவறு. அவள்

இறப்புக்கு நானும் ஒரு காரணமாகிவிட்டேன் என்று நினைத்துக் கொண்டேன். அம்மா என்ற அந்தஸ்தை அவள் கொடுத்தாள் எனக்கு. 'எனக்குக் கிடைத்த குருபோல் யாருக்கும் கிடைக்காது, நான் புண்ணியம் செய்தவள்' என்று அவள் கூறுவாள். என்னுடைய பாக்கியம் எனக்கு அவள் மகளாக இருந்தது. அவளுக்கு அப்போது வயது 19. ஆனால் எனக்கு அவள் சிறு குழந்தைதான். மஞ்சள் பூசி நீர் ஊற்றி அவளைக் குளிப்பாட்டும்போது ஒரு குழந்தையாகத்தான் என்னால் உணர முடிந்தது. அவள் கற்றது கை மண் அளவு, அவளிடம் நான் கற்றது கடல் அளவு. அம்மா, முள்ளங்கிச் சட்னி எப்படி அரைப்பது என்று அவள் கேட்டது இன்னும் என் காதுகளில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. மகளே, உனக்குத் தெரியுமா, நானும் ஒண்டியாகிவிட்டேன். தென்றலாய் வந்து நீ என்னைத் தழுவ மாட்டாயா? எனக்கு ஒருபிடி மண் நீ கொடுப்பதுபோய் உனக்கு நான் மண் கொடுக்கச் செய்து விட்டாரே அந்தக் கடவுள்? அந்தக் கடவுளுக்குத்தான் என்மீது அப்படி என்ன கோபம்? சோதனைகளுக்கு அளவில்லாமல் போயிற்றே.

என் கணவர் என்னை விட்டுப் பிரிந்தது, பாமிளா என்னை விட்டுச் சென்றது ஆகியவை எனக்கு மிகப்பெரிய இழப்புகளாய் இருந்தன. கணவனை விட்டேன். மகளைப் பறிகொடுத்தேன். இனி இந்த உலகத்தில் வாழவேண்டுமா என்று நினைத்தேன். என் குரு, குருபாய்கள் எனக்கு ஆதரவும் ஆறுதலும் கூறினார்கள். தனிமையில் இருந்தால் என்னையே உருக்கிவிடும் என்று அறிவுரை கூறினார்கள். அரவானிகள் சமுதாயத்தைப் பற்றி ஆய்வு செய்து ஒரு புத்தகம் கொண்டுவரத் தமிழ் நாட்டுக்குப் புறப்பட்டேன். மனவேதனை, குழப்பம், கஷ்டம், ஓய்வு இல்லாமை இப்படி மனதிலும் உடலிலும் பாரத்தை வைத்துக்கொண்டு எப்படி அரவானிகளைச் சந்தித்து இண்டர்வியூ எடுப்பது எனக் குழம்பிப் போனேன். ஆயினும் அப்பணியை என் மனதில் ஏற்பட்ட காயங்களுக்கு மருந்தாக உணர்ந்தேன்.

ஈரோடு, தேனி, வேலூர், சென்னை, நாமக்கல் போன்ற ஊர்களில் எனக்குத் தெரிந்த அரவானிகளை நாடிச் சென்றேன். நான் எழுதப் போகும் புத்தகத்தைப் பற்றி எடுத்துக் கூறினேன். அவர்களுடனே தங்கி, அவர்களுடனேயே சாப்பிட்டு, கஷ்ட நஷ்டங்களை உணர்வு களைப் பகிர்ந்துகொண்டதுதான் அந்த இண்டர்வியூ. 30 பேர்களிடம் இண்டர்வியூ செய்ய ஆறுமாதங்கள் தேவைப்பட்டன. ஒவ்வொருவரும் அவர்களின் குழந்தைப் பருவம் முதல் இன்றுவரை அவர்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட, ஏற்பட்டுக்கொண்டிருக்கும் சந்தோஷங்களை யும், துக்கங்களையும் என்னிடம் பகிர்ந்துகொண்டனர். ஆரம்பத்தில் 'இந்தப் புத்தகத்தினால் எங்களுக்கு என்ன பயன்? உனக்கு இந்தப்

புத்தகம் எழுத யார் பணம் கொடுக்கிறார்கள்? எங்களுக்கு ஏதாவது பணம் கிடைக்குமா?' என்ற கேள்விகளும் பிறந்தன. என்னுடைய நோக்கத்தையும் புத்தகத்தின் நோக்கத்தையும் அறிந்து புரிந்துகொண்ட பின் ஒத்துழைப்புக் கொடுத்தனர்.

18 வயது முதல் 60 வயது வரையுள்ள அரவானிகளுடன் இண்டர்வியூ செய்தேன். ஒவ்வொருவரும் தம் கதைகளை என்னிடம் பகிர்ந்து கொள்ளும்போது தாய், கணவன், காதலனைப் பற்றிக் கூறும்போது அவர்கள் அழுது புலம்பியது இன்றும் என்னை உருக வைக்கின்றது. என் வாழ்க்கையில் மட்டும்தான் கடவுள் இத்தனை துன்பங்களைக் கொடுத்தான் என்று நினைத்திருந்தேன். ஆனால் எத்தனையோ பேர் வெளியில் சிரித்த முகத்துடனும் உள்ளூரக் கஷ்டங்களைச் சுமந்தும் வாழ்ந்துவருவதை இந்த இண்டர்வியூ மூலம் புரிந்துகொண்டேன். ஒரு சிலருடைய கஷ்டங்களுக்கும் துயரங்களுக்கும் முன் என்னுடைய கஷ்டமும் துக்கமும் பெரிதாக இல்லை என்பதையும் உணர்ந்து கொண்டேன்.

# 26

தமிழ்நாட்டில் தேனி மாவட்டத்தில் அங்குள்ள அரவானிகள் சிலரிடம் இண்டர்வியூ எடுத்துவிட்டு அங்கு இரவு தங்கினேன். மறுநாள் இன்னும் சிலரிடம் இண்டர்வியூ செய்யவேண்டும். அதனால் அங்குள்ள ஆரோக்கிய அகம் என்ற தொண்டு நிறுவனத்தில் தங்கியிருந்தேன். இரவு சுமார் 11.30 மணி இருக்கும். பெங்களூரிலிருந்து போன்: என்னுடைய குருவை ரவுடிகள் குத்திக் கொலை செய்துவிட்டதாகவும் பிரேதம் மருத்துவமனையில் இருப்பதாகவும் செய்தி வந்தது. செய்தியைக் கேட்டு ஆடிப்போய்விட்டேன். அந்த போன் செய்தி என்னைக் கதிகலங்க வைத்துவிட்டது. 'ஐயோ, கடவுளே, இது என்ன கொடுமை? என் குருவைக் கொலை செய்ய எப்படித்தான் மனம் வந்ததோ? யார் செய்தார்களோ? எதற்குச் செய்தார்களோ' என்று கத்திப் புலம்பிக் கொண்டு இரவோடு இரவாகத் தேனியிலிருந்து மதுரை சென்று, மதுரை யிலிருந்து சேலம் வந்து, சேலத்தில் இருந்து பெங்களூர் விரைந்தேன்.

நான் பெங்களூர் செல்லும்வரை என் மொபைலுக்குப் போன் வந்த வண்ணமும், நான் மற்றவர்களுக்குப் போன் செய்த வண்ணமும் இருந்தேன். மருத்துவமனையில் குழுமிய அரவானிகளின் அழுகையும் புலம்பலும் ஒப்பாரியும் போனிலேயே கேட்டது. பஸ்ஸில் என்னால் வாய்விட்டு அழமுடியாத நிலையில் கண்ணீரும் கம்பலையுமாகச் சென்றேன். போஸ்ட்மார்ட்டம் செய்து பிரேதத்தை அமாமுக்கு எடுத்துப் போகின்றோம். நீ எங்கே வந்துகொண்டிருக்கிறாய் என்று போன் வர நானும் பெங்களூர் வந்து இறங்கினேன். மருத்துவமனை போக வேண்டாம் என்று அமாமுக்குச் சென்றேன். நான் சென்று இறங்கிய வுடன் எல்லா அரவானிகளும் என்னைக் கட்டிப் பிடித்து அழ ஆரம்பித் தனர். நான் சென்ற சற்றுநேரத்தில் என் குரு உடல் வந்துவிட்டது.

தலைமீது வெட்டுப்பட்டும், கன்னத்தில் அறுக்கப்பட்டும் இருந்தது. அதைக் கண்டு 'அய்யோ அம்மா, எங்களை விட்டுட்டுப் போயிட்டியே!

இனி யாரம்மா எங்களுக்குத் துணை?' என ஓவெனக் கத்தினேன். அரவானிகள் நடந்ததைக் கூறினார்கள். அம்மாவை மாமூல் கேட்டு ரவுடிகள் மிரட்டிக் கொண்டிருந்திருக்கிறார்கள். அம்மா அவர்களுக்குப் பணம் கொடுக்கவில்லை. தொடர்ந்து அம்மாவை மாமூல் கேட்டு மிரட்ட அம்மா அவர்களைத் தடியை எடுத்து விரட்ட அவர்கள் இப்படிச் செய்துவிட்டு ஓடிப்போய்விட்டார்கள். வயிற்றில் மட்டும் 6 இடங்களில் குத்தி இருக்கின்றனர் என்று சொல்லக் கேட்டு நெஞ்சு நெஞ்சாக அடித்துக்கொண்டு புலம்பினேன். அந்தச் சண்டாளர்களைப் போலீஸ் புடிக்கலையா? அம்மாவை விரட்டி விரட்டி வெட்டும்போது யாரும் தடுக்கலியா? வேடிக்கையா பார்த்துட்டு இருந்தீங்க என்று தலை தலையாக அடித்துக்கொண்டு புலம்பினேன்.

அன்று இரவு அமாமில் மூன்றே பேர்தான் இருந்தார்கள். ஒருவர் உள்ளே வேலை செய்துகொண்டிருந்தார். மற்றொருவர் அமாம் பக்கத்திலேயே உள்ள குழாயில் தண்ணீர் பிடித்துக்கொண்டிருந்தார். மற்றொருவர் போன் செய்ய எஸ் டி டிக்குச் சென்றிருந்தார். அமாமுக்கு முன் குரு உட்கார்ந்திருந்தபோது ஐந்துபேர் கொண்ட கும்பல் அங்கு வந்தது. ஒருவன் கத்தியைக் காட்டி அம்மாவை மிரட்டியுள்ளான். அம்மா பக்கத்திலேயே வைத்திருந்த தடியை எடுத்து 'யாருகிட்ட உங்க வேலையெல்லாம்? கத்தியைக் காட்டுனா பயந்துடுவேனா? போங்கடா பொறுக்கிப் பசங்களா' என்று கத்தியைக் காட்டியவனின் தலையில் அடித்திருக்கிறார்.

அவர்கள் ஓட அம்மாவும் அவர்களைத் தொடர்ந்து ஓடக் குச்சியை அவர்கள்மீது வீசி எறிந்து பின்தொடர்ந்து அம்மாவும் ஓடியிருக்கிறார். குழாயில் தண்ணீர் பிடித்துக்கொண்டிருந்த என் குருபாய்க்குக் கத்தியை அவர்கள் காட்ட அவள் பயந்து முண்டியடித்து ஓடிவிட்டாள். ஈவு இரக்கம் இல்லாத படுபாவிகள் அம்மா இருட்டான பகுதிக்கு வரும்வரை ஆட்டம் காட்டிக்கொண்டே சென்று அமாமில் இருந்து 250 மீட்டர் தூரத்தில் அவரைச் சரமாரியாகக் குத்திப் போட்டு விட்டு ஓடிப் போய்விட்டனர். அம்மா குப்புற விழுந்து இரத்த வெள்ளத்தில் இறந்துபோய்விட்டாள். அம்மா விழுந்து கிடந்த இடம் அம்மன் கோயில் வாசல்படி என்று கூறக் கேட்டு அந்த இடத்தை நாடி ஓடினேன். உறைந்து கிடந்த இரத்தத்தைத் தொட்டுக் கத்தினேன்.

'கோயில் வாசற்படியில் இப்படி ஒரு சம்பவம் நடந்து உள்ளதே! கடவுளே, உனக்குக்கூடவா கண் இல்லாமல் போச்சு? தினம் உனக்கு அதிகாலையில் சூடம் ஏற்றிவிட்டுத்தானே என் குரு மற்ற வேலை களைச் செய்வாள். உனக்கு ஆடு, கோழி எனக் காணிக்கையும் அன்னதானமும் செய்தாளே. அவளுக்கு இரக்கம் காட்டவில்லையா?

ஆயிரம் கண்ணுடையாள் என்று இந்த உலகமே உன்னை வணங்கு கிறதே. உன்னோட பக்தை உன் வாசல்படியிலேயே இரத்தம் ஆறாக ஓட இறந்துபோய் விட்டாளே. அவளைக் காப்பாத்த வேண்டும் என்ற எண்ணமே உனக்கு இல்லாமல் போய்விட்டதா? உன்னைத் தெய்வமா நினைத்துத் தாயாக நினைத்து பூஜித்து வந்த என் அம்மாவைக் காப்பாத்த முடியாத சாமி நீ ஒரு கல்தான். அதனால்தான் உன்னைக் கல்லால் செய்திருக்கிறார்கள். தினம் உன்னை வணங்கியதற்கு என் அம்மாவுக்கு நல்ல வழியைக் காட்டிவிட்டாய்.'

ஐயோ, அம்மாவுக்கு ஏற்பட்ட நிலைமை யாருக்கும் ஏற்படக் கூடாது. கொடூரமாக வன்முறை நிகழ்ந்துள்ளது. இதை இந்த வீதியில் வேடிக்கைப் பார்த்துக்கொண்டு இருந்தார்களா? யாருக்குமே அம்மாவைக் காப்பாற்ற வேண்டும் என்ற மனசு இல்லாமலா போச்சு என அந்த உறைந்த இரத்தம்முன் மண்டியிட்டு அழுது புலம்பினேன். என்னைச் சமாதானப்படுத்தி அம்மாவை வைத்து மாலை போட்டுச் சம்பிரதாயங் களைச் செய்தனர். என்னுடைய அம்மாவின் குருபாய், என்னுடைய காலா குரு உடல்நிலை சரியில்லாமல் ஊரில் இருந்தார். அவரும் கார் வைத்துக்கொண்டு வந்துவிட்டார். என் காலா குருவுக்கு உயிரே போய்விட்ட உணர்வில் இருந்தார். அவருக்குப் பல வழிகளில் என் குரு செய்த உதவிகளும் சப்போட்டுகளும் காலா குருவின் மனதில் அம்மாவின் இறப்பைத் தாங்கிக்கொள்ள முடியாத வேதனையாகியது.

அன்று ஞாயிறு இரவு 10 மணிக்கு இந்தச் சம்பவம் நடந்துள்ளது. அன்றுதான் தமிழ்நாட்டையே உலுக்கியது சுனாமி. அந்தச் சுனாமியால் எத்தனையோ ஆயிரம் மக்கள் உயிர் பிரிந்தனர். அந்தச் செய்திகளைத் தான் எல்லார் வீட்டிலும் பார்த்துக்கொண்டிருந்தனர். அம்மாவின் கதறல் யாருக்கும் கேட்காமலும், அம்மாவைக் கொலை செய்தவர் களின் அடையாளம் யாருக்கும் தெரியாமலும் போய்விட்டது. கொலை யாளிகளைப் பார்த்தது குழாயில் தண்ணீர்ப் பிடித்துக் கொண்டிருந்த என் குருபாய்தான். அவளும் அப்போது பயந்துபோய் கூச்சல் போட்டுக் கொண்டு வேறு வீதியில் ஓட, மற்றொரு நேர்வீதியில் ரவுடிகள் அம்மாவை விரட்டிச் செல்ல, கம்பங்களில் லைட் இல்லாமல் போக, தெருவில் யாரும் நடமாடாத சூழல் கொலையாளிகளுக்குச் சாதகமாகப் போக இந்த நிலைக்கு ஆக்கிவிட்டு ஓடிவிட்டார்கள்.

அமாமில் எந்த ரவுடியோ போலீசோ வந்தால் என் குருதான் முன் இருந்து பேசுவார். எங்களை ஒருகுறையும் இல்லாமல் இதுவரை காத்துவந்தார். சில போலீசுக்கும் சில லோக்கல் ரவுடிகளுக்கும் பணம் கொடுத்தாலும் எங்கள் நன்மைக்குத்தான் கொடுத்தார். ஆனால் அந்தப் போலீசோ ரவுடியோ இன்று அம்மாவுக்குத் துணையில்லாமல் போயிற்று.

அங்கு சிலருக்குப் பணம் கொடுத்துத்தான் வாழவேண்டிய சூழலில் இருந்தோம் அப்போது. தற்போது அம்மாவைக் கொலை செய்தவர்கள் வேறு ஏரியாவைச் சேர்ந்தவர்களாகத்தான் இருக்க வேண்டும். யாராக இருந்தால் என்ன? ஏன், அரவானிகளே இந்தக் கொலையைச் செய்திருந்தால்கூட விடக்கூடாது. அம்மாவுக்கு ஏற்பட்ட இந்த நிலை இனியும் வேறு யாருக்கும் ஏற்படாத வகையில் கொலையாளிகளைப் பிடித்துத் தண்டிக்கவேண்டும் என்று எல்லாரும் போலீசுக்கு உதவியாகப் பாடுபட்டோம்.

அம்மாவின் இறுதி ஊர்வலத்தில் அந்த ஏரியாவே நிரம்பி வழிந்தது. சேலாவுக்கு மண் கொடுத்தேன். இன்று என் குருவுக்கும் மண் கொடுத்துவிட்டேன். தனி மரமாக, அநாதையாக நிற்கிறேன். கடவுளே எனக்கு மட்டும் ஏன் இந்தச் சோதனை? சோதனைகளுக்கு அளவே இல்லையா? என்னுடைய உறவுகளை ஏன் இப்படிப் பறித்துக் கொண்டே இருக்கிறாய்? என்னை வேதனைப்படுத்திப் பார்ப்பதில் உனக்கு என்ன அவ்வளவு சந்தோஷம்? குருவும் சேலாவும் இல்லாத அநாதை அரவானி ஆகிவிட்டேனே. எனக்கு இதுபோன்ற நிலையைக் கொடுத்திருக்கக்கூடாது. அடிமேல் அடி விழுந்தால் தாங்கிக்கொள்ளும் சக்தி இல்லை என்னிடம். போதுமடா சாமி போதும். என் நெஞ்சே பிளந்ததுபோல் இருக்கின்றது. துயரம் தாள முடியவில்லை. எனக்கு தைரியத்தையும் சக்தியையும் கொடு. இல்லாவிட்டால் என்னை மட்டும் ஏன் விட்டு வைத்திருக்கிறாய்? என்னையும் என் குரு சேலாவோடு கூட்டிச் சென்றுவிடு என்று வாய்விட்டுக் கத்தி அழுதேன் அந்தச் சுடுகாட்டில்.

குரு தெய்வபக்தி நிறைந்தவர். இந்து. அதனால் இந்துக்கள் சம்பிரதாயப்படி இறுதிச் சடங்குச் செய்யப்பட்டது. சுடுகாட்டில் இருந்து எல்லாரும் அமாமுக்குத் திரும்பி வந்தோம். கைகால் கழுவிக்கொண்டு விளக்கைப் பார்த்துவிட்டு குருசேலாக்கள் செய்ய வேண்டிய சடங்குகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அரவானிகள் சமுதாயத்தில் குருதான் சேலாக்களுக்கு எல்லாவகையிலும் நல்லது கெட்டது எனப் பார்த்துக் கொள்பவள். குரு இறந்துவிட்டால் சேலாக்கள் விதவைக் கோலம் பூணவேண்டும். இதுதான் சம்பிரதாயம். அந்தச் சடங்கைச் செய்பவர்கள் சவுக்கன் வீட்டு அரவானிகள். என்னோட குருவுக்கு நாங்கள் மூன்று பேர் சேலாக்கள். இதில் நான்தான் மூத்தவள். எங்கள் மூன்றுபேருக்கும் என்னோட காலாகுரு சேலாக்கள் வளையல் போட்டுவிட்டுப் பூ வைத்துப் பொட்டு வைத்து அலங்காரம் செய்தனர். சவுக்கன் வீட்டில் இருந்து சிலர் எங்கள் பூவையும் பொட்டையும் அழித்துவிட்டு வளையல்களை உடைத்து, மூக்குத்தி, தோடு, மெட்டி, கொலுசு என எல்லா

வற்றையும் கழற்றிவிட்டு இனி நாங்க மூணுபேரும் குரு இல்லாதவர்கள்; முண்டச்சிகள் என வீட்டு மூலையில் உட்கார வைத்தனர்.

என் குரு இறந்து நாப்பது நாட்கள் ஆகும்வரை நாங்கள் வெள்ளைப் புடவை அணிந்து விதவையாக இருக்க வேண்டும். அதன்பிறகு காரியம் செய்து அரவானிகள் சமுதாயத்தவர்கள் விருப்பப்படி கலர் புடவையோ வெள்ளைப் புடவையோ கொடுத்து மீண்டும் சுமங்கலி யாக முறை செய்வார்கள். குரு இல்லாதவர்கள் வெள்ளைப் புடவை யையும் கட்டிக் கொள்ளலாம். அல்லது கலர் புடவையையும் கட்டிக் கொள்ளலாம் காரியம் ஆனபிறகு.

சாவுக்கு வந்திருக்கும் எங்கள் எல்லாப் பரிவார்களுக்கும் சவுக்கன் வீட்டு அரவானிகள் ஆறுதல் கூறும்வகையில் முகம் கழுவத் தண்ணீர் கொடுத்துத் தேநீரும் பன்னும் கொடுப்பார்கள். அதன்பிறகு காரியம் எப்போது என உறுதிசெய்துவிட்டு அவரவர் வீட்டுக்குச் சென்று விடுவர். விதவையான நாங்கள் வெளியில் செல்லக்கூடாது. ஆனாலும் எங்கள் குருவைக் கொலை செய்திருந்ததால் நான் தினமும் போலீஸ் ஸ்டேஷன் ஆபீஸ் எனச் செல்ல வேண்டியதாயிற்று. போலீஸ் முதலில் அரவானிகளைச் சந்தேகத்தில் விசாரணை செய்தது. அப்போது அரவானி களை அடித்துவிடக்கூடாது, துன்புறுத்தக்கூடாது என அவர்களுடன் செல்ல வேண்டியது என் கடமையாக இருந்தது. போலீசோ 'நீங்க அடிக்கக் கூடாது என்று கூறினால் உண்மையை வரவழைப்பது கடினம்' எனக் கூறினார்கள். மேலும் அன்று என் குருவைக் கொலை செய்த நேரத்தில் யார் யார் அவருடன் இருந்தார்களோ அவர்களையும் அதற்கு முன் யார் வந்து சென்றார்களோ அவர்களையும் தினமும் காலை 8 மணியிலிருந்து இரவு 11, 12 ஏன் சில தடவை 1 மணி வரை போலீஸ் ஸ்டேஷனிலேயே வைத்திருந்து அனுப்பி வைத்தனர்.

போலீசுக்கோ அரவானிகளுக்குத் தெரிந்திருக்கும் கொலையாளி யார் என்று; அவர்களே துப்புக் கொடுத்தால் கொலையாளியைக் கைது செய்துவிடலாம் என்று நினைத்தனர். இதனால் யார்யார் மாமூல் வாங்குகின்றனர், எந்த ரவுடிகள் எந்த ஏரியாவில் இருக்கின்றனர், அவர்களைக் காட்டிக் கொடுங்கள் என்று கட்டாயப்படுத்தினர். அரவானிகள் எந்த ரவுடியைக் காட்டிக் கொடுப்பது? அப்படியே சில ரவுடிகளைக் காட்டிக் கொடுத்து விட்டால் நாளை நம் கதி என்ன என நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லையே எனப் பயந்தனர். மேலும் கொலையாளிகளைப் பார்த்தது ஒருத்திதான். அவளையும் போலீஸ் விசாரித்தது. பல முறைகளைக் கையாண்டது. அவளுக்குத் தெரிந்த அங்க அடையாளத்தைக் கூறினாள். ஆனால் அவளுக்கும் கொலை யாளி யார் என்று தெரியவில்லை. போலீஸ் புலன் விசாரணைக்கும்,

அரவானிகளை அடிக்காமல் சித்திரவதைக் கொடுமைக்கு ஆளாகாமல் காக்கவும் அவர்களைக் கூட்டிச் செல்வதும் கூட்டிவருவதும் என்று இருந்தேன்.

மாதக் கடைசி, வருடமும் கடைசி. புதிய வருடம் பிறக்கிறது. எல்லாரும் புதிய வருடத்தில் சந்தோஷமாக இருப்பார்கள். புத்தாடை அணிந்து கோயிலுக்குச் செல்வார்கள். ஆனால் எங்கள் நிலையோ வேறாக இருந்தது. கண்ணீரும் கதறலுமாய், விதவைக் கோலமாய்த் துக்கமும் துயரமும் கோபமும் தலைவிரித்தாடிக்கொண்டிருந்தன. அடுத்தடுத்துத் துயரமும் துக்கமும் என்னைத் துரத்திக்கொண்டே இருக்கின்றன. நான் யார் மீது அளவு கடந்து பாசம் வைக்கின்றேனோ யார்மீது பாசம் வைத்திருந்தேனோ அவர்கள் என்னை விட்டுச் சென்றது மிகப்பெரிய இழப்பாக இருந்ததுடன், அடக்கமுடியாத மனவேதனை யையும் கொடுத்தது. ஒருபுறம் ஆபீஸ் செல்லவேண்டும். நான் சில மரபுகளைத் தட்டிக் கழிக்க நினைத்தாலும் அது அரவானிகளின் கலாச்சாரத்தை மீறுவதாகவும் குருவுக்குச் செய்யவேண்டிய காரியத்தைச் சரியாகச் செய்யவில்லை என்றும் என் சமுதாயம் தூற்றுமே. இப்படிப் பட்ட சம்பிரதாயம் காலம் காலமாகக் கடைபிடித்து வந்ததை அவ்வளவு சுலபமாக விடவும் முடியவில்லை. 40ஆவது நாளை நோக்கித் துக்கத் துடன் காத்திருந்தோம்.

காரியம் மண்டபத்தில் நடத்தப்பட்டது. இந்து முறைப்படி ஓமக் குண்டம் வைத்து குரு ஆத்மா சாந்தி அடைய ஐயரை அழைத்துப் பூஜை செய்து அன்னதானம் செய்தோம். எல்லா வீட்டு அரவானிகளும் கலந்து கொண்டனர். எங்கள் வீட்டு நாயக் வராதது எங்களை வருத்த மடையச் செய்தது. அரவானிகளால் நடத்தப்படும் இந்தக் காரியம் ரவுண்டாப் எனக் கூறப்பட்டு பத்திரிகை அடித்து எத்தனை சேலாக் களுக்கு ரவுண்டாப் போடுகின்றார்கள் எனச் சொல்லப்பட்டு இருக்கும். வரும் அரவானிகள் விதவை அரவானிகளான எங்களுக்குக் கலர்ப் புடவை தந்து போடுவதுதான் ரவுண்டாப் சடங்கு ஆகும். இது முஸ்லிம் முறைப்படி ஜமாத்து கூட்டி நடக்கும். காரியம் இந்து முறைப்படி நடந்தாலும் அரவானிகள் நடத்தும் முக்கியமான நிகழ்ச்சிகள் முஸ்லிம் முறைப்படி நடப்பதுதான் சரியான முறையாகக் கருதுகின்றனர்.

காலையில் குருவுக்கு இந்து முறைப்படி காரியம் ஆனது. மதியம் அரவானிகள் கலாச்சாரப்படி ரவுண்டாப் நிகழ்ச்சி செய்யப்பட்டது. விதவைகளான எங்கள் மூன்றுபேரையும் உட்கார வைத்து, சுற்றி அரவானிகள் சூழ்ந்திருக்க ஏதாவது ஒரு சவுக்கன் வீட்டு மூத்த அரவானி மற்ற அரவானிகள் கொடுக்கும் புடவையையும் வளையல் போட்டுக்கொள்ளத் தரும் பணத்தையும் வாங்கிக் கொடுப்பார்.

புடவையைத் தலைமீதும் பணத்தை மடிமீதும் போடுவார். முதல் புடவை எங்கள் வீட்டு நாயக் தரப்பில் சொல்லிப் போடப்படும். அது வெள்ளைப் புடவைதான். அதன் பிறகு யார் எந்த முறையைச் சேர்ந்தவர், எந்த வீட்டைச் (கரானா) சேர்ந்தவர், அவர்கள் எந்தப் பரிவாரைச் சேர்ந்தவர் எனச் சொல்லிப் புடவையைத் தலைமீது போடுவார்கள். இதுதான் ரவுண்டாப் முறை ஆகும். அதே ரவுண்டாப் நிகழ்ச்சியில் காலா குரு குருவாக முன்னின்று தைரியமும் ஆறுதலும் கொடுக்கும் வகையில் இனி உங்களுக்கு நான்தான் குரு என மூக்குத்தி, கொலுசு, லச்சா, மெட்டி, வளையல் ஆகியவற்றைப் போட்டுவிடுவார்கள். சடங்குகளுக்குப் போட்டுவிட்டாலும் விதவை விதவைதான். அவரவர் விருப்பப்படி சுமங்கலியாகவும் விதவையாகவும் இருக்கலாம்.

என்னைப் பொருத்தவரை என் குரு நினைவாக இன்றும் நான் மெட்டி, கண்ணாடி வளையல் போடுவதை நிறுத்திவிட்டேன். குருவையும் சேலாவையும் இழந்து, கணவனையும் பிரிந்த துக்கத்தோடு துக்கமாக என் 'உணர்வும் உருவமும்' புத்தகத்தை எழுதிமுடித்தேன். என் அரவானிகளை விட்டு, என் ஆக்டிவிஸ்ட் வேலைகளை நிறுத்தி விட்டு, சங்கமாவை விட்டு ஆறுதலுக்காக அம்மா அப்பாவோடு சென்று தமிழ்நாட்டில் தங்கிவிட்டேன்.

உடைந்துபோன நான் நிம்மதியைத் தேடி ஊருக்குப் போனேன். இங்கு வருமானம் இல்லை. வயதான அப்பாவின் உழைப்பில் உட்கார்ந்து தின்னவும் மனம் இல்லை. ஊரிலேயே ஏதாவது வேலை கிடைக்குமா என்று என்ஜிஒக்களை நாடினேன். என்னைப் போன்ற போராட்டக்காரிக்கும், என்னைப் போன்ற பொதுநலக்காரர்களுக்கும் வேலை கிடைக்காமல் போனது வருத்தத்தை அளித்தது. இரண்டு ரூபாய் பணத்தைக் கண்ணில் பார்ப்பது கஷ்டமாக இருந்தது. சுகரும் இரத்தக் கொதிப்பும் உள்ள என் அம்மா அந்தச் சமயம் மயங்கி விழுந்தார். அவரைத் தூக்கிக்கொண்டு போய்ப் பெரிய மருத்துவமனை ஒன்றில் சேர்த்தேன். அப்போது அம்மாவின் இரண்டு கிட்னியும் கெட்டுப்போய்விட்டன எனத் தெரியவந்தது. அம்மா இனிப் பிழைக்க மாட்டார் என டாக்டர் கூறிவிட்டார். அவருக்கு இரத்த ஓட்டம் குறைந்துகொண்டே போனது. இங்கு இவருக்குச் சிகிச்சை அளிக்க முடியாது என்று கூறிச் சேலத்தில் வினாயகா மிஷன் மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லச் சொல்லிவிட்டனர். உடனடியாக ஆம்புலன்ஸ் மூலம் அங்குகொண்டு சென்றேன்.

அங்கு இரத்த ஓட்டம் சீர்செய்ய ஐசியில் மூன்று நாட்கள் வைத்திருந்து அதன் பிறகு டயாலிஸ் செய்தால்தான் அவர் உயிர் தங்கும் என்று கூறிவிட்டனர். 20 நாட்கள் அந்த மருத்துவமனையில்

இருந்தேன். டயாலிஸ் செய்ய சில ஆப்ரேஷன்கள். முதலில் கழுத்தில் குழாய் செருகி அதன் மூலம் இரத்தத்தைச் சுத்தப்படுத்துவது. அதன் பிறகு கையில் ஒரு ஆப்ரேஷன் செய்து அது சரியாகும் வரை கவனமாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். அதுவரை கழுத்தில்தான் இரத்தம் சுத்தம் செய்துகொண்டிருக்க வேண்டும். மூன்று மாதம் அம்மாவைக் குளிக்க வைப்பது, பாத்ரூம் சென்றால் கழுவி விடுவது என எல்லா வேலைகளும் செய்தேன். அம்மாவின் பணம் இரண்டு லட்சம் இருந்ததால் அம்மாவின் உயிரை அப்போது காப்பாற்ற முடிந்தது. பெத்த தாய்க்கு நான் செய்யும் கடமைப் பொறுப்பு அப்போது இருந்தது.

மருத்துவமனைக்கு அண்ணன், அப்பா, அக்கா வந்து சென்றாலும் அம்மாவுடனே இருந்து அவருக்குச் செய்யும் பணிவிடைகளைக் கவனித்துக்கொண்டேன். ஆரம்பத்தில் வாரம் ஒருமுறை டயாலிஸ் செய்துகொண்டிருந்தோம். இப்போது வாரத்தில் இரண்டுமுறை ஆகிவிட்டது. அம்மா மிகவும் மோசமான நிலையில் மனதளவிலும் உடலளவிலும் நொந்து போய்விட்டார். மேற்கொண்டு சிகிச்சைக்குச் செலவு செய்யப் பண நெருக்கடி ஏற்பட்டது. ஒரு முறை டயாலிஸ் செய்ய ஆயிரம் ரூபாயும் கார் வாடகை ஆயிரம் ரூபாயும் ஆயிற்று. சில நேரங்களில் கொஞ்சம் நடக்க முடிந்த நிலையில் பஸ்ஸிலேயே சென்றுவருவோம். முடியாத நிலையில் கார் எடுத்துக்கொண்டுதான் போக வேண்டும். இந்தச் சூழ்நிலையில் நான் ஊரில் இருக்கும் போது என்னுடைய செலவுக்கு ஒரு இரண்டு ரூபாய் கொடுப்பவர்கள் யாரும் இல்லை.

அந்தச் சமயம் பெங்களூரில் கேஎச்பிடியில் மாதம் 15 நாட்கள் வேலை தருவதாக அழைப்பு வந்தது. கேஎச்பிடி கொடுத்த அனைத்துப் பயிற்சிகளையும் கற்றுக்கொண்டு அம்மாவை என் மூத்த அண்ணன் அண்ணியைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு நான் திரும்பவும் பெங்களூரில் குடியேறினேன். கேஎச்பிடியில் அவர்கள் எச்ஐவி பிரிவென்ஷனில் கர்நாடகா முழுவதும் வேலை செய்து கொண்டிருந் தனர். அவர்கள் அனுப்பும் ஊர்களுக்குச் சென்று அங்கு வேலை முடித்து வர வேண்டும். ஆனால் எனக்கு அனைத்துப் பயிற்சிகளையும் கொடுத்தவர்கள் மாதம் 15 நாட்கள் வேலை கொடுக்க முடியாமல் இருந்துவிட்டனர். மாதத்தில் ஒருநாள் வேலை கொடுத்தனர். ஒரு நாளைக்கு இவ்வளவு என்று நிர்ணயம் செய்திருந்தார்கள். மாதத்தில் 10 நாளாவது வேலை கொடுத்திருந்தால் வீட்டு வாடகை, சாப்பாடு, போக்கு வரத்து என அட்ஜஸ்ட் செய்திருப்பேன். கேஎச்பிடியால் கொடுக்க முடிந்த ஒருநாள் வேலையைக் கொண்டு என்னால் பெங்களூரில் வாழ முடியவில்லை.

வறுமை என்மீது ஆட ஆரம்பித்தது. கடைகடையாகச் சென்று பிச்சை கேட்கவும் மனமில்லை. அதனால் மீண்டும் பாலியல் தொழில் செய்ய முடிவு செய்தேன். என் குருபாய்கள் குரு இருக்கும் அமாமுக்கே திரும்பி வந்துவிட்டேன். முன்புபோல் பாலியல் தொழிலில் அவ்வளவு வருமானமும் இல்லை. கிராக்கிகள் என்னை ஆண்ட்டி என்று தட்டிக் கழித்துவிட்டுச் சிறிய வயதினரைக் கூட்டிச் செல்கின்றனர். குருபாயும், சேலாக்களும் சாப்பாடு, செலவுக்குப் பணம் கொடுத்தாலும் எத்தனை நாட்கள் அவர்கள் கொடுப்பார்கள் என்று இருக்க முடியும்? நமக் கென்று ஒரு வேலை தேவை. அடுத்தவர் உழைப்பில் உட்கார்ந்து சாப்பிட விருப்பம் இல்லை. அதை எதிர்பார்த்திருக்க விருப்பமும் இல்லை. மீண்டும் உதட்டுச் சாயம் போட்டுக் கிராக்கிக்காகப் பாலியல் தொழில் செய்ய வந்ததால் மனவேதனை. ஆனாலும் அதைப் பற்றி வெளியில் சொல்லிக் கொள்ள முடியவில்லை.

சேலா நாத்தி எனக்கு இல்லை என்றாலும் என் குருபாய் சேலா நாத்திகளுடன் பாலியல் தொழில் செய்வதுகூடக் கஷ்டமாகவும் இருந்தது. சில சமயங்களில் கிராக்கிச் சண்டையும் வரும். அம்மாவின் நினைப்பும், பாலியல் தொழிலால் வரும் பிரச்சினைகளும், சமூகத்தில் இத்தனை வருடம் பாலினச் சிறுபான்மையினருக்காகச் செய்த வேலை களும், தற்போது பாலியல் தொழில் செய்ய வேண்டிய நிர்ப்பந்த மானதையும் நினைத்து மனவேதனை அடைந்தேன். என்னுடைய குரு இறந்தபிறகு இப்போது அவர்களின் குருபாய் எனக்குக் குருவாக இருக்கிறார். இந்தக் குரு எனக்கு மிகவும் சப்போட்டாகவும் தைரிய மாகவும் இருக்கச் சொல்லி அவரால் முடிந்த பணம் எனக்குச் செலவுக்குக் கொடுக்கிறார். அது எனக்கு மிகவும் உதவியாக இருக்கிறது. என் குருவிடத்தில் பணம் வாங்குவது கஷ்டமாகத்தான் இருக்கிறது. வேண்டாம் என்று கூறினாலும் என் குருவோ 'எனக்கு எவ்வளவு சம்பாதிச்சுக் குடுத்திருப்ப. இப்ப உனக்கென்று பத்து சேலாக்களோ அமாமுகளோ இல்லை. மேலும் வேலையை விட்டுவிட்டாய். என்ன வருமானம் வருது உனக்கு? என்னை ஆரம்பத்தில் பாத்துக்கிட்ட. சம்பாதிச்சுக் குடுத்த. இப்போ ஒன்னுமில்லாம இருக்கே. ஏதோ எனக்குக் கிடைக்கும் அமாம் வருமானத்தில் உனக்குக் கொஞ்சம் கொடுக்கிறேன். வேண்டாம் என்று சொல்ல வேண்டாம். அது உன் உரிமையும் என் கடமையும் ஆகும்' என்று சொல்வார்.

சமூக மாற்றங்களுக்குப் போராடும் நான் மீண்டும் பாலியல் தொழில் செய்யவோ அதை நடத்தவோ முடியாமலும் விருப்பம் இல்லாமலும் இருக்கிறேன். ரெண்டு அமாம், 20 சேலா நாத்தி இருந்தால்தான் அரவானி சமூகத்தில் மதிப்பும் மரியாதையும்

இருக்கின்றன. என்னோட ஒரு சேலா என்னை மதிப்பது இல்லை. தொடர்பும் இல்லை. மூன்று சேலாக்கள் இருந்த காலத்திலேயேகூட நான் அவர்களை நம்பி வாழவில்லை. ஒரு தனி மனுஷியாக வாழ்ந்து விட்டேன். அது என் சமூகப் (ஆக்டிவிஸ) பணிகளுக்கு வசதியாகவும் இருந்தது. மற்றவர்களைப் பற்றி யோசனை செய்த நான் என்னைப் பற்றிக் கவலைப்படாமலேயே வாழ்ந்துவிட்டேன். இன்று வேலை இல்லாததால், பணம் இல்லாததால் கஷ்டமான நிலையில் ஏதேதோ யோசனை செய்ய வேண்டியதாகிவிட்டது. ஆக்டிவிஸத்தை நான் விட்டாலும் அது என்னை விடாமல் துரத்துகிறது. அதைச் செய்யாமல் தட்டிக் கழிக்கவும் முடியவில்லை. அதேசமயம் வருமானமும் இல்லை. இந்த நிலையில் என்ன செய்வது என்று தெரியாமல் இருக்கிறேன்.

என் வாழ்க்கையே ஒரு கேள்விக்குறியாகி விட்டதுபோல இருக்கிறது. கடைசியில் பாலியல் தொழில் செய்வதே நிரந்தரமா என்று நினைக்கத் தோன்றுகிறது. பாலியல் தொழில் வயதாகிவிட்டால் செய்ய முடியாதே. அதன் பிறகு என்ன செய்வது? இப்படி மற்ற அரவானிகள் போல இஜரா கலாச்சாரத்துடன் முதலாளியாக இருக்கவேண்டிய நான் தொழிலாளியாக இருக்கவும் முடியவில்லை; முதலாளியாக இருக்க வாய்ப்புகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதை விரும்பவில்லை. மற்றவர்களுக்காகவும் என் குடும்பத்தினருக்காகவும் என்னைத் தனிமைப் படுத்திக்கொண்டு வாழ முடிவு செய்துவிட்டேன். ஆம், திரும்பவும் நான் சங்கமாவில் சேர்ந்து என் போராட்டத்தைத் தொடர்ந்து இருக்கிறேன்.



படித்துவிட்டீர்களா?

**அரவானியால் எழுதப்பட்ட முதல் தமிழ்ப் புத்தகம்**



# உணர்வும் உருவமும்

அரவானிகளின் வாழ்க்கைக் கதைகள்

தொகுப்பாசிரியர் : ரேவதி